உ

ஸ்ரீரஸ்து

# வேதாகம தர்ம வித்யா

அல்லது

## ஹிந்துமத தர்ம விளக்கம்.



முதல் தொகுதி, இரண்டாம் தொகுதி.

திருநெல்வேலி ஜில்லா, ஆழ்வார்திருநகரி
ஸ்ரீவைகுண்டம் போர்டு ஸம்ஸ்கிருத உயர்தர கலாசாலை
ரிடையர்ட் தலைமைப் பண்டிதரும்,
தற்காலம் ஆழ்வார்திருநகரியில் இருப்பவருமான
ஆண்டாள்புரம்
நா. ஸாம்பசிவ சாஸ்திரிகள்
இயற்றியது.



மதுரை, ஹரிஸமய திவாகரம் பிரஸில்
பதிப்பிக்கப்பெற்றது.

1932

## Opinions. (அபிப்பிராயங்கள்)

K. V. SUBBAIYA AIYER, M. A., L. T., M. R. A. S., (London), *District Educational Officer, Tinnevelly, 21—6—1926.*

I am able to say that it has been written with great care and its outstanding merit is the simplicity of its style and the nobility of its diction. Brahmasri Sambasiva Sastrial is an eminent scholar in Sanskrit and has a fine appreciation of the Tamil language and literature, and the book is an evidence of his scholarly acquaintance with these two great Indian languages. I am of opinion that the book may be used with great advantage as a Text-book for religious and moral teaching in Hindu Educational Institutions. I wish the learned author the success he deserves in this direction.

---

T. C. SRINIVASA AYYANGAR, B.A., B.L., M.L.C., ADVOCATE.

*Vice President, Ramnad District Board and Secretary, Tamil Sangam, Madura. 19—4—32.*

I persued portions of this very interesting work, which deals in a small compass with the great subject of Hindu Religion. Brahmasri Sambasiva Sastrigal is a Sanskrit scholar well versed in the vast Hindu religious literature and commands an easy Tamil prose style. I congratulate him on the success that has attended his

effort at a lucid and orderly presentation of the doctrines and observances of the Hindu faith and the rules of religious conduct. The treatment of the subjects is excellent and polemical controversies are avoided. Apt references are given wherever necessary, to the important Sanskrit and Tamil works.

It is essential that such a work as this should be in the hands of every Hindu student in all educational institutions. It is the duty of the Hindu Tamil public to encourage the author in every way.

---

K. BHASHYAM, B.A., B.L., ADVOCATE,
*Champaka Vilas, Luz, Mylapore, Madras. 22—5—31.*

I have read through the 'Vedagama Dharma Vidya' by Andalpuram N. Sâmbasiva Sastrigal. This hand book of Hindu religion is well written in a style very useful for students and also others who have no idea of what Hindu religion is. I am sure that the endeavours of the learned sastrigal deserve every encouragement. His great learning in Sanskrit and his good knowledge of Tamil have enabled him to produce a book, at once useful and instructive. It need hardly be said that work in this direction is hardly remunerative.

I request that all persons interested in Hindu religion will render all help to the Pandit to assist him to produce other similar books.

---

IV

K. R. VENKATARAMA AIYAR, B.A.,
*High Court Vakil, Madu*

I have heard read portions of "Ve Vidya" a compendious hand book of 2 volumes. The author Brahmasri Sa of Andalpuram has placed the Tamil rea a deep debt of gratitude. The book is style. The first volume may well b High School top forms and the seconc availed of for college classes. The fir reprinted and the 2nd edition is an im first in that the religious and moral trut and brought home by apt stories which v in the first edition. Even sanskrit s gather the matter brought together in th from a mass and variety of books. Hindu population in the Tamil Districts stand the whole matter which is set fort and lucidly in these two volumes by th who has undoubtedly a thorough maste and commands an easy style. It is nov Hindu public of the Tamil Districts t by going in for the book and making i handbook in every Town and Village.

## Introduction.

I have great pleasure in bringing to the notice of the general Hindu public and of those who are in charge of the education of our youths this useful publication appropriately named by the author *Vedagama Dharma Vidhya.* The book in my opinion certainly merits an introduction from one worthier than my humble self. The only consideration that seems to have prevailed with the author in seeking my help is my long experience as a School Master.

That a book of this kind has been a long-felt want will be admitted by all. The absence of provision for moral and religious instruction in Hindu Schools has been a serious drawback in our educational system. Although the need for such instruction has been felt for long, the existence of numerous castes and sects in the Hindu fold and difficulty of finding a common syllabus which would satisfy all, have stood in the way of the introduction of this much needed reform in our educational institutions. Attempts have, no doubt, been made in the past to write suitable

text-books on the subject; but these have failed to find favour with the Hindu public. It is no easy matter to write a book on such a highly complex subject as the Hindu religion on a nonsectarian basis and on modern lines. Those that are best qualified for the task would seem to be the orthodox Pandits. But very few of them possess the necessary catholicity of outlook to write a book of non-controversial and inoffensive nature.

This publication from the facile pen of Brahmâsri *Aundalpuram N. Sambasiva Sastrial*, a Pandit of repute well-versed in Sanskrit lore and to a certain extent in Tamil too will therefore be welcomed by all.. A careful perusal of the volume will convince one that the author has taken all possible care to sail clear of all controversial and offensive matter and to impress on young readers the great truths imbedded in our Sastras and Agamas and the system of Dharma based upon those eternal truths. The numerous and apt quotations from our great Tamil saints which the talented author has laid under contribution must appeal to our youths and certainly add much to the usefulness of the book. The style

is at once simple and impressive; even the most abstruse ideas have been expressed in familiar and simple words, such as to bring them home to the undeveloped minds.

I heartily commend the book to the public in general and to the *educational authorities* in particular for recognition and adoption as a most suitable text-book on Hindu Religion in our schools and colleges.

Tinnevelly.
23—6—26.

V. R. HARIHARA AIYAR, B.A., L.T.
*Head Master,*
*Sri Manthiramurthi High School.*

---

## Introduction to the Second Edition.

It affords me great pleasure to have been asked to write a few words of introduction to this book. The author counts many eminent people amongst his friends and is no stranger to the orthodox Tamil Public. It is now nearly six years since the first volume of the 'Vedagama Dharma Vidhya' was published and the reception that the discerning public has accorded to it is such that the book has

gone through a second edition, and the second volume also is now published for the first time.

The Hindu Religion is very intricate and baffles the understanding of any body whether a stranger or one of its own followers. To have put in short compass matter scattered over a bewildering mass of religions, philosophical and ritualistic literature, and that in simple Tamil is no small achievement, yet that is what the author claims to have done.

I have glanced through the book and can confidently say that any average Hindu to whom Hinduism is at best a puzzle, can find in the book the tenets and creeds of his great religion placed before him, in a short, orderly, and understandable way.

I wish the book is introduced in every public School in the Tamil country as a text-book of moral and religious instruction, and the author thus encouraged in his noble endeavour.

Rameswaram Devastanam Patasala, Madura.
4—4—1932.

K. UDAYASWAMI AYYAR,
M. A., B. L.,
*Principal.*

# ஆசிரியர் முகவுரை.

"பரதகண்டம்" என்ற இவ் இந்தியாவில் மிகப் பழமையாக வழங்கி வருகின்றதும் நமது வேதம், ஆகமம், சாஸ்த்ரம், ஸ்மிருதி, புராணம், முதலியவற்றை ஆதாரமாகக்கொண்டதுமான அத்வைதம், த்வைதம், சைவம், வைஷ்ணவம் முதலிய மதங்களுக்குப் பொதுவாகத் தற்காலம் "ஹிந்து மதம்" என்ற ஒரு பெயர் வழங்கிவருகிறது. அதற்கு "வைதிக மதம்" என்பது பழமையான பெயர். ஜீவாத்மா பரமாத்மாவினிடம் போய்ச் சேருவதற்கு ஸாதகமாய் மனிதர்களின் கடமையான தர்மங்களைக் காட்டுவது "மதம்" எனப்படும். அது ஈசுவர அம்சமாய் அவதரித்த ஆசார்யர்கள் ஆகிய மகான்களின் சாஸ்த்ர ஸம்மதமான அபிப்பிராயத்தை ஸித்தாந்தமாகக்கொண்டு வழங்கி வருவது. மதம் என்பதற்கு சாஸ்த்ரங்களால் ஸம்மதிக்கப்படுவது என்று பொருள். மற்றும் உலகத்தில் தற்காலம் தோன்றியுள்ள மதங்கள் யாவும் ஹிந்து மதம் என்ற ஸூர்யனிடமிருந்து வெளிக்கிளம்பிய கிரணங்கள் போன்றன. ஏனெனில் ஹிந்து மதத்தில் பொதிந்து கிடக்கின்ற பல தத்வங்களில் சில தத்வங்களே அம்மதங்களில் இதுவரை கண்டுபிடித்து அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றன. அவற்றிற்கு இன்னமும் புலப்படாத எண்ணற்ற தத்வங்களை உணர்த்துகிற ஹிந்து மதமோ! அம்மதத்தினர்க்கு நாடோறும் நவிலமுடியாத நன்மைகளைத் தரா நம்மிடம் இன்றும் காத்துக்கொண்டிருக்கிறது.

இப்படியிருக்க ஜலத்திலுண்டாகும் பாசி, ஜலத்தையே மறைக்க வருவது போன்று ஹிந்து மதத்தின் பெயர்போன்ற புறம்பீத அநுஷ்டானங்கள் தம்மிடமில்லாத நமது வைதிக மதத்தின் பல சிறந்த கொள்கைகளை தப்பிதம் என்று சிலகாலமாகப் புறங்கூறி மறைக்க வந்து கொண்டிருப்பன. அதுமாத்திரமல்ல. "ஹிந்துகலாசாலை" என்று மகுடம் புனைந்து கொண்டிருக்கும் பல கலாசாலை களில் ஹிந்துமதச் சிறுவர்களுக்கு இளமையிற் கற்பிக்க வேண்டிய அம்மதஸம்பந்தமான கல்வியின் சிறுபான்மை யாவது வெகுகாலமாகக் கற்பிக்கப்படாமலுமிருந்து வருவதுடன் நமது சிறுவர் புறமதத்தினர் ஆங்காங்குப் பிரஸங்கிப்பதைக் கேட்டு "விக்ரஹாராதனம்" முதலிய நம்மதத்தின் அநுஷ்டானங்களில் சிலர் சிரத்தை குறைந்து வருகின்றனர். பலர் எவ்விதமான மத உணர்ச்சியிலும் ஊக்கமற்றிருக்கின்றனர். இளமையில் மனத்திற் பற்றாத ஒரு விஷயத்தை முதுமையிற் பற்றச்செய்வது காய்ந்த மூங்கிலை வளைப்பதற்கு ஒப்பாகுமென்பது தெரிந்த விஷயம்.

பிற நாட்டினர் நம் நாட்டில் நாட்டியுள்ள ஆங்கில கலாசாலைகளில் தினந்தோறும் ஒவ்வொரு வகுப்பிலும் ஒரு மணி நேரம் அவர் மதக் கல்வியைக் கற்பிக்கவேண்டி ஏற்படுத்தியுள்ள கட்டாயத்தையும், அவர் அதில் கொண்டுள்ள உற்சாகத்தையும் நம்மவரும் நன்கு உணர்ந்துள்ளார். அப்படியிருக்க முன் சொன்னபடி எவ்வித மதவுணர்ச்சியு மற்ற நம் சிறுவர்கட்கு நம் மதக்கல்வியை நமது கலாசாலை களில் வாரத்திற்கு ஒரு மணி நேரமாவது புகட்டவேண்டி ஏற்படுத்திய கடமையையும் பரீக்ஷைப் பாடமில்லாததால்

புறக்கணித்திருக்கின்ற பல கலாசாலா தர்மகர்த்தர்களும் அவற்றின் தலைமை ஆசிரியர்களும் நம் மாணவர்க்கு அவர் மதஒழுக்கங்களின் திறமை என்ற அமுதைதெய்வமேவந்து ஊட்டவேண்டுமென்று கருதியிருப்பார் போலும். நம்முள் பல மதபேதங்களிருப்பனபற்றி அவற்றை ஒற்றுமைப் படுத்திக் கற்பிக்கத்தக்க பொதுவான ஒரு புத்தகமில்லா திருப்பதினால் ஹிந்து கலாசாலைகளில் அவர் மதக்கல்வி கற்பிக்க அசௌகர்யமாயிருப்பதாகத் தலைமையாசிரியர் சிலர் என்னிடம் கூறியுள்ளார். அவர் வசனத்தை நம்பி யான் இதனை இயற்றி இதன் முதல் தொகுதியை மாத் திரம் முன்பு அச்சிட்டு பல ஹிந்து கலாசாலா ஸ்தாபகர், தலைமை ஆசிரியர் இவர்களிடம் சென்று அவர் கலாசாலை களில் இதனை ஒரு பாடமாக வைக்கும்படி செய்து கொண்ட விண்ணப்பம் முற்றிலும் வீணாகவில்லை. அவர் களுள் சிலராவது என்பால் காட்டிய கருணையே இதன் இருதொகுதிகளையும் திரும்ப யான் தற்போது வெளி யிடக் காரணமாயிற்று. "எடுத்த கார்யம் இன்று குன்றி யிருப்பினும் என்றைக்காவது அது எழும்பி நிற்கும்" என்று யான் மேலும் விடாதுகொண்டிருக்கும் ஊக்கத் திற்கு "நற்றொழில் புரிவான் நலன் இழக்கான்" என்ற கீதாவாக்கியமே உறுதியான ஊன்றுகோலாகும். ஆதலால் பல பெரியார் பள்ளிப்பிள்ளைகளுக்குப் பின்னும் இதனைப் பாடமாகவைத்து எனது நம்பிக்கை நழுவாமலிருக்கவேண் டிய உதவிபுரியவேண்டுமென்று பன்முறையும் அவர்களை வேண்டிக் கொள்ளுகிறேன். கலாசாலா மாணவர்களின் நன்மையைக்கருதி முதல் தொகுதியின் ஒவ்வொரு பாடத்

நிற்கும் திருஷ்டாந்தக் கதைகள் சேர்த்தும், ஸௌகர்யத்தைக்கருதி மூன்று பாகங்களாகப் பிரித்தும், சில காபிகளைத் தனித்தனியாக பைண்டுகள் செய்தும் அவற்றை சொற்ப விலைக்கு வாங்கும்படி இப்பதிப்பில் வெளியிட்டுள்ளேன். இதன்கீழ் வடமொழி தென்மொழி மேற்கோள்களது தகவல்களும் பொருள்களும் குறிக்கப்பெற்றிருப்பன.

நம்மவருள் ஹிந்துமதக்கொள்கைகளை முற்றும் தெரிந்து கொள்ளவேண்டுமென்ற ஆவலுற்ற பல பெரியோர்களுக்கும் பல நூல்களைக் கற்க அவகாசமில்லாதது பற்றியும் அக்கொள்கைகள் வடமொழி தென்மொழிகளது உயர்தர நூல்களிலேயே பரந்து பதுங்கியிருப்பனபற்றியும் அவற்றின் ஸாரத்தைத் திரட்டிக் காட்டுகிற இச்சிறு நூல், பின்பு அவர்கட்கு அவகாசமுற்ற ஸமயத்தில் அவற்றை விரிவாகக் கற்க வேண்டுமென்ற ஊக்கத்தை உண்டு பண்ணுவதுடன் அவற்றை எளிதில் கற்பதற்கும் துணைக்கருவியாக நிற்கும் என்பது நிச்சயம். ஆதலால் இதனை ஹிந்து மதத்தினர் அதன் சார்பினர் ஆகிய எல்லோரும் அன்புடன் ஆதரிக்கவேண்டுமென்பது எனது முக்யமான கோரிக்கை. இதற்கு முகவுரைகள், அபிப்ராயங்கள் கொடுத்து உதவிபுரிந்தவர்களிடத்தும் இதனைக் கூடியமட்டில் திருத்தமாய் அச்சியற்றுவித்த இவ்வச்சுக்கூட அதிபரிடத்தும் யான் என்றும் நன்றிகாட்டக் கடமைப்பட்டுள்ளேன்.

உலகத்தார் மாட்டு அன்புடன் யான் ஏற்றதாகிய சிறிய கைங்கர்யம் வளரும்படி ஈசன் அருள்புரிவாராக.

ஆங்கீரஸ ௵ }
வைகாசி ௴ 15௳ }

பொதுஜன ஊழியன்,
நா. ஸாம்பசிவ சாஸ்திரி.

## அபிப்ராயங்கள்.

ஸ்ரீ சிருங்ககிரிமடம் மஹா மகிமை பொருந்திய ஸத்குரு ஸ்தானத்திலிருந்து பரம கருணையினால் இப்புஸ்தகத்தை இயற் பிரசாரம் செய்வதின் நிமித்தமாய் இக்கிரந்த கர்த்தாவிற்கு காம்பாள் பிரஸாத ரூபமான திரவிய ஸகாயம் செய்து க்ரஹித்ததுடன் ஷை மடம் ஆஸ்தான பண்டிதரின் கீழ்க்கண்ட மதி பத்திரிகையினாலும் இது ஆதரிக்கப் பெற்றிருக்கிறது.

ஷை மடம் ஆஸ்தானபண்டிதரும் ஸாஹித்ய, தர்க்க, வ்யா ண, வேதாந்த சாஸ்திரங்களில் சிறந்த திறமை வாய்ந்தவரும் வதாந்தபூஷணர் " என்ற பட்டம் பெற்றவருமான பிரம்மஸ்ரீ எஸ். வெங்கடாசல சாஸ்திரிகள் 17—2—27.
ர் கோவில் முகாம்:—

பிரம்மஸ்ரீ நா. ஸாம்பசிவ சாஸ்திரிகள் இயற்றிய "வேதாகம வித்யா" என்ற புஸ்தகத்தின் சில பாகங்களை வாசித்துப் த்தேன். ஸம்ஸ்கிருதபாஷையில் விரிவாக உள்ள கடினமான ஷயங்களை ஸாரமாக எடுத்து தமிழுலகத்திற்கு உபயோகப்படும் சுருக்கமாகவும் விஷயங்கள் மனதில் பதியும்படி தெளிவாக அது எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. தமிழில் ந்த கிரந்தங்களின் வாக்கியங்களும் சில இடங்களில் உதாக ப் பட்டிருக்கின்றன. சாஸ்திரிகளுடைய வைதிக மதப்பிர த்தின் பிரயாஸத்திற்கு தமிழ்நாடு முழுதும் நன்றிகாட்டக் மைப்பட்டுள்ளது. அவர்கள் முயற்சி மேலும் விருத்தியாகும் ஸர்வேசுவரனைப் பிரார்த்திக்கிறேன்.

---

மதுரை, ராமேசுவரம் தேவஸ்தானம் ஸம்ஸ்கிருத காலேஜ் ரகரணத் தலைமைப்பண்டிதரும் ஸாஹித்ய, தர்க்க, வ்யாகரண, ாந்த சாஸ்திரங்களில் சிறந்த புலமை வாய்ந்தவரும் யூனிவர்

வடிட சிரோமணியும் மைசூர் ஸம்ஸ்தான சாஸ்திர பரீக்ஷையில் தேர்ச்சியுற்று உயர்தர ஸம்மானம் பெற்றவருமான பிரம்மஸ்ரீ கே. எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள் 5—4—1932:—

...... இவ்வரிய நூலை அடிமுதல் முடிவரை யான் நோக்கலுற்றேன். நம் வேத சாஸ்திரங்களில் ஆங்காங்கு பரந்து கிடக்கும் அரிய பெரிய மத விஷயங்களும், தர்மங்களும் இங்கு ஒருங்கு சேர்க்கப்பெற்று யாவரும் சுலபமாயறியும் வண்ணம் எளிய இனிய தமிழ் நடையில் எவர்க்கும் பயன்படுமாறு பற்பல மேற்கோள்களும் சாதுர்யமான உபகதைகளும் சேர்த்து எழுதியிருப்பது மிகவும் பாராட்டத்தக்கதே. மகர்ஷிகளது மகிமையை நன்கு விளக்க இவ்வரிய நூலே போதுமென்றவளவில் அது சிறப்பாய் அமைக்கப்பெற்றுள்ளது. ஹிந்துமத தத்வங்களைச் சுருக்கமாகத் தெரிந்து கொள்ள அபிப்பிராயமுற்றவர்க்கு இதுகாறுமின்றி இன்று இவர் எழுதி வெளியிட்டுள்ள இப்புஸ்தகத்தைத் தவிர சாதனம் பிறிதொன்றில்லை. இதன் இருதொகுதிகளும் நம் மாணவர் யாவர்க்கும் பாட புத்தகமாக அமைத்தல் பெரிதும் நன்மை பயப்பதாகும். இவரது நன்முயற்சியை ஸபலமாக்குவது ஒவ்வொரு ஹிந்துவின் கடமை. இவருக்கு இம்மாதிரியான பரோபகாரத்தில் மேலும் ஊக்கமுண்டாகுமாறு இறைவன் அருள்புரிவாராக.

செயற்கரிய செய்வர் பெரியார்
சிறியர் செயற்கரிய செய்கலாதார்; திருக்குறள்.

---

சென்னை, பச்சையப்பன் காலேஜ் ரிடையர்ட் தலைமை ஸம்ஸ்கிருத பண்டிதர் மஹாமஹோபாத்யாயர் பிரம்மஸ்ரீ M. லக்ஷ்மண ஸூரியவர்கள், 5—6—26.

... ... ... ... அவை (தர்மங்கள்) எல்லாம் "மநுதர்ம சாஸ்திரம்" முதலான தர்ம சாஸ்திரங்களின் ஸாரமானவை. அங்

தந்த இடங்களில் ... ... ... தமிழ்ப் பாஷையில் புகழ் பெற்ற வர்களின் வாக்கியங்களும் உதாகரிக்கப்பட்டிருக்கின்றன. ஸம்ஸ் கிருத பாஷையிலும் தமிழ்ப்பாஷையிலுமுள்ள நீதி நெறிகளைச் சுருக்கமாயறிய இது ஒரு கண்ணாடியாய் விளங்குகின்றது. ஆகை யினால் இந்த "வேதாகம தர்மவித்யா" புஸ்தகத்தைப் பாடசாலை களில் தமிழ் மாணாக்கர்களும் உபாத்தியாயர்களும் ஆதரிப்பார்கள் என்பதற்குக் கொஞ்சமும் ஸந்தேகமே இல்லை. அத்துடன் தர் மத்தில் பக்தியுள்ள புருஷர்களும் ஸ்திரீகளும் இதை நிரம்ப உப யோகிப்பார்கள் என்று உறுதியாய் நம்புகிறேன்.

---

திருநெல்வேலி, ஹிந்து காலேஜ் தலைமைத் தமிழ்ப் பண்டிதரும் ஹிஸ் ராயல் ஹைனஸ் வேல்ஸ் இளவரசரால் பிருதளித்து ஸம் மானிக்கப்பெற்றவருமான மகா-ா-ா-ஸ்ரீ மே. சோ. சுப்பிரமணி யக் கவிராஜர் அவர்கள்:—24—6—26.

பேரியனூலறியாத பிள்ளைகள் நம்மாசாம் பெரிதும் பேணித்
தேரிய நீதியின் வேதாகம தர்மவித்யாவாஞ் சிறந்த நூலை
ஆரியநூல்வல சாம்பசிவக் கலைஞன் றமிழ்வசனமாகச் செய்தான்
சீரியநூலிஃதெவர்க்கு மிகுந்தபயன் றருவதெனச் சிந்தித்தோமே.

---

கும்பகோணம் கவர்மெண்ட் காலேஜ் தலைமைத் தமிழ்பண்டித ரும் யூனிவர்ஸிடி வித்வானும் தமிழ்ப் பரீக்ஷகருமான உ. வே. A. M. ஸ்ரீ-கோபாலராமானுஜாசாரியாரவர்கள்:—13—2—26

............. ஹிந்துமத ஸம்பந்தப்பட்ட முக்கியமான விஷ யங்களை மாணவர்களும் பெண்பாலாரும் மற்றவர்களும் சுலபமாய்

அறிந்துகொள்ளும்படி அது எளிய நடையில் எழுதப்பட்டிருக்கிறது. வடமொழி தென்மொழிகளிலுள்ள உயர்ந்த கிரந்தங்களிலிருந்து பொருத்தமான மேற்கோள்கள் காட்டப்பட்டிருக்கின்றன. ஹிந்துமதஸ்தர் யாவருக்கும் பொதுவானகொள்கைகளைமாத்திரம் அது விவரிக்கிறது. தற்காலத்திற்கு அவசியமான மதம், ஒழுக்கம் இவைகளை போதிப்பதற்கு இது ஒரு சிறந்த நூலாகும். இதையாவருமாதரித்து இவ்வாசிரியரை உற்சாகப்படுத்துவாராக.

---

திருநெல்வேலி ஜில்லா சிவதேவஸ்தானம் கமிட்டி அங்கத்தினரும் ஸ்ரீவைகுண்டத்தில் வக்கீலுமான மகா-ா-ா-ஸ்ரீ S. T. பொன்னம்பலநாத முதலியாரவர்கள். 14—6—26.

... ... ... ... மத உண்மைகளை அறியாதவர் உணருமாறு எழுதியிருக்கிற இந்நூலிற் பொய்யாமொழிப்புலவர் மறையிலிருந்தும், தாயுமானவர் பாடல்களிலிருந்தும் வேறு சில நூல்களிலிருந்தும் ஆங்காங்குக் குறித்திருக்கிற எடுத்துக்காட்டுகளே, தமிழில் அவருக்குள்ள ஆதரத்தையும் அவர்முயற்சித் திட்பத்தையும் அவரை நேரிலறியார்க்கும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளக்கும் பான்மையன. ... ... ... இவர் சிறியவர்க்கும் பெரியவர்க்கும் அறிவுச்சுடர் கொளுத்த இந்நூலை எழுதியது மிகப் பாராட்டத்தக்கதே. “முயற்சி திருவினையாக்கும்” என்னும் திருக்குறள் இவர்களுக்கு நலம்பயக்குமென்பது துணிபு.

---

உ

# வேதாகம தர்ம வித்யா

## விஷய அட்டவணை.

### முதல் தொகுதி

---

### முதற்பாகம்.

---

## இரண்டாம் பாகம்.

---

## மூன்றாம் பாகம்.

## இரண்டாம் தொகுதி

### முதற்பாகம்

## இரண்டாம் பாகம்.



உ

கடவுள் துணை.

# வேதாகம தர்ம வித்யா

அல்லது

## ஹிந்துமத தர்ம விளக்கம்.

முதல் தொகுதி.

முதற்பாகம்.

### கடவுள் வணக்கம்



எவனிடமிருந்து இவ்வுலகம் உண்டாயிற்றோ, எவனால் இது காக்கப்படுகிறதோ, எவனிடத்தில் இது முடிவில் லயமடையுமோ, அவ்விதமான பெருமை பொருந்தினவனும், யாதொருவிதமானபேதங்களற்றவனும், ஜ்ஞானமயமான வடிவமுற்றவனுமாயிருக்கின்ற கடவுளை வணங்குகிறேன்.

## முதல் அதிகாரம்.

### புருஷார்த்தம்.

அசையும் பிராணிகளும் அசையாப் பிராணிகளும் நிறைந்த இந்தப் பிரபஞ்சத்தில் அருமையான மானிட ஜன்மம் பெற்றிருக்கின்ற நாம் கடவுளால் நமக்கு அளிக்கப்பெற்ற "விவேகம்" என்ற பகுத்தறிவை கல்வி கேள்விகளினால் அவசியம் விளங்கச் செய்யவேண்டும். அப்போது தான் நாமெடுத்த ஜன்மத்திற்கு முக்கியமான பலன் இன்னது என்பது நமது புத்தியில் தோன்றும். அப்படியின்றி பசு பக்ஷி முதலிய ஜந்துக்கள் போன்று, அவிவேகிகளாகவே இருந்துகொண்டு உண்ணுவதும் உறங்குவதுமாகக் காலங்கழிப்போமானால் நமது வாழ்நாளை வீண் நாளாகச்செய்து ஜன்மத்தைப் பாழாக்கினவர்களாவோம். தாயுமானவர் * "எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிதரிதுகாண், இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ ஏதுவருமோ அறிகிலேன்" ‡ "மெஞ்ஞான சுக நிஷ்டை சேராமலே சோற்றுத் துருத்தியை சதமெனவும் உண்டுண்டு தூங்கவைத்தவர் யார்கொலோ" என்று கூறுகிறார்.

அவ்விதம் துர்லபமான இப்பிறவியில் மெய்யுணர்வினை விளங்கச்செய்வதற்குக் காரணமான இவ்வுடம்பினை

---

* சித்தர்கணம், பாடல் 4.

‡ பரிபூரணானந்தம், பாடல் 7. மெய்யறிவினால் உண்டாகும் சுகம் பெறுதவண்ணம் உடம்பை நிலையாக நினைத்துப் புசித்துப் புசித்துத் தூங்கும்படி என்னை வைத்தவர்எவரோ? என்று பொருள்.

நமக்கீந்த கடவுளிடம் நன்றியுடன் அதனுள்ளிருக்கும் ஆத்மாவிற்கு நன்மையைப்பயக்கும் நமது ஜன்மத்தின் முக்யமான பலனை நாம் தேடாவிடின் அவ்வாத்மாவிற்கு நாமே கேடு விளைவித்தவர்களாகிறோம். பகவத் கீதையில் † "ஆத்மாவின் நன்மையைத் தேடுகிறவனும் தேடாதவனும் முறையே தனக்குத்தானே மித்ருவாகவும் சத்ருவாகவும் ஆகின்றார்கள்" எனப்படுகிறது. § "உடம்பினைப் பெற்ற பயனாவதெல்லாம் உடம்பினில் உத்தமனைக்காண்" என்ற ஔவை குறளும் நாம் இவ்வுடம்பை யடைந்ததற்கு அதனுள்ளிருக்கும் உத்தமனாகிய ஆத்மாவை யறியவேண்டியதுதான் முக்யமானப் பிரயோஜனம் என்று கூறுகிறது.

அவ்விதம் ஆத்மஸ்வரூபத்தை யறிவதற்குத் துணையாகவிருக்கின்றது எதுவோ, அதுவே மானிட ஜன்மம். அதன் பலன் புருஷார்த்தமாகும். அதுதான் புருஷர்களால் விரும்பப்படுவதுபற்றி "புருஷார்த்தம்" எனப்படுகிறது. இங்கு புருஷர்கள் என்பதை ஆண் பெண்களுக்குப் பொதுப்பெயராகிய ஜனங்கள் என்று எடுத்துக் கொள்ளவேண்டும்.

அப் புருஷார்த்தம் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என நான்கு வகைப்படும். * "தருமம் பொருள் காமம் வீடென நான்கும் ‡ உருவத்தாலாயபயன்" என்பது ஔவை குறள்.

---

† அத்யாயம் 6. சுலோகம் 5.

§ அதிகாரம் 2. குறள் 1.

* அதி. 1. குறள் 4.

‡ உடம்பினால் ஆகவேண்டிய பலன்.

# தர்மம்.

நமது ஆத்மாவைத் தாழவிடாமல் தூக்கி நிற்கவைத்திருக்கின்றது எதுவோ, அதுதான் தர்மம் எனப்படும். தர்மம் என்ற ஸம்ஸ்கிருத பதத்திற்குத் தாங்கிக்கொண்டிருக்கிறது என்பது பொருள். அது மனம், வாக்கு, காயம் என்ற திரிகரண (ஸாதன)ங்களிலும் தூய்மையுற்றிருக்கும் நிலைமையினால் தான் ஸித்திபெறத்தக்கதாகும். வாக்கு, சரீரம் இவ்விரண்டிலும் ஒருவன் சுத்தனாகவிருக்க வேண்டுமானால் அவன் முதலில் மனத்தை சுத்தமாகவைத்துக்கொள்ள முயலவேண்டும். அம் முயற்சியில் தேர்ச்சி பெற்றவன்தான் தர்மத்தில் ஸித்தி பெற்றவனாவான். * "மனத்துக்கண் மாசிலனாதலனைத்து அறன்" என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

மனத்திலுள்ள தீயவெண்ணங்களை விலக்கி நல்ல எண்ணங்களைக் கடைப்பிடித்து அதின்வழியே செல்லுகிறவனின் கார்யங்கள் யாவும் பிறர்கட்கும் தனக்கும் நன்மையைச் செய்கின்றனவாகவே இருக்கும். அவனது கருத்தினாலும், வார்த்தையினாலும், செய்கையினாலும் ஈசன் ஸந்தோஷிக்கிறார். இதற்கிணங்க § "வாய்மையாற் பொய்யா

---

* அதி. 4. திருக்குறள் 4. மனத்தில் அழுக்கில்லாமல் இருத்தல் ஆகிய அதுவே தர்மம் எனப்படும் என்று பொருள்.

§ அதி. 11. குறள் 3. உண்மை பேசுவதனாலும், பொய்யாத மனத்தினாலும், களங்கமில்லாத சுத்தத் தன்மையினாலும் ஈசன் அருள் உண்டாகும் என்று பொருள். இதனால் வாக்கு, மனம், சரீரம் இவற்றின் சுத்திகள் கூறப்பட்டன.

மனத்தினன் மாசற்ற தூய்மையானீசனருள்" என்று ஔவைகுறள் கூறுகிறது.

தர்மம் என்பது பகவானை ஆராதித்தல் என்றும், கெட்ட கார்யங்களிலிருந்து நீங்கி நற் காரியங்களிற் பிரவேசித்தல் பகவானை ஆராதித்தலாகும் என்றும் ஆன்றோர் கூறுகின்றனர். அதையனுஸரித்து "எவன் பிறரை நிந்தியாமலும், கோள், பொய், பிறர் துன்புறும் பேச்சு இவற்றைச் சொல்லாமலும், அன்னியரின் தாரம், தனம் முதலியவற்றில் ஆசை வையாமலும், பிறரை ஹிம்ஸிக்காமலுமிருந்துகொண்டு, காமம், கோபம் லோபம், மோகம் மதம், மாச்சர்யம் என்ற உட்பகைவர்களால் கெடுக்கப்படாத மனதுடையவனும் தன்னையும் தன் புத்திரனையும்போன்று, எல்லாப் பிராணிகளையும் நினைத்து, அவைகளுக்கு நன்மையைச் செய்கிறவனும், தத்தமக்குரிய தர்மங்களை முறைப்படி அனுஷ்டிக்கிறவனுமாக இருக்கிறானோ, அவனது செய்கைகளால் ஸ்வாமி ஸந்தோஷிக்கிறார்" என்று புராணங்களிற் கூறப்படுகிறது. முற்கூறிய நற்கார்யங்களில் ஒருவன் மனத்திற்கு விசேஷமான பழக்கம் உண்டாக வேண்டுமானால் அவன் முதலில் எல்லாப் பிராணிகளிடமும் ஸமமாய் அன்புற்றிருத்தல் வேண்டும். * "ஈசனெனக் கருதி எல்லா உயிர்களையும் நேசத்தால் நீ நினைந்துக்கொள்" என்பது ஔவை குறள்.

---

* அதி. 10. குறள் 8. எல்லாப் பிராணிகளிடமும் ஈசனிருப்பதுபற்றி அன்பினால் நீ அவற்றை ஈசன் என கருத்தில் நினைத்துக் கொள் என்று பொருள்.

பகவத்கீதையில் † "மனம் தெளிவாகவிருத்தல், நல்ல எண்ணங்களுடன் கூடியிருத்தல், பலவிடங்களிற்செல்லாமல் அடங்கியிருத்தல், பிறருடன் பேசும் போது கபடமில்லாமலிருத்தல், இவையெல்லாம் மனத்தின் உத்தமமான தர்மம். பிறர்கட்கு வருத்தத்தை யுண்டுபண்ணுமற் பிரியமானதும் நன்மையானதும் உண்மையானதுமான வார்த்தையைப்பேசுதல், வேதசாஸ்திரங்களை அப்யஸித்தல், மந்தரங்களை ஜபித்தல் இவை வாக்கின் உத்தமமான தர்மம். ஆத்ம ஜ்ஞானிகள், குருக்கள், உயர்ந்தோர், தேவர்கள், இவர்களைப் பூஜிப்பதும், வியபிசாரம் செய்யாமலிருப்பதும், பிறர்கட்குத் தொந்தரவு செய்யாமலிருப்பதும், இயன்றவாறு பரோபகாரம் செய்வதும், சுத்தமாயிருப்பதும் சரீரத்தின் உத்தமமான தர்மம்" எனப்படுகிறது.

பிறர் எதை நினைப்பதனாலும், எதைச் சொல்லுவதனாலும் எதைச் செய்வதனாலும் நமக்கு ஸந்தோஷம் உண்டாகிறதோ அதையே நாம் பிறர்பொருட்டு நினைத்தலும் சொல்லலும் செய்தலும் வேண்டும். அதுதான் தர்மம். பிறர் எதை நினைப்பதனாலும், எதைச் சொல்லுவதனாலும், நமக்கு வருத்தம் உண்டாகிறதோ ; அதை நாம் பிறர்கட்கு நினைத்தலும், சொல்லலும், செய்தலும் அதர்மமாகையால் கூடாது. பாரதம் சாந்தி பர்வத்தில் * "உனக்கு பிறர் எதைச் செய்யக்கடவது என்று விரும்புகிறாயோ, அதனையே நீ பிறர்கட்குச் செய்யவேண்டும். எதைச் செய்யக்

---

† அத். 17. சுலோ. 14, 15, 16.

* அத்யாயம் 50. சுலோகம் 36.

கூடாது என்று விரும்புகிருயோ, அதனை நீ பிறர்கட்கு செய்ய நினைக்கவும் கூடாது" எனப்படுகிறது.

இவ்விதம் முன் சொன்ன தர்மத்தை உள்ளபடி யுணர்ந்து அதன்படி ஒழுகுகின்றவர்களுக்கு கடைசி புருஷார்த்தமாகிய மோக்ஷம் கிடைப்பது நிச்சயம். *"மாசற்ற கொள்கை மனத்திலடைந்தக்கால் ஈசனைக்காட்டும்" என்பது ஔவை குறள்.

---

## திருஷ்டாந்தக் கதை.

1. மனத்தின் சுத்தத்தைப்பற்றிய கதை:—ஒருஸமயம் கிருஷ்ண பகவான், துரியோதனனைப் பார்த்து ஒரு நல்லவனை யும் தர்மரைப் பார்த்து ஒரு கெட்டவனையும் தேடிப்பிடித்துக் கொண்டு வரும்படி உத்தரவளித்தார். பகவான் குறித்திருந்த பிறகொரு ஸமயத்தில் அவ்விருவரும் தன்னந்தனியே வந்து நின்றனர். அப்போது பகவான் கூறியது :—துரியோதனனுக்கு நல்லவனும் தர்மருக்குக் கெட்டவனும் கிடைக்காத காரணம் முறையே அவரவர் மனத்திலுள்ள தின்மையும் நன்மையுமே. இயற்கையில் பளிங்குபோன்று பரிசுத்தமாயுள்ள மனத்திற் பிரதிபலிக்கும் வஸ்துக்களிடம் யாதொரு குற்றமும் குணமும் கிடையா. சுத்தமான மனத்திற் பிரதிபலிப்பது சுத்தமாகவும் அசுத்தமான மனத்திற் பிரதிபலிப்பது அசுத்தமாகவுமிருக்கு மென்று கூறி பகவான் நிரூபித்துக் காட்டினார்.

---

* அதி. 2. குறள் 6. மனத்தில் களங்கமற்ற எண்ணங்கொண்டால் அது ஈசனை நமக்குக்காட்டும் என்று பொருள்.

2. வாக்கின் சுத்தத்தைப்பற்றிய கதை:— பன்னிரண்டு வயதுள்ள ஒருசிறுவன் அயலூருக்குப் போகும்போது வழியில் ஒரு கள்வர் தலைவன் கையிலகப்பட்டான். "எங்களுக்கு என்ன கொண்டுவந்தாய்?" என்று சிறுவனைக்கேட்ட தலைவனிடம் "என் தாயார் செலவிற்குக் கொடுத்த ஐந்து ரூபாய்கள் மடியில் இருக்கின்றன" என்று அவன் பதிலளித்தான். "அடே! மூடா! என்னிடம் ஒன்றுமில்லை என்று சொல்லித் தப்பிக்கொள்ளும் வழிதெரியாமல் இவ்விதம் உண்மையைச் சொல்லி ஏன் அகப்பட்டுக் கொண்டாய்" என்று தலைவன் கேட்டான். "ஐயா! நான் அடுத்த ஊரில் ஒருவரிடம் சம்பளத்திற்கு அமர்ந்து பிழைக்கப்போகிறேன். அதற்காக என் தாயார் முன் செலவிற்கு ஐந்து ரூபாய்களைக்கொடுத்து "உயிர் போவதானாலும் உண்மையைக்கைவிடாதே" என்று கூறிய உபதேசத்தைக் காப்பாற்றுவதை விட இந்த ரூபாய்களைக் காப்பாற்றுவது பெரிதென்று எனக்குத்தோன்றவில்லை" என்றான். அதுகேட்ட கள்வர் தலைவன் மிகவும் வெட்கி "இச்சிறுவனுக்குள்ள உண்மையும் உறுதியும் எனக்கில்லாமல் இதுவரை என் ஜன்மத்தைப் பாழாக்கிவிட்டேனே" என்று நொந்துகொண்டு சிறுவனுக்குப் பரிசளித்துஅனுப்பி அதுமுதல் தன்னையும் தனது கூட்டத்தாரையும் நல்வழியில் திருப்பி ஸத்யநெறி முறையிலிருந்தே காலங்கழித்தான்.

3. வாக்கின் சுத்தத்தைப்பற்றிய எதிர்மறைக் கதை:— பதினைந்தாம் நாள் பாரதயுத்தத்தில் துரோணாசார்யரது யுத்தக் கொடுமையைப் பொறுக்க முடியாத பாண்டவ ஸைன்யம் சிதறி ஓடிவிட்டது. "துரோணர் தன் புதல்வனாகிய அசுவத்தாமன் இறந்து விட்டதாகக் கேள்விப்பட்டால் யுத்தம் செய்

வதை நிறுத்திவிடுவோர்" என்று தெரிந்த பீமன், ஸைன்யத்தி லுள்ள அசுவத்தாமன் என்ற ஒரு யானை வேந்தை வெட்டிச் சாய்த்தான். பிறகு "கொலையுண்டான் அசுவத்தாமன் யானை வேந்தன்" என்று துரோணர் செவியுறச் சொல்லும்படி அவன்தர்மரை நிர்ப்பந்தித்தான். பீமன் கபடத்தை அறிந்திருந் தும் தர்மர், தம்பிமார்களின் கட்டாயத்திற்கு உடன்பட்டு மேற் கண்டபடி கூறினர். "கொலையுண்டான் அசுவத்தாமன்" என்ற வசனம் மாத்திரம் துரோணர் செவிகளிற்பட்டது. "யானை வேந்தன்" என்ற வசனம் துரோணர் செவியுறுதபடி பீமன் முதலியவர் வாத்யகோஷங்களைச்செய்து மறைத்து விட்டனர். பொய்யாமொழியராகிய தர்மரது வசனத்தை நம்பி துரோணர் கடுந்துயறமுற்று யுத்தத்தை நிறுத்தி விட்டார். அதனால் அன்று பாண்டவர்களுக்கே ஜயம் கிடைத்தது. தர்மர் நடந்ததை நவின்றபோதிலும் தம்பி செய்துள்ள சூழ்ச்சிக்கு உடன்பட்டதால் அவர் வசனம் பொய்க்கு ஸமானமாயிற்று. அதனால் பூமிக்குமேல் ஒரு சாண் உயரத்தில் ஓடிக்கொண் டிருந்த தர்மரது இரதம் உடனே பூமியைத்தொட்டு ஓட ஆரம் பித்தது. அதனாலேயே அவர் முடிவில் ஸ்வர்க்கம் போகுங் காலத்தில் நரகத்தை நேரில் அனுபவியாவிடினும் நரகவாசி களைப் பார்த்துக்கொண்டே மனம் நொந்து போக நேரிட்டது.

4. சரீர சுத்தத்தைப்பற்றிய கதை :— முன் ஒருகால் பிராணிகளிடம் மிகக் கருணையுற்ற பூரு என்ற ஒரு அரசன் இருந்தான். ஆகாயத்தில் ஒரு பருந்தினால் துரத்தப்பெற்ற ஒரு புறா அதிவேகமாய்ப் பரந்துவந்து பூருவினது மடியில் விழுந்து சரண்புகுந்தது. உடன் பருந்து அரசனிடம் வந்து "அரசே! எனது ஆகாரத்தைக் கெடுப்பது உனக்கு நியாயமா?" என்று

வினவியது. "சரண்புகுந்தாரைக் காப்பாற்றுவது எனது கடமை யாகையால் அப்புராவின் நிறையுள்ள மாம்ஸத்தை எனது சரீரத்திலிருந்து அறுத்து உனக்கு ஆகாரமாய்க் கொடுக்கிறேன்" என்றான் அரசன். அதற்கு பருந்து ஸம்மதித்தது. உடன் அரசன் திராசின் ஒரு தட்டில் அப்புராவை வைத்து தனது சரீர மாம்ஸத்தை சிறிது சிறிதாய் துண்டித்து எடுத்து வைக்க வைக்க புராவுள்ள தட்டு மேல் எழும்பாமலே கனமாக இருந்தது. கடைசியாக அரசனது சரீரம் முழுதும் செலவாகி பிராணன் போய்விடும்படியான நிலைமையிலிருக்கும் போது பருந்து இந்த்ரனாகவும் புரா இயமனாகவும் ஸ்வயஉருவமெடுத்தன. அரசனது அளவு கடந்த ஜீவகாருண்யத்தைப் பரீக்ஷிக்கவே இந்த்ரனும் இயமனும் அம்மாதிரி வந்ததாகக் கூறி அவனைப் புகழ்ந்து ஆசீர்வதித்துச் சென்றனர்.

5. சரீர சுத்தத்தைப் பற்றிய எதிர்மறைக் கதை :— மாண்டவ்யர் பால்யத்தில் ஈக்களைக் கொன்று ஒரு குச்சியில் கோர்த்து விளையாடுவர். பிறகு அவர் பெரிய ரிஷியாக ஆனபோது சில திருடர் அவர் முன்னே சில களவு சாமான்களைப் போட்டுவிட்டு அவரது ஆசிரமத்தில் ஒளிந்துகொண்டனர். காவலாளர் அங்கு வந்து அவர் ஸமாதியில் பேசாமலிருப்பதைப் பார்த்து அவர் ரிஷி போன்று பாசாங்கு செய்வதாக நினைத்து அவரையும் மற்ற திருடர்களோடு களவு சாமான்களுடன் அரசன்முன் கொண்டுபோய் விட்டனர். அரசன் விசாரியாமலே யாவரையும் தூக்கிலிடச் செய்தான். அதனால் மற்றவர் இறந்தனர். மாண்டவ்யர் மாத்திரம் யோக பலத்தால் உயிருடனிருந்தார். அதைக்கண்ட அரசன் அவர் ரிஷி என்று தெரிந்து தூக்கிலிருந்து அவரை எடுக்கும்படி உத்தரவிட்டான்.

வெலாளர் அவரை எடுக்க முடியாமல் தலைக்குமேலும் ஆலனத்திற்குக் கீழுமிருந்த தூக்கு மரத்தைச் சேதித்துவிட்டனர். அதனாலேயே அவருக்கு ஆணி மாண்டவ்யர் என்று பெயர். பிறகு அவர் இயமனிடம் சென்று பாபம் ஒன்றும் அறியாத தனக்கு அவ்வித சிக்ஷைவரக் காரணம் என்ன? என்று கேட்டார். அவர் பால்யத்தில் செய்த ஜீவஹிம்ஸையே அதன் காரணம் என்று இயமன் பதில் அளித்தான்.

6. பிறரிடம் நாம் எதிர் பார்ப்பதையே நாமும் பிறர்பால் நடக்கவேண்டு மென்பதைப்பற்றிய கதை:— ஒரு அரசன் ஒரு நாள் "விடியற் காலத்தில் வாயற் காப்பான் முகத்தில் விழித்ததனால் தனது கால்கட்டை விரலில் சிறிதுகாயமுண்டாகி இரத்தம் கண்டது" என்று நினைத்தான். அதற்காக உடனே மந்திரியை அழைப்பித்து அரசன் வாயற்காப்பானது சிரஸை சேதிக்க உத்தரவிட்டான். அதன்பிறகு வாயற்காப்பான் அரசனண்டைபோய் வணக்கமாய் நின்று "அரசே இன்று என் முகத்தில் விழித்த பலன் தங்களுக்கு ஒரு சிறிய காயந்தான் ஏற்பட்டது; தங்கள் முகத்தில் விழித்த பலன் எனக்கு சிரஸ் போகும்படி நேரிட்டிருக்கிறதே; அதற்குத் தாங்கள் என்ன சிக்ஷை விதித்துக்கொள்ளப் போகிறீர்கள்?" என்று தாழ்மையுடன் வினவினான். அதைக்கேட்ட அரசன் வெட்கி "பிறரிடமிருந்து தின்மையின்றி நன்மையே பெறவேண்டுமென்று நாம் நினைப்பதுபோலவே பிறரும் நம்மிடமிருந்து அவ்விதம் நினைப்பார்கள்" என்பதை அப்போதுதான் உணர்ந்தான். பிறகு அம்மாதிரியான நற்புத்தி தனக்குப் புகட்டிய வாயற்காப்பானை மெச்சி அவனுக்கு வெகுமதி அளித்து அவனை உயர்ந்த உத்யோகத்தில் அமர்த்தினான்.

---

## அர்த்தம்.

அர்த்தமென்பது கல்வி, செல்வம், பத்னி, புத்திரன், மித்திரன் முதலிய வஸ்துக்களின் நிறைவு. அது பொருள் எனப்படும். அது நல்வழிபற்றி வந்ததாயின் தர்மத்திற்கும் காமத்திற்கும் ஸாதகமாகவிருந்து ஜன்மப் பிரயோஜனமாகிய மோக்ஷத்தைக் கொடுப்பதாகும். அல்லாவிடில் கெடுதலாகவமையும். * "அறனீனும் இன்பமுமீனும் திறனறிந்து தீதின்றி வந்தபொருள்" என்பது திருக்குறள்.

---

## திருஷ்டாந்தக் கதை.

7. அர்த்தத்தைப்பற்றிய கதை:—ஒரு அந்தணன் தாழ்ந்த ஜாதிப் பெண்ணை மணந்து அவளிடமாக அனேக குழந்தைகளைப் பெற்றான். பிறகு குடும்பத்தைக் காப்பாற்ற நன்மார்க்கத்தில் பொருளீட்ட வகையறியாது காட்டில் வழிபறிசெய்து காலங்கழித்தான். ஒருஸமயம் ஸப்தரிஷிகள் என்ற ஏழு மாமுனிவர் காட்டின் வழியே சென்றனர். அவன் அவர்களையும் துன்புறுத்தலானான். "அப்பா! நீ பிராம்மணனாய்ப் பிறந்தும் இழிய தொழிலை ஏற்று பாபம் தேடுகின்றனை; நீ தேடிக்கொடுக்கும் பொருளை புஜிக்கின்ற உனது குடும்பத்தாருக்கும் உன் பாபத்தில் பங்குண்டா? என்பதை நீ உனது பெண்டுபிள்ளைகளிடம் போய் கேட்டுவா; நாங்கள் அதுவரை இங்கேயே இருக்கின்றனம்" என்றனர். வேதியன் ஏதோ ஒரு நற்கர்மவசத்தால் அவர்கள் கூறியதை ஒப்பி அவ்விதம் செய்தான். "குடும்பத்தலைவன் குடும்பத்தைக் காக்கக்கடமைப்பட்டவன்;

---

* அதி. 76. திருக்குறள் 4. ஸன்மார்க்க முறையின் வகையறிந்து பிறர்க்குத் தீமையின்றி ஸம்பாதிக்கப்படும் பொருள் தர்மத்தையும் இன்பத்தையும் கொடுக்கும் என்று பொருள்.

அவன் நல்வழியோ தீயவழியோபற்றி ஸம்பாதிக்கும் பொருளை அனுபவிக்க மாத்திரம் குடும்பத்தார் பாத்யப்பட்டவர்; அதனால் உண்டாகும் புண்யபாபங்களுக்கு தலைவனே பொறுப்பாளி'' என்று குடும்பத்தார் கூறியதாக அவன் திரும்பிவந்து சொன்னான். பிறகு அவன் குடும்பத்தை மூத்தபிள்ளையினிடம் ஒப்புவித்து அதுவரை நல்வழி யறியாமல் கெட்டுப்போனதைப்பற்றி வருந்தி அவர்களிடம் தனக்கு ஒரு நல்வழியை உபதேசிக்க வேண்டினான். அவர்களும் அவன்பால் இரக்கமுற்று "மரா, என்பதான மந்திரத்தை நாங்கள் திரும்பி இங்கு வரும்வரை ஜபித்துக்கொண்டிரு'' என்றனர்.

மரா என்பதை அடுத்தடுத்துக் கூறும்போது அது 'ராம' என்ற உச்சரிப்பாகு மாதையால் காட்டிலுள்ளவனுக்கு மரா என்ற மரத்தின் பெயர் ஏற்கனவே தெரிந்திருக்கலாமென்று அவன் இலகுவாக உச்சரிக்கும்வண்ணம் ராம என்பதை மாற்றி மரா என்று உபதேசித்தனர் முனிவர். அவன் அனேகாயிரம் வருஷங்கள் அவ்விதம் ஜபித்தான். முனிவர் திரும்பிவரும் ஸமயத்தில் அவன் சரீரத்தில் கரையான்கள் புத்து வைத்தும் பக்ஷிகள் கூடு கட்டிக் கொண்டுமிருந்தன. அவர்கள் வருணனை அழைப்பித்து மழை பொழியச்செய்து வல்மீக (புத்து) த்தினின்றும் வெளி வந்ததால் அவனுக்கு வால்மீகி என்ற பெயரிட்டனர். பிறகு பிரம்மா பிரத்யக்ஷமாகி ராம சரிதத்தை இராமாயணமாக இயற்ற அவருக்கு அருள் புரிந்தார். வால்மீகி மஹர்ஷி அவ்விதமே செய்து பகவானது அநுக்ரஹத்தால் மோக்ஷமெய்தினர்.

---

## காமம்.

காமம் என்ற வடமொழிப் பதத்திற்குப் பிராணிகளால் மிகப்பிரியமாய் விரும்பப்படுவது எனப் பொருள். அது நிலையில்லாத அநித்யஸுகமாகிய ஆனந்த ரூபமான பலன். அதனால் அது சிற்றின்பம் எனப்படும். அது இவ்

வுலகிலுள்ளது, அவ்வுலகிலுள்ளது என்று இருவகைப்படும். அவற்றிக்கு முறையே ஐஹிகஸுகம், ஆமுஷ்மிகஸுகம் எனப்பெயர். இவ்வுலகத்தில் புஷ்பம், சந்தனம், ஸ்திரீ முதலிய விஷயாநுபவத்தாலுண்டாகும் ஸுகம் ஐஹிக ஸுகம். ஆமுஷ்மிகஸுகமென்பது ஸ்வர்க்க லோகத்தில் ஸ்திரீமுதலிய விஷயபோகத்தாலுண்டாகும் ஸுகம்.

கடவுள் படைத்த எந்தப் பிராணிகளாலும் காமம் மறுத்துத்தவிர்க்கவொண்ணாது. நன்மை தின்மைகளை நன்கு ஆராயாது எல்லா உயிர்களும் அதனையே பின்பற்றிச் செல்லுகின்றன. ஓரேகாலத்தில் ஒரு பொருளால், அது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்கிற ஐம்புலன்களையும் அனுபவித்தற் சிறப்புடைத்தாகியது. அது மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளையும் அடக்கமுடியாது இடுக்கண்களினும் இழுத்துச்செல்லும் வன்மையும் இயற்கையுமுடையது. அப்படியிருந்தும் பெரியார் சாஸ்திரத்தில் வகுத்து வழிகாட்டியிருக்கும் முறையில் அதனை அனுபவிக்கின்றவர்கட்கு அதுவே அறம் பொருட்களுக்கு ஸாதனமாயிருந்து கடைசியில் வீட்டுப் பேறாகிய மோக்ஷத்தையும் பயக்கவல்லது. பகுத்தறிவில்லாத காகம், பாம்பு முதலியனவும் காலம், இடம் முதலிய சிலவரையறைக்குட்பட்டு சிற்றின்பமனுபவிக்கின்றன.

பகுத்தறிவுற்றமனிதர் அவற்றினும் சிறப்புடையாராதலால் மணந்த நல்லதம்பதிகளாகவிருந்து இல்வாழ்க்கையின் விதிகளையனுஸரித்து இன்பமனுபவிப்பதே புருஷார்த்த ஸாதகமென்றும், தம்பதிகள் பரஸ்பரம் ஒவ்வாதிருப்பதே புருஷார்த்தவிரோதியென்றும், மணவாதவர்களது இன்பமெப்போதும்துன்பமாய் முடியுமென்றும் முன்னோர்வழி

காண்பித்துள்ளார். * " பொருட்பொருளார் புன்னலந்தோயார் அருட் பொருளாயுமறிவினர். " என்பது திருக்குறள்.

## திருஷ்டாந்தக் கதை.

7. காமத்தைப்பற்றிய கதை:—ஒரு ரிஷி சில பிரம்மசாரிகளுக்கு வேதாந்த பாடம் கற்பித்து வந்தார். ஒருநாள் பாட மத்தியில் " பலவான் இந்த்ரியக்ராமோ வித்வாம்ஸமபி கர்ஷதி " என்ற ஸம்ஸ்கிருத வாக்கியம் வந்தது. " இந்த்ரிய ஸமூகம் வலுவுள்ளது, அது அறிவுள்ளவனையும் இழுத்துக்கொண்டு போகிறது" என்பது அதன் பொருள். அப்போது பிரம்மசாரிகளுள் ஒருவன் "இந்த்ரிய ஸமூகம் அறிவில்லாதவனைத்தான் இழுக்கவல்லது " என்று ஆக்ஷேபித்தான். முனிவர் அவனைப்பார்த்து " இவ்விஷயம் உனது அநுபவத்திற்கு வரும்வரை மேற்கண்ட வாக்யத்தை முன் சுவரில் எழுதி வைப்பாயாக " என்றார். அவன் அப்படியே செய்தான். அவன் ஒரு நதிக்கரையிலுள்ள குடிசையிலிருந்து அண்டையிலுள்ள கிராமத்திற்போய் பிக்ஷையெடுத்துண்பான். சில மாஸங்கள் கழிந்தபிறகு ஒருநாள் மாலையில் ஒரு யௌவன வயதுள்ள பெண் குடத்தில் ஆற்றுஜலமெடுத்து அதனை இடுப்பில் வைத்து பிரம்மசாரி குடிசைப்பக்கமாய் வந்துகொண்டிருந்தாள். உடனே திடீரென்று மழை வந்துவிட்டது. அந்தப் பெண் பிரம்மசாரி

---

* அதி. 92. திருக். 4.

அருள் என்று சொல்லக்கூடிய தர்மம், மோக்ஷம் என்ற பொருட்களை ஆராய்ந்தறிந்து ஸம்பாதிக்குந்தன்மையுற்றோர், நிலையற்ற செல்வப்பொருளையே நிலைப்பொருளாகக்கொண்டு மயக்குகின்ற வேசையரின் அற்பமான இன்ப நலத்தை (மனத்திலும்) தீண்டார். (நான்கு பொருட்களுக்கும் ஸாதனமாகிய மணந்த மனையாளிடமே இன்பம் பெற்று வாழ்ந்திருக்க மனமுறுவார்) என்பது கருத்து;

குடிசையினது வாயற்படி ஸமீபமாய்ப்போய் ஒதுங்கினாள். உள்ளே வேதாந்த புஸ்தகத்தைப் படித்துக்கொண்டிருந்த பிரம்மசாரி, மழைத் துளிகளால் கஷ்டமுற்று உள்ளேவர வெட்கியிருக்கும் அம்மாதைப்பார்த்து மழை நிற்கும்வரை குடிசையினுள்வந்து குடத்தை இறக்கிவிட்டு இருக்கும்படி மரியாதையாகச் சொன்னான். அவளும் அப்படியே செய்தாள். அவளது வடிவழகை நோக்கிய பிரமம்சாரியினது மனமும் மற்ற இந்த்ரியங்களும் நெகிழ்ச்சியடைந்தன. உடனே பிரம்மசாரி அவளது ஸமீபத்திற்குவரவே அவள் மறைந்து போய்விட்டாள். பிறகு அவன் தன்னை அறிவுறுத்த தனது குருவினால் உண்டாக்கப்பட்ட மாயைப்பெண் என்று தெரிந்தான்.

மறுநாள் பாடம் துவக்குவதற்கு முன்பேபோய் சுவரில்எழுதியிருந்த வாக்கியத்தின் கடைசிப் பதமாகிய 'கர்ஷதி' என்பதற்கு அப்பால், "கர்ஷதி, கர்ஷத்யேவ" என்ற இரண்டு பதங்களை அவ்ன் எழுதிவைத்தான். "இழுத்துக்கொண்டுபோகிறது; இழுத்துக் கொண்டு போகிறது; இழுத்துக்கொண்டே போகிறது" என்பது அதன் பொருள். இழுக்கிறதென்பதை ஒரு தடவை சொன்னால் போதாது; மூன்று தடவை வற்புறுத்திச்சொல்ல வேண்டுமென்பது அவன் கருத்து. அதன்பிறகு முனிவர் சிஷ்யர்களுக்குப் பாடம் கற்பிக்க உட்கார்ந்து ஒன்றுந்தெரியாதவர்போல் முன் சுவரைப் பார்த்தார். அதில் மேலும் எழுதியவன் எவன்? என்று வினவினர். அப்பிரம்மசாரி எழுந்து குருவினதுபாதங்களில்ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து நிகழ்ந்த விஷயங்களை ஒளிக்காது சொல்லி தான் ஆக்ஷேபித்ததற்கு மன்னிப்புகேட்டு 'கர்ஷதி' என்ற பதம் அங்கு மூன்று தடவை இருக்க வேண்டுமென்ற தன் அனுபவத்தை விளக்கவே தான் அவ்விதமெழுதியதாகக்கூறினான். குருசொன்னதாவது:— "மனிதர் பொருள் தேடுவதும் காமவின்பத்திற்காகவே. அதனை பெரியார் வரையறுத்து வகுத்துக்காட்டிய வழியின் வாயிலாக அனுபவிப்போருக்கு அதுவே தர்மத்தையும் பொருளையும் ஈந்து

மோக்ஷவின்பத்தை யளிக்கும். அப்படியின்றி மனம் போனவாறு நடப்பவருக்கு அது இம்மையிலும் மறுமையிலும் கடுந்துன்பமுறச் செய்து தாழ்ந்த ஜன்மத்தைப் பயக்குவதாகும்'' என்றார்.

---

## மோக்ஷம்.

மோக்ஷம் என்ற வடமொழிப் பதத்திற்கு விடுபடுதல் என்று பொருள். ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம் என்ற மூவகையான துக்கங்களினின்றும் திரும்ப ஸம்பந்தமில்லாமல், ஆத்மா, என்றும் விடுபட்டு ஒப்புயர்வில்லாத நித்யானந்த ஸ்வரூபமாக இருத்தல், மோக்ஷமெனப்படும். † உபநிஷத் "ஆத்மாவை அறிந்தவன் துக்கத்தைத் தாண்டுகிறான்'' என்று உபதேசிக்கிறது. ஸாங்கியஸூத்ரமும் அவ்விதமே "மூன்று விதமான துக்கங்களினின்றும் எப்பொழுதும் ஆத்மா, நிவிருத்தியடைந்திருத்தல் கடைசி புருஷார்த்தம்'' என்கிறது.

அவற்றில் ஆத்யாத்மிகம் என்பது தன் சரீரப்பற்றால் உண்டாகும் துக்கம். அதாவது மூப்பு, மரணம், பசி, தாகம் முதலியனவும் அநேகவித வியாதிகளுமாம். ஆதிபௌதிகம் என்பது துஷ்டப் பிராணிகளால் உண்டாகும் துக்கம். அது திருடர், சத்துருக்கள், புலி, பாம்பு முதலியவற்றால் உண்டாகும் அபாயங்களாம். ஆதிதைவிக மென்பது தைவத்தாலுண்டாகும் துக்கம். அது இடிவிழுதல், அதிக மழை, மழையில்லாமை முதலியவற்றால் உண்டாகும் கஷ்டங்களாம்.

---

† சாந்தோக்யம், பிரச்னம் 7. கண்டம் 1.

ஆத்மா, இவ்வித துக்கங்களினின்றும் விடுபடும் போது தனது சொந்தமான அழிவற்ற நித்ய நிர்மல நிரதிசயானந்தவடிவமாக இருந்துகொண்டிருக்கிறான். அதுவே பேரின்பம், வீடு, முக்தி, மோக்ஷம், கைவல்யம், நிர்வாணம், சிரேயஸ், அமிருதம் என்ற சொற்களால் அழைக்கப்படுகிறது.

அந்த மோக்ஷம் ஸாலோக்கியம், ஸாமீப்யம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் என நான்குவகைப்படும். முற்கூறிய துக்கங்களற்ற நித்யானந்த ரூபமான பரம் பொருளாகிய பரமாத்மாவின் உலகத்தை யடைவது ஸாலோக்யம். அவன் ஸமீபத்தையடைவது ஸாமீப்யம். அவன் உருவம்போன்ற உருவத்தையடைவது ஸாரூப்யம். அவனுடன் ஒன்றுய்க் கலந்துவிடுவது ஸாயுஜ்யம். இந்த நான்குவித முக்திகளில் முறையே முந்தியதைவிடப் பிந்தியது மேலானது.

சங்கராசார்யர் அருளிச்செய்த சிவானந்தலஹரியில் § "ஓ பரமசிவனே உனது அடியார்களிடம் சேர்ந்து தொண்டுகள் செய்துகொண்டிருப்பதனுல் ஸாலோக்ய முக்தியும், சிவா! மகாதேவா! என்ற உனது திருநாமங்களைக் கீர்த்தனம் செய்வதனுல் ஸாமீப்ய முக்தியும், உன்னை பூஜித்தலால் ஸாரூப்ய முக்தியும், ஸ்தாவர ஜங்கமப் பிராணிகள் வடிவமானதும், எங்கும் நிறைந்ததுமான உனது ஸ்வரூபத்தை இடைவிடாது தியானம் செய்வதனுல் ஸாயுஜ்ய முக்தியும் கிடைக்கிறது" எனக் கூறப்படுகிறது. வாஸுதேவமனனத்தில் * சர்யை, க்ரியை, யோகம்,

§ சுலோகம் 28. * வர்ணகம் 4.

ஞானம் இந்நான்கும் முறையே நான்குவிதமான முக்தி களுக்குக் காரணமாகின்றன எனப்படுகிறது. சர்யை என்பது தொண்டு. க்ரியை என்பது பூஜை. யோகம் என்பது தியானம். ஞானம் என்பது மெய்ப்பொருளறிவு. நித்யமான அம்மோக்ஷத்தையடைந்தவன் திரும்ப இங்கு வருகிறதில்லை. உபநிஷத்தில் "அவன் (மோக்ஷமடைந்தவன்) திரும்ப வருகிறானில்லை" எனப்படுகிறது. † "உறக்கமுணர்வு பசிகெடப்பட்டாற் பிறக்கவும் வேண்டா பிறப்பு" என்பதும் ‡ "தன்னையறியுமறிவுதனைப் பெறிற் பின்னை பிறப்பில்லை வீடு" என்பதும் ஔவை குறள். இவ்விதம் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்று நான்கு புருஷார்த்தங்கள். அவற்றிற்கு முறையே அறம், பொருள், இன்பம், வீடு எனத் தென் மொழிப்பெயர்கள்.

இவற்றில் காமம், மோக்ஷம் இவ்விரண்டும் தாமே ஸுக ரூபமாயிருப்பது பற்றி முறையே சிற்றின்பம், பேரின்பம் என்று பெயர்பெற்று நேராகவே புருஷனால் விரும்பப்படுவதனால் புருஷார்த்தம் எனப்படுகின்றன. தர்மம், அர்த்தம் இவ்விரண்டும் தாம் ஸுக ரூபமாக இல்லாவிடினும் முற்கூறிய இன்பங்களுக்கு ஸாதனமாயிருப்பதால் புருஷர்களால் விரும்பப்பட்டு புருஷார்த்தம் என்று அழைக்கப்படுகின்றன.

---

† அதி. 26. குற. 10. தூக்கம், புலனறிவு, பசி இம்மூன்றும் போய்விட்டால் பிறப்புப் பிறக்கவேண்டாம் என்று பொருள்.

‡ அதி. 28. குறள் 1. தான் என்ற ஆத்மாவை அறியும் அறிவைப் பெற்றபின் பிறப்பு கிடையாது. அதுவே வீடு எனப்படும் என்று பொருள்,

"அர்த்தம், காமம் மோக்ஷம், இவை மூன்றுக்கும் தர்மம், காரணமாயிருப்பதனால் முதலிற் சொல்லப்பட்டது. அர்த்தம், தர்மத்திற்கு ஸாதனமாயிருந்துகொண்டு அதன் வழியாகக் காமத்திற்கும் உதவியாகவிருப்பதால் இரண்டாவதாகச் சொல்லப்பட்டது. காமம், அர்த்தத்தினாலுண்டாவதால் மூன்றாவதாகச் சொல்லப்பட்டது. மோக்ஷம், தர்மத்தினாலுண்டாகிறதும், அழிவற்றதும், மற்ற மூன்றிற்கும் சிறந்ததுமாகவிருப்பதால் கடைசி புருஷார்த்தமாகக் கூறப்பட்டது. "தர்மம் இவ்வுலகமனைத்துக்கும் ஆதாரம். உலகத்தில் தர்மிஷ்டனை ஜனங்கள் அடைகிறார்கள். மனிதன் தர்மத்தினால் பாபத்தைப் போக்கிக்கொள்ளுகிறான். தர்மத்தில் எல்லாம் வைக்கப்பட்டிருக்கிறது. அதனால் தர்மத்தைச் சிறந்ததாகச் சொல்லுகின்றார்கள்" என்று * உபநிஷத்தில் கூறப்படுகிறது.

தர்மத்திற்கு நேர் எதிரி அதர்மம். தர்மத்தினால் புண்யமும் அதர்மத்தினால் பாபமும் உண்டாவதால் தர்மத்திற்குப் புண்யம் என்றும் அதர்மத்திற்கு பாபம் என்றும் பெயர் வழங்குகிறது. புண்யம், பாபம் இவ்விரண்டிற்கும் பொதுப்பெயர் அதிருஷ்டம், தைவம், பாக்யம், விதி, கர்மம் என்ற பதங்களாம். மேற்கூறிய தர்ம அதர்மங்களின் பேதம் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற வெளியிந்திரியங்களால் கிரஹிக்கமுடியாது. ஒருவன் தர்மத்தின் பலனாகிய ஸுகத்தையும் அதர்மத்தின் பலனாகிய துக்கத்தையு மனுபவிப்பதைப் பார்த்து அதனதன் பலன்களின் பேதத்தால் அனுமானித்துக்கொள்ளவேண்

* தைத்தரீயம். கண்டம் 89.

டும். ஈசுவரன் அவனவன் செய்த புண்ணிய பாபங்களைக் காரணமாக ஏற்படுத்தி அவற்றிற்குறிய ஸுகதுக்கங் களைக் கொடுக்கின்றான் என்று ஆஸ்திகர் கூறுகின்றனர்.

---

## திருஷ்டாந்தக் கதை.

9. மோக்ஷ மார்க்கத்தைப்பற்றிய கதை:—மிதிலா நகரத் திற்குப் பக்கத்து வனத்தில் யாஜ்ஞவல்கியர் என்ற ஒரு மஹர்ஷி இருந்தார். சில ஸந்யாஸிகளும் மிதிலைக்கதிபனாகிய ஜனகராஜ னும் அவரிடம் வேதாந்தபாடம் கற்றுவந்தனர். ஜனகன் இல்லறத் திலிருந்தபோதினும் துறவிகளைவிட மனப்பக்குவமும் வைராக்ய மும் உற்றிருந்தான். அவன்கேட்கும் ஸந்தேகங்கட்கு குரு அவ்வப் போது பதிலளித்து அவனது மனத்தைத் தெளியவைப்பார். அதனால் பணக்காரனாகிய அரசனிடம் குரு அதிக மதிப்புவைத் திருப்பதாகவும் ஏழைகளாகிய தங்களிடம் மதிப்புக்குறைவாக விருப்பதாகவும் ஸந்யாஸிகள் தனித்துப் பேசிக்கொண்டனர். இவ்விஷயத்தை ஜ்ஞானதிருஷ்டியாலறிந்த குரு அவர்களுக்கு அறிவுறுத்தத் தருணம் பார்த்திருந்தார்

சில மாஸங்கட்குப் பிறகு மிதிலையிலிருந்து ஒரு ராஜ ஸேவ கன் வேகமாய் ஓடிவந்து வேதாந்தபாடம் நடக்கும் மத்தியில் "வேந்தே! மிதிலாபட்டணம் தீப்பற்றியது, மந்திரிகள் மட்டிலா முயற்சியெடுத்தும் தீவேட்டை தணியவில்லை" என்று ஜனக னிடம் தெரிவித்தான். அதனைக்கேட்ட ஸந்யாஸிகள் "குடிசை களிலுள்ள காஷாயம், கமண்டலம், கௌபீனம் முதலியன எரிந்து போய்விடுமே" என்று சொல்லி பாட மத்தியிலேயே எழுந்து மிதிலைக்கு ஓடினர். ஜனகன் மாத்திரம் எழாமல் "மிதிலாயாம் ப்ர தக்தாயாம், நமே கிஞ்சித் ப்ரதஹ்யதே" என்றான். முற்கூறிய ஸம்ஸ்கிருத வாக்கியத்திற்கு "மிதிலை தீப்பற்றி எரியும்போது

எனக்குச் சொந்தமான ஆத்மானந்தம் ஒன்றும் எரிக்கப்படவில்லையே" என்று பொருள். பிறகு சேவகன் திரும்பிவிட்டான். மிதிலைக்குப் போன ஸந்யாஸிகள் மிதிலை எரியாமலிருந்ததைப்பார்த்து "ஆகா! நாம் தனித்துப்பேசிக்கொண்டதை ஜ்ஞான பலத்தால் அறிந்த குரு, நாம் புத்தியுறச்செய்த மாயை இது" என்று தெரிந்து திரும்பிவந்து குருவைப்பணிந்து தங்கள் தப்பிதத்தை மன்னிக்கவேண்டினர். அப்போதும் ஜனகன் பாடம் கற்றுக்கொண்டே இருந்தான். அப்போது குரு சொன்னதாவது:— "ஸந்யாஸிகாள்! வேதாந்தபாடம் நடக்கும்போது ஆத்மானந்த மநுபவிக்கப் பழகவேண்டும். அப்பழக்கம் வலுக்க வலுக்க வெளியிலுள்ள வஸ்துக்களிடம் பற்று அறவே ஒழிந்துவிடும். அற்பமான வஸ்துக்களைக் காப்பாற்ற ஆவல்கொண்டு ஓடினீர்களே! இராஜ்யமே அழிந்துபோவதானால் ஜனகனுக்குண்டாகும் பெரிய நஷ்டத்தையும் பொருட்படுத்தாமலிருக்கச் செய்தது எது? அவன் அனுபவிக்கும் ஆத்மாநந்தத்தின் முற்றின பழக்கமே. உங்களுக்கும் அவனுக்கும் வைராக்கியத்திலுள்ள பேதத்தை கவனியுங்கள். நான் வேந்தினிடங்கொண்டிருக்கும் மதிப்பு அவனது தீவிரமான வைராக்யத்தைப் பொறுத்தேயல்லாது ஐசுவர்யத்தைப் பொறுத்தல்லவென்பதை உணர்த்தவே இந்த ஸம்பவம் இப்போது நிகழ்ந்தது என்று குரு கூறினர்.

---

## இரண்டாம் அதிகாரம்.

---

### ஆஸ்திக்யம்.

(ஈசுவரன் ஒருவன் உண்டு என்பது)

ஈசுவரன் ஒருவன் இருக்கிறான் என்ற எண்ணமுள்ளவன் ஆஸ்திகன். இருக்கிறான் என்ற பொருளுள்ள 'அஸ்

தி' என்ற ஸம்ஸ்கிருத பதத்திலிருந்து ஆஸ்திக என்ற பதம் ஏற்பட்டிருக்கிறது. அவனுடைய தன்மை ஆஸ்திக்யம். உலகத்திலுள்ள எல்லாவஸ்துக்களும் ஐம்புலன்களால் அறியக்கூடியனவாயிருக்க பஞ்சேந்திரியங்களுக்கும் புலப்படாத ஈசுவரன் ஒருவன் இருக்கிறான் என்பதை ஆஸ்திகர்கள் எவ்வாறு நம்புகிறார் எனில்? அதை இங்குவிவரிப்பாம்.

நம்புலன்களுக்குத் தோன்றுகிற இப்பிரபஞ்சத்தில் ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் என்று நான்குவிதமான ஸ்ருஷ்டி பேதங்களிருக்கின்றன. ஜராயுஜமென்பது ஜராயு (கர்ப்பப்பை) விலிருந்துண்டாகும் மனிதன், ஆடு, மாடு முதலியவை. அண்டஜமென்பது அண்ட (முட்டை) த்திலிருந்துண்டாகும் பக்ஷி, பாம்பு, பல்லி முதலியன. ஸ்வேதஜமென்பது ஸ்வேத (புழுக்கம்) த்திலிருந்துண்டாகும் பேன், கரையான், புழு முதலியன. உத்பிஜ்ஜமென்பது உத்பேதித்துக் (பிளந்து) கொண்டு உண்டாகும் மரம், செடி, கொடி முதலியன. இந்நான்குவித ஸ்ருஷ்டியில் அனேக லக்ஷம் ஜீவராசிகளின் பேதங்கள் அமைந்திருக்கின்றன. மேலும் மனிதர்களிலேயே தனிகன், தரித்திரன், புத்திமான், புத்திஹீனன், ஸுகிப்பவன், துக்கிப்பவன், வித்வான், மூடன், வியாதிஸ்தன், திடசரீரமுள்ளவன், கோபமுள்ளவன், பொறுமையுள்ளவன் எனப் பல்லாயிரம் பேதங்களிருக்கின்றன. பின்னும் ஒரு தாயின் வயிற்றிற்பிறந்த பிள்ளைகளுக்குள்ளேயே அனேகவிதமான வேற்றுமைகள் காணப்படுகின்றன. இவ்வாறு இவ்வுலகத்திலுள்ள ஜந்துக்களுக்குத் தனித்தனி ஏற்பட்டிருக்கும் பேதத்தைக்கவனிக்கும்போது இப்பிரபஞ்ச ஸ்ருஷ்டியின்

ஆச்சர்யகரமான ஸ்திதி, வாக்கிற்கும் மனத்திற்கும் எட்ட வொண்ணாத நிலைமையிலிருக்கிறது.

இவ்விதம் ஜந்துக்களுக்குப் பற்பல விதமான ஸ்ருஷ்டி பேதம் உண்டாவதற்குக் காரணமென்ன? என்பதை யோசிக்கும்போது அவற்றின் கர்மம் என்பது காரணமாக ஏற்படுகிறது. ஜன்மம் பலவாறாகவிருப்பதால் கர்மமும் பலவாறாகவே இருக்கவேண்டுமென்பதை ஒப்புக்கொள்ள வேண்டியதாகிறது. ஆதலால் ஜன்மம் கார்யமாகவும், கர்மம் அதற்குக் காரணமாகவு மமைகிறது. ஏனெனில் காரணமின்றி கார்யமுண்டாகாது. பிதாவின்றி புத்திரன் உண்டாகான். மண் இன்றி குடமுண்டாகாது. விதையின்றி மரம் உண்டாகாது. இம்மாதிரி எண்ணிறந்த கர்மபேதங்களினால் அளவற்ற ஜன்மபேதங்களுண்டாகின்றன. § "ஊரனந்தம் பெற்ற பேரனந்தம் சுற்றுமுறவனந்தம் வினையினால் உடலனந்தம்" எனத் தாயுமானவர் கூறுகிறார். புண்யம், பாபமென்று கர்மம் இரண்டுவிதம். ஒருவனுக்குப் புண்யம் பலனளிக்கும்போது நற்பயனும் பாபம் பலனளிக்கும்போது தீய பயனுமுண்டாகும்.

ஒரு தேசத்திலுள்ள அநேக ப்ரஜைகள் செய்யும் நன்மை தீமையென்ற இரண்டு கர்மங்களுக்கும் தக்கவாறு நற்பயனையும் தீயபயனையும் கொடுப்பதற்காக ஸர்வ ஜனங்களுடைய கார்ய அகார்யங்களை அறியக்கூடிய வல்லமை பொருந்தினவனும், அவற்றிற்குறிய பலன்களைகொடுக்கத் தக்க சக்தி யுற்றவனுமான ஒரு அரசன் ப்ரத்யக்ஷமாய்

---

§ பரசிவ வணக்கம் பாடல் 2.

ஏற்பட்டிருப்பதை நாம் எப்படி மறுக்கவொண்ணுதோ, அம்மாதிரிப் பிராணிகளின் புண்யம் பாபம் என்ற இரு வகையான கர்மங்களைப்பகுத்து அறியவும் அவற்றிற் குறிய ஜன்மங்களைக்கொடுக்கவும் பரிபூர்ணமான சக்தி யுற்ற ஒருவன் அவசியமிருக்கவேண்டும். அவனை நம் போன்று ஸாதாரண மனுஷ்யனுக நினைக்கமுடியாது. ஏனெனில் உலகத்தில் ஒரு வஸ்துவை ஸ்ருஷ்டிக்கிறவன், முதலில் அப்பொருளின் ஸ்வரூபம் முழுமையுமறிகிறுன். பிறகு அதைச் செய்ய விரும்புகிறுன். அதன் பிறகுதான் அதைச் செய்து முடிக்கிறுன். அதுபோன்று இவ்வளவு பெரிய ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிசெய்து முடித்திருக்கின்ற ஒரு புருஷன், இப் பிரபஞ்சத்தின் ஸ்வரூபத்தையும் அதி லுள்ள ஸகல பிராணிகளின் ஸ்வரூபத்தையும் நன்கு உணர்ந்திருக்கவேண்டும். அவ்வுணர்வு ஸாதாரணமான ஒரு புருஷனுக்கு ஏற்படாது. அவ்விதம் விசாலமான அறிவு அஸாதாரணமான புருஷனுக்குத்தான் ஏற்படும். அவன்தான் ஈசுவரன் எனப்படுகிறுன்.

கர்மம் அறிவற்ற ஜடவஸ்துவானதால் அது ஒரு அறிவாளியின் வசமாக இருந்துகொண்டுதான் பலனைக் கொடுக்குமேயல்லது ஸ்வயமாகவே அதற்கு பலனைக் கொடுக்கக்கூடிய சக்தி கிடையாது. உளி ஜடவஸ்துவாகை யால் அது தச்சனின் வசமாக இல்லாமல் தானே மரத் தைச்செதுக்க சக்தியற்று தச்சன் செதுக்கிறவனுகவும், உளி அதற்கு ஸாதனமாகவுமிருப்பது போன்று ஈசுவரன் பலனைக்கொடுக்கிறவனுகவும், கர்மம் அதற்கு ஸாதனமாக வுமிருக்கிறது. ஆதலால் கர்மமே ஈசுவரனுகமுடியாது.

பிரும்மஜ்ஞானம்பெற தவஞ்செய்கின்ற முனிவர்கள் முக்காலமுணர்ந்த விசாலமான அறிவுடையவர்களாக விருந்தபோதிலும் அவர்களையும் ஈசுவரனாகச் சொல்ல முடியாது. அவர்கள் ஈசுவரத்தன்மையை யடைவதற்கு முயற்சிக்கின்றவர்களாகையால் அவர்களின் அறிவு ஸாதாரணமான நமது அறிவைவிட மிக்க விசாலமாகவும் தெளிவாகவும் படர்ந்துமிருக்குமேயல்லது ஈசுவரனின் அறிவைவிட மிகவும் தணிந்ததாகவே யிருக்கும். அதிலும் ஒருவர் அறிவைவிட மற்றொருவர் அறிவு சிறந்ததாகவும், அவர் அறிவைவிட இன்னொருவர் அறிவு சிறந்ததாகவும் இவ்விதம் பரஸ்பரம் அவர்கள் அறிவில் சிறிது ஏற்றத்தாழ்வு இருக்குமாகையால் பலவித தாரதம்யத்துடன் கூடின அறிவுள்ளவர்கள் ஈசுவரனாகமாட்டார்கள். ஆதலால் எவனுடைய அறிவிற்கு மேலான அறிவு உலகத்தில் எவனுக்குமில்லையோ, அவன் ஒருவனே ஈசுவரனாவான்.

மிகப்பெரியதும் அரியதுமான இப் பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்து அதிலுள்ளப் பிராணிகள் ஸுகமாய் ஜீவனம் செய்யும்படியாய் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற பஞ்ச பூதங்களை அமைத்து வைத்திருக்கிற பகவான், எல்லா உயிர்களிடத்தும் பரமகருணையும் ஒரே விதமான அன்பு முற்றிருப்பது பற்றி அவருக்கு ஒரு ஜீவனைத்தாழ்த்தியும் ஒருவனை உயர்த்தியும் ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்ற எண்ணமுண்டாகாது. ஒரு அரசன் பொதுவாகத் தனது பிரஜைகளுள் ஒருவனை உயர்ந்தவனாகவும் மற்றொருவனைத் தாழ்ந்தவனாகவும் பார்க்கமாட்டான். ஆனால் அவன் நல்வினை செய்தவனுக்கு நற்பயனை

யும் தீவினை செய்தவனுக்குத் தீய பயனையும் கொடுத்து முறையே ரக்ஷை, சிக்ஷை இவ்விரண்டையும் செய்யக்கடமைப்பட்டிருப்பதுபோன்று, பகவானும் அவரவர் வினைக்குத்தக்க பலன்களையே கொடுக்கக் கடமைப் பட்டிருக்கிறார் என்பதையுணர்ந்து அவரது ஸ்ருஷ்டியின் வேற்றுமையினால் அவரை பக்ஷபாதமுள்ளவராக எண்ணக்கூடாது.

ஒவ்வொரு ஜீவனும் தனது முன் ஜன்மத்திய கர்மத்திற்குத் தக்கதான சரீரம் பெற்றும் அந்த ஜன்மத்தில் வேறு சில கர்மங்களைச் செய்தும் அவற்றால் மற்றொரு ஜன்மத்தை எடுத்துக்கொண்டும் வருவதனால் ஜன்மத்திற்குக் கர்மம் காரணமாகவும் கர்மத்திற்கு ஜன்மம் காரணமாகவும் தொடர்ந்துகொண்டே போவதால் கர்மம் முன்னதா? ஜன்மம் முன்னதா? என்ற கேள்வியுண்டாகிறது.

விதையினால் மரம் உண்டாவதும் மரத்தினால் விதையுண்டாவதுமாக இருப்பதால் விதையும் மரமும் ஒன்றுக்கொன்று காரணமாவதுபற்றி எது முந்தியது? எது பிந்தியது? என்பதை நம்மால் தீர்மானிக்கமுடியாமல் கடைசியாக எப்படியோ ஆதியில் ஒரு விதையிலிருந்து ஒரு மரம் உண்டாயிற்று; அந்த விதைக்கு மாத்திரம் காரணம் சொல்லமுடியாதென்றுதான் தீர்மானிக்கவேண்டும். அதுபோன்று கர்மமும் ஜன்மமும் பரஸ்பரம் காரணமாயிருப்பதில் ஒவ்வொரு ஜீவனுக்கும் ஸ்ருஷ்டியாரம்பத்தில் காரணமறியமுடியாத ஒரு கர்மத்தினால் ஜன்மம் உண்டாயிற்று. அதனால் கர்மமும் ஜன்மமும் இப்படியே தொடர்ந்து வருகிறதென்று சாஸ்திர முணர்ந்தோர் தீர்மானித்திருக்கின்றனர்.

மனுஸ்மிருதியில் * "என்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட மரீசி முதலியவர்கள் தவஞ்செய்து மிக்க அறிவுள்ளவர்களாகவும் ஸ்ருஷ்டிப்பதில் எனக்கு உதவிசெய்கிறவர்களாகவுமிருந்துகொண்டு எனது உத்திரவின் பேரில் இவ்வுலகத்தையும் இவ்வுலகத்திலுள்ள ஸ்தாவரங்கள், ஜங்கமங்கள் என்ற பிராணிகளையும் அவ்வவற்றின் கர்ம வசப்படி ஸ்ருஷ்டித்திருக்கிறார்கள் என்று பிரம்மா கூறுகிறார்" எனப்படுகிறது. கடவுளின் பலவிதத் திருநாமங்களுள் பிரம்மாவென்பதும் ஒன்று.

ஆகையால் இப்பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கிறவனும் அதிலுள்ள சராசர ஜந்துக்களுக்கு அவற்றின் கர்மத்திற்கேற்றதான ஜன்மங்களைக் கொடுக்கிறவனும் அதற்குத்தக்க இணையற்ற நித்ய நிர்மலமான விசால ஞானமுற்றவனும் ஸர்வேசுரனுமான இறைவன் ஒருவன் இருக்கிறான் என்பது நிச்சயம்.

---

## திருஷ்டாந்தக் கதை.

10. ஆஸ்திக்யத்தைப்பற்றிய நாஸ்திக ஆஸ்திக ஸம்பாஷணைக் கதை:—(நாஸ்திகன்) நண்பனே! இயற்கை (பிரகிருதி) யாகவே உலகம் தோன்றி நின்று அழிகின்றது. அதற்குக் காரணம் ஈசுவரன் ஒருவன் வேண்டுமென்று நீ கூறுவதை ஒப்ப மாட்டேன். (ஆஸ்திகன்) மித்ரா! இயற்கை யென்பது ஒருவித குணம். வெளுப்பு என்ற குணம் வஸ்திரத்தைப்பற்றியே இருப்பதுபோல இயற்கைக்கும் ஒரு ஆதாரம் வேண்டுவது அவசியம்.

* அத். 1, சுலோ 41.

ஆதாரமின்றி ஆதேயம்தனித்திராது. இயற்கையின் ஆதாரமாயிருப்பவன்தான் ஈசுவரன். (நா) "பிரகிருதி ஜகத் காரணம்" என்பது பொய்யா? (ஆ) அதுவும் பொய்யல்ல. ஆனால் பிரகிருதி என்ற தாயினிடமிருந்து ஈசுவரன் என்ற தகப்பனின்றி உலகம் உண்டாகாது. (நா) உலகம் பிரகிருதியின் வேற்றுருவம் என்றே நாம் தெரிந்திருக்கிறோமல்லவா? (ஆ) ஸரிதான், ஆனாலும் உலகம் ஈசுவரனுக்கும் வேற்றுருவமே. நமது உற்பத்திக்குத் தாய் மாத்திரம் காரணம் என்று நாம் முதலில் அறிந்திருந்தபோதிலும் விசேஷ அறிவு வந்தபின்னரே தகப்பனும் காரணம் என்பதாக அறிகின்றோமல்லவா? அதுபோல நீ அறிவிற் சிறிது சிறக்கும் போது உலகத்திற்கு ஈசுவரன் காரணம் என்பதை அறிவாய்.

(நா) ஈசுவரன் ஒருவன் இருப்பது உண்மையானால் எப்போதும் எல்லோருக்கும் ஏன் அவன் தோன்றக்கூடாது? (ஆ) நமது நன்மையைக் கருதுவோர் சிலவற்றைச் சிலகாலம் மறைத்து வைத்து மறுகாலத்திற்றான் அவற்றைக் காண்பிப்பார். குழந்தைகட்கு ஜீரணமாகக்கூடாத ஆகாரங்களை மறைத்துவைத்து பெற்றோர் ஜீரணமாகக்கூடிய இலேசான ஆகாரத்தையே கொடுப்பார். (நா) அப்படி மறைப்பானேன்? (ஆ) ஜீர்ணமாகாதது ருசியாயிருந்தால் குழந்தைகள் பெற்றோரிடம் நிர்ப்பந்தமாய்க் கேட்டுவாங்கி அதனைப்புசித்து பிறகு கஷ்டப்படும். புஷ்டியான ஆகாரம் ஜீர்ணிக்கக்கூடியசக்தி வந்த ஸமயத்தில் பெற்றோர்களே குழந்தைகளுக்கு வற்புறுத்தி அதனைக் கொடுப்பார். (நா) இது ஸரிதான் அதை நான் நம்பமாட்டேன். (ஆ) அப்படியானால் அதற்கு ஒரு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன். கேள். கிருஷ்ணபகவான் அர்ஜுனனிடம் அடிக்கடி தன்னை ஈசுவரன் என்று சொல்லிக்கொண்டிருந்தார். யுத்தஸமயத்தில் பகவானைப்பார்த்து அர்ஜுனன் "தாங்கள் ஈசுவரன் என்பது உண்மையானால் அந்த ஸ்வரூபத்தைக் காட்டும்" என்றான். அப்போது பகவான் "இந்த

ஊன்கண்களால் அதனைப்பார்த்தால் தாங்கமுடியாது நசித்து விடு வாய். அதற்காக உனக்கு திவ்ய ஜ்ஞானதிருஷ்டியைக் கொடுக் கிறேன். பார்.'' என்றார். உடனே பகவான் விசுவரூபமெடுத்துக் காட்ட அனேக அண்டங்களும் அதிலுள்ள வஸ்துக்களும் அந்த யுத்தக்களமும் அவரதுசரீரத்தில் தொங்கிக்கொண்டிருந்தனவாகப் பார்த்து பரவசமாகி அர்ஜுனன் ஈசுவரஸ்வரூபத்தைப் பலவாறு கப் புகழ ஆரம்பித்தான். திவ்ய திருஷ்டிபெற்றும் அதனை அதிக நேரம் பார்த்துக்கொண்டிருக்க முடியாதவனாய் அவன் "பெரிய ஸ்வரூபத்தை சுருக்கவேண்டும்'' என்று பகவானை வேண்டிக் கொண்டான். (நா) இதை ஆதாரமின்றி நான் நம்பமாட்டேன். (ஆ) இந்த ஸங்கதி பகவத்கீதை பத்து பதினொறும் அத்யாயங்க ளில் விரிவாக இருக்கிறது. (நா) பகவத்கீதையை எல்லோரும் நம்புவார்களா? (ஆ) ஒவ்வொரு மதஸ்தரும் அவரவர் குருவாக் யத்தை நம்பித்தான் நன்மைபெறவேண்டும். நமது பரமகுருவாய் அவதரித்த கிருஷ்ணபகவானே பகவத்கீதையை அர்ஜுனனுக்கு உபதேசித்ததாக வியாஸாசார்யர் தாமியற்றிய ஐந்தாம் வேதமாகிய பாரதமத்தியில் அதனைக் கூறியிருக்கிறார். அது ஸத்யவாக்கு என்பதாய் நமது வைதிக மதஸ்தர் யாவருக்கும் அதனிடம் அள வற்ற நம்பிக்கை இருக்கிறது. அதன் கருத்துக்களை ஆராயும் அன்னிய மதஸ்தரில் அனேகர் அதனை தெய்வவாக்காகவே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். (நா) நல்லது. இப்போது நான் ஆஸ்தி கனாகத் திருந்திவிட்டேன். நமது ஸ்நேகிதன் கோபாலனைக்கேள்.

(ஆ) கோபாலா! உன் அபிப்பிராயமென்ன? (கோபாலன்) என்ன காரணங்களும் திருஷ்டாந்தங்களும் சொன்னபோதிலும் நான் ஆஸ்திகனாகமாட்டேன். (ஆ) நல்லது. நீ வீணே மூறண்படு கிறாய். கடைசியாக ஒரு சிறிய கதை சொல்லுகிறேன். கேள். இரண்டு ஸ்நேகிதர் ஒரு ஸமயம் ஒரு மலையின் குகைக்குட் செல்

லும்போது ஒருவன் அங்கு புலியிருக்கக்கூடும் என்ற எண்ணத்தால் தக்க ஆயுதங்களுடன் எச்சரிக்கையாகச் சென்றான். மற்றொருவன் புலியிருக்காதென்று தீர்மானித்துக்கொண்டு ஆயுதம் தரிக்காமலே சென்றான். அப்போது அங்கு புலி இல்லை. ஆயுதமில்லாதவன் ஆயுததாரியைப் பார்த்து "புலியில்லாதவிடத்தில் புலியிருப்பதாக நினைத்து நீ செய்துகொண்டுவந்த ஆடம்பரம் வீணாயிற்றே"? என்றான். அதற்கு அவன் "நான் இப்போது எச்சரிக்கையாக வந்ததினால் எனக்கு யாதொரு நஷ்டமில்லை. நீ எச்சரிக்கையின்றி வந்ததற்குப் புலி இருந்துவிட்டால் உன்கதி என்னவாகும்?" என்பதை யோசித்துப்பார் என்றான். அவர்களே மற்றோர் ஸமயத்தில் முன் சென்றமாதிரியே அக்குகைக்குட் சென்றார்கள். அப்போது புலி இருந்துவிட்டது. உடனே ஆயுதபாணியாகவிருந்தவன் தப்பிக்கொண்டான். ஆயுதமில்லாதவன் புலிக்கிரையானான்.

அப்படி, சில காரணம்பற்றி ஈசுவரன் இருக்கிறான் என்பதும், நேரில் இப்போது தோன்றாததால் இல்லை என்பதுமான இருவர் கக்ஷியையும் ஒப்புக்கொள்ளவேண்டாம். இருக்கிறானோ? இல்லையோ? வென்று ஸந்தேகமாகவே வைத்துக்கொள்வோம். ஈசுவரன் இருப்பதாக நம்பி அவரது ஆணைக்கு பயந்து நற்கார்யங்களையே யான் செய்துவருகிறேன். அவன் இல்லையென்று தீர்மானித்து மனத்தில் பயபக்தியின்றி உன் இஷ்டம்போல் நன்மை தீமைகளை கவனியாது உனக்குப் பிரியமான கார்யங்களைச் செய்துகொண்டு வா. கடைசியாக நமக்கு அவ்விஷயம் நிச்சயமாகப் புலப்படவேண்டிய ஸமயத்தில் ஈசுவரன் இல்லாவிடில் நான் பயந்து ஜாக்கிரதையாகவும் ஒழுங்காகவும் நடந்துவந்ததின் பொருட்டு எனக்கு யாதொரு நஷ்டமுண்டாகாது. ஈசுவரன் இருந்துவிட்டால் நீ சிறிதும் பயமின்றி அஜாக்கிரதையாகவும் ஒழுங்கீனமாகவும் தீய செயல்களைச் செய்துவந்ததற்காக கடவுளது தண்டனைக்கு நீ

ஆளாகவேண்டிவருமே ? அதற்கென்செய்வாய்? என்று கேட்டான். அதன்பிறகு கோபாலன் அதனை ஒப்புக்கொள்ளாமலிருக்க முடியவில்லை. அதுமுதல் அவனும் ஆஸ்திகனாய்விட்டான்.

## மூன்றும் அதிகாரம்.

### ஈசுவரனது ஸ்வரூபம்

பெயர் உருவம் முதலியவற்றுடன் கூடினதும், நம்மால் பார்க்கப்படுகின்றதும், கேட்கப்படுகின்றதுமான உலகத்தின் ஸ்ருஷ்டிக்கு முன்னமே அகண்ட பரிபூர்ண ஸச்சிதானந்தஸ்வரூபமாய் இருக்கின்றவன் ஈசுவரன் என இங்கு நிரூபிப்போம். உபநிஷத்தில் † "ஆனந்தமயமாயும் ஞானமயமாயுமிருப்பது பிரம்மம். முதலில் இந்த பரமாத்மா ஒருவன்தான் இருந்தான். இவன்மாத்திரமல்லது வேறொன்றுமில்லை" எனப்படுகிறது. * "அகரமுதல வெழுத்தெல்லாம் ஆதிபகவன் முதற்றே யுலகு" என்ற திருக்குறளும், எழுத்துக்கள்யாவும் அகரத்தை முதன்மையாக உடைத்தாயிருப்பன போன்று இவ்வுலகம் ஆதியான பகவானை முதன்மையாக வுடைத்தாயிருக்கிறதென்று கூறுதலால் உலகம் உண்டாவதற் முன் ஈசுவரன் ஒருவன்தான் இருந்தானென்பது ஏற்படுகிறது.

அவன் பிரம்மம், பரப்பிரமம், ஆத்மா, பரமாத்மா, பிரம்மா, விஷ்ணு, சிவன், மகேசுவரன், ஸதாசிவன்,

---

† ஐதரேயம் அத்.1. கண்டம் 1. * அதி. 1. திருக்குறள் 1.

ஜ்யோதிஸ், தேஜஸ், மஹஸ், கடவுள், இறைவன், ஈசுவரன், ஈசன், ஸர்வேசுவரன், பகவான் முதலிய சொற்களால் வழங்கப்படுகிறான் ஈசுவரன் என்பதற்கு எல்லோரையும் அடக்கி ஆளுகிறவன், எல்லோருக்கும் தலைமையாக விருப்பவன், பரிபூர்ண சக்தியுள்ளவன், ஸகல ஐசுவர்யங்களும் நிறைந்தவன், எல்லா வஸ்துக்களுக்கும் சொந்தமானவன் என்ற பல பொருள்கள் உள. இப்பொருள்களினாலேயே அவனது ஸ்வரூபம் (இலக்ஷணம்—இலக்கணம்) நன்கு விளக்கப்பட்டிருக்கிறது. பின்னும் “வாலறிவன்; (உண்மையறிவுள்ளவன்) தனக்குவமை யில்லாதவன்; வேண்டுதல் வேண்டாமையிலான்” என்ற சொற்களால் திருவள்ளுவர் கடவுளது ஸ்வரூபத்தைக் கூறியுள்ளார்.

பரமாத்மா, ஆகாசம்போன்று எங்கும் பரிபூர்ணமாக நிறைந்திருப்பதால் அவனுக்கு முன்பக்கம், பின்பக்கம், வலதுபக்கம், இடதுபக்கம் என்ற திசைகளுக்கு அடங்கியிருத்தல் கிடையாது. இருந்தான், இருக்கிறான், இருக்கப் போகிறான் என்ற சென்ற காலம், நிகழ்காலம், வருங்காலமாகிய காலங்களுக்கு அடங்கியிருத்தலும் அவனுக்குக் கிடையாது. அவன் உலகத்திலுள்ள ஸகல வஸ்துக்களின் வடிவமாகவே இருப்பதால் இன்ன வஸ்துவாக இருக்கிறான், இன்ன வஸ்துவாக இல்லை என்று அவனுக்கு வஸ்துக்களுள் அடங்கியிருத்தலும் கிடையாது. இவ்விதம் திக்கு, காலம், வஸ்துவென்ற மூன்றின் அளவில் உட்படாது எங்கும், என்றும், எதுவாகவும் நிறைந்திருக்கக் கூடிய ஸ்வரூபமுள்ளவன் இறைவனென்று அறியவேண்

டும். § "அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்தது எது? * தன்னருள் வெளிக்குளே அகிலாண்டகோடியெல்லாம் தங்கும்படிக்கு இச்சை வைத்து உயிர்க் குயிராய் தழைத்தது எது? ‡ மனவாக்கினில் தட்டாமல் நின்றது எது? † சமய கோடிகள் எலாம் தம்தெய்வம் எம்தெய்வமென்று எங்குந் தொடர்ந்து எதிர்வழக்கிடவும் நின்றது எது? § எங்கணும் பெருவழக்காய் யாதினும் வல்லவொரு சித்தாகி இன்ப

---

§ பரசிவவணக்கம், பாடல் 1. இன்ன இடத்தில் என்று சுட்டிக்காட்ட முடியாமல் எங்கும் பரவி நின்று அருளும், ஆனந்தமும் நிறைந்திருப்பது எது?

* தனது கருணை வெளியாகிய ஆகாயத்தில் அனேக அண்டங்கள் நிலையாய் நிற்கும்படி ஸங்கல்பித்து அவற்றிலுள்ள பிராணிகளிடம் உயிர் (ஆத்ம) வடிவமாய் தழைத்து நிற்பது எது ?

‡ மனத்தினால் எண்ணமுடியாமலும், வாக்கினால் சொல்ல முடியாமலும் அவ்விரண்டிற்கும் எட்டாமலிருப்பது எது ?

† பலகோடி மதங்களும் ஒரே கடவுளை வழிபடுவதற்குப் பலவேறு உபாயங்களைக் கூறி எதிர்த்து வழக்கிட்டபோதிலும் அவற்றின் கொள்கைகளுக்கெல்லாம் ஒரே இலக்ஷ்ய (இலக்கிய) மாய் விளங்கிக்கொண்டிருப்பது எது ?

§ எங்கும் உள்ள மதத்தினர் தத்தம் பொருளென ஓயாது பெரும் வழக்கிடக் காரணமான பெருமையுற்றதாகவும், எக்காரியங்களிலும் வல்லமை பொருந்தினதாகவும், ஒப்புற்ற ஒரே பொருளாகவும், சின் (ஞான) மயமாகவும், ஆனந்த (இன்ப) மயமாகவும், என்றைக்குமுள்ள ஸன்மயமாகவும் இருப்பது எது ?

மாய் என்றைக்கு முள்ளது எது? ‡ மேல் கீழ் பகலற நின்ற எல்லையுளது எது? * அது கருத்திற் கிசைந்தது, § அதுவே கண்டனவெலாமோனவுரு வெளியதாகவும் கருதி அஞ்சலி செய்குவாம்.” இது ஈசுவரஸ்வரூபத்தை நிரூபிப்பதற்கு அருமையான பாசுரமாக விருப்பதால் தமிழ்த் தெரிந்தவர்கள் யாவரும் இதனை மனப்பாடம் செய்துகொள்ளவேண்டியது அவசியம். பொருள் விளங்கு வதற்காக பதங்களைப் பிரித்து முன் எழுதியிருக்கும் அப் பாசுரம், இசையுடன் மனப்பாடம் செய்துகொள்ளத் தகுதியாய் பதவந்திகளூற்றது அடியில் வருமாறு:—

“ அங்கிங் கெனாதபடி யெங்கும் ப்ரகாசமா
யானந்த பூர்த்தியாகி
யருளொடு நிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்ட கோடியெல்லாந்
தங்கும்படிக் கிச்சை வைத்துயிர்க்குயிராய்த்
தழைத்த தெது மனவாக்கினிற்
றட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்
தந்தெய்வமென்றெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர்வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்கா

‡ இரவு பகல் என்ற வியவகாரமில்லாததும் பிரம்மாண்டத் திற்கு மேலுள்ளதுமான எல்லையிலும் பரவியிருப்பது எது?

* அது யாவராலும் கருத்தில் வைத்து தியானிக்கத்தக்கது.

§ அந்தப் பொருளை நம்மால் பார்க்கமுடியாததாகையால் நம் மால் காணப்படும் பொருள்கள் எல்லாம் அப்பரம் பொருளின் மௌன (பேசாமலிருக்கின்ற) உருவத்தினுடைய விரிவு என மனத் தில் நினைத்து கைகூப்பி அதனையே வணங்குவோம் என்றுபொருள்.

யீாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்குமுள்ள தெது மேற்
'கங்குல் பகலற நின்ற வெல்லையுளதெதுவது
கருத்திற் கிசைந்தததுவே
கண்டனவெலா மோன வுரு வெளியதாகவுங்
கருதி யஞ்சலி செய்குவாம்."

இவ்விதம் தாயுமானவர் கடவுளின் நிலைமையைத் தெளிவாகக் கூறியிருக்கிறார்.

பரமாத்மாவினது ஸ்வரூபத்தை ஐம்புலன்களால் அறியமுடியாது. உலகத்தில் அறுசுவை அன்னத்தைப் புசித்தவுடன் ஒருவனுக்கு உண்டாகும் திருப்தியானது, எவ்விதம் கண்ணால் பார்க்கப்பெறுமனும் காதால் கேட்கப்பெறுமனும் நாசியால் முகரப்பெறுமனும் நாவால்ரஸிக்கப்பெறுமனும் பரிசத்தால் தொடப்பெறுமனு மிருந்துகொண்டு தனது அனுபவத்தினாலேயே அறியவேண்டியிருக்கிறதோ, அவ்விதமே பிரம்ம ஸ்வரூபமும் அவரவர் ஜ்ஞானத்தாலும் அனுபவத்தாலும் அறியத்தக்கது. உபநிஷத்தில் § "யாதொரு பிரம்மம் பார்க்கமுடியாததும், கிரஹிக்கமுடியாததும் கோத்திரம், ஜாதி, கண், காது, கை, கால் இவையில்லாததும் அழிவற்றதும் பிரபுவானதும் எங்கும் வியாபித்ததும் ஸூக்ஷ்மத்திற்கும் ஸூக்ஷ்மமானதுமாக என்றும் இருக்கிறதோ, அதை ஞானிகள் ஞானத்தால் பார்க்கிறார்கள்." எனப்படுகிறது. "இந்த பரமாத்மா ஆதியற்றவனுகவும் குணங்களற்றவனுகவு மிருப்பதால்" என்றும்

§ முண்டகம், கண்டம் 1.

அழிவற்றவன்." என்று * பகவத்கீதையில் கூறியபடி உலகம் உண்டானதற்கு முன்னும் அழிவதற்குப் பின்னும் பரமாத்மா ஒருவனே தனியா இருக்கிறான் என்று அறிய வேண்டும். ‡ "ஜாதி குலம் பிறப்பிறப்புப் பந்தமுத்தியருவுருவத்தன்மை நாமம், ஏதுமின்றி யெப்பொருட்கும் யெவ்விடத்தும் பிரிவற நின்று இயக்கஞ் செய்யும் ஜோதி" என்பதாக பிரம்ம ஸ்வரூபத்தை ஆங்காங்கு தாயுமானவர் விளக்கிக் காட்டியிருக்கிறார்.

அப்பரமாத்மாவிற்கு ஸ்வபாவம், ப்ரபாவம், மாகாத்மியம், மகிமை என்ற சொற்களால் வழங்கப்பெறுவதும், என்றும் தன்னைவிட்டு அகலாததுமான ஒருவித சக்தி, அக்கினிக்கு உஷ்ணம்போன்றும் ஸூர்யனுக்கு ஒளிபோன்றும் சந்திரனுக்கு நிலவு போன்றுமேற்பட்டிருக்கிறது. அவ்வித சக்தியுடன் கூடின பரமாத்மா, தான் நிர்க்குணனாக விருந்தபோதிலும், யாதொரு செய்கையற்றவனாக விருந்தபோதிலும் ஸகல உலகங்களுக்கும் அதிபதி, ஈசுவரன், பிரபு என்றழைக்கப்பட்டும், பத்னியுடன் கூடின புருஷன், பிரஜைகளை யுண்டுபண்ணும் ஸாமர்த்தியத்தை யடைவதுபோன்று ஸர்வஜகத்துக்களை ஸ்ருஷ்டிப்பதிலும் ரக்ஷிப்பதிலும் ஸம்ஹரிப்பதிலும் ஸாமர்த்தியத்தையடைந்தும், ஜனங்களால் அநந்த கல்யாண குணங்களுடன் கூடினவன் என்று ஸ்துதிக்கப்படுகிறான். உபநிஷத்தில் §"அவனுக்குக்கார்யமும் காரணமும் இல்லை அவனுக்கு ஒப்பானவனும் மேலானவனும் இல்லை. அவனுக்கு இயற்கை

* அத் 13. சுலோ 31. ‡ பொருள் வணக்கம். பாடல் 5.
§ சுவேதாச்வதா, அத் 6.

யாகவிருக்கின்ற ஞானம், பலம், செய்கை இவற்றுடன் கூடி ஒருவித சக்தி எல்லாவற்றிற்கு மேலானதும் பரவியிருக்கின்றதுமாய் இவ்வுலகில் கேட்கப்படுகிறது.'' * "சக்தியாகிய மாயை அவனது ப்ரகிருதியாகவும், அம்மாயையுடன் கூடினவனை மகேசுவரனாகவும் அறியவேண்டும்.'' †"பிராணன், மனம், ஸர்வ இந்திரியங்கள், ஆகாசம், வாயு, தேஜஸ், ஜலம், உலகத்தார்களைத் தாங்கிக்கொண்டிருக்கிற பூமி என்ற பஞ்சபூதங்கள் இவை அவனிடமிருந்துண்டாயின.'' ‡"எந்த பரமாத்மா பாபங்களற்றவனும் பசி, தாகம், சோகம், மூப்பு, மரணம் இவைகளில்லாதவனும் ஸத்யமான விருப்பம் ஸத்யமான ஸங்கல்பம் இவற்றுடன் கூடினவனுமாக விருக்கிறானோ, அவன் தேடத்தகுந்தவன்; அவன் அறியத்தகுந்தவன்.'' எனப்படுகிறது. * "சிவன் சக்தியுடன் கூடும்போது உலகத்திற்குப் பிரபுவாக இருக்கிறான்; கூடாவிடில் அவன் அசைவதற்கும் முடியாதவனாக இருக்கிறான்'' என்று சங்கராசார்யர் கூறுகிறார். இவ்விதமாயிருக்கிற அந்த பரமாத்மா, ஆகாசம்போன்று எங்கும் வியாபித்துக்கொண்டும், ஸகல பிராணிகளுடைய உள்ளே வஸித்துக்கொண்டும், நம்முடைய மனத்தினாலும், வாக்கினாலும், உடம்பினாலும் செய்யப்படுகின்ற நல்லதும் கெட்டதுமான கார்யங்களை ப்ரத்யக்ஷமாய்ப் பார்த்துக்கொண்டும் ஸாக்ஷியாய் விளங்குகிறான். உபநிஷத்தில் ‡ "எங்கும்

---

* சுவேதாச்வதர, அத் 4.

† முண்டகம் 2. கண்டம் 1.

‡ சாந்தோக்கியப் ப்ரச்னம் 8. கண்டம் 7.

* ஸௌந்தர்யலஹரி, சுலோ 1.

‡ சாந்தோக்யம் ப்ரச்ன 7. கண்டம் 26.

வியாபித்த ஓரே ஈசுவரன் ஸர்வப் பிராணிகளிடத்தும் ரகஸ்யமாய் உள்ளே வசித்துக்கொண்டும் அவற்றின் செய்கைகளை நேரில்பார்த்துக்கொண்டும் ஸாக்ஷியாகவும் தனியாகவு மிருக்கிறான்" "அவன் கைகளின்றி கிர ஹிக்கிறான். கால்களின்றி வேகமாய் ஓடுகிறான். கண்க ளின்றி பார்க்கிறான். செவிகளின்றி கேட்கிறான். இவ்வு லகமனைத்தையு மறிகிறான். அவனை அறிகிறவன் ஒருவனு மில்லை. அவனை எல்லோருக்கும் முந்தியிருக்கிற மகாபுரு ஷனாகப் பெரியோர் சொல்லுகின்றனர்" எனப்படுகிறது.

---

## திருஷ்டாந்தக் கதை.

11. "வேதம் பரமாத்மாவைக்கூறும் விதம்" என்ற ஈசுவரனது ஸ்வரூபத்தைப்பற்றிய கதை:—ஸ்ரீராமன் இலக்ஷ் மணனுடனும் ஸீதாதேவியுடனும் வனவாஸம் செய்யும்போது, அவர்கள் அத்திரி மகரிஷியின் ஆசிரமத்திற்குச் சென்றார்கள். அச்சமயத்தில் மஹர்ஷி, மிக்க சிரத்தையுடன அவர்களுக்கு உப சாரஞ்செய்தனர். அவர் பெண்சாதியாகிய அனஸூயை என்பாள் அன்புடன் ஸீதையை அழைத்துக்கொண்டு உள்ளே சென்றாள். அங்கு ஸீதாதேவிக்கு மங்களஸ்நாநம் செய்வித்து புதிய வஸ்திரத் தாலும் புஷ்பங்களாலும் அவளை அலங்கரித்தனள். ஸீதாதேவி மஹர்ஷிபத்தினியிடம் தனது கல்யாணத்தில் நடந்த விசேஷங் களை எடுத்துரைக்கும்போது ஸ்ரீராமர் வில்லைமுறித்துத் தன்னை விவாகம் செய்துகொண்டதைப் புகழ்ந்து கூறினாள். அப்போது அனஸூயை "அவ்வளவு பலசாலியான உனது பர்த்தாவை எனக்குக் காட்டு, பார்ப்போம்" என்றாள். முனிவர் மத்தியில் இராம லட்சுமணர்கள் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தனர் ஸீதையும் அனஸூயையும் அங்குவந்து மறைவாய் நின்றுகொ

டனர். பிறகு அனஸூயை தனது சுட்டுவிரலால் "ராமர் இவர் தானு? ராமர் இவர்தானு? " என்று ஒவ்வொருவரையும் சுட்டிக் காட்டி ஸீதையினிடமாக கேட்டனள். ஸீதை "இல்லே, இல்லே என்றே பதில் சொல்லிவந்தாள். கடைசியில் ஸ்ரீராமரைக் காட்டிக் கேட்க ஸீதை வெட்கத்தால் சொல்லமுடியாமல் தலைகுனிந்து மௌனமாய் நின்றனள். அதன்பிறகு அனஸூயைக்கு இராமர் இன்னர் என்பது விளங்கலாயிற்று. அதுபோலவே வேதம் பரமாத்ம ஸ்வரூபத்தைக் கூறும்போது "ஆத்மா இது அன்று, இது அன்று" என்று உலகத்திலுள்ள வஸ்துக்களையெல்லாம் ஒதுக்கிக் கொண்டேபோய் முடிவில் மீதமாயிருக்கும் ஈசுவரஸ்வரூபமாகிய பரமாத்ம வஸ்துவை இன்னவிதமென்று முற்றிலும் கூறவொண்ணது மௌனமாயிருக்கும். அதனுல் அது மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதது என்று சொல்லாமற் சொன்னதாக நாம் எடுத்துக் கொள்ளவேண்டும். ஈசுவரஸ்வரூபம் ஒன்றிலும் அடைபடாது அவரவர் அனுபவத்தாலேயே அறியத்தக்கதென்பதற்கு இக் கதை நிதர்சனமாகிறது.

---

## நான்காம் அதிகாரம்.

## ஈசுவரனது ஸ்வபாவம்.

ஸ்வபாவமென்பது இயற்கை. ஈசுவரனிடம் இயற்கையாயுள்ள பலவித சக்திகள் இருக்கின்றன. அவை அவனது தன்மைகள் என்றும் கூறப்படும். அவை எண்ணிறந்தன. அவை முழுதும் நம்மால் அறியக்கூடாதன. ஆகிலும் ப்ராணிகளிடம் உபயோகப்படுகின்றனவும், அதனுல் நாம் ஊகித்து அறியக்கூடியனவுமான சில தன்மைகள்,

சில மாத்திரம் நமது அனுமானத்திற்குப் புலப்படுவன. வேதாகமங்களிற் கூறப்பட்டுள்ள அவனது தன்மைகளும் மிகவும் சொற்பமானவைகளே. ஏனெனில் "வேத சாஸ்திர வாக்குகளும் அவனது பெருமையை முழுதும் சொல்ல முடியாமல் திரும்பி மௌனமா யிருக்கின்றன" எனப்படும். அவற்றுள் முக்யமான சிறந்த தன்மைகள் 1. ஸர்வநியாமகத்வம் 2. ஸர்வஜ்ஞத்வம் 3. ஸர்வவ்யாபகத்வம் 4. பரமகாருணிகத்வம் 5. மஹாமஹிமத்வம் 6. அப்பிராகிருதத்வம் 7. ஸ்வதந்திரத்வம் 8. நிர்த்தோஷத்வம் என்பன. அவை இனி விவரிக்கப்படுகின்றன.

## திருஷ்டாந்தக் கதை.

12. ஈசுவரனது இயற்கையைப்பற்றிய "நடப்பதெல்லாம் நன்மைக்கே" என்ற கதை:—ஒரு மந்திரி, தனது அரசன் எதனைக் கேட்டபோதிலும் "ஈசுவரனது இயற்கையமைப்பு நடப்பதெல்லாம் நன்மைக்கே" என்று பதில் கூறிக் கொண்டிருந்தான். அவன் அவ்விதம் எதற்கும் ஒரேவிதமாகக் கூறுவது மூடத்தனமென்று எண்ணிய அரசன், ஒருநாள் தனது இடதுகைச் சுண்டுவிரலைச் சிறிது நறுக்கிக்கொண்டு "இது எதற்கு" என்று கேட்டான். மந்திரி "அது ஒரு நன்மைக்கே" என்றான். தனது தின்மையை நன்மையாகக்கூறும் மந்திரியினிடம் அரசன் மிகுந்த சினங்கொண்டு அவனைச் சிறையிலடைக்க உத்தரவிட்டான். அப்போதும் மந்திரி "அதுவும் ஒரு நன்மைக்கே" என்றான். அப்போது அரசன் மந்திரியை ஒரு பித்தம்பிடித்தவனாக நினைத்தான். பிறகு நான்கு நாட்களுக்குப் பின் அரசன் தனியே காட்டிற்கு வேட்டையாடச்சென்று களைத்து நடுப்பகலில் அங்கு ஓர் ஆலமரத்தடியிற் படுத்து அயர்ந்து தூங்கினன். ஒரு புலி மோப்பம் பிடித்து அவனிடம் வந்து நிற்க ஒருவித துர்க்கந்தம்

வீசிற்று. உடனே புலி அவனைப்புறட்டி அவனது உருப்புகளைத் தொட்டுப்பார்க்கும்போது நறுக்குண்ட சுண்டுவிரல் சீழ்ப்பிடித் திருப்பதாகத்தெரிந்து மன வருத்தமுற்றுத்திரும்பிப் போய்விட்டது. புலி தன்னைத்தொட்டவுடன் நித்திரை தெளிந்து “இன்று புலிக்கிரையானேன்” என்று பயந்திருந்த அரசன் “புண்பட்டாரைப் புலி தின்னாது” என்று உணர்ந்தான். உடன் மந்திரி வசனத்தில் மகிழ்ச்சிகொண்ட மகிபன், அரண்மனை வந்து மந்திரியை வரவழைத்து வனத்தில் நிகழ்ந்ததைக்கூறி பரிசளித்து அவனது வேதனத்தை உயர்த்தினன். அரசன், தன் விரல் நறுக்குண்டதும் மந்திரி சிறைப்பட்டதும் அப்போது சிறிது தின்மையாகத் தென்படினும் என்றும் நன்மையைப்பயக்கத்தக்க அவற்றை அறிவுளார் தின்மையாகக் கொள்ளார் என்பதை அநுபவமூலமாய்த்தெரிந்து எல்லோருக்கும் நன்மையளிப்பதே ஈசுவரனது இயற்கையென்று தீர்மானித்துக்கொண்டான்.

---

## ஸர்வநியாமகத்வம்.

### (எல்லோரையுமடக்கி யாளுதல்)

காணப்படும் இவ்வுலகம் ஒரு பெரிய இராஜ்யம்போல, எல்லாவற்றையும் அடக்கி ஆளக்கூடிய வல்லமையுள்ள ஒரு நியாமகனுடைய வசமாயிருந்துகொண்டுதான் நடந்து வருகிறது. அப்படி யில்லாவிடின் இப்பூமண்டலம் நிலைத்துத் தரித்திராது. நதிகள் பெருகமாட்டா. ஸமுத்திரம் கரைமீறி உலகமனைத்தையும் கவளம் செய்துவிடும். ஸூர்யன் பிரகாசிக்கமாட்டான். காற்று வீசமாட்டாது. மேகம் மழை பொழியாது. ஆகையால் பகவானுடைய நியமன (உத்திரவு) த்திற்கு வசப்பட்டு இது முழுதும் நடக்கிறதென்று ஸந்தேகமின்றி அறிய வேண்டும். உப

நிஷத்து * "அவனிடமிருந்து பயத்தால் காற்று வீசுகிறது; ஸூர்யன் உதயமாகிப் பிரகாசிக்கிறான்; அக்னியும், இந்திரனும், யமனும் தத்தம் காரியத்தை நடத்துகிறார்கள்" என்று கூறுகிறது. ஸ்வாமியின் நியமனத்தால் ‡ "ஆழாழி § கரையின்றி நிற்கவில்லையோ? † கொடிய வாலமமுதாகவில்லையோ? அக்கடலின்மீது ‡ வடவனல் நிற்கவில்லையோ? * அந்தரத்திலகிலகோடி தாழாமல் நிலை நிற்கவில்லையோ? † மேருவுந் தனுவாக வளையவில்லையோ? ஸப்த மேகங்களும் § வஜ்ரதரன் ஆணையில் ஸஞ்சரிக்கவில்லையோ? * வாழாது வாழவே யிராமனடியாற் சிலையும் மடமங்கையாகவில்லையோ? † மணிமந்த்ரமாதியால் வேண்டு ஸித்

---

* தைத்தரீயம், ஆனந்தவல்லி, அநுவாகம் 8

‡ பரிபூரணானந்தம், பாடல் 9.

§ ஆழமான ஸமுத்திரம்.

† கொடியதான விஷம்.

‡ ஸமுத்ர ஜலத்தை வற்றச்செய்கின்ற அக்னி.

* ஆகாயத்தில் அனேககோடி பிரும்மாண்டங்கள்.

† திரிபுர அஸுரர்களை ஸம்ஹாரம்செய்யும்போது பரமசிவன் மேரு பருவதத்தை வில்லாக வளைத்து வைத்துக்கொண்டார்.

§ வஜ்ராயுதம் தரித்த இந்திரன்.

* கணவன் சாபத்தால் உடம்புடன் கூடியிருந்து வாழாமல் அஹல்யை, சிலையுருவங்கொண்டு இராமனடி தன்பேரிற் பட சொந்தமான உடம்புடன் புகழுடம்பும் பெற்று வாழ்ந்துகொண்டிருக்கும்படி சாந்தகுணமுள்ள மங்கை (ஸ்திரீ) யானாள்.

† மணி, மந்திரம், ஔஷதி முதலியவற்றால் இருந்த இடத்திலிருந்து வேறொரு இடத்திற்கு திடீரென்று செல்லுதல், தன்னுடம்பைவிட்டு பிறர் உடம்பில் பிரவேசித்தல், மூக்காலத்தையு

திகள் உலகமார்க்கத்தில் வைக்கவில்லையோ? ‡ பாழான என் மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவதுனக் கருமையோ? பார்க்குமிடமெங்ஙுமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே!'' என்று தாயுமானவரும் கூறுகிறார். "அவனின்றி ஒரு அணுவும் அசையாது'' என்ற பழமொழியும் உலகத்தாரின் ஸர்வகார்யங்களும் ஸ்வாமியின் உத்தரவின்றி நடைபெறமாட்டாவென்பதை உணர்த்துகிறது. ஆதலால் ஈசுவரன் ஒருவனே உலகத்தோர் யாவரையும் தனக்குள் வசப்படுத்தி ஆளக்கூடிய வன்மையுள்ளவன். அவன் பிறர்வசப்பட்டவனல்ல. தன்வசமாக இருப்பவன். ஆதலால் அவன் ஸர்வநியாமகனுவன். அவனது தன்மை ஸர்வநியாமகத்வம் எனப்படும்.

---

## திருஷ்டாந்தக் கதை.

13. ஈசுவரன் யாவரையுமடக்கி ஆளுகிறவன் என்பதைப்பற்றிய "கிருஷ்ணன் தூது'' என்ற கதை:—பாண்டவர் பதின்மூன்று வருஷங்கள் வனவாசஞ்செய்துவிட்டு வந்தபின்

---

டூணர்தல், நெடுநாள் உடம்புடனிருத்தல் ஆகிய பலவித்திகள் உலகத்தில் உண்டாகின்றன என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

‡ மதயானைபோன்று மனம், அடக்க முடியாமலிருப்பதால் அடங்காத மதயானையைக் கடைசியாகக் கொல்லுவது போன்று அடங்கா மனத்தை ஒடுக்கி கடைசியில் நாசமாக்கவேண்டியது என்பதற்குப் பதிலாய் பாழான (பாழாகவேண்டிய தருணம் கிட்டினதான) என்ற அடைமொழி மனத்திற்குக் கொடுத்தார் தாயுமானவர். பலனற்ற பலவிடங்களில்சுற்றுகிறது என்றும் பொருள்.

னர் மூந்திய ஒப்பந்தப்படி அவரது இராஜ்யத்தை துர்யோதனன் அவர்வசம் ஒப்புவிக்க மறுத்தான். பாண்டவர்கள் பக்கம் கிருஷ்ணபகவான், துர்யோதனனிடம் தூதுசென்று நியாயத்தை எடுத்துரைக்க "ஊசி முனைகுத்தக்கூடிய பூமிகூட பாண்டவர்கட்கு யான் கொடேன்" என்று துர்யோதனன் பிடிவாதமாய்ப் பேசினுன். கண்ணன் திரும்பிப்போய் பாண்டவர்களோடு சேர்ந்து கொண்டால் தனக்கு வெற்றிகிடையாது என்று எண்ணி அவன் சகுனி, துச்சாஸனன், கர்ணன் முதலிய தனது கொடிய நண்பர்களுடன்கூடிக்கலந்து அவரைச் சிறைப்படுத்தத்தீர்மானித்தான். தமது தூதின் முடிவைத் தெரிந்துசெல்ல மறுநாள் பகவான் துரியோதனனது சபைக்குவந்தார். பகவானை ஒரு ஆஸனத்தில் அமர்த்தி அவருடன் ஆழ்ந்து பேசுகிறவன்போல் துர்யோதனன் அபிநயித்தான். அவனது ஏற்பாட்டின்படி சில ஏவலாளர் கையில் கயிறெடுத்துப் பின்பக்கமாய்வந்து பகவானைக் கட்ட முயன்றனர். அதனை அறிந்த விதுரர் முதலிய பக்தர்கள் அவர்களைத் தடுக்க யத்தனித்தனர். அப்போது உலகமளந்த பெருமான், ஒன்றுந் தெரியாதவர்போல் உட்கார்ந்திருந்து திடீரென்று தன்னைப்பிணிய பக்கத்தில் வந்துநிற்கும் பணியாளர்கள் பார்த்துப் பயந்து ஓடும் வண்ணம் விசுவரூபமெடுத்துக் காட்டினர். ஸபையில் தாண்டவமாடும் பெருமாளின் பேருருவத்தைக் கண்டவர் யாவரும் அஞ்சி நடுங்கி பிரமித்து ஒன்றுந்தோன்றாது திகைத்திருந்தனர். பீஷ்மர் விதுரர் முதலிய பக்தர்கள் பகவானைத் துதித்தபிறகு பழைய வடிவம்கொண்ட பகவான் "நிச்சயமாய்ச் சண்டை நடக்கும்" என்று கம்பீரமாய்ச் சொல்லிவிட்டு வெளியேறினுர்.

---

ஈசுவர சக்தியைப் புகழ்ந்து கூறுகின்ற இப்பாசுரத்தின் கருத்தினுல் சிவன், விஷ்ணு என்ற மூர்த்தி பேதமின்றி ஈசுவரனது தன்மை பொதுவாய் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

## ஸர்வஜ்ஞத்வம்.

(எல்லாமறிந்திருத்தல்)

உலகத்தில் ஒரு பொருளை யுண்டுபண்ணுகிறவன், முதலில் அப்பொருளின் வடிவை நினைத்து மனத்தில் வரைந்து கொள்ளுகிறான். அதற்குப்பிறகு அதைச்செய்ய விரும்பி முயற்சிக்கிறான். பிறகு அதனைச் செய்துமுடிக்கிறான். அவ்விதமே இவ்வுலகத்தைப் படைப்பதற்கு ஆரம்பிக்கின்ற ஈசுவரனும் இவ்வுலகமனைத்திற்குமுள்ள ஸ்வரூபத்தை முன்னமே நன்றாய் அறிந்திருக்கவேண்டும். ஒரு கிரந்தத்தை இயற்ற விருப்பமுள்ள ஒரு கவி, அதில் தான் சொல்லப்புகும் விஷயங்களை முன்னமே அறிந்தவனாகவும் அவற்றைவிட அதிகவிஷயங்கள் தெரிந்தவனாகவு மிருக்கிறான். அப்படியே ஸ்தாவரம், ஜங்கமம் என்ற பிரிவுகளால் மிக்க விரிவாயிருக்கின்ற இப்பிரபஞ்சத்தின் ஸ்வரூபத்தையும் அதிலுள்ள பிராணிகள் ஸுகமாய் ஜீவித்து மோக்ஷமடையக்கூடிய வழிகளையும் தெளிவாய்க் காண்பிக்கிற வேதாகமங்களை முதலிற் பிரகாசப்படுத்தினவன் ஸர்வேசுவரனான பகவானே ஆவன். ஆகையால் அவன் அவற்றிலுள்ள ஸகல விஷயமான ஜ்ஞானமுடையவனாகவும் அவற்றைவிட அதிக ஜ்ஞானமுடையவனாகவு மிருக்கவேண்டும், என்று நிச்சயிக்கப்படுகிறான். அதுதான் கடவுளிடம் உள்ள ஸர்வஜ்ஞத்வம் எனப்படுகிறது. எல்லாவற்றையும் அறிந்தவன் ஸர்வஜ்ஞன் எனப்படுவான். பகவத்கீதையில் * " ஓ அர்ஜுனா! நான் சென்றதும், இருக்கின்றதும், வரப்போகின்றதுமான பிராணிகளை அறிகிறேன்.

* அத் 7. சுலோ 26.

என்னை ஒருவனும் அறிகிறானில்லை" எனப்படுகிறது. தாயுமானவர் கூறும் ‡ "ஐவகையெனும் பூதமாதியை வகுத்து அதனுள் §அசரசரபேதமான, யாவையும் வகுத்து நல்லறிவையும் வகுத்து * மறையாதி நூலையும் வகுத்து, சைவமுதலா § வளவில் சமயமும் வகுத்து மேல்சமயங் கடந்த மோன சமரசம் வகுத்த நீ..." என்ற பாசுரத்தில் பகவனுக்குக்கொடுக்கப்பட்ட அடைமொழியின் பொருள், அவனது முற்றுமுணர்ந்த தன்மையை தெளிவாய்க்காட்டு கிறது. ஜீவாத்மாக்கள் ஸர்வஜ்ஞயர்கள் ஆகமாட்டார்கள். ஒரு ஜீவனைவிட மற்றொரு ஜீவனுக்கு அதிக ஜ்ஞானமும் அவனைவிட இன்னொருவனுக்கு அதிக ஜ்ஞானமும் இருக் கலாமேயன்றி எல்லாமறிந்த தன்மை ஈசுவரன் ஒருவனைத் தவிர வேறு யாரிடமும் கிடையாது. ஆதலால் அவன் ஸர்வஜ்ஞனுவன். அவனது தன்மை ஸர்வஜ்ஞத்வமாகும்.

---

## திருஷ்டாந்தக் கதை.

14 ஈசுவரனது ஸர்வஜ்ஞத் தன்மையைப்பற்றிய "கிரா தார்ஜுநீயம்" என்ற கதை:—பாண்டவர்களுள் வில்வித்தை யிற் சிறந்தவன் அர்ஜுனன். அவன் வனவாஸத்தில் வியாஸா சார்யரின் உபதேசம்பெற்று "பாரதயுத்தத்தில் பகைவரை வெல் லத்தக்க பாசுபதாஸ்திரம் பரமசிவனிடமிருந்து கிரஹிக்கவேண் டும்" என்று தீர்மானித்துக்கொண்டான், அதற்காக கைலாஸ

‡ சின்மயானந்தகுரு, பாடல் 4,

§ ஸ்தாவர ஜங்கம

* வேதம் முதலிய,

§ அளவில்லாத.

மலையடிவாரத்தில் ஈசனைக்குறித்து இணையற்ற தவம்புரிந்தான். அவனுக்கு இடையில்வந்த இடுக்கண்களோ எல்லையற்றன. இயம்ப முடியாதன. அவ்விதம் அவன் கடுமையாகத் தவம்புரிவதைத் தெரிந்த துர்யோதனன், பாசுபதாஸ்திரம் பெற்றபின்னர் பாண்டவர்களை ஜயிக்க யாவராலும் முடியாதென நினைத்து எவ்விதத்திலும் அர்ஜுனனைக் கொல்லக் கருதினான். தனது நண்பனாகிய மூகாஸுரனை அதற்காக ஏவிவிட்டான். அவன் ஒரு முரட்டுக் காட்டுப் பன்றியின் உருவமெடுத்து தவம்செய்யும் அர்ஜுனனது குடிசையண்டைவந்து செடிகொடிகளடர்ந்த ஒரு புதருக்குள் ஒளிந்திருந்து மேற்பார்த்து அவனைக்கொல்ல ஸமயம்பார்த்துக் கொண்டிருந்தான். பக்த பராதீனனான பரமசிவன் ஸர்வஜ்ஞராகையால் தனது அடியானுக்கு வரப்பார்க்கும் ஆபத்தை அறிந்து அப்போதே அதனை அகற்ற எண்ணினார். உடனே அவர் ஒரு வேடுவனுருக்கொண்டு அச்சமயத்திற்கேற்ற வேஷம்பூண்ட தனது பரிவாரங்களாற் சூழப்பெற்று வேட்டையாடுகிறவர்போல் காட்டில் நுழைந்து விரைவில் புதரண்டை வந்துசேர்ந்தார். உடன் அவர் மூகாஸுரனாகிய பன்றியின்பேரில் கூறிய ஓர் அம்பு எய்தார். அப்போது அப்பன்றி வேதனை பொறுக்கமாட்டாமல் அர்ஜுனனது குடிசைக்குள் நுழைந்தது. அவனும் அதன்பேரில் ஒரு பாணத்தை எறிந்தான். பன்றி பதைத்து மண்ணில் விழுந்து மாய்ந்தது. உடனே பரமசிவனாகிய வேடன் தான் குறிவைத்த பன்றியை அர்ஜுனன் கொன்றது வேடுவர் குலாசாரப்படி தப்பிதமென்றுசொல்லி அவனைச் சண்டைக்கிழுத்தான். பிறகு இருவருக்கும் கடும்போர் நடந்தது. கடைசியில் விஜயன், வேடனது மண்டை பிளக்கும்படி தனது வில்லாலடித்தான். உடனே வேடன் உருவம் மறைந்தது. பரமசிவன், பரிவாரங்களுடன் ஸ்வயரூபத்தைக் காட்டினார். பரமபக்தனாகிய அர்ஜுனா! உனக்கு பாசுபதாஸ்திரத்தை உபயோகிக்கத் தக்க பலம் இருக்கிறதா?

என்று பரீக்ஷிக்கவே உன்னோடு போர்புரிந்தேன். நீ மகா பராக்கிரமசாலி, உனக்கு ஜயம் உண்டாகுக" என்று அனுக்கிரஹித்து அர்ஜுனனுக்கு பாசுபதாஸ்திரத்தைத் தந்தருளி மறைந்தார். பரமசிவனாகிய வேடுவ(கிராத)னையும் அர்ஜுனனையும் பற்றியதால் இக்கதைக்குக் கிராதார்ஜுனீயம் என்ற பெயர் வந்தது.

---

## ஸர்வவ்யாபகத்வம்.

### (எங்கும் பரவியிருத்தல்.)

புஷ்பத்தில் வாஸனையும், கருப்பஞ்சாற்றில் தித்திப்பும், பாலில் வெளுப்பும், அக்கினியில் உஷ்ணமும், எள்ளில் எண்ணெயும் எவ்விதம் பரவி யிருக்கின்றனவோ, அவ்விதமே பகவானும் ஸகல ஜகத்தையும் வியாபித்துக் கொண்டு பரவியிருக்கிறான். வேதத்தில் "இந்த உலகம் முழுமையும் உள்ளும் புறமும் பகவான் வியாபித்துக் கொண்டிருக்கிறான்" "பகவான் அணுவுக்கும் அணுவாகவும் மகத்துக்கும் மகத்தாகவுமிருக்கிறான்" என்று கூறப்படுகிறது. பகவத் கீதையில் * "ஸகலமான உலகங்களையும் நான் எனது ஒரு அம்சத்தினால் பிடித்துக்கொண்டிருக்கிறேன்" எனப்படுகிறது. தாயுமானவர் "பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே!" என்று ஈசுவரனை அழைக்கிறார். ஆதலால் எங்கும் பரவியிருக்கிற ஸர்வேசுவரன் ஸர்வ வ்யாபகனாவன். அவனது தன்மை ஸர்வ வ்யாபகத்வம் எனப்படும்.

---

* அத் 10. சுலோ 42.

## திருஷ்டாந்தக் கதை.

15. ஈசுவரனது ஸர்வ வ்யாபகத் தன்மையைப்பற்றிய கதை:— மிருகண்டு என்ற ஒரு ரிஷி பரமசிவனைப்பற்றி பெருந் தவம் செய்து அற்ப ஆயுளுற்ற ஒரு பிள்ளையைப்பெற்றார். அவன் மார்க்கண்டேயன் என்பான். தனக்குக்கடவுள் அளித்தவயது பதினாறுதான் என்பதாகப்பெற்றோரால் அவன் தெரிந்துகொண்டான். தனது அற்பமான ஆயுளை அதிகரித்துக்கொள்ள சிறு வயதிலேயே அவன் வனஞ்சென்று தவஞ்செய்தான். அங்கே சிவலிங்கவடிவமாயிருக்கும் ஈசுவரனை இடையறாது தினந்தோறும் பக்தி சிரத்தையுடன் பூஜித்துவந்தான். பிறகு ஆயுள் முடியும் தினம் வந்தது. அன்று யமதூதர்கள் மார்க்கண்டேயன் உயிரைக் கவரச்செய்த முயற்சி பலிக்காமல்போகவே யமன், தானே நேரில் வந்து பார்த்தான். அம்மார்க்கண்டேயனது தவமாகிய அக்கினி எங்கும் ஜொலித்துக்கொண்டிருந்தது. யமனும் பக்கத்திலணுகப் பயந்து காலபாசத்தை அவன்பேரில் வீச யத்தனித்தான். அது தெரிந்த மார்க்கண்டேயன் "பரமசிவா! இந்த ஸமயத்தில் என்னை கைவிடக்கூடாது" என்று பக்கத்திலிருந்த சிவலிங்கத்தைப் பலமாய்க் கட்டிக்கொண்டான். யமன், லிங்கத்துடன்சேர்த்து காலபாசத்தால் மார்க்கண்டேயனைக் கட்டி இழுத்தான். பக்தனைக் காப்பாற்ற பரமசிவன் சூலாயுதபாணியாக லிங்கத்தில்தோன்றி யமனை சூலத்தால் குத்தி இடதுகாலால் உதைத்து வீழ்த்தினர். "இந்த மார்க்கண்டேயன் என்றும் பதினாறுவயதுள்ளவனாகவே இருக்கட்டும்" என்று வரமளித்தனர். அதனால் அவன் இன்றும் சிரஞ்ஜீவியா யிருப்பதாகவே பெரியோர் கூறுவர். ஈசுவரன் ஆக்கினையிட்டபடி யமன் வந்தவழி சென்றான். பக்தர்களைக் காக்க பகவான் எங்கும் தோன்றுவர் என்பதற்கு இக்கதை நிதர்சனம்.

## பரம காருணிகத்வம்.

(சிறந்த கருணையுற்றிருத்தல்.)

பூமியைப் பண்படுத்தி அதில் விதைகளை விதைக்கும் வரையில் தான் நமது வசமான கார்யம். பிறகு நம்மால் யாதொருப் பிரயோஜனமுமில்லை. பகவான் மேகங்களினின்றும் ஜலத்தை வர்ஷிக்கச்செய்து நாம் குழந்தைகளுக்குப் பால் ஊட்டுவதுபோல் அவ்விதைகளை நனைத்து முளைக்கும்படி செய்கிறான். பிறகு அம்முளைகள் பூமியைப் பிளந்துகொண்டு வெளியே வரச்செய்தும், முதலில் அவற்றில் இரண்டு இலைகள் உண்டாகச்செய்தும், தளிர்க்கச் செய்தும், புஷ்பிக்கச்செய்தும், பலிக்கச்செய்தும் பகவான் அவற்றை நமது உபயோகத்தின் பொருட்டு ஏற்படுத்தியிருக்கிறான். செடி, கொடி, மரங்கள் முதலியவற்றினின்றும் உதிர்ந்த தான்யம், இலை, பழம் இவைளால் உண்டாகும் ஆகாரத்தை நமக்குக்கொடுத்து நமதுடம்பிலுள்ள இரத்தம், நரம்பு, எலும்பு, மாம்ஸம் முதலியவற்றை விருத்திசெய்து பலப்படுத்தி நமது அறிவையும் நாளுக்கு நாள் வளரச்செய்து அவ்வறிவுடன் கூடிய நமது சரீரத்தை ஸகல கார்யங்களுக்கும் ஸாதகமாகச் செய்திருக்கிறான்.

பின்னும் பார்ப்பதற்குக் கண்களையும், கேட்பதற்குக் காதுகளையும், சுவையறிவதற்கு நாவையும், முகருவதற்கு மூக்கையும், தொடுவதற்கு ஸ்பர்ச (தோல்) த்தையும், நினைப்பதற்கு மனத்தையும், ஊகித்து அறிவதற்கு புத்தியையும், வேலைசெய்வதற்குக் கைகளையும், நடப்பதற்குக் கால்களையும், பேசுவதற்கு வாயையும், மலங்கழிவதற்கு

பாயுனவயும், இன்பமனுபவிக்க உபத்தத்தையும், அறிவு முத்தாத இளம்வயதில் நம்மைக்காப்பாற்ற மாதா பிதாக்களேயும், உடம்பு தளர்ந்து தள்ளாடிநிற்கும் கிழத்தனத்தில் ரக்ஷிக்க புத்திரர்களேயும், நம்மில் சண்டை சச்சரவின்றியும் பலவான் பலவீனனேப் பிடித்தடித்துத் தொந்திரவு, கொலே, களவு செய்யாமலும் காப்பாற்ற அரசனேயும், மோக்ஷமடையும் வரையிலுள்ள நல்வழிகளே யுபதேசிப்பதற்கு குருக்களேயும், தெரியாதனவைத் தெரிந்துகொள்ள வேதங்களேயும், ராஜன் ரக்ஷை சிக்ஷை செய்வதற்கு சாஸ்திரங்களேயும் இவ்விதம் நமக்கு வேண்டிய ஸர்வ ஸாதனங்களேயும் கொடுத்து நமக்கு மகோபகாரம்செய்து அநுக்ரஹித்திருக்கிறுன் ஸர்வேசுவரன். இப்பேர்க்கொந்த பகவானிடம் பரமகிருபையிருப்பதாக எந்த நன்றியறிவில்லாதவனுங்கூட ஒப்பாமலிருக்கமாட்டான். இம்மாதிரியான ஸகல ஸாதனங்களின் உபயோகத்தை யுள்ளபடி புணர்ந்து முறையுடன் உபயோகித்துக் கொள்ளவேண்டிய முயற்சியில் ஜீவர்கள் குன்றினவர்களாகக் காணப்படுவதற்கு அவர்கள் கர்மமே காரணமாகுமல்லது ஈசனிடம் பக்ஷபாதக் குற்றத்தை ஆரோபிக்க முடியாது. தாயுமானவர் * "தன்னேயே நோவனே? பிறரையே நோவனே? தற்காலமதை நோவனே? பந்தமானது தந்த வினையையே நோவனே? பரமார்த்தமேதுமறியேன்." என்று முக்தி மார்க்கத்திற்குத் தடையாயுள்ள தனது வினையை நொந்துகொள்ளுகிறுர். ஒருவனுக்கு நல்லோரிணக்கமும், நற்குருவின் உபதேசமும்பெற மனத்தில் சிரத்தை (அக்கறை)

* பரிபூரணனந்தம், பாடல் 7.

யுண்டாகவேணும். அதனால் அவன் முயற்சி பலப்படும். அந்த சிரத்தை அவனது புண்யம் பலன்கொடுக்கும்போது தான் உண்டாகும். நமக்கு அவ்வித புண்யம் இல்லை யென்று சொல்லமுடியாது. நாம் நமது ஜன்மத்திலுள்ள கஷ்டங்களை அடிக்கடி ஆராய்ச்சிசெய்துகொண்டிருந்தால் அச்சமயம் வந்துவிடும். அதற்காக நாம் சும்மாவிருத்த லாகாது. இவ்விதம் ஜீவர்களின் முன்னேற்றத்திற்குவேண்டி யவற்றை வேண்டாமலே யவர்களுக்களித்திருக்கின்ற பக வான், சிறந்த ஜீவகாருண்யமுற்று பரமகாருணிகன் எனப் படுவான். அவனது தன்மை பரமகாருணிகத்வமாகும்.

## திருஷ்டாந்தக் கதை.

16. ஈசுவரன் சிறந்த கருணையுற்றவன் என்பதைப் பற்றிய கதை:—சோழநாட்டில் உள்ள திருச்சிராப்பள்ளி என்ற நகர்மத்தியில் மலைக்கோட்டை என்ற ஒரு சிறிய குன்று அந்நக ரத்திற்கு நடுநாயகமாய் விளங்கிக் கொண்டிருக்கின்றது. அதில் பகவான் பரமசிவன், பார்வதி ஸமேதராய் வீற்றிருந்து பக்தர்களை பரிபாலிக்கின்றனர். அவரையே குலதெய்வமாகக்கொண்ட ஒரு வணிகர் கிழவி, பிக்ஷாண்டார் கோவில் என்ற ஊரில் வசித்துவந்த னள். காவிரியாற்றின் பிரிவாகிய கொள்ளிடத்தின் வடகரையில் அவ்வூர் உள்ளது. அவ்வணிகர் கிழவி, கர்ப்பவதியான தன் பெண் ணைப்பார்த்து "அம்மணி! பிரஸவகாலம் ஸமீபித்திருப்பதுபற்றி நான் இன்று காலை திருச்சிராப்பள்ளி சென்று நமது குலதெய்வமா கிய மலைக்கோட்டைமாபதியைவணங்கி நினதுபேறுகாலம்இனிது பெற வேண்டிக்கொண்டும் பிரஸவத்திற்கு வேண்டிய மருந்து சாமான்கள் வாங்கிக்கொண்டும் மாலைப்பொழுதில் கட்டாயம் வீடு வந்துசேருகிறேன். நீ தனியேயிருப்பதுபற்றிகவலையுறாமல் ஈசனை மனத்தில் நினைந்துகொண்டிரு" என்று சொல்லிவிட்டுப்போனாள்.

வணிகர்கிழவி சொன்னபடி செய்துகொண்டு ஊருக்குத் திரும்பும் ஸமயத்தில் காவிரியாற்றில் பெரிய பிரவாகம் வந்து விட்டது. மாலையில் தோணிவிட தோணிக்காரர் மறுத்துவிட்டனர். அக்கிழவி, உடல் இக்கரையிலும் உயிர் அக்கரையிலுமாக இரவு பூராவுமிருந்தனள். அன்றுமாலை தாய் வராமலிருப்பதைப் பற்றி ஏங்கின மனத்துடன் வணிகர்மாது இரவைக்கழிக்கக் கருதினள். அன்று பாதிராத்திரியில் அவளுக்குப் பிரஸவ வேதனை கண்டது. அம்மாது அயல்வீட்டாரை உதவிக்கு அழைத்தும் எளியவளாகிய அவள் வேண்டுதலை அவர் பொருட்படுத்தவில்லை. கடைசியில் அப்பெண் நிர்க்கதியாய் தன் வீட்டிலிருந்துகொண்டு மலைக்கோட்டை மாபதியை மனத்திலிருத்திக்கொண்டு உள்ளே புழுவாய்த் துடித்துக்கொண்டிருந்தனள். மிகச் சங்கடமான அச்சமயத்தில் அவ்வேழைப் பெண்ணிற்கு எவர்தான் உதவிசெய்ய முன்வருவார்? பரம கருணாநிதியான மலைக்கோட்டையில் வீற்றிருக்கும் பரமசிவனே அப்பெண்ணின் தாய்வேஷம் பூண்டார். தலையில் பிரஸவ மருந்துச் சாமான்களை மூட்டையாகக்கட்டி வைத்துக்கொண்டார். அவள் வீட்டு வாயற்கதவைத் தட்டித் திறக்கும்படி அப்பெண்ணை உரத்துக் கூப்பிட்டார். தாயின் தொனி காதிற்படவே பெண்ணிற்குண்டான பேரானந்தம் செப்பவும் வேண்டுமோ? உடனே அம்மாது எழுந்து கதவைத் திறந்தனள். கடவுளாகிய தாயும் உள்ளே சென்றனள். உடனே ஆண் மகவும் அம்மாதிற்குப்பிறந்தது. அன்னையுருக்கொண்ட அப்பனும் அவளைத் தான் கொணர்ந்த மருந்துகளருந்தச் செய்தான். பிரஸவித்தவளுக்குச் செய்யவேண்டிய பணிகளைப் பண்பாய்ச் செய்துமுடித்தான். அதன்பிறகு குழந்தையை எடுத்துக் குளிப்பாட்டினன். அதற்குச் செவ்வெண்ணையூட்டினன். தொப்புள் கொடியறுத்தான். குழந்தையின் உச்சியில் எண்ணைதடவி முகர்ந்துபார்த்தான். முத்தமிட்டான், கொஞ்சிக் குலாவினன். புன்னகைகொண்டான்.

மாதாவின் பக்கத்தில் மகவை படுக்கவிட்டு ஸ்தன்யபானம் செய்வித்தான். புதியதாய்வந்து மருத்துவத் தொழிலினையேற்று மனமூவந்து பணிசெய்வதில் வணிகர்மாது வித்தியாசம்நினைக்கவில்லை.

இரவெல்லாம் நித்திரையின்றி ஈசனிடமே குடிகொண்ட மனமுற்றவளான வணிகர்கிழவி, எப்போது விடியும் என்று எதிர்பார்த்தவளாய் விடியற்காலத்தில் தோணியேறி காலையில் வீடு வந்துசேர்ந்தாள். மூடியிருக்கும் கதவைத் தட்டினாள். எவரோ கூப்பிடுவதாக நினைத்துப் பெண் போய்க் கதவைத் திறந்தனள். அக்கிழவி உள்ளேவரவும் உள்ளிருந்த கிழவி மறைந்துவிட்டாள். வந்தகிழவி நடந்த புதுமையெல்லாம் கேட்டனள். அப்புறம் அவ்விருவருக்கும் அடங்காத ஆச்சர்யம் உண்டாயிற்று. அதன்பிறகு அவ்வுண்மையை அறிய விரும்பி ஊரார் யாவரும் கூட்டமாய்க் கூடினர். இரவில் நடந்ததைக் கேட்டனர். எளியவரிடம் ஈசன் காட்டிய கருணையை ஏற்றிப் போற்றினர். அன்றுமுதல் உலக அப்பனுக்குத் தாயுமானவர் (தாயும் ஆனவர்—மாதிரு பூதேசுவரர்) என்ற திருநாமம் சூட்டினர். அப்பெயரே இன்றும் அவனுக்கு வழங்கிவருகிறது. அவன் தனது கருணையின் கரைகடந்த தன்மையை இப்போதும் விளக்கிக்காட்டவே குன்றில் ஏற்றிவைத்த ஒரு பெரிய விளக்குப்போல் விளங்கிக்கொண்டிருக்கிறான்.

---

## மஹாமஹிமத்வம்.

(மிகுந்த மகிமையுற்றிருத்தல்.)

மலைகள் எத்தனை? மரங்கள் எத்தனை? மருந்துச் செடிகள் எத்தனை? நதிகள் எத்தனை? ஸமுத்திரங்கள் எத்தனை?• எத்தனை ஜலத்தில் ஸஞ்சரிப்பன? எத்தனை பூமியில் ஸஞ்சரிப்பன? எத்தனை ஆகாயத்தில் ஸஞ்சரிப்பன? எத்தனை புருஷர்கள்? எத்தனை ஸ்திரீகள்? எத்தனை

நல்லவர்கள்? எத்தனை பொல்லாதவர்கள்? எத்தனை பல முள்ளவர்கள்? எத்தனை பலமில்லாதவர்கள்? இவர்கள் எல்லோரையும் வெவ்வேறு ஜாதியுள்ளவர்கள், வெவ்வேறு சரீரமுள்ளவர்கள், வெவ்வேறு குணமுள்ளவர்களாகவும், ஒருவர்க்கொருவர் உதவியாகவிருக்கும்படியும், உலகத்தில் படைக்கப்பட்ட வனைத்தையும் ப்ரயோஜனமாகவிருக்கும் படியும் ஏற்படுத்தி இந்த ஜகத்தை இந்திரஜால வித்தையைப்போன்று காண்பித்துக்கொண்டிருக்கிற பகவான் மஹா மஹிமையுடன் கூடினவரென்பது நிச்சயம். "உலகில் ஆத்மாவை ஆச்சர்யம்போல் ஒருவன் பார்க்கிறான். மற்றொருவன் அப்படியே ஆச்சர்யம்போல் இதைச்சொல்லுகிறான். பின்னொருவன் ஆச்சர்யம்போல் இதைக் கேட்கிறான். கேட்டும் இதன் உண்மையை ஒருவனும் அறிகிறானில்லை" என்று * பகவத் கீதையில் சொல்லப்படுகிறது. ‡ "பொய்யான வுலகத்தை மெய்யா நிறுத்தி யென் புந்திக்குள் இந்த்ரஜாலம், ஸாதிக்குதேயிதனை வெல்லவுமுபாயம் நீ தந்தருள்வது என்று?..." என்பதாகத் தாயுமானவர் ஈசனது சக்தியான மாயையின் மகிமையைக் கூறினும் அதுவும் ஈசனது மகிமையே ஆகும். ஆதலால் ஈசுவரன் மஹா மஹிமையுள்ளவன் எனப்படுகிறான். அவனது தன்மை மஹா மஹிமத்வம் எனப்படுகிறது.

---

## திருஷ்டாந்தக் கதை.

17. ஈசுவரன் மகா மகிமையுற்றவன் என்பதைப் பற்றிய கதை:—பிருந்தாவனத்தில் வசிக்கும் கோபாலர்கள்

---

* அத். 2 சுலோ. 29. ‡ மௌனகுருவணக்கம், பாடல் 3.

வருஷந்தோறும் வாஸவனைக்குறித்து கோவர்த்தனகிரியில் திரு விழா நடத்துவார்கள். இந்திரன் எப்போதும் இடையிடையே மழையைப்பொழிந்து நீர்வள நிலவளங்களைப் பெருக்கிக் கோவர்த்தனத்தில் பசுக்கள் பசியாரப் புசிக்கக்கூடியப் புற்களைப் பொருளாக அளிப்பதால் அவனே எமக்குக் குலதெய்வம் என்று யாதவர் யாவரும் எண்ணியிருந்தனர். ஒரு வருஷத்தில் அவ்விழா நடக்கும் காலம் கிட்டியது. அப்போது கிருஷ்ணபகவான் "இந்திரன் இறைவனல்ல; இறைவனது ஆக்கினைப்படி உலக கார்யங்களை நடத்துகிறவன்; அவனுக்கு விழா நடத்துவதைவிட நமக்கு நேரிலே பலவித நன்மைகளைப் புரிந்துகொண்டிருக்கும் மலைக்கு விழா நடத்துவது சிறந்ததாகும்; இவ்வாண்டில் அப்படியே செய்வோம்" என்றார். பகவான் அவ்வப்போது செய்து காட்டின பற்பல அற்புதச் செயல்களால் அவரிடம் அளவுகடந்த மதிப்புற்ற கோபாலர்கள், அவ்வாறே ஒப்புக்கொண்டு அவ்வாண்டில் அம்மலைக்கே உற்சவம் கோலாகலமாய் நடத்த ஆரம்பித்தனர். அவ்விஷயம் தெரிந்த இந்திரன் அதிக கோபங்கொண்டு அவர்களுக்கு இணையிலாத இடையூறு பண்ணக் கருதினன். மழைக்கு அதிஷ்டான தேவதைகளாகிய புஷ்கலாவர்த்தகம் முதலிய எழுவர்களை அழைத்து "நீங்கள் மறு உத்தரவுவரை பிரளயகாலத்திற்போன்று இடைவிடாது ஏராளமான மழையை பிருந்தாவனத்திற் சுற்றிலும் பெய்யவேண்டும்" என்று கடுமையான கட்டளையிட்டான். அவ்விதமே பொழியும் மழையின் கொடுமையைத் தாங்கமுடியாத யாதவர்கள் தத்தம் பசுக்கள், கன்றுகள், மற்றுமுள்ள பொருள்கள் இவற்றுடன் பகவானிடம்வந்து சரண்புகுந்தனர். உடனே பகவான் கோவர்த்தனகிரியைக் கைகளால் அசைத்துப்பிடுங்கி எல்லோருக்கும் அதனைக் குடையாகப்பிடித்த காட்சியை நினைக்கும்போதே மயிர் சிலுக்கின்றது. மட்டிலா ஆச்சர்யம் மனத்தினில் எழும்புகின்றது. ஒப்பு உயர்வற்ற அவனது பெருமை, புத்தியைக்

வளர்கின்றது. அதனைக் கண்ணுற்றிருந்த கோபாலர் அவனது மகிமையைப்பற்றி எவ்வாறு நினைத்திருப்பார் என்பதை இயம்பவும் வேண்டுமோ? இத்துணைப் பெரிய உலகத்தைப் படைத்துக் காத்தருளும் ஈசனுக்கு இது ஒரு பெரிதல்லவென்று அவர்கள் முடிவில் நிர்மாணித்தனர். இராவும் பகலும் இடையறாது ஏழு நாள் பொழிந்த மழை எவ்வளவோ ஆபத்தை விளைவிக்கக் கூடியதாயினும், யாதொரு கஷ்டமின்றி கோவர்த்தனகிரியின் கீழே குடியிருந்த கோபாலர்கள், ஆரம்பித்த உற்சவத்தைப்பூர்த்திசெய்தனர். அப்புறம் இந்திரன் இத்துணை மகிமை பொருந்திய பகவானிடம் உருவில் வந்து பணிந்து தனது தப்பிதத்திற்கு மன்னிப்புகேட்டுக்கொண்டு பகவானது பெருமையை விளக்கிப்போயினன்.

---

## அப் பிராகிருதத்வம்.

### (பிரகிருதி வசமாகாதிருத்தல்.)

பிரகிருதி என்பது ஈசுவரனைவிட்டுப் பிரியாத அவனது ஒருவித சக்தி. அதற்கு வசமாயிருப்பவன் பிராகிருதனாவன். அப்படியில்லாதவன் அப்பிராகிருதன் எனப்படுவான். அவனது தன்மை அப்பிராகிருதத்வம் எனப்படும். ஈசுவரன் படைத்தப் பிராணிகள் யாவும் பிரகிருதிக்கு வசமாயிருப்பன. அதுகாட்டும் வழியைத்தழுவி நடப்பன. அதனை மீறிச்செல்ல வல்லமையற்றன. ஈசுவரன் ஒருவன் மாத்திரம் அவ்விதமல்லான். அவன் செல்லும் வழியைப் பின்பற்றியே பிரகிருதி அவனது ஆணைக்குட்பட்டிருக்கிறது. அவனைக் கட்டுப்படுத்த அதனாலும் முடியாது. அதனால் அவன் ஸ்வதந்திரன் என்றும் கூறப்படுவான்.

---

## திருஷ்டாந்தக் கதை.

**18. ஈசுவரன் பிரகிருதி வசமாகாதவன் என்பதைப்பற்றிய கதை:—** கிருஷ்ணபகவான் தேவகியின் கர்ப்பத்திலிருந்து அவதரிசகும்போதே, நான்குகைகளுடனும், சங்கம், சக்ரம் முதலிய ஆயுதங்களுடனும் ஈசுவரன் வடிவமாகத்தோன்றினார். ஏனெனில், அவரது மாமனாகிய அஸுரத்தன்மை பொருந்திய கம்ஸன் தன்னை பகவான் கொல்லப்போவதாக அசரீரிவாக்கினால் அறிந்து அவரது பெற்றோராகிய தேவகி வஸுதேவர்களைச்சிறைப்படுத்தியுள்ளான். அன்றியும் அவன் அவர்களுக்குப்பிறந்த ஏழு குழந்தைகளை வதைத்து விட்டான். எட்டாவது குழந்தையாகிய பகவானாலேயே நிச்சயமாய் தனக்கு மரணம் நேரிடப்போவதாகத் தெரிந்துகொண்டு குழந்தை பிறந்தவுடன் அவன் அதனையும் வதைக்க ஸித்தமாயிருந்தான். அப்போது பகவான், தன் தகப்பனாகிய வஸுதேவரைப் பார்த்து "நான் ஸாதாரண குழந்தையல்ல. மகாவிஷ்ணுவென்று தெரிவதற்காகவே அந்த சின்னங்களுடன் அவதரித்திருக்கிறேன். கோகுலத்தில் நந்தகோபர் பத்னியாகிய யசோதையம்மாளுக்கு எனது சக்தியாகிய பிரகிருதி, பெண்குழந்தையாகப் பிறந்திருக்கிறாள். நீர் என்னை யசோதையிடம் கொண்டுபோய்விட்டு அப்பெண் குழந்தையை தேவகியம்மாளிடம் கொண்டுவந்து விட்டுவிடும். எனது யோகபலத்தால் உமது கை கால் விலங்குகள் நழுவி விடுவன. சிறைக்காவலர் மயங்கித் தூங்குவர். கதவுகள் திறவுகோலின்றியே திறப்பன. யமுனாநதி, ஜலம் ஒதுங்கி உமக்கு வழி விட்டுவிடும். நடுராத்திரியில் நல்லிருளிலும் கோகுலம் சென்றுவர உமக்கு தைர்யமுண்டாகும். நீர் என்னைக்கொண்டு போய்விட்டபிறகே யசோதையும் மற்றவரும் பிறந்த குழந்தை என்ன? என்று கவனிப்பார். நீர் அம்மாதிரி செய்தபிறகு எல்லாம் முன்போல ஆய்விடும். இவற்றை எவருமறியார்" என்றார். வஸுதேவர் குழந்தையைப் பார்த்தமாத்திரத்தில் பிரகிருதிக்கு வசப்

பட்ட மற்றொரு குழந்தைபோன்று இது இல்லை. இது சொல்வ தெல்லாம் உண்மையே என்று நினைத்து அப்படியேசெய்து முடித் தார். பிறகு பகவான் ஸாதாரணகுழந்தைபோலாய்விட்டார். அதன் பிறகு கம்ஸன் எட்டாம் குழந்தை பிறந்த விஷயம் தெரிந்து அது பெண்ணாயிருப்பதைப்பற்றி சிறிது யோசித்து அதனைச் சுழற்றி பூமியிலடிக்கத்தூக்கும்போது அது அவன்கைகளிலிருந்து நழுவி ஆகாசத்திற்போய் எட்டுக் கைகளுடனிருந்து "என்னைக் கொல்ல உன்னால் முடியாது. உன்னைக்கொல்லுகிறவன் கோகு லத்தில் வளருகிறான்" என்று சொல்லி மறைந்து போய்விட்டது.

---

## ஸ்வதந்திரத்வம்.

(தன் வசமாயிருத்தல்.)

ஸ்வதந்திரன் என்பான் தன்னிஷ்டப்படி இருப்ப வன். அவனது தன்மை ஸ்வதந்திரத்வம் எனப்படும். ஒரு குடும்பத்தலைவன், அக்குடும்பத்தினரைத் தன்னிஷ்டப் படியே நடத்துவான். அவனது குடும்பத்தினர் குழந்தை கள், சிறுவர், பெண்பாலர், வயோதிகர், வியாதிஸ்தர், புத்திமந்தர் முதலிய பல்வேறு வகைப்பட்டனராகவே யிருப்பார். சிற்சில காரணம்பற்றி அவர் தம்மைத்தாம் காப்பாற்றும் வகையற்றிருப்பார். அவர் யாவரிடத்தும் ஒரேவிதமான கருணையுற்ற தலைவன் ஒருவனே, அவரைக் காக்க வெவ்வேறு வகையான வழிகளை யறிந்திருப்பான். அவன் நடத்தும் முறையைத் தழுவியிருந்தால் மாத்திரம் அக்குடும்பத்தினர் ஒருங்குபட்டு ஒழுங்காய் வாழ்ந்து சுக ஜீவனம் பெறுவார். அதனால் அவர் தலைவனுக்குள்ளடங்கி அஸ்வதந்திரராகவே யிருக்கவேண்டும். குடும்பப் பொறுப் பேற்ற தலைவனோ அப்படியல்ல. அவன் அவர்களோடு தன்னை

யும் சேர்த்துக் காத்துக்கொள்ளும் சரீரவன்மையும் கூர்மையான திடபுத்தியும் பொருந்தியவன். அதனால் அவன் ஸ்வதந்திரனாகவிருப்பதில் குற்றம்குறைகள் நேரிடா. அது போன்று ஈசுவரன், அவனுள்ளடங்கிய எல்லாப் பிராணிகளிடமும் பக்ஷபாதமின்றி அன்புற்று அவர்களைக்காக்கும் திறன் படைத்து அவரவர் முன்னேற்றத்திற்குத் தக்கநெறிமுறைகளை முற்றுமுணர்ந்தவனுமவன். அவனுக்கு ஒப்பானவன் பின்னொருவனில்லை; எனில் அவனுக்கு மேலானவன் எவன் இருப்பான்? கீதையில் "அவனுக்கு ஸமானமானவனும் சிறந்தவனுமில்லை" எனப்படுகிறது. அதனால் அவன் ஸ்வதந்திரன் எனப்படுவான்.

---

## திருஷ்டாந்தக் கதை.

19. ஈசுவரன் தன்வசமாக விருப்பவன் என்பதைப்பற்றிய கதை:—ஒரு நாள் யசோதையம்மாள் தயிர் கடையும்போதே, தன் குழந்தையாகிய கிருஷ்ணனை மடியில்வைத்துக்கொண்டு பால் கொடுத்துக்கொண்டிருந்தாள். நடுவில் சற்று பால்கொடாமலிருக்க அமிக்குழவியினாலவன் தயிர்ச்சட்டியை உடைத்துவிட்டான். அந்த கோபத்தால் யசோதை ஒரு கயிறெடுத்து அவனை உரலில் வைத்துக் கட்ட ஆரம்பித்தாள். உரலையும் கிருஷ்ணனையும் சேர்த்துக் கட்ட அக்கயிறு இருவிரல் நீளம் போதாமலிருந்தது. பிறகொரு கயிறெடுத்து அத்துடன் முடிந்து கட்டும்போதும் அவ்விதமே இருவிரல் நீளம் குறைவாயிருந்தது. அப்படியே அவள் வீட்டில் மூலைமுடக்குகளிலுள்ள கயிறுகளை யெல்லாம் தேடித் தேடிப்பார்த்து கொண்டுவந்த ஒவ்வொரு கயிறும் முடிந்து கட்டக்கட்ட அவ்விதமே இருவிரல் நீளம் போதாமலிருந்து வந்தது. கடைசியாக

அவள் கிருஷ்ணனைக் கட்ட கயிறுகளைத் தேடவாரம்பித்த சிரமத்தினற் களைத்து முகம் வியர்த்து "இந்தத் துஷ்டக் குழந்தையை என்னல் கட்டிப்போடவும் முடியவில்லையே; வீட்டிலுள்ள கயிறுகளும் ஆய்விட்டனவே" என்று நொந்துகொண்டு எங்கேயோ மீதமாயிருந்த ஒரு சாண் கயிற்றைத் தேடிக் கொணர்ந்து கட்ட ஆரம்பித்தனள். அப்போது கிருஷ்ணபகவான் தனது செய்கையால் தன்னை ஒருவராலும் கட்ட முடியாதென்பதை உணர்த்திய போதிலும் தாயார்படும் கஷ்டத்தைப்பார்த்தும் அவளது எண்ணத்தைப்பூர்த்தி செய்ய நினைத்தும் கடைசிக் கயிறுக்குக் கட்டுப்பட்டவர்போல இருந்து கொண்டனர். உலகங்களை யெல்லாம் கட்டியாளும் பிரகிருதியே ஸர்வேசுவரனிடம் கட்டுண்டிருக்க அவனைக் கட்டுப்படுத்தி நடத்த எவரால்தான் முடியும்?

---

## நிர்த்தோஷத்வம்.

### (குற்றமற்றிருத்தல்.)

ஈசுவரன் ஒருவனே யாதொரு தோஷமின்றி தனிக் குணங்களுற்றவன். அவன் படைப்பிலுள்ளப் பிராணிகள் யாவும் குற்றமும் குணமும் கலந்திருப்பன. தனிக்குற்றமும் தனிக்குணமுமுள்ளப் பிராணி யாதொன்று மில்லை. ஆனல் சிலப் பிராணிகளிடம் குற்றம் அதிகமாயும் குணம் குறைவாயும் தோன்றும். அவ்விதமே சிலவற்றில் குணம் அதிகமாயும் குற்றம் குறைவாயும் காணப்பெறும். அவ்விதம் ஒருவனிடம் அதிகக் குற்றமிருப்பதாகத் தோன்றுவதற்குத் தோற்ற முள்ளவனுடைய அதிகக் குற்றமே காரணமாகவும் கூறலாம். ஒரு ஸர்ப்பத்தினிடமுள்ள பயத்தால் அதனைக் கொல்ல நாம் யத்தனிக்கும்போது அது தன்னைக் காத்துக்கொள்ள நம்மைக் கொல்ல முயற்

சிக்கிறது. ஸர்ப்பத்தினிடம் சிறிதும் பயமில்லாத குழந்தை களின் மீதும், அசையாமல் தூங்குகிறவர் மீதும் ஸர்ப்பம் தீண்டாமலே ஏறிச் சென்றிருப்பதான உண்மையைக் கேள்விப் பட்டுள்ளோம். மனத்தில் களங்க மற்ற முனிவர் களிடம், புலிகளும் மான்கள் போன்று விளையாடுவன, என்றும், அவர்களுள் சிறந்தவர்களின் ஸந்நிதானத்தில் ஜன்ம சத்துருக்களான கீரியும் பாம்பும், புலியும் பசுவுங் கூட கூடி வாழ்வன வென்றும் நமது கிரந்தங்களிற் கூறி யிருப்பதை, நாம் கேள்வியுறும் முற்கூறிய அநுபவம் உறுதிப்படுத்துகிறது.

ஜீவர்கள் யாவரும் ஈசுவரனது அம்சம் பெற்றவராகை யால் அவர் போன்றே ஜீவாத்மாக்களும் தனிக்குணங்க ளுறக்கடமைப்பட்டுள்ளார். ஆயினும் காரணம் சொல்ல முடியாத அநாதியான ஏதோ ஒருகர்மவாஸனையினால் ஜீவர் களிடமுள்ள சில குணங்கள் குற்றங்களாக மாறி விடுவன. அவ்விதமே ஒவ்வொரு ஜன்மத்திலும் ஜீவர்களிடமுள்ள குணங்களைக் குற்றங்களாய் மாற்றவே பூர்வ ஜன்ம கர்ம வாஸனை இழுக்கப்பார்க்கும். ஆனாலும் ஜீவர்கள் தத்தம் முயற்சியினால் குற்றங்கள் என்ற பாசிகளை நாளடைவில் விலக்க விலக்கத் தனிக்குணங்களை ப்ரகாசப்படுத்தவும் முடியும். அவ்விதம் ஜீவர்களிடம் குற்றமும் குணமும் ஏற்றத்தாழ்வாய்க் காணப்படுவதற்கு அவரவர் ஒவ்வொரு ஜன்மத்திலும் எடுத்துக்கொள்ளும் முயற்சியே காரண மாகும். அவரவர் தன்மைக்கும் முயற்சிக்கும் செயல்களுக் கும் தக்கவாறுதான் குற்றங்களகற்றி குணங்களைப் பிரகா சிக்கச்செய்ய முடியும். ஒருவன் ஜீவத்தன்மையுற்றிருந்தா

னும் அவன் பலநாட்களாகச்செய்துவரும் நற்பழக்கத்தால் குற்றங்கள் யாவும் விலகித் தனிக்குணங்களுறும்போது, அவனே ஈசுவரனும் ஈசுவரனோடு கலந்து விடுவான். அவ னுக்குத் திரும்ப ஜன்மமெடுக்க வேண்டிய அவசியமில்லை.

இவ்வாறு ஈசுவர குணங்கள் சில நமக்குத் தோன்று வனவாக இருப்பினும் அவனிடம் அனந்த கல்யாண குண ஸமூகங்கள் நமக்குத் தெரியாதனவாக நிறைந்திருக் கின்றன என்று அறிய வேண்டும். இதன்பின் ஈசுவரனது செய்கையாகிய கிருத்யம் கூறப்படுகிறது.

---

## திருஷ்டாந்தக் கதை.

20. ஈசுவரன் நிர்த்தோஷன் என்பதைப்பற்றிய கதை:— இராமனுக்கும் இராவணனுக்கும் யுத்தம் நடக்கும்போது ஒரு நாள் யுத்த மத்தியில் இராவணனது கையிலிருந்த வில் முறிந்துபோய் விட்டது. உடனே இராமன் இராவணனைப்பார்த்து "அப்பா! நீ இப்போது நிராயுதபாணியாகவிருப்பதால் உன்னை வெகு எளி தாக ஜயித்துக் கொன்றுவிடலாம்; ஆனாலும் ஆயுதமில்லாத பகைவனோடு யுத்தம்செய்வது அதர்ம யுத்தமாகும். அதர்ம யுத் தத்தில் வெற்றிபெறுவது க்ஷத்திரிய தர்மமல்லவென்று நானே சாஸ்திரங்கள் வாயிலாகக் கட்டளையிட்டிருக்கிறேன். ஈசுவரனு கிய நான் உலகத்தார்களுக்கு தர்மங்களை நடத்திக் காட்டுவதற் ாகச்செய்த இந்த ராமாவதாரத்தில் நான் அதர்மயுத்தத்திற் புத்தி பச் செலுத்தேன். ஆதலால் நீ இன்று வீடுபோய் இளைப்பாறி ள ஆயுதபாணியாக வந்தாயானால் அப்போது உன்னுடன் யுத் செய்வேன்" என்று கூறினார். இவ்விதம் சத்துருவினிடமும் ரமான கருணையைக் காட்டுகின்றவர் ஈசுவரனது அவதார

மாகவோ அல்லது ஈசுவரனது அம்சம் விசேஷமாகப் பெற்றவராக வோ இருக்கவேண்டும். அப்படியல்லாதார்க்கு இம்மாதிரியான குணம் வாய்க்காது. மற்ற மனிதரும் தோஷங்கள் பரவ நேரிடும் ஸமயங்களில் தம் பகுத்தறிவாலும் தீவிரமான முயற்சியாலும் அவற்றை அகற்றுவரேல், தனிக்குணமுள்ள ஈசுவரனாய்விடுவார் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.



## ஐந்தாம் அதிகாரம்.

## ஈசுவரனது கிருத்யம்.

ஈசுவரன் ஒருவனாயினும் அந்தந்த கார்யவசத்தினால் ஸகலமான உலகங்களுக்கும் கர்த்தாவாகவும், ரக்ஷகனாக வும், ஸம்ஹாரம் செய்கிறவனாகவும் இருந்துகொண்டு அனேகவிதமாய்ச் சொல்லப்படுகிறான். ஓரேகடவுள் ஆக்கல், காத்தல், அழித்தல் என்ற மூன்று தொழில்களைச் செய்கின்ற காலத்தில் முறையே பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற நாமங்களை அடைகிறான். “எவ்விதம் தங்கம் ஒன்றா யிருந்தபோதிலும் கங்கணம், கிரீடம், குண்டலம் முதலிய பலவகையான ஆபரணங்களாகப் பெயர் பெற்றிருக் கிறதோ, அவ்விதமே இறைவன் தேவர்கள், மனிதர்கள், பசுக்கள், பக்ஷிகள், ஸ்தாவரங்கள் என்ற உருவங்களாக மாறிப் பலவிதப் பெயர்களைப் பூண்டிருக்கிறான்” என்று புராணங்களிற் கூறப்படுகிறது. வேதத்தில் “தனக்கிரண் டில்லாத பிரம்மம் ஒன்றுதான்; அவன் ஒரு விதமாயும், மூன்று விதமாயும் ஐந்து விதமாயும் ஏழுவிதமாயும் ஒன் பது விதமாயும் இப்படிப் பலவிதமாய் இருக்கின்றான்;

அவனையே இந்திரனாகவும் ஸூர்யனாகவும் வருணனாகவும் அக்னியாகவும் வாயுவாகவும் யமனாகவும் தங்கமயமான சிறகுகளையுடைய கருடனாகவும் இப்படி அனேக வித மாய்ச் சொல்லுகிறார்கள்" என்று கூறப்படுகிறது. உப நிஷத்தில் † "இந்தப் பிராணிகள் எதனிடமிருந்து உண் டாகின்றனவோ, உண்டான இவை எதனால் காக்கப்பட்டுப் பிழைத்திருக்கின்றனவோ, கடைசியில் இவை எதனிடம் சேர்ந்து லயிக்கப்போகின்றனவோ, அதனை பிரம்மம் என அறிந்துகொள்க" என்று பிரம்மத்தின் இலக்ஷணம் கூறு மிடத்தில் பகவானுடைய மூன்று கிருத்யங்கள் கூறப்பட் டிருக்கின்றன. "ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோ தானம் (மறைத்தல்) அனுக்கிரஹம் என்ற பஞ்சகிருத்யங் களுக்கு பகவான் அதிகாரியாகவிருக்கின்றான். அந்த ஒரே கடவுள் முற்கூறிய ஐந்து செயல்களைச் செய்யும்போது முறையே பிரம்மா, விஷ்ணு, ருத்ரன், மகேசுவரன், ஸதா சிவன் என்ற திருநாமங்களால் அழைக்கப்படுகிறான்" என்று சிவாகமங்களிற் கூறப்படுகிறது § "மாயன் பிர மன் உருத்திரன் மகேசனோடாயும் சிவமூர்த்தி ஐந்து" என்பது ஔவை குறள். முதல் மூவரது கிருத்யம் சரீ ரத்தைப்பற்றியது. பிந்திய இருவர் கிருத்யம் ஜீவனைப் பற்றியது, முத்தொழில்களில் ஐவகைத் தொழில்களும் அடங்குவன. எப்படியெனில்? ஸம்ஹாரம் என்ப தற்கே, ஜீவனது சரீரத்தை அழித்து ஜீவனை ப்ரகிருதியில் மறைத்துவைத்துக் கடைசியாக அவனுக்கு அருள் புரிதல்

† தைத்தரீயப்பிருகுவல்லி அநுவாக. 1.

§ அதி. 1. குறள் 6.

என்ற பொருள் கொள்ளவேண்டும். இதன் பின் ஈசுவர னது அவதாரங்கள் கூறப்படுகின்றன.

## திருஷ்டாந்தக் கதை.

21. ஈசுவரனது கிருத்யத்தைப்பற்றிய "மும்மூர்த்தி களும் ஒன்றே" என்ற கதை :—பிரம்மாவின் புத்திரனுகிய தக்ஷன் என்பான் ஒரு ஸமயம் ஒரு பெரிய யாகம் செய்தான். அதற்கு அவனது மருமகனுகிய பரமசிவனை, அவன் ஏதோ ஒரு கோபத்தால் அழைக்காமலிருந்தது மாத்திரமல்ல. அவர்க்குரிய ஹவிர்ப்பாகத்தை அக்னியில்ஹோமம்செய்வதில்லை என்றும் அவன் தீர்மானித்தான். மற்ற தேவர்கள் வந்து யாகம் நடந்துகொண் டிருந்தது. பரமசிவனது பத்னியாகிய ஸதி என்பாள், தன்னை அழைக்காமலிருக்கும்போதே தகப்பனிடமுள்ள வாஞ்சையினுல் கணவனிடம் முறண்பட்டு யாகத்தைப் பார்க்க வந்தனள். தக்ஷன், பெண்ணை லக்ஷ்யம் செய்யவில்லை. உடனே அவள் யோகசக்தி யால் அக்னிவளர்த்து அதிற்பிரவேசித்து தக்ஷனுற்கிடைத்த உட லைக் களைந்தனள். அவ்விஷயம் தெரிந்த பரமசிவனுக்குண்டான கோபத்தினின்றும் "வீரபத்திரர்" என்ற ஒரு கிங்கரர் தோன்றி ஞர். உடனே அவர் தக்ஷன் தலையைச் சேதித்து யாகம் முற்றுப் பெருதவண்ணம் அங்கு வந்திருந்த தேவர்கள் நடுங்கி ஓடும்படி முறிய அடித்தனர். பிறகு தேவர்கள் யாவரும் ஒன்றுகூடி பரம சிவனிடம் வந்து மன்னிப்புக்கேட்டுத் தக்ஷனைப் பிழைப்பித்து யாகத்தை நிறைவேற்றிக்கொடுக்க வேண்டினர். அவ்விதமே பரம சிவன் தக்ஷனை உயிர்ப்பித்துத் தனது ஸன்னிதானத்திலேயே யாக சாலை ஏற்படுத்தி சாஸ்திர முறைப்படி தக்ஷனது யாகம் முற்றுப் பெறுவித்தனர். அந்த யாகத்தில் ஹவிர்ப்பாகம் கொடுக்க மகா விஷ்ணுவினது மந்திரத்தைச் சொல்லி யழைக்கும்போது அவர்

அங்கு தோன்றி கூறியதாவது :—“ ஓ தேவர்காள் ! பிரம்மனுக்கும் எனக்கும் பரமசிவனுக்கும் யாதொரு பேதம் இடையாது. ஒரே கடவுள் மூன்றுவடிவமாயிருந்து முத்தொழில்களைச் செய்துவரு கிறார். மும்மூர்த்திகளையும் பேதப்படுத்தாது வழிபடுகின்றவர்க்கே பரமபதம் எளிதில் லபித்திப்பதாகும். என்னிடம் பக்திகாட்டி சிவனை துவேஷிப்பதும், சிவனை நேசித்து என்னைப் பகைப்பது மான கார்யம் பாவச்செயலாகும். ஒரு மூர்த்தியினிடம் பற்றுதல் அதிகப்படவேண்டி மூற்றின பக்திசெய்வது ஸகஜமாயினும், மறு மூர்த்தியை நேசியாததுடன் துவேஷிப்பதும் தூஷிப்பதுமான கார்யம், அதனைவிடச் சிறந்த பாவச்செயலாகும். மூர்த்தித்துவே ஷம் உள்ளவனுக்கு தக்ஷனது கதிதான் நேரிடும்” என்று திரு வாய்மலர்ந்தருளி மறைந்தார்.

---

## ஆறும் அதிகாரம்.

---

### ஈசுவரனது அவதாரங்கள்.

சிற்சில சமயங்களில் அந்த பகவான், ஜன்மாந்தரீய மான கர்ம வசத்தினால் அவரது கட்டளையாகிய தர்மநெறி களைக் கடந்து மிகவும் கெட்டகார்யங்களைச் செய்கின்ற துஷ்டர்களை சிக்ஷித்து அவர்களை நல்லவழிகளிற் கொண்டு வருகிறதற்கும், நல்லோரைக் காப்பாற்றுவதற்கும், தேவசரீ ரம், மனுஷ்ய சரீரம், திர்யக் (குனிந்து நடமாடுகின்ற பசு பக்ஷி முதலிய) ஜந்துக்களின் சரீரம் இவற்றைத் தனது அம்சங்களால் எடுத்துக்கொண்டு பூமியில் அவதரிக்கின் றார். அப்போது அவர் பரிசுத்தமாயும், அஸாத்யமாயும், ஆச்சர்யகரமாயு மிருக்கின்ற அனேக நற்கார்யங்களைச்

செய்து ஜனங்கள் நல்ல தர்மங்களை அனுஷ்டிப்பதற்குத் தான் திருஷ்டாந்தமாக இருந்து, அவற்றை நடத்திக்காட்டி அதனால் அவர்கள் நன்மை, தீமை இன்னவை என அறியும்படி செய்கின்றார். பகவத்கீதையில் † "ஓ அர்ஜுனா! எந்தெந்த ஸமயத்தில் தர்மத்திற்குக் குறைவும் அதர்மத்திற்குக் கிளர்ச்சியும் உண்டாகின்றனவோ, அப்போதெல்லாம் நான் என்னை ஸ்ருஷ்டித்துக்கொள்ளுகிறேன். யுகங்கள் தோறும் ஸாதுக்களைக் காப்பாற்றவும், துஷ்டர்களை ஒழிக்கவும், தர்மத்தை ஸ்தாபிக்கவும் நான் அவதாரம் செய்கிறேன்" என்று கிருஷ்ணபகவான் சொல்லுகின்றார். பகவான் செய்த அவதாரங்களில் முக்யமானவை பத்து. அவை 1. மத்ஸ்யம் 2. கூர்மம் 3. வராஹம் 4. நரஸிம்ஹம் 5. வாமனன் 6. பரசுராமன் 7. ராமன் 8. பலராமன் 9. கிருஷ்ணன் 10 கல்கி என்பன.

---

## அவதாரக் கதை.

1. மத்ஸ்யாவதாரத்தைப் பற்றிய கதை :— முன்னொருகால் ஸோமகன் என்ற அஸுரன் வேதத்தின் அதிஷ்டான தேவதையைப் பலாத்காரமா யபகரித்துக்கொண்டு ஸமுத்திர ஜலத்திற்குள் ப்ரவேசித்துப் பாதாள உலகம் சென்றான். அதனால் உலகங்களைப் படைக்கும் தொழிலில் அமைந்தவராயுள்ள பிரம்மா, தனக்கு ஸாதனமான வேதத்தின் அறிவு குன்றி கொஞ்சகாலம் ஸ்ருஷ்டி செய்யாமலே இருந்துவிட்டார். ஜனங்களும் நல்ல தர்மங்களைத் தெரிந்து அனுஷ்டிக்கச் சக்தியற்றவராயினர். இவ்விஷயத்தை யறிந்த பகவான் மகாவிஷ்ணு, ஸமுத்திரத்தில் விரைவாக நீந்திச்

---

† அத். 4. சுலோ. 7, 8.

செல்ல அனுகூலமான மத்ஸ்யத்தின் உருவத்தை எடு
கொண்டு பரம துஷ்டனான அந்த அஸுரனை ஸம்ஹாரா
வதற்காக ஸமுத்திரத்திற் பிரவேசித்து அதனுட் செ
உடனே அச்சங்கதி தெரிந்த அவ்வஸுரன் ஸமுத்திர ஜல
மத்தியில் ஓரிடத்தில் ஒளிந்துகொண்டான். பகவான்
அங்கே கண்டுபிடித்து குற்றவாளியான அவனைக்கொன்றுத்தி
அந்தவேதத்தின் அதிஷ்டான தேவதையைக் கொண்டுவந்து
மாவினிடம் சேர்ப்பித்தார். அதன்பிறகு பிரம்ம ஸ்ருஷ்
ஜனங்களின் நற்கார்யங்களும் வழக்கம்போல் நடந்துவந்தன
வான் மச்சவுருவமெடுத்ததால் இது மத்ஸ்யாவதாரம் என

---

2. கூர்மாவதாரத்தைப்பற்றிய கதை:— உலக
ஸ்ருஷ்டி செய்வதற்காக பிரம்மாவிற்கு உதவியாகவும்
ருடைய மானஸ (மனத்திலுண்டான) புத்திரர்களாவுமிரு
உபப்பிரம்மாக்களில் மரீசி என்பவர் ஒருவர். அவருடைய
ரர் கச்யபர் என்பவர். அவருக்கு திதி, அதிதி முதலி
பத்னிகள் உளர். திதியினிடமாகப் பிறந்தவர்கள் அஸு
அதிதியினிடமாகப் பிறந்தவர்கள் தேவர்கள். அஸுரர்கள்
கையாகவே மிக்க பலத்துடன் கொடுமையான தன்மைய
களாக இருந்தார்கள். அதனால் அவர்கள் தங்களுக்கு
களான தேவர்களிடம் பகைமையுற்று அடிக்கடி அவர்
போர்புரிந்து அவர்களைத் துன்புறுத்திக்கொண்டு வந்தனர்.

பிறகு தேவர்கள் ஜகத்ரக்ஷகனான மகாவிஷ்ணுவினிட
கள் கஷ்டத்தைத் தெரிவிக்கும்போது ஸாதுக்களிடம் அ
வரான மகாவிஷ்ணு, தேவர்களைப்பார்த்து "ஓ தேவ
திருப்பாற்கடலைக் கடைந்து அதிலிருந்துண்டாகும் அமிருத
பருகுவீர்களானால் நீங்கள், அஸுரர்கள் செய்யும் ஹிம்சை

தாங்கக்கூடிய சக்தியுள்ளவர்களாவும் அதனால் மரணமில்லாதவர் களாகவு மிருப்பீர்கள்; அவ்வஸுரர்களை ஜயிப்பதற்குவேண்டிய பலமும் அதனால் உண்டாகும்" என்றார். அதனைக்கேட்ட தேவர்கள் அவ்விதமே க்ஷீரஸமுத்திரத்தில் மந்தர பர்வதத்தை மத்தாக ஏற்படுத்தி அதில் வாஸுகி என்ற ஸர்ப்ப ராஜனைக் கயிறாகக் கட்டிக்கொண்டு அதைக்கடைய ஆரம்பித்தனர்.

அந்த ஸங்கதி தெரிந்து அஸுரர்களும் அமிருதத்தில் பாகம் பெறுவதற்காக அவர்களுடன் சேர்ந்து பாற்கடலைக் கடைய வந்தனர். தேவர்களால் அஸுரர்களை விலக்க முடியாதாகையால் தேவர்கள் ஒரு புறமும் அஸுரர்கள் ஒரு புறமுமாக விருந்துகொண்டு க்ஷீரஸாகரத்தைக் கடையும்போது, அம்மலை அடிக்கடி தரையிற்போய்ப் பதிந்துகொள்ளாமலிருக்கும்படி, மகாவிஷ்ணு ஆமையின் உருவத்தை எடுத்துக்கொண்டு அதைத் தன் முதுகின் பேரில் தாங்கிக்கொண்டார். அப்போது அதிலிருந்துண்டான உச்சைசிரவஸ் என்ற குதிரை, ஐராவதம் என்ற வெள்ளையானை, ரூபவதிகளான அநேக அப்ஸரஸ்திரீகள், விரும்பின வஸ்துக்களைக் கொடுக்கக்கூடிய தன்மையுள்ளனவாகிய கல்ப விருக்ஷம், காமதேனு, சிந்தாமணிரத்தினம் முதலியவற்றை விஷ்ணுவின் உதவியினால் இந்திரன் எடுத்துக்கொண்டான். அதன்பிறகுண்டான லக்ஷ்மிதேவி, கௌஸ்துபரத்னம் முதலியவற்றை மகாவிஷ்ணு எடுத்துக்கொண்டார். அதன்பிறகுண்டான சந்திரனைப் பரமசிவன் சிரஸில் அணியாக வைத்துக்கொண்டனர்.

அதன்பிறகு மகா கொரேமான கருப்புநிறமுள்ள "ஹாலாஹலம்" (ஜகத்தைப் பிளப்பது) என்ற ஒரு விஷ உருண்டை, உலகங்களை எல்லாம் ஏககாலத்தில் கவளம் செய்வதுபோன்றும், அனேக ஸூர்யன்கள் ஒரேகாலத்தில் உதயமாகிக்கொளுத்துவன போன்றும், நான்குபக்கத்திலும் தீப்பொறிகளைக் கக்கிக்கொண்டும்

பிரளயகாலத்திய அக்கினி, சுடர்விட்டு எரிவது போன்றும் அக் கடலினின்றும் உண்டாயிற்று. அதனைப் பார்த்த தேவர்களும் அஸுரர்களும் பயந்து எண்திசைகளிலும் ஓட ஆரம்பித்தனர். பிறகு மகாவிஷ்ணு அதை அடக்கிவிடலாமென்று அதன் சமீபத்திற்போகவே அதன் வெக்கையினால் அவரது சரீரம் கருப்பு நிறமாய்விட்டது. அதனால் அவர் நீலமேகம்போன்ற திருமேனி யுள்ளவர் என்று வர்ணிக்கப்படுகிறார். உடனே பரமகருணாநிதி யான பரமசிவனை தேவர்கள் சரண்புக, அவர் அந்தக்காலகூட (கருப்பான) விஷத்தைத் தனது கையினால் பிடித்தெடுத்து வாயில்போட்டுத் தொண்டையில் அமிழ்த்தி வைத்துக்கொண்டார். அதனால் அவர் கழுத்து நீலவர்ணமாகித் திருநீலகண்டர் என்று பக்த ஜனங்களால் வர்ணிக்கப்படுகிறார்.

சிவாநந்த லஹரி முப்பத்தொன்று, முப்பத்திரண்டாம் சுலோ கங்களில் "ஓ பசுபதியே! உலகங்களை வாட்டுகிற பயங்கரமான காலகூடவிஷத்தைப்பார்த்து தேவர்களெல்லாம் பயந்து அங் கங்கே ஓடும்பொழுது, அதைப் பிடித்து வாயில் போட்டுக்கொண்டு அதை உள்ளே விழுங்கிவிடாமலும், வெளியில் துப்பிவிடாமலும் தொண்டைக்குள் வைத்து அமிழ்த்திக்கொண்டிருக்கிறீரே. அப் படி ஏன் செய்தீர் என்றால்? 'அதை விழுங்கிவிட்டால் நமது வயிற்றில் உள்ள சராசர ஜந்துக்கள் நாசயாய்விடும்; துப்பிவிட் டால் வெளியில் உள்ள ஜந்துக்கள் நாசமாய்விடும்.' என்று ஆலோ சித்து ஸர்வப்பிராணிகளிடமும் கருணையின் பேரில் அவ்விதம் செய்திருக்கிறீர். நீர் மற்றவர்களால் செய்யமுடியாத பரம உப காரங்களை அவ்வப்போது ஜீவர்களின் நன்மையின்பொருட்டுச் செய்துகொண்டிருக்கிறீர் என்ற விஷயத்தையும் உமது இணை யற்ற மகிமையையும் ஜனங்களுக்கு உணர்த்த இது ஒன்று போ தாதோ? எங்கும் நிறைந்தவரே! எல்லாமறிந்தவரே! ஓ பரம சிவனே! நான்குபக்கத்திலும் சுடர்விட்டு எரிகின்றதும் கண்களைப்

பரிக்கின்றதுமான காலகூடம் உம்மால் எப்படிப் பார்க்கப்பட்டது? அதைப்பிடித்து உள்ளங்கையில் வைத்துக்கொண்டீரோ; அது உமக்கு ஒரு நாவல்பழமோ? அதை நாக்கில் போட்டுக்கொண்டீரே; அது உமக்கு ஆரோக்கியத்தை யுண்டுபண்ணும் வித்தர்களின் மருந்துக் குளிகையோ? அதைக் கழுத்தில் தரித்துக் கொண்டீரே? அது உமக்கு ஆபரணமாகிய நீலரத்னமோ? சொல்லும்" என்று பரமசிவன் ஸ்துதிக்கப்படுகிறார்.

அவ்விதமான ஹாலாஹலம் உண்டானபிறகு கடைசியாகப் பாற்கடலிலிருந்து அமிருதம் உண்டாயிற்று. உடனே தேவர்களும் அஸுரர்களும் அதைத் தத்தமக்கு வேண்டுமென்று சண்டையிடலாயினர். உடனே மகாவிஷ்ணு, மோகினி என்ற ஸ்திரீ ரூபத்தை எடுத்துக்கொண்டு துஷ்டர்களான அஸுரர்களை மயக்கி, தன் வசமாக்கி அமிருத பாத்திரத்தைத் தன் கையில் வாங்கி வைத்துக் கொண்டார். பிறகு அவர், தான் எல்லோருக்கும் அளிப்பதாகச் சொல்லி தேவர்களையும், அஸுரர்களையும் தனித்தனி வரிசையாக உட்காரவைத்து முதலில் தேவர்கள் பந்தியில் கொஞ்சம் கொஞ்சமாகக் கையில் அமிருதம் முழுதும் படைத்துவிட்டு அஸுரர்களுக்கு அது இல்லாமலிருக்கும்படிச் செய்துவிட்டார்.

அந்த மோகினியின் ரூபத்தைப்பார்த்துப் பரமசிவன் இச்சிக்கவே அச்சமயத்தில் அவ்விருவர்களுக்கும் ஒரு குமாரன் பிறந்தான். அப்போது அவனுக்குப் பலவிதமான வரங்களைத் தாய் தந்தையர்கள் அளித்து "சாஸ்தா" என்ற திருநாமத்தையும் சூட்டினர். அதற்கு "உலகங்களை அடக்கியாளுகிறவன்" என்று பொருள். ஹரிக்கும் ஹரனுக்கும் சாஸ்தா பிறந்தவராகையால் அவருக்கு ஹரிஹரபுத்ரன் என்ற பெயரும் உண்டு. இவ்விதமாக தேவர்கள் அமிருதத்தைப் பானம் செய்ததால் பலம் அதிகமாகித் தங்களை அடிக்கடி காரணமின்றித் தொந்திரவு செய்கின்ற அஸுரர்

களை வெல்லப் போதுமான சக்தியுடையவரானார்கள். துஷ்ட அஸுரர்களை அடக்கவும் ஸாதுவான தேவர்களைக் காக்கவும் மகா விஷ்ணு ஆமையுருவமெடுத்ததால் இது கூர்மாவதாரமாகும்.

---

3. வராகாவதாரத்தைப் பற்றிய கதை:—பிறகு ஒரு காலத்தில் இந்த பூமி, ஸமுத்திர ஜலத்தில் அமிழ்ந்து முழுகிப் போய்விட்டது. அப்போது மஹா விஷ்ணு, வராக (பன்றி) த்தின் உருவமெடுத்து பாதாளம்சென்று இப்பூமியைத் தனது ஈற்றுப் பற்களில் தூக்கிவைத்துக் கொண்டுவந்து கரையேற்றினார், அப் பொழுது ஹிரண்யாக்ஷன் என்ற அஸுரன் "பிரம்மாவினால் படைக்கப்பட்ட இந்த பூமி எங்களுக்கே உரித்து ; அதை நீர் ஏன் திருடிக்கொண்டு போகிறீர்" என்று சொல்லிக்கொண்டு வராக ரூபியான பகவானிடம் சண்டை செய்யவந்தான். அவன் மிக வும் பலிஷ்டனாகையால் பகவான் அவனுடன் போர்புரிந்துப் போர்க்களத்தில் அவனை ஸம்ஹாரம் செய்துவிட்டார். பகவான் பாதாளம் செல்லுவதற்கேற்ப வராகத்தின் உருவம் எடுத்ததால் இது வராகாவதாரம் எனப்படும்.

---

4, நரஸிம்ஹாவதாரத்தைப்பற்றிய கதை:—வைகுண்டத் தில் துவாரபாலகர்களாக இருந்த ஜயன், விஜயன் என்ற இரு வர்கள், ஸநகர் முதலிய மகா யோகிகளின் சாபத்தால் ஹிரண் யாக்ஷன், ஹிரண்யகசிபு என்ற அஸுரர்களாக பூமியில் ஜனித்தார் கள். வராகரூபியான பகவான் ஹிரண்யாக்ஷனைக் கொன்றவுடன், அவனது தமையனான ஹிரண்யகசிபு என்ற மிகக் கொடியதன் மையுற்ற அஸுரவேந்தன், பகவானிடம் சமர் புரிய வந்தான். பகவான் அவனை வேறொரு ஸமயத்தில் ஸம்ஹரிக்கவேண்டு மென்று கருதி அவனது கண்களுக்குப் புலப்படாமல் மறைந்து

விட்டார். அதன்பிறகு அவன் மகாவிஷ்ணுவைக் காணமுடியா மல் அவரது பரம பக்தர்களான ஸாதுக்களைத் துன்புறுத்திக் கொண்டும், தர்ம மார்க்கங்களை அழித்துக்கொண்டு மிருந்தான். அத்துடன் உலகமனைத்தும் தன்வசமாக இருப்பதால் அவன் எல்லோரும் தன்னையே தெய்வமாகக் கொண்டாடவேண்டுமென்ற கடுமையான திட்டம் செய்துமிருந்தான்.

இப்படியிருக்க அவனுக்குப் பிறந்தப் பிரஹ்லாதன் என்ற பிள்ளை மாத்திரம், தனது முன்ஜன்மத்திய புண்ய வசத்தினால் ஐந்து வயதிலேயே மகாவிஷ்ணுவிடம் அபாரமான பக்தி செய்து கொண்டு, தன் தகப்பனது மூடத்தனமான ஏற்பாட்டிற்கு உடன் படாதவனாக இருந்தான். வித்யாரம்பத்தில் அஸுரகுருவாகிய சுக்ராசார்யரால் “ஹிரண்யாய நம:” என்று சொல்லிக்கொடுக்கப் பெறும்போது “நாராயணாய நம:” என்று அவனாகவே பூர்வஜன்ம வாஸனையின் பலத்தினால் சொல்லலுற்றான். அதை மாற்றுவதற்கு உபாத்தியாயரும், தகப்பனும், மற்றவர்களும் எவ்வளவோ முயற் சித்தனர். ஒன்றும் பயன்படாமற்போகவே கடைசியாக அவ் வஸுரன் “தனது சத்ருவின் நாமத்தைக் கூறுகின்ற பிள்ளை நமக்கு வேண்டாம்; அவனைக் கொன்றுவிடுவதுதான் சரியானது” என்று தீர்மானித்து அவன்செய்த மிகக்கொரேமான செயல்கள், நாவினால் கூறத்தக்கனவோ? காதுகளால் கேட்கத்தக் கனவோ? அந்தோ! மிகப் பரிதாபமானவை.

அவ்வஸுரன் அப்பிள்ளையை மலையின் உச்சியிலிருந்து கீழே உருட்டிவிடும்படி செய்தான். ஸர்ப்பங்களை அவன்பேரில்விட்டுக் கடிக்கும்படி செய்தான். யானைக் கால்களின் இடையில் அவனைப் போட்டு அவற்றால் மிதிக்கச் செய்தான். தனது பார்யையின் கையினால் விஷங்கலந்த வஸ்துக்களைக் கொடுத்துப் புசிக்கச் செய் தான். இம்மாதிரியான எவ்வளவோ கொடிய கார்யங்களைச்

செய்தும் அவை எல்லாம் பரமபக்த சிரோமணியாகிய அந்த பா
ளிடம் பகவானது அனுக்ரகத்தால் பலிக்காமற் போய்விட்ட
அவற்றுலெல்லாம் அச்சிறுவனுக்கு யாதொரு துன்பம் நேர்
வில்லை. மரணமும் உண்டாகவில்லை.

பிறகு தகப்பன் அடக்கமுடியாத கோபத்துடன் அ
பாலனைப்பார்த்து "அடா! மூடப்பயலே! நீ ஸதா சொல்
கொண்டிருக்கிற நாராயணன் எங்கே இருக்கிறான்? சொல்
என்று வினவினான். உடன் அந்த பாலன் "நாராயணன் தூணி
லிருப்பான். துரும்பிலுமிருப்பான். இங்குமிருப்பான் அங்
கிருப்பான். எங்குமிருப்பான்" என்றான். அதனைக்கேட்
ஹிரண்யகசிபு அடா! பயலே! நீ சொல்லுகிறவன் இந்தத் தூ
லிருக்கிறானா? சொல், என்று தன்முன்னிருந்த ஒரு தூணைக் கா
டினான். அதற்கு அப்பாலன் "ஆம், ஆம், அவன் இத்தூணி
லிருக்கிறான்" என்றான். உடனே அந்த துஷ்ட அஸுர
"அடா! பயலே! அவன் இத்தூணிலிருந்தால் வெளியேவர
டும்" என்று சொல்லிக்கொண்டே அத்தூணைத் தனது முஷ்டி
னல் ஓங்கிக் குத்தினான். அப்போது பக்த பராதீனனாகிய ப
வான் நாராயணன் "இனி நாம் சும்மாவிருக்கக்கூடாது, நம
பக்தனின் வாக்கை ஸபலப்படுத்தவேண்டும்" என்று நினைத்
உடல் எல்லாம் மனித உருவமாகவும், முகம் சிங்க உருவமாக
யிருக்கின்ற நரசிங்க உருவத்துடன் அத்தூணிலிருந்து அவதரி
தார். உடனே ஸ்ரீமந்நாராயணன் அவ்வஸுரனைத் தூக்கி, தன
துடைகளின் மேரில் வைத்துக்கொண்டு கூரிய நகங்களா
அவன் வயிற்றைக் கீறிப் பிளக்கவே அவன் உயிர் துறந்தான்.

அந்த அஸுரன் பிரம்மாவைப்பற்றித் தவஞ்செய்து அவரிட
மிருந்து மனிதர்கள், மிருகங்கள், ஆயுதங்கள் இவற்றாலும், பூமி
ஸ்வர்க்கம், பாதாளம் இவ்விடங்களிலும், பகல், ராத்திரி இவை

களிலும் தனக்கு மரணம் நேரிடக்கூடாது என்று வரம் பெற்றிருந்தான். அதைப் பொய்யாக்காமலிருப்பதன் பொருட்டு, நினைத்தமாத்திரத்தில் எல்லாவற்றையும் சிருஷ்டி செய்யவும் தன் இஷ்டப்படிக்கெல்லாம் உருவமெடுத்துக்கொள்ளவும் வல்லமையுள்ளவரான பகவான், மனிதனும் மிருகமுமில்லாமல் இரண்டும் சேர்ந்த நரசிங்க ரூபமாக அவதரித்தார். அவர் பகலும் ராத்திரியுமின்றி ஸாயங்காலத்தில், பூமி முதலிய இடங்களில் இன்றி துடையில் வைத்துக்கொண்டு, ஆயுதங்களாலின்றி நகங்களால் அவ்வஸுரனது வயிற்றை வகுத்து ஸம்ஹரித்தார்.

பகவானது உக்கிரமான ஸ்வரூபத்தைப் பக்கத்திலிருந்தவர்கள் பார்க்கமுடியாமல் அப்பிரஹ்லாதனையே அவர் ஸமீபம் சென்று ஸ்துதிசெய்யும்படி சொல்ல, பகவான் அவனது ஸ்தோத்திரத்தால் கோபத்தின் வேகம் தணிந்தவராய் உடனே மறைந்து விட்டார். அதனால் இந்த அவதாரத்திற்கு நரஸிம்ஹாவதாரம் என்ற பெயர் வந்தது.

---

5. **வாமனாவதாரத்தைப்பற்றிய கதை :**— ஒரு ஸமயத்தில் மகாபலி சக்ரவர்த்தி என்ற ஒரு அஸுரன் மிகுந்த பலம் வாய்ந்தவனாய் உலகத்திலுள்ளவர்களைத் தொந்தரவு செய்துகொண்டிருந்தான். அவன் செய்கின்ற உபத்திரவத்தைத் தாங்கமுடியாத தேவர்கள் மகா விஷ்ணுவினிடம் சென்று தங்கள் கஷ்டங்களைப் பற்றி முறையிட்டனர். பிறகு பகவான் அவர்கள் பிரார்த்தனைக்கிணங்கி மகா பலியை அடக்குவதற்காக கச்யபருக்கு அதிதிதேவியினிடம் பிள்ளையாகப் பிறந்து இந்திரனுக்குத் தம்பியாக இருந்தார். அதனால் அவர் உபேந்திரன் என்றும் ஆகிருதியில் மிகவும் குறியோனாக விருந்ததால் வாமனன் என்றும் அழைக்கப்பட்டார். அப்போது மகாபலி சக்ரவர்த்தி ஒரு

யாகம் செய்ய ஆரம்பித்தான். அவன் பரம துஷ்ட
தானம் செய்யும் விஷயத்தில் அளவு கடந்த ஆவலுள்ள
அது ஸம்பந்தமாகத் தான் சொல்லும் வாக்கை நிறை
திற் பின்வாங்காதவனாகவும், யாக ஸமயத்தில் வந்தவர்க
வஸ்துக்களைத் தடையின்றிக் கொடுப்பதாக ஸங்கல்பம் செ
வயிருந்தான். அப்போது வாமனராய் அவதரித்திருந்த
"இதுதான் ஸமயம்" என்று நினைத்து யாகத்தில் தீக்ஷ
வீற்றிருக்கும் மகா பலியினிடம் சென்று "எனக்கு
காலால் மூன்றடியளவுள்ள பூமிதானம் செய்யவேண்டு
யாசித்தார். பகவானின் கபட வேஷத்தைப்பற்றி ஸுக்
களும் அவனைச் சார்ந்தவர்களுமான சிலர் வாமனரின் ய
நிறைவேற்றக் கூடாதென்று தடுத்தும் அதை நிராகரித்து
"அப்படியே கொடுக்கிறேன்" என்று சொல்லி வாமனர்
கையில் கமண்டலத்தின் தீர்த்தத்தை எடுத்து விட்ட
போது அஸுர குருவாகிய சுக்ராசார்யர் சிறு உருவத்
துக்கொண்டு கமண்டலத்திலுள்ள தீர்த்தம் அவ்வாமன
விழவொட்டாமல் அதன் சிறு துவாரத்தை அடைத்து
டார். அப்போது வாமனர் ஒருதர்ப்பப்புல்லை எடுத்துக் க
தின் வாய் திறக்கும்படியாகக் குத்தவே சுக்ராசார்ய
கண்ணில் பட்டு அது பொட்டையாய்விட்டது. பிறகு அ
தானத்தைத் தடுப்பதில் தளர்ந்தவராகி வெளிவந்துவிட

உடனே வாமனர் கையில் தீர்த்தம்விழவே அவர்
விராட்ஸ்வரூபத்தை எடுத்துக்கொண்டு அந்த உருவத்தி
அடியால் பூமியையும் மற்றொரு அடியால் ஸ்வ
யும் அளந்து பின்னொரு அடிக்கு இடமெங்கே என்று
யினிடம் கேட்டார். அவன் தனது சிரஸில் அவரது
வைத்து மூன்றும் அடியை அளந்து கொள்ளவேண்
சொன்னான். பிறகு பகவான் தனது பாதத்தை அவன்

பேரில் வைத்து அளக்கும்போது அவனைப்பாதாளத்தில் அமிழ்த்தி னார். பிறகு அவன் பகவானின் பாதஸ்பர்சம் சிரசில் பட்டமாத்தி ரத்தில் மகாஜ்ஞானியாகவும், பகவத் பக்தனாகவும் ஆய்விட்டான்.

உடனே பகவான் உனக்கு வேண்டிய வரங்கள்யாவை? என்று கேட்க அவன் தனக்குச் சிரஞ்சீவிப்பட்டம் வேண்டுமென் றும், தாங்கள் எப்போதும் எனது ஸமீபத்திலிருந்து அநுக்ரகம் செய்துகொண்டிருப்பதாக எனக்குத் தோன்றிக்கொண்டிருக்க வேண்டுமென்றும், தனக்கு ஜ்ஞானோதயமான தினத்தை உலகத் தார் யாவரும் பிரதிவர்ஷங்களிலும் ஜ்ஞானச்சுடர்போன்ற தீபங் களைவைத்து உத்ஸவமாகக் கொண்டாடுகிறவர்களுக்கும் மோக்ஷத் தைக் கொடுக்கவேண்டுமென்றும் பகவானிடம் பிரார்த்தித்தான்.

பக்தபரவசனான பகவான் அப்படியே அவனுக்கு அருள் புரிந்தார். அன்றையதினந்தான் ஜனங்களால் திருக்கார்த்திகை உத்ஸவம் கொண்டாடப்படுகிறது. பகவான் மூன்று அடிகளால் உலகங்களை அளந்தபடியினால் அது திருவிக்ரமாவதாரம் என்றும் குள்ளனாகவிருந்ததால் வாமனாவதாரம் என்றும் கூறப்படுகிறது.

---

6. பரசுராமாவதாரத்தைப்பற்றிய கதை:— ஒரு ஸம யத்தில் பகவான் மகாவிஷ்ணு இப்பூவுலகத்தில் ஜமதக்னி என்ற மகர்ஷிக்குப்பிள்ளையாக அவரது பத்தினியாகிய ரேணுகா தேவி யினிடம் அவதரித்தார். அப்போது அவர் அழகாகவிருந்ததால் ராமர் என்றும் "பரசு" என்ற கோடரியை ஆயுதமாகத் தரித்துக் கொண்டிருந்ததால் பரசுராமர் என்றும் அழைக்கப்பட்டார். அக் காலத்தில் கார்த்தவீர்ய அர்ஜுனன் என்ற அஸுராம்சமுள்ள ஒரு சக்ரவர்த்தி இருந்தான். அவன் தபசின் மகிமையினால் ஆயிரம் கைகளைப்பெற்று அதிபராக்ரமசாலியாக உலகில் விளங்கிவந்தான்.

அவன் ஒருகாலத்தில் ஜமதக்னி மகர்ஷியினிடம், ஹோமம்செய
வேண்டிய நெய் முதலியவற்றிற்கு ஸாதகமாயிருந்த ஒரு கா
தேனுவைத் தனக்கு வேண்டுமென்று விரும்ப அவர் அதனை
கொடுக்க ஸம்மதிக்காமல் மறுதளித்தார். அப்போது அவ்வரச
அதனைப் பலாத்காரமாய்க் கொண்டுபோய்விட்டான். பிறகு அவ
அக்காமதேனுவை அபகரித்துக் கொண்டுபோன விஷயத்தை
வெளியிற்போயிருந்த பரசுராமர் தனது கிரகம் வந்து கேள்
புற்றவுடன், அவர் பிதாவினிடமும் அந்தக் காமதேனுவினி
டமும் மிகுந்த பக்தியுள்ளவராகையால் அளவற்ற கோபங்கொண்
கார்த்தவீர்ய அர்ஜுனனிடம் சென்று, யுத்தம்செய்து அவனை
கொன்று அதை மீட்டுக்கொண்டு வந்தார். இந்த ஸங்கதி தெரி
கார்த்த வீர்ய அர்ஜுனனது புத்ரர்கள் பரசுராமர் வெளியிற்போ
யிருக்கும் ஸமயம்பார்த்து அவரது தகப்பனாகிய ஜமதக்னிமஹர்
யிருக்குமிடம் சென்று அவரைக் கொன்றுவிட்டுப் போய்விட்டா
கள். பிறகு தனது கிரகம் வந்த பரசுராமர், அந்த விஷய
தெரிந்து கடுஞ்சினமுற்றுபரமதுஷ்டர்களான கார்த்தவீர்யார்ஜு
னது புத்ரர்களைக் கொன்றதுமாத்திரமல்ல, அவர்களைப்போன்
துஷ்ட க்ஷத்திரியர்களையும் இருபத்தொருதடவை வதம் செய்தா
இப்படி யுத்தக்களத்தில் மாண்ட க்ஷத்திரியர்களின் இரத்தத்தை
ஐந்து மடுக்களாகத் தேக்கி அவற்றில் மூன்று வேளைகளிலும் ஸ்ந
கம்செய்து பிதுருக்களுக்குத் தர்ப்பணம் முதலியவற்றைச் செய்து
தனது வைரத்தைப் போக்கிக்கொண்டதுடன் பூமியின் பாரத்தை
யும் குறைத்தனர். இக்கதை பாரதத்தில் விஸ்தாரமாயிருக்கிறது
இது பரசுராமாவதாரம் எனப்படும். முற்கூறிய அவதாரங்களெ
லாம் கிருதயுகத்தில் நடைபெறலாயின.

---

7. இராமாவதாரத்தைப்பற்றிய கதை:—பிறகு திரேத
யுகத்தில் இராவணன் என்ற ஒரு ராக்ஷஸன் தேவர்களையும், பூலே

கத்திலுள்ள மகிர்ஷிகளேயும் பீடித்துக்கொண்டு, உலகில் தர்மகார்யங்கள் நடைபெருதவண்ணம் பலவித இடையூறுகளேச் செய்து ஸாதுக்கள் துன்புறும்படியாக இலங்காபட்டணத்தில் அரசாண்டு வந்தான். அப்போது வைகுண்டபதியாகிய நாராயணன் பூவுலகில் அயோத்தியில் செங்கோல் செலுத்திய தசரத சக்ரவர்த்திக்குக் குமாரனுகப்பிறந்து ராமன் என்ற திருநாமம்பூண்டு இலக்ஷ்மியின் அம்சமாகிய ஸீதாதேவியை விவாகம் செய்துகொண்டு அயோத்தியில் வஸித்துவந்தார். பிறகு பிதாவின் வாக்யத்தைப் பரிபாலனம் செய்வதற்காகக் காட்டிற்குச் சென்ருர். அவர் ஸீதையைமாத்திரம் பத்னியாக உடையவராயிருந்து ஏக பத்னி விரதத்தை உலகில் ஸ்தாபித்தார். அவர் வனவாஸம் செய்யும்போது, தமயனுகிய வாலியால் அநீதியாகத் துரத்தப்பட்டு ரிச்யமூக பர்வதத்தில் வஸித்துவந்த ஸுக்ரீவனே, மித்திரனுக அங்கீகரித்து வாலியை அடக்குவதாக ஒப்புக்கொண்டதால் பலவீனர்களே பலசாலிகள் காப்பாற்றவேண்டுமென்பதும், வாலியைக் கொன்று ஸுக்ரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்துவைத்ததால் மித்திரன் கார்யத்தை ஸாதித்துக் கொடுக்க வேண்டுமென்பதும், தன்னிடம் சரண் புகுந்த இராவணன் தம்பியாகிய விபீஷணருக்கு அபயதானம் செய்து அவரை ரக்ஷித்ததால் பகைவனுயினும், அவனேச்சார்ந்தவனுயினும் சரணமடைந்தவனே கைவிடக் கூடாதென்பதுமான தர்மங்களே நிருபித்துக்காட்டினர். பின்னும் காட்டில் ஸீதையை அபகரித்துக்கொண்டுபோன ராவணன், யுத்தக்களத்தில் அவனுக்கு உதவியாகவந்த அவன் தம்பியாகிய கும்பகர்ணன், அவர்களேச் சார்ந்த துஷ்ட ராக்ஷஸர்கள் இவர்களே வதம்செய்ததால் பெரிய துஷ்டர்களுக்கும் ஒரு ஸமயம் தோல்வி நேரிடுமென்றும், பலமான யுத்தம்செய்து ஸீதாதேவியை மீட்டுக்கொண்டதால் ஆரம்பித்த கார்யத்தில் உத்தேசித்த பலன் கிட்டும்வரை ஒவ்வொருவரும் முயற்சிக்க வேண்டுமென்றும் உலகத்தினர்கட்கு உணர்த்தினர்.

இவ்விதம் அனேகவிதமான தர்மங்களைத் தானே நடத்திக்கா
உலகத்தில் தர்ம ஸ்தாபனம் செய்தார். ராமர் என்பதற்கு
கிறவர் என்றும் ஸந்தோஷப்படுத்துகிறவர் என்றும் யோகி
மனம் ரமிக்கும்படியாக இருக்கிறவர் என்றும் பொருள்படுத்
பட்டிருக்கிறது. இது ராமாவதாரம் எனப்படும். இக்கதை
இராமாயணம் விஸ்தாரமாகக் கூறுகிறது.

---

8. பலராமாவதாரத்தைப்பற்றிய கதை :— பிறகு
ராமர் துவாபரயுகத்தில் விஷ்ணுவினது அம்சமும் ஆதிசேஷனை
அம்சமும் பெற்றவராக அவதரித்தார். ராமாவதாரத்தில் ஆ
இலக்ஷ்மணன் என்ற தம்பியாக அவதரித்து தமயனுக்குச் செய்த
புள்ள இணையற்ற கைங்கர்யத்தினால் பகவான் இனிச் செய்
புகும் கிருஷ்ணவதாரத்தில் அவரை தமயனாக அவதரிக்கச்செய்
உபசரிக்கவேண்டுமென்று கருதினர். பலராமர் தேவகியம்மா
கர்ப்பத்தில் வஸிக்கும்போதே பகவான் தனது மாயாசக்தியின
அவரை ஆகர்ஷித்து கோகுலத்திலுள்ள ரோஹிணியம்மாள்
பத்திற் கொண்டுபோய்ச் சேர்ப்பித்தார். அன்றேல் தேவகியி
குழந்தையினால் மரணம் நேரிடப்போவதாகத் தெரிந்து பயந்
கொண்டிருக்கும் அவளது தமயனாகிய கம்ஸன், தனது பிரதி
ஞைப்படி அவரையும் கொன்றிருப்பான். ரோஹிணி என்பா
தேவகியின் பர்த்தாவாகிய வஸுதேவரது முந்திய பத்னி. அவள்
கம்ஸனிடம் பயமுற்ற வஸுதேவரால் கோகுலத்திலுள்ள தனது
நண்பனாகிய நந்தகோபரது ஸம்ரக்ஷணையில் வைக்கப்பெற்றிரு
பவள். பலராமர் ஸமீபத்திலிருப்பதே கிருஷ்ணனுக்கு ஒரு சிறந்
பலமாக ஏற்படப்போவதாலும் அழகு மிகுந்தவராயிருப்பதாலு
அவருக்கு அப்பெயர் வந்தது. அவருக்கு ஹலம் (கலப்பை) முக்கி
ஆயுதமாகையால் ஹலாயுதர் என்றும் அவர் அழைக்கப்படுவார்
பலராமாவதாரமும் கிருஷ்ணவதாரமும் ஒன்றாக எடுத்துக்கொள்

வாருமுளர். அப்போது தசாவதாரங்களில் ஒன்று குறைவதுபற்றி அந்த ஸ்தானத்தில் புத்தாவதாரத்தை அவர் கூறுவர். புத்தர் வேதப் பிரமாணிகரல்லாததால் வைதிக மதத்தினர் புத்தரை தசாவதாரங்களிற் கொள்ளுவதில்லை.

---

9. கிருஷ்ணாவதாரத்தைப்பற்றிய கதை:- பலராமருக்குத் தம்பியாக மகா விஷ்ணுவானவர் வஸுதேவருக்கு தேவகியினிடம் பிள்ளையாக அவதரித்தார். அவருக்கு கிருஷ்ணன் என்ற திருநாமம் சூட்டப்பட்டது. கிருஷ்ணன் என்பதற்கு நீர்கொண்ட மேகம் போன்று கருத்த நிறமுள்ளவன் என்றும், பக்தர்களின் பாபங்களைப் போக்குகிறவன் என்றும் பொருள்படுகிறது. அவர் பூவுலகில் ஸகலமான பக்த ஜனங்களுக்கும் தர்மம் முதலிய புருஷார்த்தங்களைக் கொடுப்பதற்கும், துஷ்டர்களை நிக்ரஹம் செய்து பூமியின் பாரத்தைக் குறைப்பதற்கும் அவதரித்தவர். அவர் நம்மைப்போன்ற ஸாதாரண மனுஷ்யன்போலவே தோன்றிக்கொண்டிருந்தார். அவர் பூதனை, சகடாஸுரன், யமள அர்ஜுனர்கள், அரிஷ்டன், ப்ரலம்பன், தேனுகன், காளியன், கேசி, குவலயாபீடம், சாணூரன், முஷ்டிகன், தோஸலன், சிசுபாலன், கம்ஸன் முதலிய துஷ்டர்களைக் கொன்று அவ்வப்பொது ஸகல ஜனங்களுக்கும் ஆச்சர்யகரமான கார்யங்களைச் செய்து காண்பிவிக்கும்பொழுது அவர் தன்னை ஸாக்ஷாத் பரமாத்மாவாகிய நாராயணன் என்றே அடிக்கடி தோன்றச்செய்தார். பின்னும் அக்ரூரர், மாலாகாரர் முதலிய பக்வமான பக்தியுடையவர்களைத் தனது நிரதிசய ஸௌந்தர்ய ஸௌசீல்யாதி குணங்களில் ஈடுபட்ட பரம பாகவத சிகாமணிகளாகச் செய்தார். பின்னும் பாண்டவர்களின் யுத்தத்தைக் காரணமாக வைத்து அந்த ஸமயத்தில் ஸகல ஜனங்களும் உஜ்ஜீவிக்கும்படியான கர்மம், யோகம், பக்தி, ஞானம், வைராக்யம் முதலிய தாத்பர்யங்களைப் புகட்டி ஆத்ம தத்வத்தை யுணர்த்துகிற

"பகவத் கீதை" என்ற கிரந்தத்தை அர்ஜுனன் மூலமாக உபதேசித்து ஸர்வ ஸாது ஜனங்களையும் ஸந்தோஷப்படுத்தினர். இந்த அவதார சரித்திரம் பாகவதத்தில் விஸ்தாரமாயிருக்கிறது.

---

10. கல்கியவதாரத்தைப்பற்றிய கதை:— இனி கலியுகத்தின்முடிவில் பகவான் மகாவிஷ்ணு குதிரை வாகனத்துடன் கல்கி என்பவராக அவதரிப்பார். அவர் வேத சாஸ்திரங்களின் தத்வத்தை அறியாதவர்களும், தர்ம ஸூக்ஷ்மத்தை விசாரிக்காதவர்களும், வேதமார்க்கத்தை நிந்திக்கின்றவர்களும், ஒவ்வொருவரும் தங்களையே வித்வான்களாக நினைத்தவர்களும், அஸூயையுள்ளவர்களும், க்ரூரமான நடையுள்ளவர்களும், நன்றியறிவில்லாதவர்களுமாயிருக்கின்ற ஜனங்களை அழித்து முன்போல் தர்ம மார்க்கங்களை ஸ்தாபிக்கப்போகிருர். கல்கம் (பாபம்) நிறைந்த காலத்தில் அவதரிப்பவர் கல்கி எனப்படுவார்.



## ஏழாமதிகாரம்.

---

## அவதாரபலன்.

முன் சொன்ன பத்து அவதாரங்களும் மகாவிஷ்ணுவின் பூர்ணுவதாரங்கள். அவற்றைத்தவிர உலகநன்மையின்பொருட்டு ஈசன் அடிக்கடி ஆசார்யர்கள் உருவமாக அவதரித்த அநேக அம்சாவதாரங்களுமுள. முற்கூறிய அவதாரங்கள் ராமாயணம், பாரதம், பாகவதம் இவற்றில் விஸ்தாரமாகவும் மற்ற புராணங்களில் சுருக்கமாகவும் சொல்லப்பட்டிருக்கின்றன. இம்மாதிரியான அவதாரங்கள் ஜகத்தை அனுக்கிரஹிப்பதின் பொருட்டே எடுத்த

சரீர ரூபங்களாகையாலும், அபரிமித அனந்த மகிமையுடன் கூடி விளங்குகின்றவைகளாகையாலும், சுருதி, ஸ்மிருதி, முதலியவற்றிற் சொல்லப்பட்ட கர்ம, பக்தி, யோக, ஜ்ஞான மார்க்கங்களால் உபாஸிக்கத்தகுந்த உருவங்களாகையாலும், அவை உலகத்திலுள்ள ஸாதாரணப் பிராணிகளுக்கு ஸமானமானவை என்று நினையாமல் அவரவர் மனத்திற்கு இன்பமான அவதாரத்தின் ஸ்வரூபத்தை ஆராதித்துத் தியானித்து பகவத்கிருபையைப்பெற வேண்டும். அக்னி பிராணிகளைக் கொளுத்தினபோதிலும் அவன் பாவஞ்செய்கிறவன் என்று தள்ளப்படுகிறதில்லை. அவன் வீடு முதலியவற்றை எரித்தபோதிலும் சத்ரு என்று விரோதிக்கப்படுகிறதில்லை. சமையல் முதலிய காரியங்களுக்கு உபகாரம் செய்தபோதிலும் சிநேகிதன் என்று தழுவிக்கொள்ளப் படுகிறதில்லை. இருட்டைப் போக்கினபோதிலும் குருவென்று வணங்கப்படுகிறதில்லை. அசுத்தமான வஸ்துக்களைத் தொட்டபோதிலும் அசுத்தன் என்று விலக்கப்படுகிறதில்லை. இப்படியாக அக்னி தனது இயற்கையின்படி பல கார்யங்களைச் செய்வதில் சிலருக்கு நன்மையும் சிலருக்குத் தீமையும் ஏற்படுகிறது. அதற்கு அவரவர் அதிருஷ்டத்தைக் காரணமாகச் சொல்லவேண்டுமேயல்லாது தேஜோமயமான அக்னி அதற்குக் காரணமாக மாட்டான். அதுபோன்று பகவானும் அந்தந்தப் பிராணிகளின் கர்ம வசத்தினுல் அந்தந்த கார்யங்களைச் செய்து கொடுக்கின்றவராகிறார். அதனால் அவர் நம் அதிருஷ்டப்படி நமக்கு நற்கார்யங்களைச் செய்து கொடுப்பதால் புண்யமும், கெட்ட கார்யங்களைச் செய்துகொடுப்பதால் பாபமும் அவருக்குக் கொஞ்சங்கூட ஸம்பந்திக்கமாட்டாது.

பகவத்கீதையில் * “ஓ அர்ஜுனு! அநாதியான கர்மத்தைக் காரணமாக வைத்து இந்தப் பிராணிகளை நான் எனது பிரகிருதியைக்கொண்டு அடிக்கடி ஸ்ருஷ்டித்து வருகிறேன். ஆகையால் இவ்வுலகம் முழுதும் என் பிரகிருதிக்கு உட்பட்டு அக்கர்மத்தின் வசப்படி நடந்து கொண்டிருக்கிறது. அது தன்னிச்சைப்படி இருக்கமுடியாது. அதனுல் எனக்கு யாதொரு புண்ய பாப கர்மங்களும் கிடையா. அக்கர்மங்கள் என்னைக் கட்டுப்படுத்த மாட்டா. எனக்கு முன் ஜன்மத்திய கர்மங்களின் வாஸனையும் கிடையாது. கர்மங்களின் பலன்களைப் பெறவேண்டுமென்ற விருப்பமும் கிடையாது. எனது உண்மை ஸ்வரூபமாகிய ஈசுவரத் தன்மையின் யதார்த்தத்தை அறியாதவர்கள் மானிட சரீரத்தை எடுத்துக் கொண்டிருக்கிற என்னை ஸாமாண்யமாக நினைத்து அலக்ஷ்யம் செய்வார்கள். மனத்தில் வாஸ்தவமான அறிவை உண்டுபண்ணுமல் பொய்யறிவாகிய மோகத்தை உண்டுபண்ணக்கூடிய ராக்ஷஸப் பிரகிருதியையும் அஸுரப் பிரகிருதியையும் அடைந்தவர்கள் மாத்திரம், பிரயோஜனமில்லாத ஆசை, செயல், அறிவு இவற்றுடன் கூடினவர்களாய் இருந்துகொண்டு என்னை அலக்ஷ்யம் செய்கின்றுர்கள். ஆனுல் தேவப் பிரகிருதியை யடைந்தவர்களான மகான்களோ எனது அழிவற்ற நிலைமையை அறிந்து எப்பொழுதும் என்னை அன்ய சிந்தையில்லாமல் பஜிக்கின்றுர்கள்” என்று கிருஷ்ண பகவானே தனது ஸ்வரூபத்தை உபதேசித்திருக்கிறுர்.

---

* அத். 9. சுலோ. 8—13.

சரீரமில்லாமல் இருக்கிற கடவுள் ஆகாசம்போன்று எங்கும் பரவினதாக இருப்பதால் நம்மால் தியானம் செய்ய முடியாதென்று உபாஸகர்களான நமது சக்திக் குற்றவாறு சிவன், விஷ்ணு முதலிய தேவதைகளின் உருவமாகவும் மனப்பற்றுக்குற்றவாறு ராமன், கிருஷ்ணன் முதலிய அவதாரங்களின் உருவமாகவும் பல சரீரங்களுடன் கூடியிருக்கிறார். அற்ப புத்தியையுடையவர்களான நாம் அவற்றை நேரில் பார்க்க முடியாதாகையால் சிலை, மரம், பஞ்ச உலோகங்கள் இவற்றால் சாஸ்திரங்களில் கூறிய அந்தந்த தேவதைகளின் சின்னங்களுடன் விக்கிரகங்களையுண்டுபண்ணிக்கொண்டு அவற்றில் தேவதைகளின் ஸ்வரூபத்தைத் தியானித்து மந்த்ரங்களினால் ஆவாகனம் செய்துப் பிராணப் பிரதிஷ்டை செய்யும்போது அந்த ஸ்வரூபம் அவற்றில் ஸான்னித்யமாய்த் தோன்றி நின்று உபாஸகர்களின் கோரிக்கைகளைப் பூர்த்திசெய்கின்றது என்ற விஷயம் பொதுவாய் எல்லா சாஸ்திரங்களிலும், ப்ரத்யேகமாய் ஆகம சாஸ்திரங்களிலும் வற்புறுத்திக் கூறப்படுகிறது. இதுவே விக்ரகாராதனம் எனப்படும். இதைப் பற்றி இதன் இரண்டாம் தொகுதியில் விரிவாய் நிரூபிக்கப்பெறும். * "வேண்டுவார் வேண்டும் வகைதான் விரிந்தெங்கும் காண்டற்கரிதாம் சிவம்" என்ற ஔவை குறள் அவரவர் மனப்பான்மைக் குற்றவாறு பகவான் தோன்றி நிற்பர் என்பதை உணர்த்துகிறது. இவ்விதம் பகவான் செய்துகாட்டிய தர்மங்களை ஜீவர்கள் பின்பற்ற வேண்டும்.

---

* அதி 12. குறள் 10. எங்கும் விரிந்ததும் காண்பதற்கு அரிதாகவுமிருக்கின்ற சிவ ஸ்வரூபம், வேண்டுகிறவர்கள் வேண்டும் வகைக்குத் தக்கபடித் தோன்றிநிற்கும் என்று பொருள்.

அவற்றில் முக்யமானவை இதன்பின் பாகத்தில் கூறப்படும்.

---

11. அவதார பல்லைப்பற்றிய கதை :— சுமார் நூறு ஆண்டுகளுக்கு முன் சோழநாட்டில் திருவையாறு என்ற க்ஷேத்திரத்தில் "தியாகய்யர்" என்ற ஒரு அந்தணர் ராமபக்த சிரோமணியாகவிருந்தார். அவர் ஸம்ஸ்கிருதம், ஆந்திரம் (தெலுங்கு) என்ற பாஷைகளில் மிகப் புலமை வாய்ந்தவர். அவர் நாதப்பிரம்மத்தினிடம் மனம் லயித்து ஸ்ரீராமபிரானைப்பற்றிப் பாடியுள்ள கீர்த்தனங்களது ஒவ்வொரு அக்ஷரத்தினின்று பெருகும் ராமாமிருதம், தேவாமிருதத்தையும் தெவிட்டச்செய்யும் திறன்படைத்துள்ளது. பால்ய முதலே பல்கோடி ராமநாம ஜபம்செய்து அவர் ஸ்ரீராம பகவானிடம் கொண்டுள்ள பரமபக்தியைப் பார்த்த பெரியார், ஆஞ்ஜநேயர் (ஹநுமார்) அவதாரமென்றே அவரைக் கூறுவர். ஒருகால் தஞ்சைமாநகர் வேந்தன் அவரை தர்சனம் செய்ய அவரிருப்பிடத்திற்கு வலியவந்து அவரை வணங்கி நின்று "அடியேனிடம் தாங்கள் வேண்டுவதென்ன?" என்று வினவினன். அவர் "எனது சாயங்காலத்திய அநுஷ்டானத்திற்குத் தடையின்றித் தமதிருப்பிடம் திரும்பிச் செல்லவேண்டியதே, யான் தம்மிடம் வேண்டுவது" என்ற பதிலளித்து "துறவிக்கு வேந்தன் துரும்பு" என்பதை உணர்த்தினர். பிறகொருஸமயம் ஸ்ரீராமபிரான் அவர் நெடுநாளாகக் கோரும் பிரார்த்தனையை நிறைவேற்ற ஸீதா, லக்ஷ்மண, பரத, சத்ருக்ன, ஹநுமத் ஸமேதராய் அவருக்கும் அவரது பத்னிக்கும் காட்சி தந்தருளினார். கடைசியாக அவர் ஸந்யாஸமுற்று ஸ்ரீராம பிரம்மஸாயுஜ்யம் பெற்றார். அவரது ஸமாதி ஸ்தலத்தில் "தியாகராஜ ஸ்வாமி உத்ஸவம்" என்று இப்போதும் பக்தஜனங்கள் வருஷந்தோறும் திருவிழா மிகச்சிறப்பாய்க் கொண்டாடி வருகின்றனர். பக்தன் கோரியவண்ணமே பகவான் தர்சனமளிப்பார் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.





உ

கடவுள் துணை.

# வேதாகம தர்ம வித்யா

அல்லது

# ஹிந்துமத தர்ம விளக்கம்.



## முதல் தொகுதி.



## இரண்டாம் பாகம்.



### முதல் அதிகாரம்.



### தர்மம்.



தர்மம் என்பது நமது ஆத்மாவைத் தாழவிடாமல் தாங்கிக்கொண்டிருக்கிறது என்ற பொருளில் அடங்கியிருப்பதாக முதற்பாகத்தில் கூறப்பட்டுள்ளது. அது கர்மம், கடமை, கடன், அறன், ஒழுக்கம், வழக்கு, சட்டம், திட்டம், நடை, ஆசாரம், விதி, முறை, நெறி, நியாயம், நீதி, வகை, வழி என்ற பல சொற்களால் பொதுவாக வழங்கப்படும். ஆயினும் முற்கூறிய சொற்

கள் சிலவிடங்களில் ஸந்தர்ப்பத்திற்கேற்ப பொருள் சிறிது வேற்றுமையுற்றும் காணப்பெறும். மனிதர்கள் தம் ஸம்பந்தமாகவும், பிறர் ஸம்பந்தமாகவும் நேர்மையுடன் ஒழுகவேண்டிய ஆசாரணைகளை அது காண்பிவிக்கின்றது. அது உலகப் பற்றுகியப் பிரவிர்த்தி மார்க்கத்திலும், அந்தப்பற்றை ஒழிப்பதற்கு ஸாதகமாக இருக்கின்ற நிவிர்த்தி மார்க்கத்திலும் மனிதர்கள் இருந்துகொண்டு அனுஷ்டிக்க வேண்டுவது. ஆதலால் அது ப்ரவிர்த்தி தர்மம், நிவிர்த்தி தர்மம் என்று இருவகைப்படும். அவற்றிற்கு முறையே உலக தர்மம், மோக்ஷ தர்மம் என்றும் கர்ம யோகம், ஜ்ஞான யோகம் என்றும் பெயர்கள் வழங்கப்பெறுவன.



## இரண்டாம் அதிகாரம்.

---

## ப்ரவிர்த்தி தர்மம்.

ப்ரவிர்த்தி தர்மம் அறம், பொருள், இன்பம் என்ற மூன்று புருஷார்த்தங்களுக்கு ஸாதனமாகவும், நிவிர்த்தி தர்மம் வீடாகிய மோக்ஷத்திற்கு ஸாதனமாகவும் இருக்கின்றன. நிவிர்த்தி தர்மம் மூளைத்து விகஸிப்பதற்கு பிரவிர்த்தி தர்மம் வித்தாக இருக்கிறது. ஆதலால் அது இங்கு விவரிக்கப்படுகிறது. அதன் விகாஸமாகவிருக்கின்ற நிவிர்த்தி தர்மம் இதன் இரண்டாம் தொகுதியில் விவரிக்கப்படும். ப்ரவிருத்தி தர்மம் ஸாதாரண தர்மம், விசேஷ தர்மம், உத்தேச தர்மம் என்று மூவகைப்படும். அவற்றை

பொது தர்மம், தனித்த தர்மம், குறித்த தர்மம் என்றும் சொல்லலாம். அவற்றுள் ஸாதாரண விசேஷ தர்மங்கள் இந்தப் பாகத்தில் நிரூபிக்கப்பெறுவன.

## மூன்றாம் அதிகாரம்.

### ஸாதாரண தர்மம்.

உலகத்திலுள்ள ஸ்திரீகள், புருஷர்கள் ஆகிய எல்லோரும் பொதுவாய் அனுஷ்டிக்க வேண்டிய தர்மம், ஸாதாரண தர்மம் எனப்படும். அது 1. நற்பழக்கம் பற்றியது 2. கல்வியைப் பற்றியது 3. கடமையைப் பற்றியது 4. ஒழுக்கம் பற்றியது 5. அன்பைப் பற்றியது 6. முன்னேற்றம் பற்றியது என்று அறுவகைப்படும். சாஸ்திரத்தில் விதித்தனவெல்லாம் தர்மமாகவும், விலக்கினவெல்லாம் அதர்மமாகவும் இருப்பதால் அதர்மத்தை நீக்கவும் தர்மத்தை ஏற்கவும் தர்மம், அதர்மம் ஆகிய இரண்டும் தெரிய வேண்டுவன. தர்மத்தைக்கூறி விதிப்பன விதி வாக்யங்கள் என்றும், அதர்மத்தைக் கூறி விலக்குவன நிஷேத வாக்யங்கள் என்றும் கூறப்படுவன. அவை வேத, ஆகம, தர்ம, நீதி முதலிய சாஸ்திரங்களில் ஆங்காங்கு விரிவாகக் கூறப்பட்டிருப்பினும் அவற்றுள் முக்யமான சில வாக்யங்களைமாத்திரம் திரட்டி இதன்கீழ் விவரிப்பாம்.

## நற்பழக்கம் பற்றிய தர்மம்.

1. ஸூர்யன் உதிப்பதற்கு முன் எழுந்திரு. * (வைகறைத் துயிலெழு) 2. எழுந்து பகவானைத் தியானி. 3. பகவத் குணங்களை சிந்தனை செய். 4. பகவானது திருநாமங்களையும் ஸ்தோத்ரங்களையும் கீர்த்தனஞ் செய். 5. ஜன ஸஞ்சாரமில்லாத காலியான இடத்திற்போய் மலத்தைக் கழித்துக்கொள். 6. ஆறு, குளம், ஏரி, கிணறு முதலிய நீர் நிலைகளிலுள்ள பொது ஜன உபயோகமான ஆரோக்யம் பயக்கும் தண்ணீரை அசுத்தப்படுத்தாதே. 7. விடியற்காலத்தில் ஸ்நாநம் செய். 8. அழுக்குத் துணிகளைக் களைந்து விடு. 9. சுத்தமானி வஸ்திரங்களைக் கட்டிக்கொள். 10. தினந்தோறும் தவராமல் ஸந்திகாலங்களில் ஈசுவரனது உபாஸனை செய். 11. தினந்தோறும் பெற்றோர்களை வணங்கு. 12 அவர்களுக்கு ஸம்மதமான வழியே நட. 13. அவர்கள் உத்திரவை ஒருபோதும் கடவாதே. 14. அவர்களைத் தெய்வமாக நினை. ‡ (அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்) 15. அவர்கள் உன்னைப்பற்றி நினைப்பதும் சொல்லுவதும் செய்வதும் உனக்குநன்மையாகவே இருக்குமென்று நினை. 16. அசுத்தமாயிருந்து ஜபம் செய்தல், சாப்பிடுதல் முதலியவற்றைச் செய்யாதே. 17. சாப்பிடும்போது பந்தியில் பேதம் செய்யாதே. 18 பழம், கிழங்கு முதலியவற்றைத் தவிர

---

* ஔவை ஆத்திசூடி. ஸூத்திரம் 106 விடியற்காலத்திலேயே நித்திரைவிட்டு எழுந்திரு என்று பொருள்.

‡ ஔவை கொன்றைவேந்தன். ஸூத். 1: தாயும் தகப்பனும் முதலில் அறியப்படும் தெய்வம் ஆவர் எ-ள்.

மற்ற பழைய ஆகாரங்களைப் புசிக்காதே. 19. பகலில் தூங்காமலும் இரவில் அதிகநேரம் விழித்துக்கொண்டிரா மலும் தூங்கப் போகுமுன் நல்ல எண்ணங்களுடனும் இரு. 20. ஒருபோதும் சூதாடாதே. 21. கள்குடியாதே. 22. மயக்க வஸ்துக்களை உண்ணுதே. 23. கெட்ட பழக் கங்கள் வழக்கமாய்விடின் அறிவுவந்தபின்னரும் அவற்றை அகற்றுதல் கஷ்டமாய் முடியுமாதலால் இளமையிலேயே நற்காரியங்களில் பழக ஆரம்பித்துவிடு.

---

## திருஷ்டாந்தக் கதை.

1. நற்பழக்க தர்மம் பற்றிய கதை:— தஞ்சைமாநகர் வேந்தன் ஒருவன் தனது ஸபையிற் பல வித்வான்களைச் சேர்த்து வைத்திருந்தனன். கல்வியில் மிகப் புலமைவாய்ந்தவனுன "கங்கா தர வாஜபேயி" என்பான் வித்வான்களுக்கெல்லாம் தலைமை வகித்திருந்தான். ஒருநாள் அரசன் அவனுடன் ஸம்பாஷணை செய்துகொண்டிருக்கும்போது அவன் மயங்கித் தலை சுற்றிக் கீழே படுத்தான். உடன் வேந்தன் மிகவும் பயந்து திடுக்கிட்டு வேலைக்காரனைக்கொண்டு அவனை மெள்ள எழுப்பி உட்கார வைத் தான். அவன்பால் மிக்க அபிமானங்கொண்டிருக்கும் அரசனிடம் அவனது தீயவழக்கத்தை முன்னமே நன்குணர்ந்தவர்களான மற்ற வித்வான்கள் அதனை அப்போதும் எடுத்துக்கூற பயந்து கொண்டிருந்தனர். அவர்களுள் தைர்யமுற்ற ஒரு வித்வான் "தக்க ஸமயம் வாய்த்தபோதும் தலைமை வித்வானிடமுள்ள குற்றத்தைத் தரணிபாலனிடம் தெரிவிக்காமலிருப்பது தப்பிதமாகும்" என்று தீர்மானித்து அச்சமயத்தில் வேந்தை நோக்கி சாதுர்யமாக ஸம்ஸ் கிருதத்தில் கீழ்வருமாறு ஒரு சுலோகம் சொன்னான். "கங்கா

பாயீஜஹ்நு:, ஸாகரபாயீது கும்பஸம்பூத: ; கங்காஸாகரபாயீ கங்காதரவாஜபேய்யேஷ:. (இதன் பொருள்) முன் ஒருகால் ஜஹ்நு என்ற முனிவர் கங்கையை மாத்திரம் பானம் செய்தார். குடத்திலுண்டான அகஸ்தியமாமுனிவர் ஸாகர (ஸமுத்ர) த்தை மாத்திரம் பானம் செய்தார். இப்போது இங்கு ஸபையில் வீற்றிருக்கும் கங்காதர வாஜபேயி என்ற பெரியாரோ! கங்காஸாகரத்தைப் பானம் செய்துகொண்டிருக்கும் வல்லமை பொருந்தியவர் என்பது. இங்கு கங்காஸாகரபாயீ என்பதற்கு கங்கையையும் ஸாகரத்தையும் சேர்த்துப் பானம் செய்கிறவர் என்ற வெளிப்படையான பொருளிருப்பினும் கங்காஸாகர என்ற பதத்திற்கு "கள்" என்ற உட்பொருள் ஒன்று இருப்பதால் "இவர் தினமும் கள் குடிப்பவர்" என்ற பொருளை அந்த வித்வான் அரசனுக்கு இருபொருள் சொல்லணிவகையால் உணர்த்தினன். அரசன் ஸம்ஸ்கிருத பாஷையில் மிகவும் தேர்ந்தவனாகையால், கங்கை தித்திப்பும் ஸாகரம் உப்புமாகவிருப்பது பற்றி தித்திப்பும் உப்புங் கலந்த கள்ளிற்கு கங்காஸாகரமென்ற பெயர் ஏற்பட்டிருக்கும் நுட்பத்தை அறிந்துகொண்டான். தலைமை வித்வானது உள்ளத்தில் உட்பொருள் பட்டபோதிலும் ராஜஸபையில் அகஸ்மாத்தாக அவனுக்கு நேர்ந்ததாயுள்ள அவமானமே, அவனது தீயசெயலிற்கு ஸாக்ஷயம் கூறிவிட்டபடியால், அதனை மறுக்க வொண்ணாதவனாய் அவன் மௌனமாக விருந்தான். அந்த க்ஷணமே அவனை அரசன் ஸபையினின்றும் நீக்கி அவனது இழிய தொழிலினை ஸூக்ஷ்மமாகவும் இனிதாகவு முணர்த்திய வித்வானையே அதுமுதல் தலைமையாக வைத்துக்கொண்டனன். கெட்ட பழக்கங்களுள் முதன்மையான கள் குடி என்ற கொடிய பழக்கத்தை பால்யமுதலே அவ்வித்வான் எப்படியோ கைக்கொண்டுவிட்டான். பிறகு அதுவே வழக்கமாய்விட்டபடியால் கல்வியிலும் வயதிலும் முதிர்ச்சி பெற்றவனாயிருந்தும் அவன் அது ஒரு தீயவழக்கமென்று தெரிந்திருந்தும்

அதனைத் தவிர்க்கமுடியாதவனும் ஸபையில் அவமானப்பட்டதோடு தனது அரிய பெரிய உத்யோகத்தை யிழக்கும்படி நேர்ந்தது. சுலோகம்சொன்ன வித்வானுக்கு அந்த ஸ்தானம் கிடைத்ததற்கு அவனது நற்பழக்கமே காரணமாகும். ஆதலால் நற்பழக்கமோ தீய பழக்கமோ இளமையிற் பழகுவதுதான் என்றைக்கும் நிலை நிற்கு மென்பதை "தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்" என்ற பழமொழி உணர்த்துகிறது. ஆதலால் தீயபழக்கங்களை வெறுத்து நற்பழக்கங்களையே கைக்கொள்ளவேண்டுமென்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

---

## கல்வியைப்பற்றிய தர்மம்.

1. தினந்தோறும் கல்வியிலும் கேள்வியிலும் கவனமாகப் புத்தியைச் செலுத்தி அவற்றின்படி ஒழுகு. § (கற்கக் கசடற கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக) ‡ (நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கியவாயின ராதல் அரிது) 2. கல்வி கற்பிக்கின்ற குருக்களையும் மந்த்ரம் உபதேசிக்கின்ற குருக்களையும் அவமதியாதே. 3. அவர்களிடம் மரியாதையாக இரு. 4. பெரியோர்களிடம் வணக்கமாக இரு. † செயற்கரிய செய்வர் பெரியர்

---

§ அதி. 40, திருக்குறள் 1. ஒருவன் கற்கவேண்டிய நூல்களைக் குற்றமறக் கற்க வேண்டியவன். கற்கவேண்டுவனவற்றை முற்றும் கற்றபின் அதற்குத் தக்கபடி ஒழுகவேண்டியவன் எ-ள்.

‡ அதி. 42. திருக் 9. அறிவு பயக்கும் நூல்களின் நுட்பமான கேள்வியில்லாதவர் வணங்கின பேச்சுள்ளாராதல் முடியாது எ-ள்.

† அதி 3. திருக் 6. பெரியோர் செய்வதற்கு அரிதான காரியங்களையும் செய்து முடிப்பார்கள். சிறியவர் அவ்வித காரியங்களைச் செய்து முடிக்க மாட்டார்கள் எ-ள்.

சிறியர் செயற்கரிய செய்கலாதார்) 5. உன்னுடன் கல்வி கற்பவர்களிடம் பகைமை செய்துகொள்ளாதே. 6. கல்வி கற்க விரோதமான கார்யங்களில் புத்தியைச் செலுத் தாதே. 7. நற்கார்யங்களில் சோம்பலுறுமல் சுருசுருப்புள் ளவனுய் இரு. 8. நல்லொழுக்கத்தினின்றும் ஒருபோதும் வழுவாதே. § (ஒழுக்கம் விழுப்பந்தரலால் ஒழுக்கம் உயிரினும் ஓம்பப்படும்) 9. நல்லோரிணக்கத்தால் காலங் கடத்து. 10. பதட்டத்தை விட்டு விடு. 11. எப்போ தும் எவ்விஷயத்திலும் ஜாக்ரதையாக இரு. 12. கோள் சொல்லாதே. 13. அமங்களமான வார்த்தையைச் சொல் லாதே. 14. அருவசியமாக பிறர் குற்றம் கூறுமலிரு. 15. கலகத்தை யுண்டுபண்ணுதே. 16. ஒருவனேடும் அநாவசியமாய் விவாதம்செய்யாதே. 17. அநாவசியமாய் தற்புகழ்ச்சி செய்துகொள்ளாதே. 18. கல்வி கற்கவேண் டிய இளம் வயதிலுள்ள மிக்க அருமையான காலத்தை வீண் கடத்திப் பின் மனத்தினில் நொந்துகொள்ளாதே.

---

## திருஷ்டாந்தக் கதை.

2. கல்வி தர்மத்தைப்பற்றிய கதை:—முன் ஒரு காலத் தில் கிருதவீர்யன் என்ற ஒரு அரசனிருந்தான். அவன் பிள்ளை கார்த்தவீர்ய அர்ஜுனன் என்பான். அவனைத் தத்தாத்ரேயர் என்றமகரிஷியிடம் தகப்பன் கல்வி கற்க ஒப்புவித்தான். அவன் குருவினிடமிருந்து கல்வி கற்கவேண்யவர்கள் நடந்துகொள்ள

§ அதி. 14. திருக். 1. நல்ல ஆசாரமானது சிறப்பைத் தருவ தால் அது உயிரைவிட மேலாகக் காப்பாற்ற வேண்டுவது எ-ள்.

வேண்டிய*பான்மைகளில் மிகப்பற்றுள்ளவன். ஒருநாள் குரு நித்திரை செய்யும்போது அவர் பாதங்களை மெதுவாய்ப்பிடித்து சுகமுண்டாக்கிக் கொண்டிருந்தான். அவரது உள்ளங்காலில் ஸூக்ஷ்மமாய் அடங்கியிருந்த அக்கினி அவன் கைகளில்பற்றி எரித்துவிட்டது. ஆனாலும் அவன் அதைப் பொருட்படுத்தாமல்* மற்றைய உருப்புகளைக்கொண்டு அவரைத் தடவிச்சுகப்படுத்திக் கொண்டிருந்தான். பிறகு ரிஷி விழித்துப் பார்த்து ஜ்ஞானதிருஷ்டியால், அப்போது நடந்ததை அறிந்தார். தன் கஷ்டத்தையுங்கருதாது குருவின் சுகத்தையே பெரிதாய்க்கொண்ட மாணவன்மனத்தில் பற்றிய பக்தியை அவர் பலவாறாக மெச்சினார். அவனுக்கு கல்வித்திறனில் ஒப்பில்லாமையும் தீர்க்காயுளும் சக்கிரவர்த்திப்பட்டமும் உண்டாக அவர் அனுக்கிரஹம் செய்தது மாத்திரமல்ல. அவனுக்குத் திரும்பவும் இரண்டுகைகளும் உண்டாகுக, அவன் வேண்டும்போதெல்லாம் ஆயிரங்கைகள் உண்டாகுக, என்று அவர் ஆசீர்வதித்தார். அவன் அப்படியே குருவினிடமாக வரங்களைப்பெற்று சிறந்து வாழ்ந்தான். கற்பிப்பவரைக் கடவுளாக நினைக்கவேண்டும் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

---

## கடமையைப்பற்றிய தர்மம்.

1. உண்மையுரை ‡ (மனத்தொடு வாய்மை மொழியின் தவத்தொடு தானம் செய்வாரிற்றலை) 2. பிறர்கட்கும் உனக்கும் நன்மையாகவிருக்கின்ற கார்யத்தை நாடு. § (நன்

---

‡ அதி. 30. திருக். 5. ஒருவன் தன் மனத்தோடு பொருந்த உண்மையுரைப்பானாயின் அவன் தவம், தானம் செய்கின்றவர்களை விடத்தலைமையுற்றுச் சிறப்பாய் விளங்குவான் எ-ன்.

§ ஆத்தி. ஸூத். 65. நற்கார்யத்தைத் தேர்ந்து எடு எ-ன்.

ஊம கடைப்பிடி) 3 நிலையில்லாத உடம்பின் இன்பத்தை நாடி நிலையுற்ற ஜீவாத்மாவிற்குத் துன்பமுண்டாக்கும் தீவினைகளை யகற்று. * (தீயவை தீய பயத்தலால் தீயவை தீயினும் அஞ்சப்படும்) 4. உன்னையும் உனது பெற்றோர் களையும் உலகத்தார் புகழும் நெறியைத்தேடு. † (ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன் மகனை சான்றோன் எனக் கேட்டதாய்) (மகன் தந்தைக் காற்றுமுதவி இவன் தந்தை என்னோற்றான் கொல்லெனும் சொல்) 5. பிச்சை எடுத் தாவது உனது பெற்றோர்களை உபசரித்துக் காப்பாற்று. § (தந்தை தாய்ப் பேண்) 6. நீ உனது குழந்தையினிடம் அன்புற்றிருப்பது போன்று உன்னிடமும் உனது பெற் றோர்கள் அன்புற்றவர்கள் என்பதை நீ உறுதியாய் நினைத்து அடிக்கடி அவர்களுக்கு உபசரணை செய். 7. அவர்கள் மனம் நோகாதவண்ணம் உனது நன்னடத்தைகளால் களிக்கும்படி செய். 8. அரசனிடம் எப்போதும் நன்றி யுள்ளவனாக இரு. * (முறை செய்து காப்பாற்று மன்ன

---

* அதி. 21. திருக். 2. தீவினைகள் துன்பம் தருதலால் அவை நெருப்பைவிட அதிகமாய்ப் பயமுண்டாக்கும் எ-ன்.

† அதி. 7. திருக்குறள். 9. 10. தன் புத்திரனைக் கல்வியில் வல்லவன் என்று அறிவுடையோர் சொல்லக் கேட்டதாய், அச் சமயத்தில் அவனைப் பெற்றகாலத்தின் மகிழ்ச்சியைவிட பெரு மகிழ்ச்சி யடைவாள் என்றும், புத்திரன் தகப்பனுக்குச்செய்யும் உதவி, இவனைப்பெற இவன் தகப்பன் என்ன நோன்பு நோர்த் தானோ? ஆச்சர்யம் என்ற சொல்லுண்டாக்குதல் என்றும் பொருள்.

§ ஆத்தி. ஸூத். 20. பெற்றோர்களை ஆதரவுடனும் மகிழ்ச்சி யுடனும் பரிபாலனம் செய் எ-ன்.

* அதி. 39. திருக். 8. நியாயம்செய்து காப்பாற்றுகிற அரசன் மனிதர்களுக்கு இறைவன் என்று வைக்கப்படுவான் எ-ன்.

வன் மக்கட்கு இறை என்று வைக்கப்படும்) 9. பத்னி யைத் தவிர மற்ற ஸ்திரீகள் எல்லோரையும் புருஷர்கள் எல்லோரையும் முறையே ஸகோதரிகளாகவும் ஸகோதரர் களாகவும் நினைத்துக்கொள். 10. எவர்களையும் அலக்ஷ்ய மாய் எண்ணுதே. 11. பிறர் மேன்மையைப் பார்த்து பொருமையுருதே. † (அழுக்காறென ஒரு பாவி திருச் செற்றுத் தீயுழியுய்த்து விடும்) 12. அற்பர்களுடனும் துஷ்டர்களுடனும் ஸ்நேகம் செய்யாதே. 13. ஸாதுக் களோடு இணங்கி இரு. ‡ (நல்லினத்தின் ஊங்கும் துணை யில்லை தீயினத்தின் அல்லற்படுத் தூஉமில்) 14. பிறர் பொருளைச் சிறிதும் கவராதே. * (களவினாலாகிய வாக்கம் அளவிறந்தாவது போலக் கெடும்) 15. உலகவழக்கத்தை மீறி நடவாதே. § (உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும் கல்லாதார் அறிவிலாதார்)

---

† அதி. 17. திருக். 8. பொருமை என்னப்படும் ஒரு பாவி யானவன் தன்வசமாக இருப்பவன் செல்வத்தை இம்மையிற் கெடுத்து மறுமையில் நரகத்தில் அவனைச் சேர்த்துவிடுவான் எ-ள்

‡ அதி. 45. திருக். 10. ஒருவனுக்கு நல்லவர் ஸமூகத்திற் சேர்ந்திருப்பதைவிட பெரிதான ஸகாயமில்லை. தீயவர்கள் சேர்க் கையைவிட பெரிதான துன்பக் கருவி வேறொன்றில்லை. எ-ள்

* அதி. 29. திருக், 3. களவினால் உண்டாகும் பெருமைக்குக் காரணமான செல்வம், முதலில் வளருவதுபோலத்தோன்றிப் பின் அளவிறந்து (நம்மிடம் பழி பாவங்களை நிறுத்திவிட்டு நாம் நெடு நாள் ஸம்பாதித்த புகழ் புண்யங்களையும் சேர்த்துக்கொண்டு அவற்றுடன் அதுவும் எல்லைகடந்து) கெட்டுவிடும் எ-ள்.

§ அதி. 14. திருக். 10. உலகத்தாரோடு பொருந்தியிருந்து

## திருஷ்டாந்தக் கதை.

௩. கட்டமை தர்மத்தைப்பற்றிய கதை :—முன் கௌசிகன் என்ற ஒரு பிரம்மசாரி வனத்திற் சென்று சிலகாலம் தவஞ் செய்தான். அவன் ஒரு நாள் ஒரு மரத்தடியில் உட்கார்ந்து தவத்திலிருக்கும்போது அம் மரத்தின்மேலிருந்த ஒரு கொக்கு அவன் பேரில் எச்சமிட்டது. அதனால் அவன் சினங்கொண்டு தலையைத் தூக்கிக் கண்களில் தீப்பொறி பறக்க அக் கொக்கைக் கடுந்து பார்த்தான். உடனே அது எரிந்து சாம்பலாய்விட்டது. அப்போது தனது தவம் வித்தியாய்விட்டதாக, கௌசிகன் நினைத்து மனத்தினில் இறுமாப்பு கொண்டான். அன்று மத்தியானம் வழக்கம்போல் அண்டையிலுள்ள கிராமத்திற் போய் அகங்களிற்சென்று பிக்ஷை எடுத்தான். ஒரு வீட்டில் ஒரு பெண் குஷ்டரோகியான தன் கணவனுக்கு வேண்டிய பணிகளைச் செய்து ஆகாரம் கொடுத்த பின்னர் பாத்திரத்தில் பிக்ஷையைக் கொணர்ந்து போட்டாள். "தான் வந்தவுடன் அவள் பிக்ஷை போடாமல் அலக்ஷியமாய்த் தாமதித்து வந்தனள்" என்று கோபத்துடன் அப் பதிவிரதையை பிரம்மசாரி விழித்து நோக்கினான். அம்மாது "அய்யா! காட்டில் கொக்கை எரித்ததுபோல் என்னை எரிக்கமுடியாது; போய்வாரும்" என்றனள். வனத்தில் நிகழ்ந்ததை அறிந்த அப் பெண், தன்னைவிட சிறந்தவள் என்ற எண்ணங்கொண்ட பிரம்மசாரி, பதிவிரதையின் பாதங்களில் பணிந்து "வனத்தில் நடந்த விஷயத்தைத் தாமறிந்தவித மெப்படி?" என்று கேட்டான். அதற்கு அவள் "பக்கத்திலுள்ள மிதிலை நகரில் வசிக்கும் தர்மவியாதன் என்ற கசாப்புக்கடைக்காரனிடம் போய்க்கேளும்; எல்லாம் அவன் விரிவாய் எடுத்துரைப்பான்" என்றாள். பிரம்மசாரிமறுநாள் காலையில் கசாப்புக்கடைக்காரன் வீட்டைத் தேடிச் சென்றான்.

---

வாழும் நடப்பினைக் கற்றுக்கொள்ளாதவர்கள், பல நூல்களைக் கற்றிருப்பாராயினும் அவர்கள் அறிவில்லாதவர்களே எ-ள்.

வெளியில் வந்து நிற்குமவனை வியாதன் பார்த்து அய்யா! சற்று வாயல் திண்ணையில் வீற்றிருங்கள்; என் வேலைகளை முடித்துக்கொண்டு தங்களை விசாரிக்கிறேன் என்றான். "இழிந்த தொழில் புரிந்து ஜீவிக்கும் இவனிடமும் வந்து காத்துக்கொண்டிருக்கும்படியான காலம் நேர்ந்ததே" என்று மனவருத்தமுற்று கௌசிகன் உட்கார்ந்திருந்தான். ஒரு நாழிகையானவுடன் வியாதன் ஓடிவந்து அய்யா! தங்களை அப் பதிவிரதை என்னிடம் அனுப்பின சங்கதியைக் கேட்கவந்தீர்களா? என்றான். அப்போது பிரம்மசாரிக்கு முன்னிலும் அதிக வியப்புண்டாகி அவன் தவஞ் செய்வோனும் வலிய வந்து தெரிந்துகொள்ளும்படியான விஷயங்களை தூரத்திலிருந்தே அறியும்படியான ஜ்ஞானதிருஷ்டி அவளுக்கும், தமக்கும் கிடைத்ததெப்படி? எனவியாதனைக் கேட்டான். அய்யனே! அந்தம்மாளின் பர்த்தா ஒரு பெரிய வியாதிஸ்தன். கொண்டவனையே தெய்வமாகக்கொண்ட பார்யை, அவன் வேண்டுவனவற்றைக் கொடுத்த பின்னரே மற்ற தர்மங்களைக் கவனிப்பாள். அதனால் பிக்ஷையிடுவதில் உண்டான தாமதம் தங்களுக்குச் சகிக்கமுடியாமற் போயிற்று. நானோ இழிய தொழிலுற்றோன். ஆயினும் எனது வயதுசென்ற பெற்றோருக்கு ஆகவேண்டியதை ஆயத்தப்படுத்திய பின்னரே மற்றவைகளை மனத்திற் கொள்ளுவேன், என்று சொல்லி பிரம்மசாரியை உள்ளே அழைத்துப் போய்க் கிழவர்களைக் காட்டினன். வெந்நீரில் குளிப்பித்து உலர்ந்த உடையுடுத்தி உகப்பான உண்டியளித்து உசிதமான ஆசனத்தில் உட்காரவைத்திருக்கும் அப்பெரியார்களை கடவுளைப்போல் கண்ணுற்ற கௌசிகனுக்கு அப்போதுதான் நல்ல அறிவு வந்தது. "அய்யா! அவள் பிறவியில் பெண்ணாயினும், தாங்கள் தொழிலில் தாழ்ந்தவராயினும் அவரவர் செய்யவேண்டிய கடமைகளைக் கடைப்பிடித்துச் செய்து வருகிறீர்கள். வயது காலத்தில் தாய்தந்தையர்களைக் காப்பாற்றாது தவம் பெரிதென்று தனியே விட்டுவந்த

எனக்கு நற்புத்தி புகட்டினநீங்கள் தான், என்னைவிட உயர்ந்தவர்கள். அவரவர் கடமையான தர்மங்களைக் கசடற நடத்துவதே தவத்திலும் பெரிது" என்று சொல்லி அவன் அது முதல் தனது தாய் தந்தையர்களைச் சிரத்தையுடன் பேணலுற்றான்.

---

## ஒழுக்கம்பற்றிய தர்மம்.

1. ஒரு கார்யத்தைச் செய்யுமுன் யோசித்துச் செய். † (எண்ணித் துணிக கர்மம் துணிந்த பின் எண்ணுவமென்பது இழுக்கு) 2. உனக்கொருவர் தீங்கிழைப்பினும் அவர்கட்கு நன்மையைச் செய்து அறிவுறுத்து ‡ (இன்னா செய்தாரை யொறுத்தல் அவர் நாண நன்னயம் செய்து விடல்) 3. ஒருவன் அற்பமான நன்றி செய்தாலும் அதனைப் பெரிதாக நினை. * தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாகக் கொள்வர் பயன்றெரிவார்) 4. கொடுத்ததைத் திரும்பப் பிடுங்கிக் கொள்ளுவது மகா பாவத்தொழிலென்று அறி. 5. வீணாக ஒருவனுக்கு ஆபத்தை யுண்டுபண்ணாதே 6. உன்னால் அடையமுடியாத பொருளில் வீண் ஆசைவைத்துத் துன்பமுறாதே. 7. உனது

---

† அதி. 47. திருக். 7. ஒரு தொழிலைத் தொடங்குமுன் அதனை முடிக்கும் உபாயத்தைச் சிந்தித்துத் தொடங்குக. அதைத் தொடங்கினபின் சிந்திப்போம் என்பது குற்றமாகும் எ-ள்.

‡ அதி. 32. திருக். 4. நமக்கு ஒரு கெடுதல் செய்தவர்களை தண்டித்தலாவது அவர்கள் தாமே வெட்கப்படும்படி அவர்களுக்கு நன்மையைச் செய்துகாட்டுதல் எ-ள்

* அதி. 11. திருக். 4. ஒருவன் தினையளவுபகாரம் செய்யினும் உபகாரப் பயனறிந்தவர் அதனைப் பனையளவாக நினைப்பர் எ-ள்.

முயற்சியால் கிடைக்கும் பொருளினால் இன்பமுற்றிரு. 8. வரவுக்கு மிகுந்த செலவு செய்யாதே. 9. ஆபத்து வந்தகாலத்தில் உதவும்படி உனது வருமானத்தில் அவ்வப்போது சிறிது மீத்துவைத்துக்கொள். 10. பிறர் பொருளில் ஆசைவையாதே. 11. இயன்றவாறு பரோபகாரம், தானம், அனாதர்களைக் காப்பாற்றுதல் முதலிய தர்மத்தைச் செய். ¶ (செயற்பாலதோரும் அறனே ஒருவற்கு உயற்பாலதோரும் பழி) 12. பிறரிடம் மிருதுமாகவும் மெதுவாகவும் இன்பமாகவும் பேசு. ‡ இனியவுளவாக இன்னாத கூறல் கனியிருப்பக் காய் கவர்ந்தற்று) 13. பிறர் ஸமயமும் நோக்கமும் அறிந்து பேசு. 14. பிறர் துன்புறும் பேச்சுகளைப் பேசாதே. § (தீயினாற் சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே நாவினாற் சுட்டவடு) 15. ஒருவனுக்குப் பிரியமாயும் ஸத்யமாயுமிருக்கிற வார்த்தையைச் சொல். 16. ஸத்யமாகவிருந்தாலும் அப்பிரியமான வார்த்தையைச் சொல்லாதே. 17. ஒரு நீதிமொழி ஒருவனுக்கு முதலில் அப்பிரியமாகத் தோன்றினபோதிலும் அது அவ

---

¶ அதி. 4, திருக். 10. ஒருவனுக்கு அறன் ஆகிய தர்மமே செய்யக்கூடிய தன்மையுடையது. பழிக்கக்கூடியதாகிய அதர்மம் ஒழிக்கக்கூடிய தன்மையுடையது எ-ள்.

‡ அதி. 10 திருக். 10. மனிதரிடம் இனிய சொற்களுமிருக்க அவற்றைக் கூறாமல் இன்பமில்லாத சொற்களைக் கூறுதல், ஒருவனிடம் கனிகளும் காய்களுமிருக்க அவன் கனிகளைத் தின்னாமல் காய்களை மாத்திரம் தின்னுவதுபோலிருக்கிறது எ-ள்

§ அதி. 13. திருக். 9. ஒருவனை நெருப்பினால் சுட்டபுண் உடம்பிலிருந்தாலும் உள்ளத்தில் ஆறிவிடும். தீயசொற்களையுடைய நாவினால் சுட்டபுண் மனத்தில் ஒருபோதும் ஆறாது எ-ள்.

னுக்குப் பின்நன்மையைப் பயக்குமதாயின் அதனை வற்புறுத்திச்சொல்லி அதன்படி அவனை நடக்கச் செய். * (கேட்டார்ப் பிணிக்குந் தகைவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாஞ் சொல்) (திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும் பொருளும் அதினினூ உங்கில்) 18. ஒருவனுக்குப் பிரியமாக இருந்தாலும் பொய்யைச்சொல்லி ஏமாற்றாதே. § (நயனில சொல்லினும் சொல்லுக சான்றோர் பயனில் சொல்லாமை நன்று) (பயனில் சொற்பாராட்டு வானை மகனெனல் மக்கட்பதடியெனல்) 19. ஒருவனைக் கண்டவிடத்திற் புகழ்ந்து காணாத இடத்தில் இகழ்ந்து பேசாதே. ‡ (புறங்கூறிப்பொய்த்துயிர் வாழ்தலின் சாதல் அறங்கூறு மாக்கந்தரும்)

---

* அதி. 65. திருக். 3. 4. நீதிமொழிதல் என்பது, அதனைப் பிரியமாய்க் கேட்கின்றவர்களைக் கட்டுப்படுத்தும் தன்மையுற்றதாகவும் அதனைப்பகைமையாற் பிரியமின்றிக் கேளாதவர்களும் பின் ஒருஸமயம் விரும்பக்கூடியதாகவு மிருக்கவேண்டும். அதுவே சொல் எனப்படும் என்றும், அவ்விதமான சொல்லைக் கேட்பவரின் வகையறிந்து சொல்லக்கடவது, அதைவிடமேலான தருமமும் பொருளும் இல்லையென்றும் பொருள்.

§ அதி. 20. திருக். 7, 6. அறிவுடையோரும் நீதியில்லாத சொற்களைச்சொன்னலும் சொல்லலாம். பயனில்லாத சொற்களை சொல்லாமலிருத்தல் நல்லது என்றும் பலனற்ற சொற்களைப் பலதரமும் சொல்லுவோனை மனிதன் என்று சொல்லாதே, மனிதர்களுள் பதர் என்று சொல் என்றும் பொருள்.

‡ அதி. 19. திருக். 3. ஒருவனைக்காணாதவிடத்து இகழ்ந்து கண்டவிடத்து அதனைப்பொய்த்துப் புகழ்ந்து உயிர் வாழ்வதைவிட மரித்தலினால் அப்பாவமில்லாமைபற்றி அதுவே தர்மம் கூறுகிற சாஸ்திரத்திற் கூறிய நற்பயனைக் கொடுக்கும் எ-ள்.

## திருஷ்டாந்தக் கதை.

4. ஒழுக்க தர்மத்தைப்பற்றிய கதை:—ஒருகால் பாரவி என்ற ஸம்ஸ்கிருத பண்டிதர் ஒருவர் பால்யத்திலேயே பற்பல நூல்களைக் கற்றுப் புலவராகி பூபதி ஸபைகளிற் சென்று பரிசுகள் பெற்று வந்தனர். அவரது உற்றாரும், ஊராரும் அவரை மிகக் கொண்டாடினர். ஆயினும் அவரது பிதா மாத்திரம் சிறுவனை முகஸ்துதி செய்யப் பின்வாங்கினவராய் "கற்கவேண்டுவன எவ்வளவோ இருக்க இவன் கற்றது எத்துணை?" என்று அவ்வப்போது கூறி அவரது கர்வத்தை அடக்குவார். "தன்னிலும் கல்வித்திறனில் தணிந்தவரான தகப்பன் தன்னைப் புகழாவிடினும் இகழாதிருக்கவில்லையே! பிள்ளையினிடம் பிரியமில்லாத பிதாவைக் கொன்றுவிடுவதுதான் மனத்திற்கு இனிதாகும்" என்று பாரவி தீர்மானித்து அதற்குத் தருணம் பார்த்திருந்தார். ஒருநாள் இரவு தான் முன்னமே புசித்து ஒருகல்லைத் தூக்கி வீட்டுக் கூரையின் மீதேறி வைத்துக்கொண்டு தந்தை நித்திரை செய்யுமிடத்திற்கு நேராக உட்கார்ந்திருந்தார். தந்தை தூங்கினவுடன் கூரையைப் பிரித்து அதன் வழியே அவரது சிரசின்மீது அக் கல்லைப் போட்டு விட்டு ஒன்றும் தெரியாதவர்போல் இறங்கி வந்துவிடலாம் என்று பாரவி உள்ளத்தில் கருதியிருந்தார். தந்தை வீட்டிற்குள் சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போது மனைவியினிடம் நமது அருமைப் பையனெங்கே? இன்னமும் ஏன் புசிக்க வரவில்லை? என வினவினர்.

அதனைக்கேட்ட தாயும், கணவன் குமாரனிடம் கடுகடுப்பாயிருப்பதை நாளடைவிலேயே ஸம்மதிக்கப்பெறாதவளாகையால் சரியான பதில் கூறவில்லை. "பிள்ளை பட்டினியிருந்தால் உங்களுக்கென்ன? உறவினரெல்லாம் அவனைப்புகழ உங்கள் கண்ணுக்கு மாத்திரம் அவனைக்காணக் கடுப்பாயிருக்கிறதே! அவனுக்கெதிரில் ஒரு நாளாவது ஒரு இனிய வார்த்தை கூறாதகுறைதான்

அவனையும் என்னையும் வருத்துகிறது. என்ன அருமை வேண்டி
யிருக்கிறது ?" என்றாள். அடி ! பெண்பால் ! உனக்கும் அவனுக்
கும் உலகநடை தெரியாது. அவன் இந்த இளம் வயதில் இவ்
வளவு கல்விமானாக இருப்பதுபற்றி எனக்குள்ள ஆனந்த வெள்
ளத்தின் சிறு திவலையாகும் மற்றவர் கொண்ட ஸந்தோஷம்.
அதை நானே வெளிக்காட்டினால் அவன் வயதிற்குத்தக்கபடி மிகக்
கர்வங்கொள்வான். அது அவனது முற்போக்கிற்குத் தடையாக
விருக்கும். அதனால் நான் நேரில் புகழமாட்டேன். மற்றவர் அவ
னது முற்போக்கைக் கவனியாதவராகையால் முகஸ்துதி செய்
கின்றனர். அவர்களோடு நாமும் நமது பையனைக்குறித்துத் துதிப்
பது தற்புகழ்ச்சியாகும். இதுகூடத் தெரியவில்லையா? என்றார்.

எல்லாவற்றையும் மோட்டுக்கூரையிலிருந்து கேட்டுக்கொண்
டிருந்த குமாரன் வயதிற்குத் தக்கபடி உலகநடை தெரியாமலும்
எட்டி ஆலோசிக்காமலும் தான் எண்ணியிருந்த கார்யத்தைப்
பற்றி தானே மனம் நொந்து கீழே இறங்கி கல்லை பிதாவின்
முன்வைத்து ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்தான். அதைப் பார்த்த
வுடனேயே தகப்பனுக்குப் பொருள் விளங்கிவிட்டபோதிலும்
பிள்ளையைப் பார்த்து என்ன சங்கதி? என்று கேட்டார். அப்
போது குமாரன் தான்கொண்ட எண்ணத்திற்கு ஒரு பரிகாரம்
போல் உள்ளத்தில் உள்ளதை ஒளிக்காமல் எல்லாவற்றையும் எடுத்
துக்கூறி மன்னிக்கவேண்டினான். அப்போது தகப்பன் பிள்ளையை
நோக்கிக் கூறிய நீதி சுலோகமாவது:—

"ஸஹஸா விததீத நக்ரியாம்
அவிவேக: பரமாபதாம் பதம்,
வ்ருணதே ஹி விம்ருச்ய காரிணம்
குணலுப்தா: ஸ்வயமேவ ஸம்பத:"

(இதன் பொருள்) "எனது அருமைப் புதல்வனே! ஒரு கார்யத்
தையும் நிதானியாமல் அவஸரப்பட்டுச் செய்யக்கூடாது. அப்படிச்

செய்வது விவேகியின் கார்யமன்று. அவிவேகம் பெரிய ஆபத்தை விளைவிக்கும். ஒவ்வொன்றையும் ஆலோசித்துச் செய்கிறவனுக்கு ஸகல ஸம்பத்துகளும் வலிய வந்து கைகூடும். ஸம்பத்துகள் ஸத்குணங்களோடு தான் உறவாடி நிற்குமன்றோ? என்பது. அந்த பாரவி அதுமுதல் பல ஒழுக்கங்களை உலக வாயிலாகவும் பெரியோர் வாயிலாகவும் புஸ்தகங்கள் வாயிலாகவும் கற்றுக்கொண்டார். பிறகு தானியற்றிய "கிராதார்ஜுனீயம்" என்ற காவ்யத்தின் முதல் ஸர்க்கத்தில் பல நீதி சுலோகங்களைக் கூறும்போது தனக்குத் தகப்பன் தக்கசமயத்தில் உபதேசித்த முற்கூறிய நீதி சுலோகத்தை நடுநாயகமாய் வைத்துப் போற்றியிருக்கிறார். கல்வியுடன் ஒழுக்கமுள்ளவரே உலகில் இனிது வாழ்வார் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

---

## அன்பைப்பற்றிய தர்மம்.

1. கோபத்தையடக்கு * (செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான் அல்லிடத்துக் காக்கினென் காவாக்காலென்) 2. எப்போதும் மனம், வாக்கு, காயம் இம்மூன்றிலும் சுத்தமாக இரு. 3. வாக்கும், காயமும் சுத்தமாவதற்கு மனம் சுத்தமாக இருக்கும் வண்ணம் தினந்தோறும் பழக்கப்செய். 4. மனத்தில் தோன்றும் தீய விஷயங்களை யகற்று. 5. நல்ல விஷயங்களையே நினை.

---

* அதி. 31. திருக். 1. கோபம் பலிக்குமிடத்தில் எழும்பாமல் அருளினால் அதனை அடக்கிப் பிறர்கட்குத் தீங்கிழைக்காமல் காத்தவனே கோபங்காத்தவன் ஆவான். கோபம் பலியாதவிடத்தில் அதனைத் தடுத்தலினால்தான் என்ன பலன்? தடுக்காவிட்டால்தான் என்ன பலன்? என்க.

6. நினைத்தபடி சொல். 7. சொன்னபடி செய். § (சொல்லு தல் யார்க்கும் எளிய அரியவாம் சொல்லியவண்ணம் செயல்) 8. வெளிப்பார்வைக்கு நல்லவன்மாதிரி யிருந்து கொண்டு பிறர் செய்யும் நற் காரியங்களுக்கு மறைவாக இடையூறு செய்வது மிகக் கொடிய செய்கை என்று நினை. 9. பொறுமையைப்போற்றிவளர். ‡ (உண்ணாது நோற்பார் பெரியர் பிறர் சொல்லும் இன்னாச்சொல் நோற்பாரிற் பின்) 10. நீ பல தொழில்களை ஆரம்பித்து விடுவதைவிட ஒரு காரியத்தைச் செய்தபோதிலும் அதனைத் திருத்த மாகவும் உலகம் புகழும்படியாகவும் உன் ஜன்மம் பயன் பெறத்தக்கதாகவும் செய்து முடி. 11. நமது பகுத்தறிவு முற்றினது முதல் நம் உடம்பை வளர்த்த வேலையைத்தவிர பிற உயிர்கள் உய்யுமாறு உதவிகள் நம்மால் செய்யப்பட் டிருக்கின்றனவா? என்பதை அடிக்கடி ஆலோசித்துப்பார். 12. அதுவே உனது உள்ளத்திலுள்ள அன்பை மறைத் துக்கொண்டிருக்கும் சுயநலம் பாராட்டல் என்ற பாசியை விலக்கும் கருவி என்று நினை. 13. அதனாலேயே வெளி

---

§ அதி. 67. திருக். 4. மனத்தின் வலிமையில்லாதவர்களுக் கும் நீதி நெறிகளை இவ்விதம் செய்யவேண்டுமென்று வாயினாற் சொல்லுவது எளிதாகவே இருக்கும். தாம் சொல்லியவிதம் செய் தல் எவர்க்கும் அரிதாகையால் மனவலிமையுற்ற சிலருக்குத்தான் சொல்லியவண்ணம் செய்ய முடியும் எ-ள்.

‡ அதி. 16, திருக். 10. பெரியோர் உண்ணா விரதங் கொண்டு தவஞ்செய்வார். அவர்களும், அயலார் சொல்லும் கடுந்த சொற்க ளைப் பொறுத்துக்கொண்டு மனத்தில் துன்புறாமலிருப்பவர்களுக் குப் பின்புதான் கூறப்படுவார் எ-ள்.

வந்த உனது அன்பு என்னும் வெள்ளப்பெருக்கு, உன் மனத்தை சுத்தமாக்கும் என்று கருது. 14. அன்பில்லாதவன் இருந்தாலும் செத்தாலும் ஒன்று என்று தீர்மானித்துக்கொள். * (அன்பின் வழியது உயிர்நிலை அஃதில்லார்க்கு என்புதோல் போர்த்த உடம்பு) 15. பாபஞ்செய்பவர்களைத்திருத்த உன்னால் கூடிய மட்டில் முயற்சிசெய். 16. அம்முயற்சி பயன் பெறாவிடில் அவர்களிடம் நீ உபேக்ஷையாக (விரோதமின்றி) இரு. 17. புண்யவான்களிடம் நேசித்திரு. 18. ஸுகிப்பவர்களைப் பார்த்து ஸந்தோஷமுறு. துக்கிக்கின்ற எளியவர்களிடம் கருணை காட்டு. 19. அன்பிலாதவன் முன்னேற்றமடையான் என்று அறி.

---

## திருஷ்டாந்தக் கதை.

5. அன்பு தர்மம் பற்றிய கதை :— தர்மபுத்திரர் வெகு காலம் இராஜ்யம் ஆண்டபிறகு தாம் செய்த புண்ய கார்யங்களால் முடிவில் சுவர்க்க உலகம் அவருக்குக் கிடைத்தது. அவர் அங்கு போய்க்கொண்டிருக்கையில் ஒரு சுணங்கனும் அவரைப்பின்பற்றித் தொடர்ந்து போயிற்று. சுவர்க்கத்தின் எல்லைப்புறம் போனதும் சுவர்க்க வாசலைத் திறந்து தர்மரை மாத்திரம் உள்ளே போகும்படி ஸ்வர்க்காதிபதி உத்திரவிட்டான். தர்மர் தன்னுடன் விடாது தொடர்ந்து வந்த அச்சுணங்கனுக்கும் சுவர்க்கம் கொடுக்கவேண்டு

---

* அதி. 8. திருக். 10. அன்பின்வழியே செல்லுகின்ற உடம்புதான் உயிர்நின்ற உடம்பாகும். அவ்வன்பு இல்லாதார்க்கு உள்ள உடம்பு எலும்பு, தோல் முதலியவற்றால் போர்த்தின (உயிரில்லாத) உடம்பு ஆகும் எ-ன்.

மென்று இந்திரனிடம் கூறினார். அவன் "புண்யம் புரிந்தவருக்கே இவ்வுலகம் ஏற்றது ; இதனைப்பெற அந்நாய்க்கு யாதொரு யோக் யதையுமில்லை" என்றான். அதுவிஷயமாய் அவ்விருவருக்கும் சிறிது நேரம் விவாதம் நடந்தது. முடிவில் "என்னிடம் விசுவாஸமுற்று என்னை நம்பி, விடாது கூடவேவந்த சுணங்கனுக்கு சுவர்க்கமில்லை யானால் எனக்கும் அது வேண்டாம்" என்று தர்மர் திரும்பி விட்டார். அவரது மன்ருட்டத்தை கவனித்த தேவேந்திரன் அவரது உதாரகுணத்திற்காகவும் ஸர்வஜீவ தயாளத்தன்மைக்காக வும் ஈடுபட்டு அதற்கும் சுவர்க்கமளித்தான். அது வாஸ்தவ சுணங்க னல்ல. தர்மரின் அன்பைப் பரீக்ஷிக்கவந்த யமதர்மராஜன். அவன் உடனே தனது நிஜமான உருவங்கொண்டு தர்மபுத்திரர் முன் தோன்றி அவரது சுயநலமில்லாமை, பிற உயிர்களிடம் திடமான பேரன்பு, நற்கார்யத்தில் பிடிவாதம், உள்ளும்புறமும் தூய்மையுற் றிருத்தல் முதலிய அன்பின் வழியாய் வந்த நற்குணங்களை நயந்து புகழ்ந்து மறைந்தான். யாவரிடமும் அன்புகொண்டவனுக்கு எதுவும் கைகூடும் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

---

## முன்னேற்றம் பற்றிய தர்மம்.

1. ஸர்வஜீவ ஜந்துக்களையும் தன்னைப்போன்று நினை. 2. உனது உடம்பினுள்ளிருக்கும் மனம் என்ற ஸூக்ஷ்ம சரீரத்தை சுத்தமாய் வைத்துக்கொள்ளும்போது அம்ம னத்தினுள்ளிருக்கும் ஜீவாத்மாவினிடம் சொந்தமாயுள்ள ஆனந்த வெள்ளம் ஸ்வயமாகப்பெருக ஆரம்பிக்கும் என் பதை சிந்தனைசெய். 3. ஸமபாவனை உனக்குண்டாவதற்கு ஈசன் என்ற பரமாத்மாவின் அருள் உண்டாகவேண்டி நீ அவரைத் தொழு. 4. உனக்கு முதலில் அவர் ப்ரத்யக்ஷ

மாகத் தோன்றமாட்டாராதலால் உன்மனத்தில் அவர் உருவமுற்றுத்தோன்றிநிற்பதற்குஸாதகமாய்த் தினந்தோறும் தவறாமல் ஆலயம் சென்று அவரை வழிபடு. ‡ (ஆலயம் தொழுவது சாலவு நன்று) 5. நீ உனது உடம்பைக் காப்பாற்ற உனது காலத்தை செலவிடும்போது அதில் சிறிது நேரத்தையாவது உன் உடம்பிலுள்ள ஆத்மா திரும்பத் திரும்ப உடம்பெடுத்து துன்பமடையாத வண்ணம் ஆத்மதத்வ ஆராய்ச்சிசெய்து அதன்படி ஒழுகுவதற்கு உபயோகப்படுத்து. 6. இவையெல்லாம் யோசிக்கும்போது கடவுளால் உனக்குக் கொடுக்கப்பட்ட காலத்தில் ஒரு க்ஷணம் வீண் ஆனாலும் அதைப்பற்றி நீ மிகவும் வருந்தக்கடவாய். 7. வீணாய்க் கடந்துபோன ஒரு க்ஷணத்திற்கு ஒருகோடி பொன் கொடுத்தாலும் அதனைத்திரும்ப வருத்திக்கொடுக்க எவராலும் முடியாதென்பதை உன்னி ஊகித்துப்பார். 8. நீ புத்திசாலியாக விருந்தால் நீதி நெறியுடன் உன்னையும் உனது சுற்றத்தாரையும் காப்பாற்றிக்கொண்டு உன் மனத்தை ஸந்தோஷமாகவும் களங்கமற்றுத் தெளிவாகவும் இருக்கச்செய்து அதிலிருக்கும் ஜீவாத்மா திரும்ப ஜன்மதுக்கம் பெறாமல் பரமாத்மாவினிடம் சேர்ந்து நித்ய நிர்மலமான ஆனந்தம் பெறும்வண்ணம் வேதாகம தர்ம முறைகளை உள்ளபடியுணர்ந்து அதன்படி நட. 9. கடவுள் படைத்த பற்பல பிறவிகளில் மானிடப்பிறவியே

---

‡ கொன்றை. ஸூத். 2. ஆலயத்திற் சென்று கடவுளைத் தொழுதல், மனம் ஈசனது ஸ்வரூபத்தில் ஈடுபட்டு ஒடுங்கி அதனைத்தியானிக்கக் காரணமாயிருப்பதால் ஜீவனுக்கு அது மிக நன்மையை தரத்தக்கது என்று பொருள்.

பகுத்தறிவுற்றிருப்பதால் "நமக்கு நேரில் புலப்படாத மனம், புத்தி, கர்மம், ஜீவாத்மா, ஜீவனுக்கு மறுபிறப்பு இவைகளும் பரலோகம், பரமாத்மா, தத்வஜ்ஞானம், பிறப்பில்லாத மோக்ஷம் இவைகளும் உண்டு" என்று அப்பிறவியாற்றான் ஊஹித்து அறியக்கூடியன என்பதும், ஜீவனின் முன்னேற்றத்தின் பொருட்டு தினந்தோறும் முயற்சிக்கப் போதுமான அவகாசமிருக்கும்போதே "பின் ஒரு ஸமயம், அல்லது வேறு ஜன்மம், இவற்றில் முயற்சிப்போம்" என்று மனவலிமையில்லாமை, சோம்பல் முதலியவற்றால் காலங்கடத்துவது காரியம் நடவாமைக்கு அறிகுறி யென்பதும் உனதுமனத்தில் பதித்து வைத்துக் கொண்டு அதற்கிணங்க ஒழுகுவாயாக. இவ்விதம் இளமை முதல் முதுமைவரை மனிதர்களுக்குப் பொதுவாயுள்ள பல தர்மங்கள் அங்கங்கே சாஸ்திரங்கள் புத்தி நுட்பம் இவற்றினாலும் தெரிந்து கொள்ளவேண்டுவன.

---

## திருஷ்டாந்தக் கதை.

6. **முன்னேற்ற தர்மம் பற்றிய கதை:—** சந்திர வம்சத்திற்பிறந்த பரீக்ஷித் என்ற மகாராஜன் ஒருநாள் காட்டிற்போய் வேட்டையாடிக் களைத்தனன். அங்கு ஒரு ஆசிரமத்தில் தியானத்திலிருந்த "சமீகர்" என்ற முனிவரிடம்போய் தாகத்திற்குத்தண்ணீர் கேட்டனன். மெய் மறந்து ஸமாதியுற்று அசைவற்றிருக்கும் அம்முனிவர் செவிகளில் அவன் வசனம் விழவில்லை. அத் தபோதனர் தன்னை அவமதித்திருப்பதாக நினைத்த அரசன் சினந்து செல்வச் செருக்கால் ஒரு செத்த பாம்பைக்கம்பாலெடுத்து ரிஷியின் கழுத்தில் மாலையாகப் போட்டுச் சென்றனன். சற்றுநேரத்திற்கெல்லாம்

அத்தவசியின் புதல்வர் "சிருங்கி" என்பவர் அங்கு வந்து பார்த்து "தன் பிதாவை இவ்விதமாய் அலக்ஷியம் செய்து அசுத்தப்படுத்திய வன் ஏழுநாட்களில் தக்ஷகன் என்ற சர்ப்பத்தால் தீண்டப்பெற்று சாகக்கடவன்" என்று கடுந்து சபித்தார். சிறிதுபொழுதில் கண் திறந்த சமீகர், சிருங்கி கொரேமாய் சபித்ததைப்பற்றி மனவுருத்த முற்று அரசன் சாவதற்குள் ஜ்ஞானம் சம்பாதித்துக்கொள்ள வேண்டித் தனது புதல்வன் சபித்த விஷயத்தை உடனே வேந்த னுக்குத் தெரிவித்தனர். பரீக்ஷித், அதைக்கேட்டதும் புழுவாய்த் துடித்து "இதுவரை நான் மோக்ஷம் பெறவேண்டிய மார்க்கத்தைத் தேடிக்கொள்ளவில்லையே? இந்த ஏழுநாட்களில் என்ன செய்யப் போகிறேன்" என்று ஏங்கித் தயங்கி மனவாட்டமுற்றிருந்தான்.

அப்போது பிரம்மஜ்ஞானியாகிய சுகாசார்யர் அவனிடம் வலி யவந்தார். அப்போது பரீக்ஷித் அவரிடம் நடந்த வரலாற்றைக் கூறி ஏழுநாட்களில் முன்னேற்ற மடையவேண்டிய சாதனத்தை நான் எப்படித் தேடிக்கொள்வேன்? என்றான். அதற்கு சுகாசார்யர் கூறு கிறார். "வேந்தனே! கட்வாங்கன் என்ற அரசன் தனது ஆயுள் மூன்றேமுக்கால் நாழிகையாகிய ஒரு முகூர்த்தமிருப்பது தெரிந்து மோக்ஷவழி தேடிக்கொண்டான். உனக்கு ஏழுநாளிருப்பது எவ்வளவு பெரிது. நல்விஷயத்தில் மனம்பற்றிவிட்டால் எல்லாம் எளிதில் கைகூடும். நன்மையில் மனம் பற்றுவதுதான் அரிதான கார்யம்" என்றார். பரீக்ஷித் "என்னை எப்படியாவது காத்தருள வேண்டும்" என்று சுகபகவானிடம் சரண்புகுந்தான். உடனே பகவான் பகலும் இரவுமாக ஏழுநாட்களில் பாகவதத்தை அவ னுக்கு உபதேசித்தார். பாகவதமென்பது கிருஷ்ணபரமாத்மாவின் மகிமையை விளக்கிக்கூறும் சாஸ்திரம். சுகமகரிஷியின் தகப்பனு ராகிய வியாஸாசார்யர் வேதங்களைப் பிரித்தும், பதினெண் புரா ணங்கள் மகாபாரதம் என்ற பல நூல்களியற்றியும், உலகத்திற்கு உபகாரமானஜ்ஞானசாஸ்திரமாகிய பிரம்மசூத்திரத்தை நவின்றும்

மனம் சாந்தியுறுதிருந்தார். அந்த ஸமயத்தில் நாரதர் அவரிடம் வந்து "கலியுகவரதராகிய கிருஷ்ணபகவான் சரித்திரத்தை முற்றும் கூறாதகுற்றமே உம்மை வருத்துகிறது. அதனைக் கூறினவுடன் உமது மனம் பரமசாந்தமாய்விடும்" என்று சொன்னதின்பேரில் பகவத் கதையான பாகவதத்தையியற்றித் தமது புதல்வனுக்கு உபதேசித்த மகாப் பிரபந்தமது. அதுவே கலியுக முக்தி சாஸ்திரமென்றும் பக்தி சாஸ்திரமென்றும் சாந்தி சாஸ்திரமென்றும் கிருஷ்ணலீலாமிருதம் என்றும் புகழ்பெற்று இன்றும் பூமியிற் பிறந்தோரின் பிறவிப்பிணியைத் தீர்க்கவல்லதாய் விளங்கிக் கொண்டிருக்கிறது.

பரீக்ஷித்; ரிஷியின் சாபம் பொய்யாகாது என்று தெரிந்தும் ஸர்ப்பங்கள் வராதவண்ணம் சமுத்திர மத்தியிலுள்ள ஒரு தீவில் உன்னதமான ஒரு இடத்தில் மிக ஜாக்கிரதையுடன் ஏழு நாட்கள் வசித்துக்கொண்டிருந்து குருசிஷ்யத்தன்மையுடன் மிக சிரத்தையோடு சுகாசார்யரிடமிருந்து பாகவதத்தை சிரவணம் செய்தான். அதனால் அவனது மனம் சுத்தமாய் விட்டது. பக்தி வேறொன்றி முக்தியளிக்கக் காத்திருந்தது. விதியை வெல்லமுடியாதாகையால் தக்ஷன் ஒரு எலுமிச்சம்பழ வடிவமாய் பரீக்ஷித்து அரசன் கையில் வந்து அவனைத் தீண்டினான். அரசனும் பூதவுடம்பினைக் களைந்து பகவானிடம்போய்ச் சேர்ந்தான். அம்மாதிரியான புண்யம் ஸம்பாதிக்கவே இப்பவும் சில பக்தர்கள் விரதமாக இருந்து ஏழுநாட்களில் பாகவதத்தை குரு மூலமாக படனம் செய்வித்து அர்த்தத்துடன் அதன் கதையை சிரவணம் செய்து வருகின்றனர். அதனையே "ஸப்தாஹம்" (ஏழுநாட்களில் முடிவது) என்ற பெரிய யாகமாக நினைத்துக் கலியுகத்தில் முக்திமார்க்கமாய்க் கொண்டாடும்படி பெரியார் வழிகாட்டியிருக்கின்றனர். நல்வழிகளில் மனத்தைப் புகுத்தி அது சுத்தமாகும்வண்ணம் முயற்சிக்க வேண்டும். அதற்கு காலத்தை ஒத்திப்போடுவதும் நாளடைவிலே

யே அதற்கு முயற்சிக்காமலும் வீணே காலங்கழிக்கின்றவன், வீட்டில் வரும் விசேஷங்கள் நிமித்தம் நாளடைவிலேயே பணம் சேகரித்து வைத்துக்கொள்ளாதவன் விசேஷம் வந்தவுடன் திண்டாடுவது போன்று திகைத்து நிற்பான். பகுத்தறிவுள்ளவன் பல நாட்களாகத்தனது முற்போக்கான முக்தியின்பத்தை நாடித்தீவிரமாக முயற்சிக்கவேண்டுமென்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

## நான்காம் அதிகாரம்.

### தர்மத்தின் சிறப்பு.

உலகத்தில் புண்யத்தின் பலனை அனுபவிக்கிறவன் பாபத்தின் பலனை அனுபவிக்கின்ற அங்கவீனர்கள், வியாதிஸ்தர்கள், எளியவர்கள் ஆகிய இவர்களிடம் மனமிரங்கி அன்புற்று ஆதரவாகப்பேசி அவர்களுக்கு வேண்டிய உதவியைச் செய்வானாகில் அவன் கையில் மோக்ஷமிருக்கிறது. காமம் முதலிய உள்சத்ருக்களுக்கு வசமாகாமல் பேராசையை ஒழித்து நற்கர்மங்களை நாடியிருக்கின்றவர்களின் மகிமையால் இந்த பூமி நிலைத்திருக்கிறது. பிறர் பொருள், அழகு, வீர்யம், குலம், ஸுகம், பாக்யம் பெருமை முதலியவற்றில் பொறாமையுற்றவனுடைய மனோவியாதிக்கு முடிவு கிடையாது. ஹிம்ஸை, களவு, சாஸ்திர விருத்தமான கார்யம், கோள், துன்புறுத்தும் வார்த்தை, பொய், மாறிமாறிப் பேசுதல், கொலை, கெட்ட சிந்தை, நேரில் பார்த்ததை ஒளித்தல் ஆகிய இந்த பத்தும் மிகக் கொடிய பாப கர்மங்களாதலால், அவற்றை மனிதர்கள்

ஜீவனம் கிடைக்காமலும் வ்யாதியினாலும் சோகத்தினாலும் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த போதிலுங்கூட மிக்க பலத்துடன் தூரத்தில் விலக்கவேண்டும். ஸர்வப் பிராணிகளிடத்திலும் திரிகரணங்களாலும் ஒருபோதும் பாபம் செய்யாமலிருக்கிறவன் பிரம்மத்தையடைகிருன் என்று புராணங்களிற் கூறப்படுகிறது.

மனுஸ்மிருதியில் * "ப்ராணிகளுக்கு ஹிம்ஸையின்றி ஒவ்வொரு கார்யங்களையும் செய்வதுதான் ஆத்மாவிற்கு ஹிதத்தைச் செய்வதாகும். தர்மத்தை விரும்புகிறவன் இன்பமாகவும் மெதுவாகவும் பேசவேண்டும். எவ்வித கஷ்டப்படும்போதும் பிறர் துன்புறும்படி பேசவும் பிறர்கட்குக்கெடுதலான கார்யத்தில்புத்தியைச்செலுத்தவும் கூடாது. மனமும் வாக்கும் எப்போதும் சுத்தமாகவிருக்கும்படி மிக்க கவனமாகக் காப்பாற்றிவருகிறவன் வேதாந்தத்திற் கூறப்பெறும் ஸம்பூர்ணமான பலனை (பரம் பொருள்) அடைகிருன்" § "கறையான்கள் சிறிது சிறிதாகப்புத்து வைத்துச்சேர்த்து உயர்த்துவது போன்று மனிதர்கள் பரலோக ஸகாயத்தின் பொருட்டு ஸர்வப் பிராணிகளையும் தொந்திரவியாமல் தர்மத்தைக் கொஞ்சம் கொஞ்சமாவது சேகரித்து வரவேண்டும்" என்று கூறப்படுகிறது.



* அத். 2. சுலோ. 156, 160, 161 § அத். 4. சுலோ. 238

## ஐந்தாம் அதிகாரம்.

## விசேஷ தர்மம்.

(தனித்த தர்மம்).

விசேஷ தர்மம் என்பதற்கு தனித்தனியாகப் பிரிக்கப்பட்ட தர்மம் என்று பொருள். உலகத்திலுள்ள மனித வர்க்கத்தினர்களும், அவரது உபயோகத்திலுள்ள பல அனுஷ்டானங்களும் (நடவடிக்கைகள்) சில காரணம்பற்றி வேற்றுமைப்பட்டுப் பிரிந்திருப்பதால் அவை தனித்துக் கூறப்படுவனவா யிருக்கின்றன. அவற்றிற்குரிய தர்மம் விசேஷ தர்மம் எனப்படும். அவை 1. புருஷ தர்மம் 2. ஸ்திரீ தர்மம் 3. குருதர்மம் 4. சிஷ்ய தர்மம் 5. ராஜ தர்மம் 6. பிரஜா தர்மம் 7. வியாபார தர்மம் 8. விவஸாய தர்மம் 9. தேச தர்மம் 10. குண தர்மம் என்ற சில முக்யமான தர்மங்கள் மாத்திரம் பிரித்து இங்கு விவரிக்கப்படுகின்றன. விசேஷ தர்மங்கள் பல வகைப்பட்டிருப்பதுபற்றி அவற்றை பல பாகு பாடுகளாகப் பிரித்து இச்சிறு புஸ்தகத்தில் முழுமையும் விரிவாகக் கூறமுடியாதாதலால் இங்கு சுருக்கிக் கூறப்படும் தர்மங்களின் முறையறிந்து மற்ற தர்மங்களையும் நுட்பமான அறிவுடன் ஆங்காங்கு அறிந்து கொள்ளல் வேண்டும்.

---

### புருஷ தர்மம்.

புத்திசாலியான ஒரு புருஷன் நியாயமான விருத்தியிலிருந்து திரவியம் ஸம்பாதித்து குடும்பத்தில் போஷிக்க

வேண்டியவர்களான வயது சென்ற மாதா பிதாக்கள், புத்ரர்கள், புத்ரிகள், நாதனற்ற ஸகோதரிகள், அசக்தர்களான ஸகோதரர்கள், அவர்களின் பத்னிகள் ஆகிய இவர்களையும் தன்னையும் காப்பாற்ற வேண்டும். அவனே குடும்பத்திற்கு ஸந்தோஷத்தைச் செய்கிறவனாவான். மாதா, பிதா, குரு முதலியவர்களுக்கு மனத்தினாலாவது, வாக்கினாலாவது, செய்கையினாலாவது தீங்கிழைக்கின்றவர்கள் மிகக் கொடிய பாபத்தைச் செய்தவர்கள் ஆகின்றனர். அவர்களைப் போன்ற மகா பாபிகள் உலகத்தில் எவர்களுமில்லை. பிறர் தாரத்தினிடம் எவ்விதத்திலும் மனத்தினாற் கூட இச்சை வைக்கலாகாது. அந்த இச்சை புருஷனுக்கு இவ்வுலகத்திலும் அவ்வுலகத்திலும் பயத்தைக் கொடுக்கக் கூடியது. புத்திரனுக்கு பால்யத்தில் வித்யாப்யாஸம் செய்வித்து நன்னடத்தைகளிற் பழக்கி அவனது ஜீவனத்திற்கு வழி ஏற்படுத்துகிறவனே, கடன் தீர்த்த பிதா எனப்படுவான் * "தந்தை மகற் காற்றும் நன்றி அவயத்து முந்தியிருப்பச் செயல்" என்று திருக்குறள் கூறுகிறது. தகப்பன் விவாகத்திற்குரிய வயது வந்த புத்ரிக்குத் தகுந்த பர்த்தா ஒருவனைத் தேடி அவளை அப்புருஷனுக்கு விதிப்படி விவாகம்செய்து கொடுக்கவேண்டும்.

ஒரு குடும்பத்தில் மூத்த குமாரனாகப் பிறந்தவன் மாதா, பிதா, புத்ரர்கள் இவர்களைக் காப்பாற்றுவது போன்று சிறுவர்களான கனிஷ்ட ஸகோதரர்களையும்

---

* அதி. 7. திருக். 7. தகப்பன் பிள்ளைக்குச் செய்யவேண்டிய கடமையாவது கற்றவர்களது ஸபையிலே அவனை முதல்வனாக இருக்கும்படிச் செய்து வைக்கவேண்டும். எ-ன்.

காக்கவேண்டும். கனிஷ்டர்களும் ஜ்யேஷ்டனிடம் புத்ரர்கள்போன்று அடங்கி இருக்கவேண்டும். நற்குணங்கள் என்ற மகா பாக்யம்பெற்று கிரகத்திற்கு தீபம்போன்று விளங்கிக்கொண்டு ஸந்தான விருத்தியைச் செய்கின்ற பத்னிக்கும் லக்ஷ்மீதேவிக்கும் யாதொரு பேதமில்லை. அவ்விதமான மனைவியினிடம் புத்திமான் வீட்டில் நடத்த வேண்டிய செலவுகளுக்குப் போதுமான திரவியத்தைக் கொடுத்துச் செலவிடச்செய்யவேண்டும். ஏதாவது கார்ய நிமித்தமாக அன்னியதேசம் செல்லுகிறவன் தான் வரும் வரை வேண்டிய திரவியத்தை பத்னியிடம் கொடுத்விட்டுச் செல்லவேண்டும். இல்லாவிடில் ஸ்திரீ ஜீவனத்திற்கு வழியில்லாமல் கஷ்டப்படும்போது நடை கெட்டு விடுவாள். பார்யை பிணியுற்றிருக்கும்போது புருஷன் அவளுக்கு சிகிச்சை செய்யவேண்டும். அவளை அவமதிக்கக்கூடாது. பதிவிரதையான தமது பார்யையினிடம் தப்பிதமான குற்றம்சாட்டி அவளை விலக்குகின்ற அறிவீனர்கள், அதி பயங்கரமான நரகவேதனைகளை அடைவார்கள். ஸந்தேகமில்லை. புருஷன், அவனது மாதா, பிதா, ஸகோதர ஸகோதரிகள் ஆகிய இவர்கள் எல்லோரும் மறுமகள் (மாற்றப் பெண்) என்ற ஸ்திரீயை மரியாதையாக வைத்து நடத்தினால்தான் அவர்கள் கிரகத்தில் லக்ஷ்மீதேவி வஸிப்பாள். மங்களங்களும் பெருகும். ஸ்திரீகளை பூஜ்யதையாய் வைத்து நடத்தப்படுகிற கிரகத்தில் ஸர்வ தேவதைகளும் வஸிக்கின்றனர். அவர்களுக்கு மரியாதையில்லாத கிரகத்தில் செய்யப்படும் ஸமஸ்தமான க்ருத்யங்களும் பலனற்றதாய் விடுகின்றன என்று ஸ்மிருதிகளிற் கூறப்படுகின்றது. சந்திரவம்சத்தில் சந்தனு சக்கரவர்த்திக்குக்

குமாரனுகப் பிறந்த பீஷ்மர் என்பவர் புருஷன் நடத்த வேண்டிய தர்மங்களைக் கசடற நடத்திக் கர்மயோகத்தை நிலை நிறுத்தியிருக்கிருர். ராமர், தர்மர் முதலியவர்களும் தமது கடமைகளைக் கடைப்பிடித்து ஒழுகினவர்களாவர்.

---

## திருஷ்டாந்தக் கதை

7. புருஷ தர்மத்தைப் பற்றின "பீஷ்மர்" என்ற கதை:—சந்திரவம்சத்தில் சந்தனு என்ற அரசன் இருந்தான். அவனுக்கு கங்காதேவியினிடமாகப் பிறந்தவர் பீஷ்மர். அவர் கௌமார வயதில் சகலகலைகளையும் கற்றுணர்ந்தவராக மாத்திரமிருக்கவில்லை. அவ்விதம் ஒழுக்கங்களையும் செவ்வனே விரும்பி வளர்த்தவர். ஒருஸமயம் சந்தனு வேட்டையாடச் சென்றவிடத்தில், படகு ஓட்டுவோன் பெண் ஒருவளைக் கண்டு அவளது வடிவ வனப்பிலீடுபட்டு அவளை மணக்கக் கருதி அவளிடம் கருத்தை வெளியிட்டனன். அவள் "தன் தந்தையினிடம் கேட்டு அவன் ஸம்மதித்தால் தங்களை மணப்பேன்" என்ருள். அவ்விதமே அவளது தந்தையிடம் போய்க்கேட்க அவன் தனது பெண்ணினிடம் பிறக்கும் பிள்ளைக்கே பட்டம் கட்டுவதான நிபந்தனைக் குட்படுவதானுல் அவளை அரசனுக்கு விவாகம் செய்துகொடுப்பதாகச் சொன்னுன். மூத்தகுமாரனுகிய பீஷ்மரே பட்டத்திற்குரியவர் என்பதை அரசன் அறிந்தவனுக இருந்தும் அவளிடமுள்ள ஆவலால் அதனை ஒப்புக்கொண்டனன். ஆனுலும் பருவம் வாய்ந்த பிள்ளைக்குரிய பட்டத்தை நீர் அளிப்பதானுல் அது பின்னர் விவாதத்திற்கு இடமாகுமெனத் தோணிக்காரன் மறுத்தனன். பிறகு பிதாவின் இங்கிதம் அறிந்த பீஷ்மர் வலியச் சென்று "பட்டம் எனக்கு வேண்டாம்" என்று கூறியும் அவன் பீஷ்மரைப் பார்த்து தாம் வேண்டாவிடினும் தமக்குப்பிறக்கும் பிள்ளை அதனை வேண்டுவானுனல் என் பேரனுக்குப் பட்டம் எப்படி இடைக்கும்? என்

ருன். அப்போது பீஷ்மர் "எனக்குப் பிள்ளை பிறவாமலிருக்கப் பரிணயம் செய்துகொள்வதேயில்லை. பிரம்மசாரியாகவே ஆயுள் வரை இருந்து தீர்ப்பேன்" என்று கடுமையான விரதம் பூண்டு த்தகப்பன் உகந்த மணத்தை உடனே முடித்துவைத்தார்.

பிறகு பீஷ்மர் தனது சிற்றன்னையாகிய ஸத்யவதிக்குப் பிறந்த விசித்திர வீர்யனுக்கே கூட இருந்து கிரீடம் புனைந்தனர். ஒருகால் காசிராஜன் தனது பெண்களுக்குச் சுயம்வரம் நாட்டிச் சுற்றிலுமுள்ள அரசிளங்குமரர்களை வரவழைத்தான். அப்போது பீஷ்மர் தனது தம்பிகளையும் அங்கு அதற்கு அழைத்துச் சென்றார். "சுயம்வரத்திற்கு ஏற்படுத்தியிருந்த பந்தயத்தில் வெற்றி பெறத் தம்பிகள் வல்லவரல்லர்" என்று அறிந்தார் பீஷ்மர். பிறகு காசிராஜனைத் தனியாக அழைத்துத் தான் தம்பிகளுக்குச் சகாயமாக வந்திருப்பதையும், தம்பியின் அரசு வல்லரசாக விருப்பதையும், பிறர் அதைக் கவராதவண்ணம் தானே மந்திரியாகவும், தந்திரியாகவுமிருந்து அதனைக் காத்துவருவதையும், தம்பிகளுக்காகவேண்டுவதைத் தகப்பன்போன்று நிறைவேற்றத் தானே கடமைப்பட்டிருப்பதையும் தெரிவித்து அவனதுபெண்களைத் தம்பிகளுக்கு அக்கினி ஸாக்ஷியாக பிரம்ம விவாகமாய்ச் செய்துகொடுக்க வேண்டினர். "பீஷ்மர் க்ஷத்திரியகுலதிலகர்; மகா புஜபல பராக்கிரமசாலி; வில்வித்தையில் இணையற்றவர்; அவர் ஏற்ற கருமத்தை எப்படியாவது செய்து முடிப்பார்; அவரை எதிர்க்கத் தாரணியில் தக்கவன் எவனுமிலன்" என்பதைக் காசிவேந்தன் முன்னமே தெரிந்தவன். ஆயினும் அப்போது வினைப்பயனாலவன் அவரது வேண்டுதலை வெறுத்தான். உடனே பீஷ்மர் க்ஷத்திரியர்க்குரிய ராக்ஷஸ விவாகத்தை ஏற்று அவனது பெண்களை வேந்தர்கள் விழித்துப் பார்த்துக்கொண்டிருக்கும்போதே பலாத்காரமாய் அபகரித்துக் கொண்டுபோய் தம்பிகளில் மூத்தவனாகிய விசித்திர வீர்யனுக்கு அம்பிகையையும், இளையவனாகிய சித்திராங்கதனுக்கு

அம்பாலிகையையும் பரிணயம்செய்துமுடித்தார். பின்னர் தம்பி ஒருநால் கந்தர்வ ராஜனிடம் சண்டையிட்டு இறந்துபோக அர விற்கு ஆள் இல்லாது அவனியிலுள்ளோர் படும் துயரத்தை கண்டு அந்த இடரைத்தீர்க்க எண்ணினர். அதன் பிறகு அவர முயற்சியால் வியாஸ ரிஷியின் அனுக்கிரகம் கிடைத்தது. அ ஞல் அம்பிகைக்கும் அம்பாலிகைக்கும் பிள்ளைகள் உண்டாயின

அம்பிகையின் பிள்ளை திருதராஷ்டிரன் குருடனகப் பிறந் தாலவர் அம்பாலிகையின் பிள்ளையாகிய பாண்டுவிற்கே பட் மளித்து அவனுக்குதவியாயிருந்து பூமியைப் பரிபாலித்து வந்தா பால்யத்திலேயே ஐந்து குமாரர்களைவிட்டுப் பாண்டு இறந்துபோ அவர்களுக்குக் கல்விகற்பித்துக் கருத்தாயவர்களைக் காப்பாற்றி பிறகு தீராத நிலைமையில் திருதராஷ்டிரனுக்கே பட்டமளித்து தானும் அவனுக்குத் துணையாகவிருந்து அரசாண்டார். திரு ராஷ்டிரன் பிள்ளைகளாகிய துரியோதனதியர் நூறு பே கள், பாண்டவர் ஐவரையும் அவ்வப்போது கொல்ல யத்தனி தை எவ்வளவோ புத்திகள் கூறித்தடுத்தனர். என்ன உபாய செய்தாலும் துர்யோதனதியர்களின் கொடுமைகளை முற்றிலு தடுக்க அவராலும் முடியவில்லை. பிறகு துர்யோதனன் அரசனுகி தந்திரமாய்ப் பாண்டவர்களைக் காட்டிற்கு ஓட்டியதை வெறுத்து கூறினர். வனவாஸமானபிறகு பாண்டவர்களுக்கும் கௌரவர் களாகிய துர்யோதனதியர்களுக்கும் சண்டை மூண்டபோது பீஷ் மரைப் பாண்டவர்கள் தம் பக்கலிருக்கவேண்டினர். அப்போது பீஷ்மர் சொன்னதாவது:— " என் உடல் துர்யோதனன் அன் னத்தை உண்டு உயிருற்றிருப்பதால் உணவுகொடுத்தவனுக்கே உடல் உரித்தாயது. எனது உடம்பினுல் ஆகக்கூடிய உதவியைக் கபடமின்றி அவனுக்கே நான் கொடுத்துத் தீருவேன். நீங்கள் அக் கிரம வழிகளிற் செல்லாத யோக்கியர்களாதலால் எனது உள்ளம் உங்களிடமே கனிவுற்றிருக்கிறது. ஆதலால் எனது உள்ளத்தா

லாகிய அருளையும் அன்பையும் ஆசீர்வாதத்தையும் உங்கள்பால் கொடுத்தேன், போய்வாருங்கள்" என்றார். இம்மாதிரி மனிதர் கடமையை மாசறச்செய்ததால் அமர்களத்தில் அர்ஜுனன் கணை களால் அடிக்கப்பட்ட பீஷ்மர் அப்போதே இறக்கநேரிடினும் உத்த ராயணமாகிய நற்காலம்வரும்வரை மரணத்தைவென்று தமது உயிர் துறவாது பாணப் படுக்கையில் படுத்தவாறே இம்மைக்கும் மறு மைக்கும் வேண்டிய ஆயிரக்கணக்கான நீதிவாக்கியங்களைத் தரும ருக்கு உபதேசித்தார். அதனாலேயே அவருக்கு ஸ்வச்சந்த மரணர் என்ற பெயர் வந்தது. அவ்வுபதேசமே பாரதத்தில் சாந்தி பர்வம் எனப்படும். அதன் சிறப்பை எடுத்துக் கூறுவதைவிட சிறியவர் முதல் பெரியவர் வரை பாரதம் முழுதும் படிக்காவிடினும் அதனை யாவது அவசியம் படிக்கக்கடவர் என்று கூறுவதுதான் உசிதம் என்று தோன்றுகிறது. இக்கதாநாயகராகிய பீஷ்மரது பெருமை என்ற பாஸ்கரனது சிற்சில கிரணங்களே இங்கு வெளியிட லாயின. ஒவ்வொரு மனிதனும் தனது குடும்பக் கடமைகளைக் கடைப்பிடித் தொழுக வேண்டுமென்பதற்கு இக்கதை நிதர்சனம்.

---

## ஸ்திரீ தர்மம்

ஸ்திரீயானவள் கணவனை ப்ராணனாக நினைத்து ஸந் ததிகளைப் பெற்றுக்கொண்டு திரிகரணங்களாலும் சுத்த மாக இருக்கவேண்டும். அவள் பர்த்தாவின் உத்திரவின் படி நடந்துகொண்டு நற்கார்யங்களில் அவனது நிழல் போன்று அவனைப்பின்பற்றி, நண்பன்போன்று அவனுக்கு உதவி செய்யவேண்டும். அவள் எப்போதும் ஸந்தோஷத் துடன் கிரக கிருத்யங்களில் ஸாமர்த்திய முற்றிருக்க வேண்டும். அவள் அனாவசியமாய் அன்ய புருஷர்களிடம்

பேசக்கூடாது. அவள் வீட்டுக் கார்யங்களுக்கு அதிகச் செலவுசெய்யாமல் செட்டாக அதனை அளவுக்குட்படுத்தி நடத்திக்கொண்டு பர்த்தாவின் தர்ம கார்யங்களுக்கு விரோதமின்றி நடக்கவேண்டும். அவள் நல்ல நடத்தை யுற்று இந்திரியங்களையடக்கி பர்த்தா, மாமனார், மாமியார், நாத்தனார், மைத்துனர் ஆகிய இவர்களிடம் மரியாதை யாய் நடந்துகொண்டும் இருக்கவேண்டும். முற்கூறியபடி யெல்லாமிருக்கின்றவளே பார்யை எனப்படுவாள். அவளே இம்மையிலும் புகழ்பெற்று மறுமையிலும் ஒப்பற்ற ஸுகம் பெறுவாள். * "தற்காத்துத் தற்கொண்டார் பேணிதகைசான்றச் சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்பது திருக்குறள்.

பர்த்தா அழகில்லாதவனும், தீயநடத்தை கெட்ட ஸ்வபாவ முற்றவனும், கொடியவனும், தரித்திரனும், நிந்திக்கத் தகுந்தவனுமாக இருப்பினும் அவனை மனைவி தேவதையைப்போல் நினைத்து திரிகரண சுத்தியுடன் எப் போதும் பூஜிக்கவேண்டும். அவள் சொற்படி உலகம் நடக்கும் ‡ "தெய்வம் தொழா அள்கொழுநற் றெழு

---

* அதி. 6. திருக். 6. (கற்பினின்றும் வழுவாமல்) தன்னைக் காப்பாற்றி தன்னைக் கொண்டவனையும் (உண்டி முதலியவற்றால்) உபசரித்து தம்மிருவரிடத்தும் நன்மையடைந்துப் புகழ்த்தப்படும் சொல்லினையும் (தம்மை விட்டு நீங்காது) காப்பாற்றி முற்கூறிய வற்றில் குறைவில்லாமலிருப்பவளே பெண் ஆவள் எ-ள்.

‡ அதி. 6. திருக். 5. (அன்ய) தெய்வத்தை வணங்காளாகி (தன் தெய்வமாகிய) கணவனை வணங்கிக்கொண்டு (நித்திரைவிட்டு எழுந்திருப்பவள் "பெய்" என்று சொல்ல மழை பெய்யும் எ-ள்.

தெழுவாள் பெய்யெனப் பெய்யு மழை" என்பது திருக் குறள். பார்யை கிரகத்தைச் சுத்தமாய் வைத்துக்கொள்ள வேண்டும். வீட்டிலுள்ள தான்யம் முதலிய சாமான்களை சிந்தாமல் சிதறாமல் சேதமாக்காமல், செவ்வனே வைத் துப் பாதுகாத்து வரவேண்டும். அவள் புத்ரர்கள், மித்ரர் கள், குருக்கள், பந்துக்கள், வேலைக்காரர்கள், வேலைக்காரி கள், விருந்தாளிகள், பிச்சைக்காரர்கள் ஆகிய இவர்க ளிடம் அவரவர் தகுதிக்குத்தக்கபடி மரியாதையாயிருந்து அவர்களை உபசரிப்பதிலும் போஜனம் செய்விப்பதிலும் அவர்களுக்கு தர்மம் கொடுப்பதிலும் ப்ரியமாய்ப் பேசு வதிலும் மிக்க ஸாமர்த்திய முள்ளவளாக விருக்கவேண்டும். வீட்டுச் செலவுகளுக்குத் தன்கையில் கணவன் கொடுத்த பொருளினால் கிரக கார்யச் செலவுகளை ஒழுங்காய்ச் செய்து அப்பொருளில் கொஞ்சம் மீதம்வைத்துப் புருஷ னிடம் கொடுக்கின்ற மனைவியே புத்திசாலியான பார்யை எனப்படுவாள். * "மனைமாட்சி இல்லாள் கண் இல்லா யின் வாழ்க்கை எனைமாட்சித் தாயினுமில்" "இல்ல தென் இல்லவள் மாண்பானால் உள்ளதென் இல்லவள் மாணாக்கடை" என்பர் திருவள்ளுவர்.

---

* அதி. 6. திருக். 2, 3. இல்லறத்துக்குத் தகுந்த நற்குண நற்செய்கைகள் (ஒருவனது) மனையாளிடத்தில் இல்லையாயின் அவ் வில்வாழ்க்கையானது (செல்வத்தால்) எவ்வளவு பெருமை யுடைத் தாயிருப்பினும் அப்பெருமையுடையதன்று எ-ள். (ஒருவனுக்கு) மனையாள் நற்குண நற்செய்கைகளுற்றிருந்தால் இல்லாதது யாது? மனையாள் அப்படிப்பட்டவளாகாதிருந்தால் உள்ளது யாது? எ-ள்.

காமத்திற்காக பர்த்தா கொடுத்த பொருளில் பார்யை மீதம் வைக்கக்கூடாது. அப்படி மீந்ததை அவனுத்திரவின்றி தன் பந்துக்களுக்குக் கொடுக்கக்கூடாது. அன்ய புருஷர்கள் விருப்பத்துடன் பார்த்துப் பிரியமான வார்த்தைகளைப் பேசிப் பொருள்களினால் ஆசையை யுண்டு பண்ண முயற்சித்து ஸங்கடமான ஜனக் கூட்டத்தில் தொட்டு இழுத்தபோதிலும் மனத்தில் யாதொரு விகார மடையாமல் திரிகரண சுத்தியாக விருக்கின்றவளே உலக மனைத்திற்கும் அலங்காரமான பதிவிரதை. § "சிறை காக்கும்காப்பு எவன் செய்யும் மகளிர் நிறை காக்கும் காப்பே தலை" என்பது திருக்குறள். விரதம், உபவாஸம், தர்மம், இவற்றைச் செய்து ஒரு ஸ்திரீ ஸ்வர்க்கமடைவதைவிட கணவனை பூஜிப்பதனாலேயே எளிதில் ஸ்வர்க்கமடைகிறாள். மேலும் பார்யை பர்த்தாவைவிட்டும் அவன் அனுமதியின்றியும் யாதொரு தர்மகார்யங்களைச் செய்யக்கூடாது. கணவன் செய்யும் தர்ம கார்யங்களுக்கு அனுகூலமாயிருக்கின்ற பார்யை அவற்றின் பலன்களில் பாதிப் பங்கு பெறுகின்றாள். வேதத்தில் "கணவனின் பாதியுடம்பு பார்யை" எனப்படுகிறது. நல்ல ஸ்வபாவமுள்ள ஸ்திரீகளுக்கு பர்த்தாவே பரதேவதை. அவனுக்குப் பணிவிடை செய்வதே ஸ்திரீகளுக்குத் தவம். அவர்கள் வேறு தவஞ் செய்ய வேண்டியதில்லை. காமத்தினாலோ, கோபத்தி

---

§ அதி. 6. திருக். 7. பெண்டிரை சிறை (பிறர்போக முடியாதவிடம்) யில் வைத்துக் காக்கப்படும் காவலானது என்னப் பிரயோஜனத்தைச் செய்யும். அவர்கள் தமது நிறைவாகிய கற்பினால் காத்துக்கொள்ளும் காவலே தலைமையானது எ-ள்.

ஞலோ, த்வேஷத்திஞலோ கணவனை அவமதிக்கின்றவள், இவ்வுலகிலும் அவ்வுலகிலும் துன்பம் அனுபவிக்கிருள். § "மனைத்தக்க மாண்புடையளாகித் தற்கொண்டான் வளத்தக்காள் வாழ்க்கைத்துணை" என்பது திருக்குறள்.

கிரகிணியானவள் வீட்டைவிட்டு வெளியில் போகும் போது மேல் வஸ்திரத்தால் உடம்பைப் போத்திக்கொண் டும் குதிகால்வரை வஸ்திரம் தரித்துக்கொண்டும் போக வேண்டும். அவள் வீட்டில் பெரியோர்களிடம் சொல்லிக் கொள்ளாமல் வெளியே போகக்கூடாது. வேகமாய் ஓடக் கூடாது. உடம்பு அசையும்படி சிரிக்கக்கூடாது. சிரிப்பு வந்தால் வாயைக்கையால் மூடிக்கொண்டு மெதுவாய் சிரிக்கவேண்டும். ஸ்திரீகள் முகத்திற்குப் புன்சிரிப்பே அணிகலமாகும். பர்த்தாவையும் அவன் பந்துக்களையும் தூஷிக்கக்கூடாது. வேசிகள், வியபிசாரம் செய்கிறவள், அன்னிய புருஷர்களுக்குப் பிறர் மனைவிகளைச் சேர்த்து வைத்துப் பணம் ஸம்பாதிக்கிறவள், கெட்ட நடத்தையும் கெட்ட ஸ்வாபவமுமுள்ளவள் ஆகிய இவர்களுடன் பதி விரதையான ஒரு ஸ்திரீ இணங்கியிருத்தல் கூடாது. அவர்களுடன் பேசக்கூடாது. அவர்களுடன் எக்கார

---

§ அதி. 6. திருக். 1. இல்லறத்துக்குத் தக்க மாண்பு (துறந் தவர், விருந்தினர், எளியவர் முதலானோரை உபசரித்துப் புசிப் பித்தல் முதலிய நற்குணங்கள், வாழ்க்கைக்கு வேண்டும் பொருள் அறிந்து காப்பாற்றிவைத்தல், உண்டி சமைத்தலில் வல்லமை, உபகாரஞ்செய்தல் முதலிய நற்செய்கைகள் இவற்றை) உடையவ ளாகித் தன்னைக்கொண்ட கணவனது வரவுக்குத் தகுந்த செலவு செய்பவள் வாழ்க்கைக்குத் துணையாவாள் எ-ன்.

னத்திலும் ஒரு இடத்தில் சேர்ந்திருக்கவும் கூடாது. சேர்க்கையினலேயே நல்ல நடத்தையும் கெட்ட நடத்தையும் உண்டாகிறபடியால் கெட்ட சேர்க்கையை விலக்க முயற்சிக்கவேண்டும். இவ்விதமாகப் பெண்கள் மிகவும் ஜாக்ரதையாகவிருந்து தமதுகற்பைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டும். * "பெண்ணிற் பெருந்தக்கயாவுள கற்பென்னுந் திண்மையுண்டாகப் பெறின்" என்பது திருக்குறள்.

ஸ்திரீ புருஷர்கள் ஒருவரையொருவர் அதிக நாள் விட்டுப் பிரிந்திருந்தால் இருவர்களுடைய நடத்தைக்கும் பிசகுண்டாகுமாகையால் அவர்கள் மரணம்வரை கூடிய மட்டில் விட்டுப்பிரியாமலிருப்பதற்கே ப்ரயத்னம் செய்ய வேண்டும். இதுவே தம்பதிகளுக்கு சுருக்கமாய்ச் சொல்லப்படும் சிலாக்யமான தர்மம். ராமரும் ஸீதையும் வனவாஸத்திற்கூடப் பிரியாமலிருந்ததால் அவர்களே இதற்கு முக்ய திருஷ்டாந்தமாவர். பர்த்தா இறந்தபிறகு பிரம்மசாரி விரதத்தை அனுஷ்டிக்கின்ற ஸ்திரீகள் புத்திரர்களில்லாவிடினும் நற்கதியடைகின்றனர். முற்கூறிய தர்மங்கள் மனுதர்மம் முதலிய நூல்களில் சொல்லப்படுகின்றன. பின்னும் தத்தம் கல்வி கேள்விகளினல் அறியப்படும் தர்மங்களையும் ஸூக்ஷ்மமாயறிந்து நடத்துகிற ஸ்திரீகள் தாங்களும் நன்மையடைந்து பிறர்கட்கும் நன்மை பயக்

---

* அதி. 6. திருக். 4. (ஒருவனது மனைவிக்கு) கற்பு (பதிவிரதா தர்மம்) என்ற கலங்காத நிலைமை உண்டாயிருக்கப்பெற்றால் அம்மனையாளைவிட பெறவேண்டிய உயர்ந்த பொருள்கள் (உலகத்தில்) எவை இருக்கின்றன? எ-ள்.

கின்றவர்கள் ஆவர் என்றும், அதர்மங்களைத் தழுவுகின்ற வர்கள் தாங்களும் கெட்டுப் பிறர்களையும் கெடுத்துவிடு கிறவர்கள் ஆவர் என்றும் அறியவேண்டும். நளாயினி, துரௌபதி, ஸாவித்ரி, தமயந்தி முதலியவர்கள் ஸ்திரீ தர்மங்களை ஸரியாய் அனுஷ்டித்தவர்களாதலால் அவர் களின் பெயர்கள் இன்றும் விளங்கிக்கொண்டிருக்கின்றன.

---

## திருஷ்டாந்தக் கதை.

8. ஸ்திரீ தர்மத்தைப் பற்றின "நளாயினி" என்ற கதை:—நளாயினி என்பாள் நளமகாராஜனது குமாரி. மௌத் கல்யர் என்ற வயதுசென்ற ஒரு முனிவர் தனக்கு அவளை மணந்து கொடுக்க அரசனிடம் வந்து கேட்டார். "எனது குமாரி சம்ம தித்தால் தங்களுக்கு அவளை விவாகம் செய்துகொடுக்கிறேன்" என்று வேந்தனியம்பினான். ரிஷி நளாயினியிடம் செல்லும் போது அழகிய வாலிபனுருவங்கொண்டு போய் நடந்த ஸங்கதி யைச் சொல்ல அவள் அவரை மணப்பதாக ஒப்புக்கொண்டு அதன் அடையாளமாகத் தனது முத்திரைக் கணையாழியைக் கழற்றி முனிவரிடம் கொடுத்தாள். அதை வாங்கிக்கொண்டு அவர் அரச னிடம் வரும்போது பழைய உருவங்கொண்டுவந்து சங்கதியைச் சொல்லி மோதிரத்தைக் கொடுத்தார். அரசனதனை நம்பாமல் பெண்ணை அழைத்துக் கேட்க அவள் "அப்பனே! மோதிரம் வாங் கும்போது வாலிபனாக இருந்தவர் இப்போது கிழவராயிருக்கிறார். இது என்ன விந்தை! இவர் ஒரு மகானாக இருக்கக்கூடும். இவ ரிடம் ஒப்புக்கொண்டதை மறுப்பது ஸரியல்ல. நான் இவரையே மணந்து வாழ்கின்றேன்" என்றாள். அவள் இஷ்டப்படியே அவ் விருவருக்கும் விவாகம் நடந்தது. கிழவனுக்கு வாழ்க்கையான

தைப் பற்றி மனத்தில் வெறுப்பு கொள்ளாத மனைவியை
துக்கொண்டு மகர்ஷி காட்டிற்போய்த் தனது குடிசையில்
தனம் செய்தார். சில மாதங்களான பிறகு அவள் மனத்தை
சோதிக்கத் தன் உடம்பில் குஷ்டரோகத்தை அம்முனிவர்
திக்கொண்டார். அப்போதும் அவள் மனந்தளராமல் அவரு
பணிவிடை செய்துகொண்டு அவரைத் திருப்தி செய்தாள்.
அவளை அதிகமாய்ச் சோதிக்கவேண்டி "நாயகி! புண்ய தீர்
களில் சென்று ஸ்நாநம் செய்து எனது இவ் வியாதி நிமித்
மகாபாபத்தைப் போக்கக் கருதுகிறேன்; என் எண்ண
நிறைவேற்ற உன்னால் முடியுமா?" என்று முனிவர் கேட்
"நாதா! தங்கள் மனத்தின்படி நடப்பதே அடியாள் கட
முடியாததையும் முடிக்கச் செய்வது தங்கள் அருள்தானே.
னால் என்ன? இதோ இந்தப் பெரிய கூடையில் உட்காருங்
என்று அவள்சொல்ல அவ்விதமே கூடையில் உட்கார்ந்த அ
தூக்கித் தலையில் வைத்துக்கொண்டு அவர் குறிப்பிடும் க்ஷேத்
களுக்கெல்லாம் அவள் சென்றனள். பின்னும் அவளைச்
சோதிக்க முனிவர் ஒரு ஊரில் தெருவிற்போன தாசியைப்பார்
அவளிடம் தான் பிரியங்கொண்டதாகப் பாவித்தார். நளா
அக்குறிப்பையும் அறிந்து அந்த தாசியினிடம் சென்று பல
வேண்டிக் கணவன் இஷ்டத்தைப் பூர்த்திசெய்தாள்.

அதன் பிறகு அவரைத்தூக்கிக்கொண்டு அடுத்த ஊர் போ
போது இரவில் வழியிலே மாண்டவ்யரைக் கழுமரத்திலே
யிருப்பது தெரியாமல் அவள் தலையிலுள்ள கூடையை அவர் கா
தாக்கவே அவருக்கு நோவு உண்டாயது. அதனால் அவர் "இ
மங்கை சூரியன் உதிப்பதற்குள் மங்கலம் இழக்குக" என்
சினந்து சபித்தார். அதைக்கேட்ட கற்பிற்கரசி "சூரியன் உ
மாகாமலிருக்குக" என்று மறுத்து சபித்தாள். அப்படியே எட்

நாட்கள் சூரியோதயமாகவில்லை. அதனால் தேவர்களும், மனிதர்களும் பட்டகஷ்டம் சொல்லிமுடியாது. தேவர்கள் மாண்டவ்யரிடம் வந்து சாபத்தை மாற்ற மிகவும் வேண்டிக்கொண்டனர். பிறகு அவர் தனது சாபத்தை மாற்ற, நளாயினியும் தேவர்களின் பிரார்த்தனைக் கிணங்கித் தனதுப் பிரதி சாபத்தையும் மாற்றினள். பிறகு உலக கார்யங்கள் ஒழுங்காய் நடந்தன. நளாயினியின் கற்பை மௌத்கல்யர் பலவிதமாய்ப் பரீக்ஷித்துப் பார்த்தனர். அவள் சிறிதும் மனம் சலியாதவளாய் ராஜகுமாரியாகவிருந்தும் அரிய பெரிய கஷ்டங்களை அனுபவித்தாவது கணவனைக் களிப்பித்தனள். அதனால் மிக்க ஸந்தோஷமுற்ற முனிவர் அதுமுதல் சுந்தரவடிவங்கொண்டு அவளோடு சுகமாய் வாழ்ந்திருந்தனர். உத்தம ஸ்திரீயின் வசமாக உலகமே கட்டுப்பட்டு நிற்குமாதலால் நங்கையர் யாவரும் நளாயினிபோலிருக்கவேண்டும் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

---

## குரு தர்மம்.

மனிதர்கள் ஜன்மமெடுக்கும்போது அவர்களின் பூர்வ ஜன்மத்திய பழைய அறிவின் வாஸனைப் பிந்திய ஜன்மத்திலும் தொடர்ந்துகொண்டு வருகிறது. ஆனால் அவர்களுக்கு ஒரு ஜன்மம் போய் மறு ஜன்மம் வரும்போது அந்த வாஸனை முன் ஜன்மத்திற் பிறகாசிப்பது போன்று பின் ஜன்மத்திலும் நன்றாய்ப் பிரகாசியாமல் மலினமாய் உள்ளே அடங்கி விடுகிறது. ஏனெனில் அவர்களது பிறவியின் இயற்கையினால் உண்டாகும் ஒருவித அஜ்ஞானம் அதனை விளங்க வொட்டாமல் இருள் போன்று சூழ்ந்து மறைத்து மழுங்கினதாகச் செய்து

கொண்டு வருகிறது. அந்த அஜ்ஞானமாகிய இருளை விலக்கிப் பல ஜன்மங்களின் பயிற்சியினால் விருத்தியடைந்திருக்கும் முற்கூறிய அவ்வாஸனையைத் தூண்டிப் பிரகாசப் படுத்தி இந்த ஜன்மத்தில் அது மேலும் வளருவதற்கான தர்மநெறி முறைகளை உபதேசிக்கின்றவர் குரு (கு-இருள், ரு-நீக்குகிறவர்—இருளை நீக்குகிறவர்) எனப்படுவர். அவர் ஒழுகவேண்டிய தர்மம் குரு தர்மம் எனப்படும். அவர் உபாத்தியாயர், புரோஹிதர், ஆசார்யர் என மூவகைப்படுவர். அவரது தர்மம் இங்கு கூறப்படும்.

---

### உபாத்யாயர் தர்மம்.

மாந்தர் தர்மங்களைக் கற்றுணர்ந்து அவற்றின்படி ஒழுகி தமது ஆத்மா மேற்பதவியை அடைவதற்குரிய வழியைத் தேடுவதற்கு அவர்கள் ஸ்தூல சரீரத்துடன் இருந்துதான் முயற்சிக்க வேண்டும். ஆதலால் அதுவே ஸகல தர்மங்களுக்கும் முதல் ஸாதனமாக இருக்கிறது. ஒவ்வொருவரும் உயிருடன் பிழைத்திருப்பதற்கு உடம்பினைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டியது அவசியம். அதற்கு வேண்டிய ஜீவனோபாயக் கல்விகளைக் கற்பிக்கின்றவர் உபாத்தியாயர் எனப்படுவர். தர்ம ஸாதகமான சரீரத்தின் தாரணைக்குரிய கல்விகளை போதிப்பதால் அவர் உப-அத்யாயர் (ஸாதக வித்யா போதகர்) எனப்படுவர்.

அவர் தம்மிடம் கல்வி கற்க வந்த மாணவர்களுக்குத் தமக்குத் தெரிந்தனவற்றை ஒளிக்காது உண்மையுடனும் ஆதாவுடனும் சோம்பலுறாமல் குறிப்பிட்ட காலத்தில்

ஒழுங்காகக் கற்பிக்கவேண்டும். மாணவர்களுக்குக் கல்வி
கற்பிப்பதுபோன்று ஒழுக்கத்தில் அவர்களைப் பயிற்பிப்
பதும் உபாத்யாயரின் முக்யமான கடமையாகும். அவரது
பழக்க வழக்கங்களே அனேகமாய் மாணவர்கள் புத்தி
யிற் பதியுமாகையால் கல்வியிற் போன்று ஒழுக்கத்திலும்
சிறந்தவரே உபாத்தியாயராகக் கருதப்படுவார். அவர்
மாணவர்களின் அற்பமான காலத்தையும் அருமையாக
நினைத்து அதை வீணாக்கிவிடாமல் கவனமாய் சிரத்தை
யுடன் கற்பிக்கவேண்டும். தம்மை நம்பி கல்வி கற்கவந்த
மாணவர்களுக்குச் சரியாய்ப் படிப்பிக்காத உபாத்தியாயர்
அவர்களைமாத்திரம் கெடுத்தவராகார். பின்பு அவர்களால்
போஷிக்கப்பட வேண்டிய பல குடும்பங்களுக்கும் கடுந்
திங்கிழைத்தவராகி அனேக ஜீவன்கள் பிழைக்கும் வழி
யைக் கெடுத்த மகா பாபங்களை மூட்டையாகக் கட்டி
ஏற்றுக் கொள்ளுவர். தம்மை சரண்புகுந்த மாணவர்
களைத் தம் பிள்ளைகளாகப் பாவித்து அவர்களிடம் அன்
பும் அருளுமுற்று அவர்களை முன்னுக்குக் கொண்டுவர
வேண்டிய ஊக்கத்துடன் கற்பிப்பதில் உண்மையாய்
உழைப்பு எடுத்துக்கொள்ளும் உபாத்தியாயரோ! பின்பு
பல நூறு குடும்பங்களைப் போஷிக்கின்ற தமது சீடர்கள்
ஸம்பாதிக்கும் புண்யக் களஞ்சியத்திற் பெரும் பாகம்
பங்கு பெருவர் என்பது நிச்சயம். அவர் மாணவர்களின்
புத்தி நுட்பம் சரீர திடம் முதலியவற்றின் திறமையறிந்து
அதற்குத் தக்கவாறு சிக்ஷிக்கவேண்டும். மாணவர்களின்
சரீர ஆரோக்கியத்தைப் பற்றின பொறுப்பு உபாத்தியா
யரிடத்தும் சார்ந்திருக்கிறது. இம்மாதிரியான பல நற்

குணங்கள் உபாத்யாயருக்குக் கடமையாக உள. *" கடனென்ப நல்லவை யெல்லாம் கடனறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு" என்பது திருக்குறள்.

---

புரோஹிதர் தர்மம்.

மனிதர்களின் ஜீவன் கர்ப்பத்தில்தோன்றிப் பிறந்தது முதல் இறந்துத் திரும்ப மறு ஜன்மம் எடுக்கும் வரை, அவர்களது ஆத்ம சக்தியை புதிப்பித்து அதனால் அவர்கள் பின்னும் நற்கதி யடைவதற்காக சாஸ்திரங்களில் ஸம்ஸ்காரங்கள் (புதுப்பிப்பன) என்ற பல கிரியைகள் கூறப்படுகின்றன. அவற்றின் மந்த்ரங்களையும் தந்த்ரங்களையும் உபதேசிக்கின்றவர் புரோஹிதர் எனப்படுவர். அவ்வப்போது கிரஹத்தில் நடக்கின்ற நன்மை தின்மையான கார்யங்களிற் செய்யவேண்டிய பலவித ஸம்ஸ்காரங்களை புரோஹிதரை முன்னிட்டே யாவரும் செய்யவேண்டும். புரோஹிதர் என்பதற்கு கர்மங்களின் முன் வைக்கப்பட்டவர் என்று பொருள். புரோஹிதரின்றி செய்யப்படும் கர்மங்கள் யாவும் பலனற்றதாய் விடுவதுடன் ஒரு ஸமயம் கெடுதலுக்கும் காரணமாகும். அவர் ஸகல சாஸ்திரங்களையும் கற்றுணர்ந்து கர்மங்களில் குற்றம் நேராதவண்ணம் ஜாக்ரதையாகவும் ஒழுங்காகவும் அவற்றை நடத்திவைக்கும் தொழிலினைக் கடமையாகக் கொண்

---

* அதி. 99. திருக் 1. பல குணங்களைக் கடனாக அறிந்து ஆளுந் தன்மையை மேற்கொண்டு நடப்பவர்களுக்கு நல்ல குணங்கள் யாவும் கடமையாக உள்ளன என்று கூறுவர் அறிஞர் எ-ன்.

டவராதலால் அவற்றில் நேரிடும் குற்றங்களுக்கு அவரே பாத்தியப்பட்டவராவர். அவற்றால் உண்டாகும் பாபம் அவரைச் சார்ந்ததே. "சிஷ்யனின் பாபம் குருவைச் சாரும்" என்ற ஆன்றோர் வாக்யமும் அதனை உணர்த்துகிறது. ஆதலால் புரோஹிதரின் பொறுப்பு ஸாமான்யமல்லவென்று அறியவேண்டும்.

---

## ஆசார்யர் தர்மம்.

வேதாகமங்கள் வேதாந்தங்கள் முதலிய ஸர்வ சாஸ்திரங்களின் கருத்துகளை ஆராய்ந்து அவற்றை சிஷ்யர்களின் மனப் பக்வத்திற்குத் தக்கவாறு உபதேசித்துப் பிரவிர்த்தி நிவிர்த்தி மார்க்கங்களின் தர்மங்களைப் பின்பற்றச் செய்கின்றவரும், அந்தந்த தேவதைகளின் மகா மந்த்ரங்களை முறையுடன் ஜபித்து அவற்றில் ஸித்தி பெற்று தம்மை சரண்புகுந்த சிஷ்யர்களுக்கு அவற்றை உபதேசிக்கின்றவருமான குரு, ஆசார்யர் எனப்படுவர். அப்பதத்திற்குத் தர்மங்களைச் சேர்த்து வைப்பர் என்று பொருள். அவர்கள் தற்காலம் பெரும்பாலும் மடாதிபதிகளாக விளங்குகின்றனர். ஒவ்வொரு மடத்தையும் சார்ந்த சிஷ்யர்களின் ஆத்மா, மோக்ஷம் பெறுவதற்கு வேண்டியதான தத்வஜ்ஞானத்தை விளக்குவதன் பொருட்டு அதற்குரிய மந்த்ரங்களையும், சாஸ்திரங்களையும் தாமே நேராகவும், தமது உதவி ஆசார்யர்கள் மூலமாகவும் உபதேசித்து அவர்களை ஸம்ஸார ஸாகரத்தினின்றும் கரையேற்றுவதற்கான பெரும் பொறுப்பைக் கடமையாக ஏற்றுக்கொண்டவர்கள், முற்கூறிய ஆசார்யர்

களே. அவர்கள் மிகப் பெரியதும் அரியதும் சிறந்ததும் தெய்வாம்சம் பெற்றதும் சிரமப்பட்டு நிறைவேற்ற வேண்டியதுமான பொறுப்பை ஸரியாய் நடத்துவதற்காகவே அவர்களுக்கு வேண்டிய ஸகல ஸௌகர்யங்களை அவர்களது இஷ்டப்படி நன்றாய் அமைத்துக்கொள்ள பழைய வேந்தர்களும் ப்ரஜைகளுமாகச் சேர்ந்து மிகுந்த சொத்துக்களை மானியமாக ஏற்படுத்தி யிருப்பதுடன் தற்போதும் சிஷ்யர்கள்பக்தியுடன் காணிக்கைசெலுத்துகின்றனர்.

ஆதலால் எவ்வளவோ ஜீவராசிகளைக் காப்பாற்ற வேண்டிய அவ்வளவு பெருமை பொருந்தியதான ஆசார்ய ஸ்தானமென்பது ஈசுவரத்தன்மை யுற்றதென்றே தீர்மானிக்கவேண்டும். அவரை ஈசுவரனாக உபாஸிக்கவேண்டும். அவரே காணப்படும் தெய்வம் எனப்படுவர். ஈசுவரனே உலகத்திலுள்ள ஜீவர்களைக் காப்பாற்ற உருவெடுத்து ஆசார்ய ரூபமாய் வந்திருக்கிறார் என்று அறிய வேண்டும். அந்த ஸ்தானம் பலகோடி ஜன்மங்களிற் செய்த புண்ய கர்மத்தின் பயனாக கிடைக்கக்கூடியது. ஆதலால் அவரையே எல்லோரும் சரணமடைந்து அவரது அருள் பெற வேண்டுமென்பது நிச்சயம்.

சைவம், வைஷ்ணவம், த்வைதம், அத்வைதம் என்ற முக்யமான நான்கு வைதிக மதங்களை முறையே நீலகண்டர், ராமாநுஜர், மத்வர், சங்கரர் என்ற நான்கு மகா ஆசார்யர்கள் புதிப்பித்து உலகத்தில் ஸ்தாபித்தவர்களாதலால் அவர்கள் ஈசுவராம்சமாகவே அவதரித்தவர்கள். அவர்கள் தத்தம் மதங்களை எப்போதும் பிரசாரம்செய்து

கொண்டிருக்கும்படியாக ஏற்படுத்திய மடங்களின் சிஷ்ய பரம்பரையில் அதிபதிகளாக நியமிக்கப்பட்டவர்களான ஆசார்யர்கள், தமது ஆதி குருவின் நோக்கங்கள் முற்றுப் பெறுமாறு முயற்சிக்க வேண்டுவதையே கடமையாகக் கொண்டவராவர். தத்தம் குரு நியமனத்திற்காக முற் கூறிய ஸ்தானத்தில் கட்டுப்பட்டுக்கொண்டு உலக நன் மைக்காகவே அரும்பெரும் பாடுபடுகின்ற மடாதிபதிகளை ஆதிஜகத்குருக்களாகவும், அவர்கட்கு முதன்மையான ஸர் வேசுவரனாகவும் பாவித்து பூஜை செய்யவேண்டும். ஏனெ னில் பெற்றோர் குழந்தைகளின் சரீரத்தில் யாதொருவித மான பிணியும் அணுகாமல் ஆகாரம் கொடுத்து அதைக் காப்பாற்றுவதற்குக் கண்ணும் கருத்துமாக இருப்பது போன்று ஆசார்யர் நமது ஆத்ம வளர்ச்சிக்கு வேண்டிய வற்றை ஈந்து அதைக் காப்பாற்ற ஸதா கருத்தும் கவலையு முற்றிருக்கின்றவரன்றோ ?

---

## குருவினது சிறப்பு.

முற்கூறிய மூவர்களில் உபாத்யாயரை விட புரோ ஹிதர் சிறந்தவரென்றும் அவரை விட ஆசார்யர் மிகச் சிறந்தவர் என்றும் கொள்ளவேண்டும். “ குருஸ்தானம் பெற்றவர்களுக்கு வெளி இந்த்ரியங்களை யடக்குதல், மனதை வசப்படுத்தி நடத்தல், எடுத்த கார்யத்தை விரத மாகக்கொண்டு முடித்தல், உள்ளும் புறமும் சுத்தமாக விருத்தல், பொறுமை, கபடமின்மை, விசேஷமான அறி வுற்றிருத்தல், ஆஸ்திகனாக விருத்தல் ஆகிய எட்டு தர்மங் களும் முதன்மையானவை ” எனப் புராணங்களிற் கூறப்

படுகிறது. † "அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடைந்து சால்பூன்றிய தூண்" என்ற திருக்குறளில் கூறப்படும் ஐந்து குணங்கள், பல குணங்கள் நிறைந்திருக்க வேண்டிய குருக்களுக்கு முக்யமானவை என்று அறியவேண்டும். குருக்கள் தங்களிடம் வந்து சேரும் சிஷ்யர்களிடம் கபடமற்ற கருணையுடன் தாமறிந்தவற்றை உண்மையாக உபதேசித்து அவர்கள் மேல் நோக்கிச் செல்லுவதையே தமது நோக்கமாகக் கொண்டவர்களாயிருந்தால் குருக்களின் ஈசுவரத் தன்மை சிஷ்யர்களின் முன்பாக ஸூர்யப்பிரகாசம்போன்று ஜொலித்துத் தோன்றிக்கொண்டிருக்கும் என்பதற்கும், அதன்பிறகு அவர்களின் மனத்தில் பரமாத்ம ஸ்வரூபம் விளங்கிக் கொண்டிருக்கும் என்பதற்கும் ஐயமில்லை. * "நெறிபட்ட சற்குரு நேர் வழி காட்டிற் பிறிவற்றிருக்கும் சிவம்" என்பது ஔவை குறள்.

இம்மாதிரியான பல நற்குணங் களேற்றிருப்பதே குருக்களின் சிறந்த தர்மமாகும். ஸூர்ய வம்சத் தரசர்களுக்கு

---

† அதி. 99. திருக். 3. சுற்றத்தார் மீதன்றி பிறர்மேல் உண்டாகிய அன்பும், பழிபாவங்களில் வெட்கப்படுதலும், யாவரிடத்துமுபகாரம் செய்தலும், எல்லோரிடத்தும் தாக்ஷிண்யமென்ற கண்ணோட்டமும், ஸத்யமும் ஆகிய இந்த ஐந்து குணங்களும் சால்பு என்ற மற்ற நற்குணங்களைத் தாங்கி நிற்கின்ற தூண்கள் எ-ன்.

* அதி. 21. குறள். 5. நல்வழியைக் கைப்பற்றின யோக்யரான ஒரு குரு, தாம் ஒழுகும் நேர்மையான வழியை நமக்குக் காட்டுவாராயின் அப்போது சிவம் என்று சொல்லக்கூடிய பரமாத்ம ஸ்வரூபம், நமது மனத்தில் தோன்றி பிறிவற்று நிற்கும் எ-ன்.

குலகுருவான வஸிஷ்ட மஹர்ஷி உபாத்தியாயர், புரோஹிதர், ஆசார்யர் என்ற மூன்றுவிதமான குரு தர்மங்களையும் செவ்வனே நடத்திவந்ததால் அவர் ஒப்பு உயர்வு இல்லாத குருவாகக் கருதப்படுகிறார். வித்யாரண்யர், ஹரதத்தாசார்யர், வேதாந்த தேசிகர், மணவாள மாமுனிவர், ஆனந்த தீர்த்தர் முதலிய மதாசார்யர்கள், சங்கர நீலகண்ட ராமானுஜ மத்வாசார்யர்களுடைய மதங்களைத் தழைக்கச்செய்தவர்களாதலால் அவர்கள் இப்பவும் பரமாசார்யர்களாகப் புகழப்படுகிறார்கள்.

---

## திருஷ்டாந்தக் கதை.

9. குரு தர்மத்தைப்பற்றின "வஸிஷ்டர்" என்ற கதை:—முன்னொருகால் ஸூர்யவம்சத்தில் திலீபன் என்ற அரசன் இருந்தான். ஸுதக்ஷிணை என்பாள் அவனது பட்டத்து அரசியாவாள். அவ்விருவருக்கும் நெடுநாளாகப் புத்திரப்பேறில்லாததுபற்றி அவர்கள் குல குருவாகிய வஸிஷ்ட முனிவரிடம் சென்று அதன் உபாயத்தை அறிய விரும்பினர். பிறகு காட்டில் குடிசைகட்டி வஸிக்கும் வஸிஷ்டரிடம் வந்து வணங்கி அரச தம்பதிகள் தாம் வந்த கார்யத்தைத் தெரிவித்தனர். வஸிஷ்டர் ஜ்ஞானதிருஷ்டியால் அவர்களது ஸந்ததியில்லாமையின் காரணத்தையுணர்ந்து கூறுகிறார். "அரசே நீ ஒரு ஸமயம் தேவருலகம்சென்று வரும்போது வழியிற் கல்பகத்தருவினடியில் காமதேனு படுத்திருந்தது. அதனை அணுகி நீ பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்துவிட்டு வரவேண்டியிருக்க, உனது மனைவியினிடம் பிள்ளையுண்டாகவேண்டிய தினத்தை மனத்திற் கருதி அவஸரப்பட்டு அதனை கவனியாமல் வந்துவிட்டனை, "என்னை

அலக்ஷ்யம் செய்துவிட்டு எந்த எண்ணத்தை நிறைவேற்ற நீ போ கின்றனையோ, அந்த எண்ணம் உனக்குக் கைகூடாது; ஒருகால் என்னையாவது எனது ஸந்ததியையாவது பூஜிப்பாயாகில் நினது நினைப்பு நிறைவேறும்" என்று உன்னை காமதேனு சபித்தது. அந்த சாபவசனம் ஆகாச கங்கையின் வீழ்ச்சியிலுள்ள அலைகள் மோதும் சப்தத்தால் உனக்கும் உனது தேர்ப்பாகனுக்கும் செவி களிற் படவில்லை. இப்போது அப்பசு பாதாளத்தில் நீண்டதோர் யாகம் செய்கின்ற வருணனுடைய ஹோம திரவியத்தின் உப யோகத்திற்காகப் போயிருக்கிறது. அதனை நீ இப்போது அடைய முடியாது. அதன் புத்திரியான நந்தினி என்ற பசு என்னிட மிருக்கிறது. அதுவும் தாய்போலவே தெய்வத்தன்மை பொருந் தியது. பூஜிப்பவர்களின் இஷ்டத்தை அளிக்கக்கூடியது. அதனை நீங்களிருவரும் சிலநாள் ஆசிரமத்திலிருந்தே நியமத்துடன் பூஜித்துவாருங்கள். பகற்காலத்தில் பசு வனத்திற்செல்லும்போது திலீபன் மாத்திரம் அதனைப் பின்பற்றிப் போய் உபசாரமாய் மேய்த்து வரவேண்டும்" என்று வஸிஷ்டர் உத்திரவுசெய்தார்.

அப்படியே இருபத்தொரு நாட்கள் அரச தம்பதிகளா கிய அவ்விருவரும் நந்தினிக்குப் பணிவிடை செய்துவந்தனர். இருபத்திரண்டாம் நாள் நடுப்பகலில் ஹிமயமலையின் அடிச்சார லில் நந்தினி, பசுமையான புல்லுகளை மேய்ந்துகொண்டிருந்தது. அரசன் வில்லுங்கையுமாக பக்கத்திலிருந்து அதனைப் பாதுகாத் துக்கொண்டிருந்தனன். அங்கோர் குகையிலிருந்து ஒரு சிங்கம் வெளிப்பட்டு பசுவின்மீது பாய்ந்து உட்கார்ந்து கர்ஜனை செய் தது. உடனே பசு உடல் கிடுகிடுத்து நடுநடுங்கி வியர்வைசொட்ட "ஹாம்பா" என்ற ஒரு சப்தத்தால் உறத்துக் கூப்பிட்டு மன்ன வனை மொள மொள விழித்துப் பார்த்தது. நாணேற்றின வில் லில் அம்பைத் தொடுத்து சிங்கத்தின்பேரில் எறியக் கருதின வேந்தன், இடது தோளில் தொங்கும் அம்பறாப் பையிலிருந்து

ஒரு அம்பை எடுக்க வலதுகையினுல் அம்பின் பிடியைப் பிடித்தான். பிறகு அந்தக் கை அசைக்க முடியாமற் போயிற்று. அப்போது அவன் சித்திரத்தி லெழுதப்பட்டவன்போன்று உடம்பை அங்குமிங்கும் திருப்ப முடியாமல் ஒரு பக்கம் வெட்கத்திலும் மற்ருருபக்கம் ஆச்சர்யத்திலும்மூழ்கினவனுகத் திகைத்து நின்றனன். அப்போது சிங்கம் அவனைப்பார்த்துக் கூறுகிறது.

“ வேந்தே ! நான் எவன்? எதற்காக இங்கு வந்திருக்கிறேன்? என்பது உனக்குத் தெரியாது. சொல்லுகிறேன், கேள். யான் பரமசிவனது முக்கியமான கிங்கரன். அவர் உன்னதமான வாகனமாகிய விருஷபத்தின் மீதேறும்போது, குனிந்துகொண்ட எனது முதுகில் ஒரு காலைவைத்து உன்னி மறுகாலால் காளையின்மீது ஏறிக்கொள்வார். அவர் காலடி என்பேரில் அடிக்கடி பட்டு யான் மிகப் பரிசுத்தனு யிருக்கிறேன். இதோ எதிரில் நிற்கின்றதே! தேவதாரு விருக்ஷம். இது பார்வதிதேவியாரால் மிகப் பிரியமாய் வளர்க்கப்பெற்றது. ஒரு நாள் ஒரு காட்டு யானை இதனிடம் உடம்பை உரசி இதன் பட்டையைக் கொஞ்சம் பெயர்த்து விட்டது. அதனுல் அவ்வம்மையார் மிகவும் மனம் நொந்தனள். அதுமுதல் யானையை வெல்ல சிங்கமே வல்லதாகையால் அதன் உருவங்கொண்டு காட்டு யானைகள் திரும்ப இங்கு வாராதவண்ணம் காவல்காத்து வரும்படி கடவுள் எனக்குக் கட்டளையிட்டிருக்கிருர். இக்குகைக்குள் வசித்துக்கொண்டு இங்கு வரும் பிராணிகளைக் கொன்று தின்று பசியாற்றிக்கொண்டு வருகிறேன். நீ என்ன முயற்சி செய்தாலும் என்னேடு சண்டைசெய்ய உன்னுல் முடியாது. முடியாத கார்யத்தில் முயற்சிப்பது புத்தியீனம். எனது பசியைத்தீர்க்க இப்பசுவே இன்று எனக்குப் போதுமானது. உன்னை நான் ஒன்றும் செய்யப்போவதில்லை. இப்போது உன் கை எடுக்கவரும். உடல் அசைக்கத் திருப்ப வரும். நீ வந்த வழி போகலாம் ” என்று மனிதன்போன்று சிங்கம் கூறிற்று.

அதனைச் செவியுற்ற அரசன், மனத்தில் ஒருபக்கம் பக்தியும் ஒருபக்கம் வியப்பும் அதிகரித்தவனாய்ப் பணிவுடன் பதில்சொல்லுகிறான். "மிருகேந்திரனே! தாங்கள் சிவபக்தர்களிற் சிறந்தவர். நானோ குருபக்தர்களிற் சிறந்தவன். தாங்கள் யஜமானன் இட்ட வேலையில் கருத்துள்ளவர். நானும் குருவின் கட்டளையைக் காக்க வேண்டிய கடமையுள்ளவன். தாங்கள் தேவதாரு விருக்ஷத்திலேயே நோக்கமுள்ளவர். நானும் காமதேனுவினிடமே கண்ணோக்கமுள்ளவன். தங்கள் கார்யத்தைப் பெரிதாகவும் எனது கார்யத்தை இலேசாகவும் நினைத்து என்னைப்போகும்படி ஆக்ஞை செய்யக்கூடாது. என்னைப் புசித்துப் பசியாறி இப்பசுவை விட்டுவிடவேண்டும்" என்றனன். அதற்குச் சிங்கம் சொல்லுகிறது.

"அடா! மூடா! நீ உயிரிழந்தால் உனது இராஜ்யத்தைக் காப்பவர் எவருமில்லை. பல உயிர்களைக்காக்க நீ உயிரோடிருப்பதை விட்டு இந்த ஒருஉயிரைக்காக்க உனது உடலையிழப்பது ஸரியல்ல. இந்த ஒரு பசுவிற்காக குடம்பால் கறக்கும் கோடிக்கணக்கான பசுக்களைக் குருவிற்குக் கொடுத்து அவர் கோபத்தைத் தணிக்கலாம். இனி நீ உனதிருப்பிடம் போகலாம்" என்றது. திரும்ப அரசன் சொல்லுகிறான். "மிருகவேந்தே! என்னை நம்பி என்னிடம் ஒப்புவித்த இந்த ஒரு உயிரை இழக்கவிட்டுப் பிறகுப் பல்லுயிர்களைக் காத்தபோதிலும் இப்பழிவார்த்தை ஆயுள்வரை என்னை விட்டகலாது. எனது உடம்பில் தங்களுக்கு அன்பிருக்குமானால் என் இந்த பூதவுடம்பினைத்தின்று புகழுடம்பினைக் காக்கவேண்டும். குருவிற்கு நான் எத்தனை பசுக்கள் கொடுத்தபோதினும் தெய்வத்தன்மையுற்ற இந்த ஒரு பசுவிற்கு அவை ஈடாகா. என் பேரில் கிருபையுற்று எனக்குள்ள குருபக்தியை அழிக்காமல் காத்தருள வேண்டும்" என்றவன் வேண்டினன். "அப்படியானால் கிட்டவா" என்றது சிங்கம். உடனே பூபாலன் அதனருகிற்போய் குனிந்து

உடம்பைப் பிண்டமாய் ஒடுக்கிக்கொண்டு நின்றான். சிங்கம் கர்ஜித்து அவன்மீது பாய்வதுபோல் பாவனைசெய்து மறைந்தது.

"அப்பா! குழந்தாய்! தலையைத் தூக்கு" என்ற அமுதம் போன்ற பசுவின் தொனி காதிற்படவே வேந்தன் தலை நிமிர்ந்து பார்க்கசிங்கம் மறைந்து பசுமாத்திரமிருக்கக்கண்டு ஆனந்தவெள்ளத்தில் அமிழ்ந்தான். "அப்பனே! உன்னைப் பரீக்ஷிக்கவே இம் மாயாசிங்கத்தை யான் உனக்குத் தோற்றுவித்தேன். உனது எண்ணம் பூர்த்தியாகும்" என்று பசு அவனுக்கு அருள்புரிந்தது. "அன்னையே! என்னைப் பரிசோதிக்க இத்தனை பெரிய காரியத்தைச் செய்யலாமா? என் மனப்பதட்டம் இன்னமும் அடங்கவில்லையே! எல்லாம் ஈசன் செயல்" என்றான் அரசன். உடனே இருவரும் ஆசிரமம் சென்றனர். அரசன் வனத்தில் நிகழ்ந்ததை வசிஷ்டாசார்யரிடம் விஸ்தாரமாய்க் கூறினன். அவரும் அவனது பக்தியை மெச்சினர். பிறகு பசுவின்பாலைக் கரந்து அவர் அரச தம்பதிகளை சாப்பிடச்செய்தனர். உங்களுக்கு "காமதேனுவின் அனுக்கிரகத்தால் நல்ல பிள்ளை பிறப்பான். நாளை நீங்கள் அயோத்திக்கு போகலாம்" என்று வசிஷ்டர் அனுமதி கொடுத்தார். பிறகு அப்படியே அவர்களுக்கு எல்லாச் சிறப்பும் வாய்ந்த குமாரன் பிறந்தான். அவன்தான் இரகுராஜன் என்பவன். குரு என்பார் சிஷ்யன் எண்ணத்தைப் பூர்த்திசெய்கிறவராக விருக்கவேண்டும் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

---

## சிஷ்யர் தர்மம்.

சிஷ்யர் என்பதற்குத் திருத்தப்பட வேண்டியவர் என்று பொருள். அவர்கள் ஒழுகவேண்டிய தர்மம் சிஷ்யர் தர்மம் எனப்படும். முற்காலத்தில் கல்விகற்கும் மாணவர்

கள் உபாத்தியாயர்களின் சமீபத்திலேயே ஸதா அவர்கள் பார்வையிலிருக்கும்படி அவர்கள் கிரஹத்தில் அல்லது அதற்கு அருகில் அவரது விசாரணையிலிருக்கும் பெரிய மடங்களில் வஸித்துக்கொண்டிருப்பார்கள். அவர்கள் பிக்ஷை எடுத்து உண்டு "குருகுல வாஸம்" என்ற விரத மனுஷ்டித்து குருவிற்குத் தம்மாலியன்ற பணிகளைச் செய்து அவரைச்சந்தோஷப்படுத்துவர். குருவினது கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து கற்கவேண்டிய காலங்களில் ஒழுங்காய் வேதங்கள், அதன் அங்கங்கள், ஆகமங்கள் ஆகிய மற்றுமுள்ள சாஸ்திரங்கள் இவற்றைப் பயிலுவதால் உலக தர்மக் கல்விகளையும் மோக்ஷதர்மக் கல்விகளையும் கற்று வருவார்கள். குரு தம்மிடம் வந்த சிஷ்யர்களிடம் யாதொரு பிரதிபலனையும் எதிர்பாராமல் இலவசமாய்க் கல்வி கற்றுக்கொடுப்பதிலேயே கருத்துள்ளவராயிருப்பார். அவரது குடும்ப காலக்ஷேபம் நடக்கும்படியாய் வேந்தர்களால் மானியங்கள் வரிப்பணம் செலுத்தவேண்டாத நிலைமையில் இறையாக அளிக்கப்பட்டிருக்கும். சிஷ்யர்களுள் பணக்காரர்கள் வித்யாப்யாஸம் முடிந்தவுடன் அவரவர் சக்திக்குத்தகுந்த குரு தக்ஷிணையைக்கொடுத்துப் போவார்கள். ஏழைகளுள்ளும் சிலர் எங்கேயாவது பணக்காரர்களிடம் போய் யாசகம் எடுத்தாவது சொற்ப குரு தக்ஷிணையைக்கொடுத்து தமது பக்தியை வெளியிடுவார்கள். ஆனால் குரு, சிஷ்யர்களின் தக்ஷிணையை எதிர்பார்த்துக் கற்றுக்கொடுப்பவரல்ல. அவர் சிஷ்யர்களின் பக்தி ஒன்றையே நோக்கினவராவர். அதனாலே உண்டாகிற மனத்தின் அன்பு மற்ற எந்த வஸ்துக்களாலும் உண்டாகாது.

உலகத்தில் மக்கட்களுக்கு ஈன்றவன், அன்னம் கொடுத்து வளர்த்தவன், ஆபத்திலிருந்து காத்தவன், கல்வி கற்பிக்கின்றவன், மந்த்ரோபதேசம் செய்கின்றவன் என ஐந்து பிதாக்கள் இருக்கின்றனர். அவர்களுள் முறையே முந்தினவனைவிடப் பிந்தியவன் மேலானவன். முதலிற் கூறிய நான்கு பிதாக்களும் அழியுந்தன்மையுற்ற சரீர வளர்ச்சிக்குக் காரணமாகவும் ஐந்தாவது பிதா அழியாத் தன்மையுற்ற ஆத்ம வளர்ச்சிக்குக் காரணமாகவு மிருப்பதால் கடைசி பிதாவாகிய மந்த்ர குருவினிடம் பற்றி உண்டாகும் பக்தியே தெய்வ பக்தியாக மாறுகிறது. அம் மாதிரியான குருவைத்தேடி யடையவேண்டியது சிஷ்யரின் கடமை. * "அறனறிந்து மூத்தவறிவுடையார் கேண்மை திறனறிந்து தெரிந்துகொளல்" என்ற திருக்குறளும் அவ்விதமே கூறுகிறது.

மாணவர்கள் கல்வி கற்பதுடன் நல்லொழுக்கங்களிலும் பயிர்ச்சியுள்ளவர்களா யிருக்கவேண்டும். ஒழுக்கமின்றி கற்கும் கல்வி, கற்பவனுக்குச் சிறிதும் பயன்படாது. ஒழுக்கமின்மை கல்வி கற்பதற்கே இடையூறாக அமையும். சிஷ்யன் எப்போதும் குருவினிடம் பணிந்திருக்கும் தன்மையைக் காட்டக்கூடிய அறிகுறிகளுடனிருக்கவேண்டும். வண்டி, தோணி முதலியவற்றிற் செல்லுவதாகிய தீராத சந்தர்ப்பங்கள் தவிர மற்ற எந்த சமயங்களிலும் குருவிற்குச் சமமாக சிஷ்யன் வீற்றிருத்தல்

* அதி. 45. திரு. 1. தர்மத்தின் நுட்பத்தையறிந்து முதிர்ந்த அறிவாளிகளின் நட்பை, அதனருமையும் அதனை அடையவேண்டிய திறனுமறிந்து கைக்கொள்ளவேண்டும் எ-ன்.

கூடாது. குருவின் அனுமதி பெற்று அவரது ஆஸனத்தை விடத் தணிந்த ஆஸனத்தில் வணக்கமாக உட்காரவேண்டும். காலத்தை வீண் கடத்தாமல் குருவினிடமிருந்து கவனமாய்க் கேட்டதை அடிக்கடி சிந்தனைசெய்து பலப்படுத்திக்கொள்ளவேண்டும். குரு, குருவைச்சார்ந்தவர், கூடப் படிக்கின்றவர்கள் இவர்களுக்கு எக்காரணத்தை யிட்டும் துரோக சிந்தனை செய்யக்கூடாது. இம்மாதிரியான பல தர்மங்கள் சிஷ்யர் கடமையாகவிருப்பன.

---

### சிஷ்யர் ஏன் திருத்தம் பெற வேண்டியவர்?

உலகத்தில் மனிதர்களாகப் பிறந்த ஒவ்வொருவருக்கும் மனம் என்பதும் அதன் விகாஸமாகயிருக்கின்ற புத்தி என்பதும் கண்ணாடிபோன்று இருக்கின்றன. மனிதர்களைத்தவிர மற்ற திர்யக் ஜந்துக்களாகிய விலங்கு, பட்சி முதலியவற்றிற்குத் தமது சரீரத்தைக் காப்பாற்றிக் கொள்ளவேண்டிய அறிவிற்குக் காரணமான மனம் மாத்திரம் இருக்கிறது; மனிதர்களிடம் அந்த மனமிருப்பதுடன் அதுவே விகாஸ(மலர்ச்சி)த்தையடைந்து விசாலப்படும்போது புத்தி என்ற பெயர் பெற்று, அது மனத்தைவிட வேறாகத்தோன்றி பகுத்தறிவிற்குக் காரணமாக நிற்கின்றது. ஒவ்வொரு பிராணிகளுக்கும் ஸ்தூல சரீரமாகிய உடம்பு அடிக்கடி ஜீர்ணித்து நசித்து மாறிமாறி வந்துகொண்டிருந்தாலும் ஸூக்ஷ்ம சரீரமாகிய மனம் மாத்திரம், ஆத்மா முக்தி பெறும் வரை ஜீர்ணிக்காமலும், நசிக்காமலும் ஜன்மங்கள்தோறும் வெவ்வேறு ஸ்தூல சரீரங்

களைப் பற்றிக்கொண்டு தொடர்ந்துகொண்டே வருகிறது. அந்த மனம் எப்போது நசிக்குமோ, அப்போதுதான் ஜீவாத்மா பரமாத்மாவினிடம் போய்ச் சேர்ந்துகொள்ளுகிறான். ஜீவாத்மா காரணமறியமுடியாமல் எவ்விதமாகவோ பரமாத்மாவை விட்டுப் பிரிந்து தனித்திருக்கிறான். ஜீவாத்மா திரும்பவும் பரமாத்மாவினிடம் போய்ச் சேரவொட்டாமல் மனமென்பது நடுவில் பெரிய சுவர்போன்று மறைத்துத் தடைபடுத்திக்கொண்டிருக்கிறது. ஆதலால் மனோநாசமே முக்யமாய் மோக்ஷமெனப்படும்.

அம்மனத்திலுள்ள அழுக்குகள் நன்றாய் முற்றிலும் துலக்கப்படும்போது அது ஸ்வய ரூபத்துடன் கண்ணாடி போன்றுப் பிரகாசித்துக்கொண்டிருக்கும். அப்போது அதனுள் ஜொலித்துக்கொண்டிருக்கும் ஆத்மஸ்வரூபம் ஜ்ஞானதிருஷ்டியால் காணப்படும். அந்த ஸ்வரூபத்தை பரமாத்ம ஸ்வரூபமாகத் தியானிக்கும்போது தியானம் வலுக்க வலுக்க, சுவர் பெரிய மழையிற் கரைவது போன்று, மனம் கொஞ்சங்கொஞ்சமாய்க் கரைந்து முற்றிலும் ஒழிந்துபோய்விடும். இம்மாதிரியாகப் பெரு முயற்சியின்றி அது ஒருபோதும் இலேசாக நாசமாக மாட்டாது. அதற்காகவே தபசிகள், யோகிகள் முதலிய மகான்கள் வெகுகாலமாய் அளவிறந்து பாடுபடுகின்றனர்.

மனிதர்கள் பசு பக்ஷிகளாக ஜன்மமெடுத்த காலத்திலிருந்த மனமே, மனித ஜன்மத்திலும் தொடர்ந்துவருகிறது. ஆதலால் நாமும் சில சமயங்களில் திர்யக் ஜந்துக்களின் பற்பல ஜன்மங்களை எடுத்திருக்கலாம். அதன்பிறகு

மானிடப்பிறவி கிடைத்ததாக இருக்கலாம். திர்யக் ஜன்மங்களில், மனத்திலுள்ள மலங்களைப் போக்கவேண்டுமென்ற உணர்ச்சியும் அதற்கு வேண்டிய முயற்சியும் கிஞ்சித்தேனும் கிடையாது. மனிதப் பிறவியிலும் அதைப் பற்றிய எண்ணமும் முயற்சியும் இல்லாமல் பசு பக்ஷிகள் போன்று காலங்கழித்த பல ஜன்மங்களுமிருக்கலாம். கண்ணாடியை வெகுநாட்களாகத் துடைக்காமலிருப்பின் இயற்கையாகவே அழுக்குகள் அதனிற் பற்றுவனபோன்று, பல ஜன்மங்களில் முயற்சியின்மையால் நமது மனம் அல்லது புத்தியில் இயற்கையாக அளவற்ற அழுக்குகள் சேர்ந்து படிந்திருக்கின்றன. அவைதான் தீயவெண்ணங்களை யுண்டாக்கி நம்மை கெட்ட கார்யங்களிற் புகச் செய்கின்றன.

ஆதலால் ஒவ்வொரு ஜன்மத்திலும் மனிதர் தமது புத்தியிலுள்ள களங்கங்களை கொஞ்சங் கொஞ்சமாகக் களைவதற்கு வேண்டிய முயற்சியை எடுத்துக்கொள்ளவேண்டியது அவசியம். அந்தக் களங்கங்கள் கல்விகளைக் கற்றும் பெரியோர்களிடமிருந்து, நல்ல கேள்விகளைக் கேட்டும் அவற்றின்படி ஒழுகுவதனாலேதான் விலக்கப்படுவனவாகும். அதற்கு அதைத்தவிர வேறு ஸாதனமில்லை. ஆதலால் நமது புத்தியென்ற கண்ணாடியில் வெகுநாட்களாகப் பற்றியுள்ள மலங்கள் என்ற அழுக்குகளைத் துடைக்கும் கருவியாக இருப்பது கல்வியே.

அதை நாம் ஒரு ஜன்மத்தில் கொஞ்சம் கற்று அதனால் சொற்ப மலங்கள் விலகி புத்திக்கு அற்பப் பிரகாசம் உண்டாயிருக்க, திரும்பவும் மறு ஜன்மம் எடுக்கும்போது

புத்தியின் அந்த அற்பப்பிரகாசமென்ற பழைய வாஸனையை விளங்கவொட்டாமல் திரும்ப வந்ததாயுள்ளப் புது ஜன்மம் மறைத்துவிடுகிறது. அப்போது குழந்தைப் பர்வத்தில் அஜ்ஞான தசையிலிருந்துகொண்டு விசேஷமான அறிவில்லாமல் பெற்றோரின் உதவியினாலேயே பிழைத்து வருகிறோம். பிறகு பால்யம் தொடங்கினவுடன் கொஞ்சங் கொஞ்சமாக புத்தி விசாலிக்கின்றது. அச்சமயத்தில் கல்வி கற்க ஆரம்பித்தால், பழைய வாஸனையை மறைத்துக் கொண்டிருந்த தற்காலத்திய ஆவரண அழுக்குகள் நீங்குகின்றன. பிறகு முன் இருந்த பழைய வாஸனை தூண்டப்பட்டு புத்தியிலிருந்த அந்த அற்பப் பிரகாசம் சீக்கிரமாகத் தோன்றும். பிறகு மேன்மேலும் கற்கவேண்டிய கல்விகளை எல்லாம் கற்றுணர்ந்து அவற்றின்படி நின்றுகொண்டுவந்தால், அவரவர் முயற்சிக்குத் தக்கவாறு மேலும் அழுக்குகள் நீங்கிக்கொண்டுவருவதால், புத்தி நாளுக்குநாள் ப்ரகாசப்பட்டுவரும். இம்மாதிரியாக மனிதர்கள் பல்லாயிரம் ஜன்மங்களில் அவரவர் செய்த முயற்சிக்குற்றபடி பலவிதமான தாரதம்யத்துடன்கூடிய புத்திப் பிரகாசம் பெற்றவர்களாக இருக்கின்றனர்.

ஆதலால் மனிதர்கள் புதிய ஜன்மம் எடுக்கும்போது மறைந்திருக்கின்ற புத்தி ப்ரகாசத்தின் பழைய வாஸனையைத் தூண்டி புதிப்பித்துக்கொண்டு, மேலும் புத்தியைப் பிரகாசப்படுத்திக்கொள்ள வேண்டும். அதற்குரிய கல்விகளைக் கற்று பழைய நிலைமையிலிருந்து படிப்படியாய் மேல்நோக்கிச் செல்லுவதற்காகவே அவர்கள் திருத்தம் பெறவேண்டியவராகின்றனர். சிஷ்யர் (திருத்தப்படவேண்

டியவர்) என்ற பதமே முற்கூறிய பொருளை உணர்த்து கிறது. ஜன்மந்தோறும் கொஞ்சங் கொஞ்சமாவது திருத் தம் பெருதவர் மென்மேலும் தாழ்ந்த நிலைமையடைவார் என்பது நிச்சயம்.

---

## திருஷ்டாந்தக் கதை.

10. சிஷ்ய தர்மம் பற்றிய "உபமன்யு" என்ற கதை:— தௌம்யர் என்ற ஒரு குருவினிடம் அநேக சிஷ்யர்கள் கல்வி கற்றுவந்தனர். அவர்களில் உபமன்யு என்பவன் ஒருவன். அவன் புதிதாக வந்தவன். புத்தியில் அவன் அவ்வளவு சிறந்தவனல்லன். ஆனால் குருபக்தி நிறைந்தவன். குரு ஒருசமயம் அவனை கவனிக் கும்போது அவன் கொஞ்சம் உடம்பு பருத்தவனுகவும், சோம் பேறியாகவும், அடிக்கடி தூங்கும்படியான ஸ்வபாவ முற்றவ னுகவு மிருந்தான். அவர் அவனைப்பார்த்து "என் இப்படியிருக் கிருய்?" என்று கேட்டதற்கு "எனக்குக் காரணம்தெரியாது; அது எனது இயற்கை" என்று அவன் பதில் சொன்னுன். "புதி தாய் வந்த மாணவன் பிக்ஷை எடுத்துவந்து உண்ணுவதற்கு முன் என்னிடம் காட்டி என் அனுமதிபெற்று உண்ணவேண்டியதாகை யால் நீ அவ்விதம் செய்துவருகின்றனையா?" என்று குரு வின வினர். அதற்கு அவன் "எனக்கு அந்த விஷயம் இதுவரை தெரி யாதாகையால் இன்றுமுதல் அவ்விதம் செய்கிறேன்" என்று விடைகூறி அவ்விதமே அன்றையதினம் எடுத்துவந்த பிக்ஷான் னத்தை குருவினிடம் காண்பித்தான்.

அவனது பிக்ஷைப் பாத்திரத்தில் இருந்த அன்னம் இரண்டு அல்லது மூன்று மாணவர் புஜிக்கக்கூடியதாக நிரம்ப இருந்தது.

அதனைப்பார்த்து குரு "தினந்தோறும் இவ்வளவு அன்னம் புசிக்கிறவன் நாளடைவில் வியாதிஸ்தன் ஆய்விடுவான். ஆதலால் இவனை ஒன்றுஅல்லது இரண்டுநாட்கள் பட்டினிபோட்டு இவனது சரீரத்தை ஆரோக்யப் படுத்திக்கொண்டு பிறகு இவனது ஆகாரத்தை ஒழுங்குபடுத்த வேண்டும்" என்று நினைத்து அவனைப்பார்த்துச் சொல்லுகிறார். "அடே! மூடா! தினந்தோறும் மிதமில்லாத இவ்வளவு அன்னம் புசித்தால் உனக்குச் சுறுசுறுப்பு எங்கிருந்து உண்டாகும்? ஏன் தூக்கம் வராது? பல மாணவர்களின் அன்னத்தை வஞ்சித்து நீ ஒருவனே புசித்துவருகிறாய். ஆதலால் இதை, பிக்ஷை எடுத்துவராத மாணவர்களிடம் கொடுத்துவிடு" என்று கட்டளையிட அவன் அவ்விதமே செய்தான்.

அவன் அதிகமான மனவலிமை யில்லாதவனாதலால் தனது பசி அடக்கமுடியாமல் திரும்ப ஒரு தடவை வெளியிற்போய் வழக்கம்போல் தனக்குவேண்டிய அளவு பிக்ஷை எடுத்துவந்து சாப்பிட்டுத் திருப்தியடைந்தான். பிறகு குரு மறுநாள் அவனை கவனிக்கும்போது அவன் வாட்டமில்லாதவனாகவே காணப்பட்டான். குரு அவனைப்பார்த்து "அடே! நேற்று உன்னை பட்டினி போட்டும் நீ முன்போலவே இருக்கக் காரணமென்ன?" என்று கேட்டார். அதற்கு அவன் "முதலில் எடுத்துவந்த பிக்ஷையைத் தங்கள் உத்திரவின்படி மற்றவர்களிடம் கொடுத்துவிட்டேன். பிறகு ஆகாரம் புசிக்காதவரையில் எனக்குத் திருப்தியுண்டாகாமலிருந்ததால் திரும்ப ஒரு தடவை பிக்ஷை எடுத்துவந்து என் இஷ்டப்படி புசித்தேன்" என்றான். பிறகு குரு, "மூடா! இன்று அவ்விதம் செய்யாதே" என்றார். அன்று அவன் அப்படிச் செய்யவில்லை. தன்னைத் திருப்திசெய்துகொள்ள வேறு வழி தேடிவிட்டான். குருவின் பசுக்களையும் கன்றுகளையும் பாதுகாப்பது அவன் வேலையாகையால் ஒவ்வொரு பசுவினிடமிருந்தும் கொஞ்சம் கொஞ்சம் பாலைக்கறந்து குடித்துத் திருப்தியடைந்தான்.

மறுநாளும் முன்போலவே இருக்கின்ற அவனைப்பார்த்து குரு அதன் காரணம் கேட்டதற்குத் தனது செய்கையை உள்ளபடி உரைத்தான். அப்போது குரு, "அடே! கன்றுகளை வஞ்சித்து அவற்றின் போஷணைக்குரிய பாலைக்குடிப்பது ஸரியல்ல. இனி அப்படிச் செய்யாதே" என்றார். மறுநாள் கன்றுகள் ஊட்டின பிறகு அவற்றின் வாயில் தங்கியிருக்கும் நுரைகளை வழித்துச் சாப்பிட்டுத் திருப்தியடைந்தான். பிறகு குரு மறுநாள் அவ்விஷயத்தை அவன் வாயிலாகவே தெரிந்து "கன்றுகளுக்கு அவற்றின் வாயிலுள்ள நுரைகளும் ஆகாரமாகையால் அவற்றை வஞ்சித்து அதை நீ புசிக்கக்கூடாது" என்றார். இப்படியாகப் பல துறைகளிலும் அவனது ஆகாரவழி அடைபட்டபிறகு புல்லுக்காட்டிலிருந்து ஸாயங்காலத்தில் பசுக்களை ஓட்டிக்கொண்டுவரும் வேலை அவனைச் சார்ந்ததாகையால் அவன் அன்று அக்காட்டிற்குப்போய் அங்குள்ள எருக்குத் தளிர்களைப் பறித்துப் புசித்து திருப்தியடைந்தான். அதனால் அவனுக்கு உஷ்ணம் அதிகப்பட்டு கண் மறைய ஆரம்பித்தது. அவன் அதை அறியவில்லை. பிறகு அவன் பசுக்களைக் காட்டிலிருந்து ஓட்டிக்கொண்டு வரும்போது வழியில் சுத்தமாய்க் கண்தெரியாமல் ஒரு பாழுங்கிணற்றில் விழுந்து மேலே ஏறி வர முடியாதவனாகத் தத்தளித்துக்கொண்டிருந்தான். பசுக்கள் வழக்கம்போல குருவின் கிரகத்திற்கு வந்துவிட்டன.

குரு இரவில் படுக்கப்போகும் சமயத்தில் மாணவர்களை வழக்கப்படி சரிபார்க்கும்போது அன்று அவனை அங்கு காணவில்லை. உடனே அவர் மனம்பதைத்து அவன் சரியான அறிவில்லாதவனாதலால் அவனுக்கு என்ன ஆபத்து வந்ததோ! என்று பயந்தார். பிறகு அவன் காட்டிலிருந்தே வீட்டிற்கு வரவில்லையென்ற சங்கதியை விசாரித்துக்கொண்டு மற்ற சிஷ்யர்களுடன் பெரிய வெளிச்சம் போட்டுக்கொண்டு அவனைத் தேடக் காட்டிற்குப் புறப்

பட்டார். அவன் அக்கிணற்றிலிருந்து சப்தம் காட்ட குரு அவனை உயரத் தூக்கியெடுத்துவிட்டு அவனைக் கிணற்றில் விழக் காரணம் கேட்டார். அவன் "நான் புசியாமலிருந்ததால் எனக்குத் திருப்தி யுண்டாகவில்லை; தாங்கள் நாட்டிலுள்ள வழிகளை யெல்லாம் அடைத்துவிட்டதன்பிறகு காட்டிலுள்ள எருக்குக் கொழுந்துகளை இன்று புசித்து திருப்தியடைந்தேன்; பசுக்களை ஓட்டிவரும் போது வழிதெரியாமல் இக்கிணற்றில் விழுந்துவிட்டேன்; அது தான் எனக்குத் தெரியும்" என்றான்.

உடனே குரு அவனது உண்மையையும், அவன் தனது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடந்துவந்ததையும், தனது வார்த்தையில் அவன் வைத்திருக்கும் மதிப்பையும், இவற்றையெல்லாம் ஒருங்கே சேர்த்துக்கொண்டிருக்கும் தீவிரமான அவனது குருபக்தியையும் கவனித்து அவனை அபாரமான கிருபாகடாக்ஷத்துடன் நோக்கி அவன் கையைப் பிடித்துக்கொண்டு தனது கிரஹத்திற்குக் கூட்டி வந்து அவனை தன் முன்பாக உட்காரவைத்து அவனது கண்களைத் திறந்துவிடும்படியாக தேவலோகத்து வைத்யர்களாக இருக்கும் அசுவினி தேவதைகளைத் தியானித்து ஸ்துதிக்கும்படி உத்திரவு செய்தார். உடனே குருவின் அனுக்ரகத்தால் அவன் அவர்களை தியானித்து ஸ்துதித்தான். பிறகு அவர்கள் ப்ரத்யக்ஷமாய் அவனது வெளிக்கண்களைத் திறப்பதுடன் உட் கண்ணையும் திறந்து மறைந்தனர். உடன் குருவின் அருளினால் அவரிடமுள்ள ஸகலமான கல்விகளும் அவன் மனத்தில் தோன்றி அவரைப் பலவாறு கப் புகழ்ந்து அவன் பக்தியிற் சிறந்தவனாக யிருப்பதுடன் புத்தியிலும் அறிவிலும் கல்வியிலும் சிறந்தவனாகி அவர் அனுமதிபெற்று தனது வீடு சென்றான். சங்கராசார்யரின் சிஷ்யர்களுள் ஆனந்தகிரி என்பவர் புத்தியிற் சிறிது மந்தராயிருப்பினும் குருபக்தியில் பெருமை வாய்ந்தவராக யிருந்ததால் அவர் ஆசார்யர்செய்த பல கிரந்தங்களுக்கு குருவின் கருத்திற்கிணங்க வியாக்யானங்கள்செய்

யும் திறமையுற்று அவர் செய்த வியாக்யானங்களே இப்போதும் சங்கரபகவத் பாதாசார்ய கிரந்தங்களின் உண்மைப் பொருளை யுணர உதவியாகவிருக்கின்றன. குருவினிடம் திடமாகக்கொண்டிருக்கும் பக்தியே புத்தியில் மெலிந்தவர்களையும் கல்வியிற் சிறந்தவர்களாகச் செய்யப் போதுமான ஸாதனமாகுமென்பதற்கு இக் கதை நிதர்சனமாகிறது.

---

## ராஜ தர்மம்.

ஒரு தகப்பன் தனது பிரஜை (குழந்தை) களைக் காப்பாற்றுவதிற் கருத்துற்றிருப்பது போன்று மன்னுயிர்களைத் தன்னுயிராகப் பாவித்து நாட்டிலுள்ளப் பிரஜை (குடி) களை ஆபத்துகளினின்றும் காப்பாற்றிக் களிப்பிக்கின்றவன் ராஜன் எனப்படுவான். ஸூர்யன் தபிக்கச் செய்வதால் தபனன் என்பது போன்றும், திங்கள் மகிழச் செய்வதால் சந்த்ரன் என்பது போன்றும், அரசன் ஜனங்களை சந்தோஷப்படுத்துவதனால் ராஜன் என்பது அவனுக்குக் காரணப் பெயராக அமைந்திருக்கிறது. மனுஸ்மிருதியில் * "பிரம்மா உலகத்தைப்படைத்து அது அராஜகமாக இருந்தால் பலவான்கள் பலஹீனர்களைத் தொந்திரவு செய்வார்கள் என்று எல்லோரிடமும் நிஷ்பக்ஷபாதமாயிருந்து அவர்களைக் காப்பாற்ற இந்த்ரன், வாயு, யமன், ஸூர்யன், அக்னி, வருணன், சந்த்ரன், குபேரன் இவர்களின் அம்சங்களால் அரசனை ஸ்ருஷ்டித்து வருகிறார். அரசன் இந்த்ரன் அம்சமாகப் பிரஜைகளுக்கு நன்மைகளைக் கொடுக்கின்றான். வாயு அம்சமாக நாட்டி

---

* அத். 7. சலோ. 3, 4, 14, 15.

லுள்ள விஷயங்களை எல்லாம் அறிகின்றான். யமன் அம்ச மாகப் பிரஜைகளை தர்மநெறியுடன் பரிபாலிக்கின்றான். ஸூர்யன் அம்சமாக ஜனங்களிடமிருந்து வரிவசூலிக்கின்றான். அக்னியின் அம்சமாக தேஜஸ்வியாயிருந்து ஜொலித்துக் கொண்டிருக்கின்றான். வருணன் அம்சமாக நாட்டிற்கு ஸுபிக்ஷத்தை யுண்டுபண்ணுகின்றான். சந்திரன் அம்சமாக ஸகலமான ஜனங்களையும் ஸந்தோஷப் படுத்துகின்றான். அவன் ஸர்வ ஜனங்களையும் அடக்கி ஆளுவதற்காக தர்ம ஸ்வரூபமாயுள்ள ஒரு தண்டத்தை பிரம்மா ஸ்ருஷ்டித்து அவனிடம் ஒப்புவித்திருக்கிறார். அதற்கு செங்கோல் என்று பெயர். அதன் மஹிமையால் அவனது தேசத்தினர் தர்மநெறி தவாமல் ஒழுங்கா யிருந்துகொண்டு ஸுகமாய் வாழ்ந்து வருகின்றனர்" எனப்படுகிறது. † "வானோக்கி வாழு முலகெல்லாம் மன்னவன் கோனோக்கி வாழுங்குடி" என்ற திருக்குறளும் செங் கோலின் பெருமையைக் கூறுகிறது. § "கொடையளி செங்கோல் குடியோம்பலுநான்கும் உடையானாம் வேந்தர்க் கொளி" என்ற திருக்குறள் ஈகை, கிருபை, நியாயம், குடிகளைப் பேணுதல் இவை நான்குமுடைய அரசன் வேந்தர் களுக்கெல்லாம் விளக்குபோல் விளங்குகிறவன் என்கிறது.

---

† அதி. 55. திருக். 2. உலகிலுள்ள உயிர்களெல்லாம் வான் என்ற மழையை நோக்கி வாழும். ஆனாலும் குடிகள் அரசனது செங்கோலை நோக்கி வாழும். (மழை பொழிந்து நாடு செழித்திருப் பினும் அதன் குடிகளுக்கு அரசனது செங்கோலில்லையானால் ஸுகமான வாழ்வு கிடையாது) எ-ன்.

§ அதி. 39. திருக். 10.

மாலை கட்டுகிறவன் பூந்தோட்டத்தில் அவ்வப்போது பலரும் மலர்களைமாத்திரம் பறித்து ஹாரங்களைக் கட்டு கிறானேயல்லாது புஷ்பச் செடி கொடிகளை வேறுடன் பிடுங்கிவிடுகிறானில்லை. அதுபோன்று அரசன் பிரஜை களிடமிருந்து அவர்களுக்குக் கிடைத்த பொருளில் ஆறில் ஒரு பங்கைக் கரமாக வாங்கிக்கொண்டு அவர்களை மென் மேலும் விருத்திக்குக் கொண்டுவரவேண்டும். மரக்கரி யுண்டுபண்ணுகிறவன் மரங்களை வேரறச் சேதித்து அவற் றை எரிப்பதுபோன்று அரசன் ஜனங்களைத் தொந்திரவு செய்து அவர்களிடமிருந்து அதிகமான கரம் வாங்கக் கூடாது. அது அதர்மமாகையால் அரசன் அதை நீக்க வேண்டும். * "அறனிழுக்காதல்லவை நீக்கி மறனிழுக்கா மானமுடையதரசு" என்று திருக்குறள் கூறுகிறது. குடி களிடமிருந்து கிரஹிக்கவேண்டிய பொருளை அரசன் தர்மநீதி நெறியுடன் விரும்பவேண்டும். அவன் குடிகளிட மிருந்து கிடைத்ததை முயற்சியுடன் காப்பாற்றவேண்டும். அவன் காப்பாற்றினதை நியாயமான வழியினால் விருத்தி செய்யவேண்டும். அவன் அப்படி விருத்திசெய்யப்பட்ட பொருளை பிரஜைகளுக்கு நன்மையான நல்ல விஷயங் களில் உபயோகிக்கவேண்டும். ஜனங்களின் ஆசாரம், வ்யவஹாரம், தேசவழக்கம், குடிவழக்கம், முதலிய அந் தந்த தர்மங்களை அப்படியே அரசன் ரக்ஷிக்கவேண்டும். அவன் அவற்றை மாற்ற முயலக்கூடாது. அவற்றினின்

* அதி. 39. திருக். 4. தர்மம் தவறாது நடந்து தர்மமல்லாதவற்றை நீக்கி மறன் என்ற வீரத்தன்மையைத் தவறவிடாத மானமுடையவன் அரசனாவான் எ-ன்.

றும் விலகுகின்றவர்களை சிக்ஷித்துத் திருப்ப அந்நெறி முறையே நடக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

ஸூர்யன் தனது கிரணங்களால் எட்டுமாஸங்களாக ஜலத்தைக்கொஞ்சம் கொஞ்சமாய் ஆகர்ஷித்து மேகங்களை யுண்டுபண்ணுவது போன்று அரசன் வியாபாரிகளின் க்ரயம் (கொள்முதல்) விக்ரயம் (விடுமுதல்) இவற்றை கவனித்தும் வ்வயஸாயிகளின் விளைபொருள்களின் தன்மையைப் பரிசீலனை செய்தும் அவர்களுக்கு கரம் (வரி) ஏற்படுத்தி அதைச்சிறிது சிறிதாக வசூலிக்கவேண்டும். அந்தந்த ஜனங்கள் தங்கள் கடமைகளில் தாழ்வடையாமலும் மீறிப்போகாமலுமிருக்கும்படி ஸரியான வழியில் அவர்களை ஸ்தாபிக்கவேண்டும். தண்டிக்கக்கூடியவர்களை தண்டியாமலும் தண்டிக்கவேண்டாதவர்களை தண்டித்தும் அநீதியாய் அரசுபுரிகின்ற அரசன் இம்மையில் அதிகமான அபகீர்த்தியடைவதுடன் மறுமையிலும் நரகமடைவான்.

"மன்னவன் ஆலோசித்தகார்யத்தை சீக்ரம் முடிக்கிறவனும், ஞாபகசக்தி யுள்ளவனும், அற்பஸ்வபாவ மில்லாதவனும், பக்ஷபாதமற்றவனும், துஷ்டர்களிடம் க்ரூரகுணமுற்றவனும், தர்மசிந்தையுள்ளவனும், கவலையில்லாதவனும், புத்திசாலியும், சூரனும், ரஹஸ்யத்தை அறிய வல்லமையுற்றவனும், வ்யவகாரத்தைத் தீர்ப்பதில் பொறுமையுள்ளவனுமா யிருக்கவேண்டும். அவன் ஸ்நேகிதர்களிடம் கபடமில்லாதவனும், சத்துருக்களிடம் கோபமுற்றவனும், வேலைக்காரர்களிடத்திலும், பிரஜைகளிடத்திலும் தகப்பன் போன்று கருணையுள்ளவனும், எப்போதும் அதிக உத்

ஸாகமுள்ளவனும், உதாரகுணமுற்றவனும், நன்றியறி வுடையோனுமா யிருக்கக்கடவன். பின்னும் பெரியோர்களின் சேர்க்கையுற்று அவர்கள் சொல்லும் யோசனைகளைக் கேட்கிறவனும், மந்திரிகளிடம் நம்பிக்கையுள்ளவனும், வணக்கமுள்ளவனும், ஸத்வகுணம் நிறைந்தவனும், நற்குடும்பத்தில் உதித்தவனும், உண்மை யுரைப்பவனும், சுத்தமானவனுமாயிருப்பவன் உத்தம வேந்தனாவன். குடிகளிடமிருந்து ஆறில் ஒருபங்கு கடமையைப்பெற்று அதனாலேயே அவர்களைக் காப்பாற்றுகிறவனும் துஷ்டர்களை சிக்ஷித்து ஸாதுக்களை ரக்ஷித்து ப்ரஜாதர்மங்களை அழிக்காமல் காப்பாற்றிவருகிறவனுமான பூபதி இம்மையில் புகழ்பெற்று மறுமையில் தனக்கு இஷ்டமான உலகத்தை அடைகிறான்" என்று ஸ்மிருதிகளிற் கூறப்படுகிறது. யுத்தகளத்தில் பயப்படாமலும், புறங்காட்டி ஓடாமலும் தைர்யத்துடன் நின்று சத்துருக்களுடன் தர்ம யுத்தம் செய்கிற வேந்தன் மரணமடைந்தாலும் அவனுக்கு வீர ஸ்வர்க்கம் கிடைக்கிறது. * "அஞ்சாமை யீகை யறிவூக்கமின்னான்கும் எஞ்சாமை வேந்தற்கியல்பு" "தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்றும் நீங்கா நிலனாள் பவற்கு" என்று திருவள்ளுவர் கூறுகிறார்.

---

* அதி 39. திருக். 2. 3. அரசர்களுக்கு பயமின்மை, கொடை, விவேகம், ஊக்கம் இந்நான்கும் இடைவிடாது நிற்கவேண்டுவன என்றும், சுறுசுறுப்பு, கல்வி, தைர்யம் இம்மூன்றும் அரசர்களுக்கு நீங்காமலிருப்பன என்றும் பொருள்.

## திருஷ்டாந்தக் கதை.

11. ராஜதர்மம் பற்றிய "திருஷ்டன்" என்ற கதை:— ஸூர்ய வம்சத்திற்பிறந்த திருஷ்டன் என்ற ஒரு அரசன் நெறி தவறாது அரசு புரிந்து வந்தனன். நாபகன் என்பான் அவனது குமாரன். அவன் மிகவும் முரட்டுத்தனமுடையவன். அவன் ஒரு ஸமயம் "ஸ்வப்பிரபா" என்ற ஒரு வைசியப்பெண்ணைக் கண்டு மோகித்து அவள் தகப்பனிடம் சென்று அப்பெண்ணைத்தனக்கு விவாகம் செய்து கொடுக்கும்படி கேட்டனன். "க்ஷத்திரியனை வைசியப்பெண் மணந்துகொள்வது ஜாதி முறை, நீதிசாஸ்திரம் இவற்றிற்கு விரோதம்" என்று பெண்ணின் பிதா நாபாகனது கோரிக்கையை மறுத்துவிட்டனன். அதனைக்கேட்ட ராஜகுமாரன் மிக்க சினங்கொண்டு "அடா! அற்பப்பயலே! உன் பெண்ணை நான் இப்போது பலாத்காரமாகத் தூக்கிக்கொண்டு போகப்போகிறேன். என்னைத்தடுப்பவர்களைக் கொன்றுவிடுவேன்" என்று கூறி நாபாகன் பயமுறுத்தினன். பெண்ணின் தகப்பன் மிகவும் நடுங்கி அவனது கொடியசெய்கையைப்பற்றி திருஷ்டனிடம்போய்முறையிட்டனன். அப்போது அரசன் தனது துஷ்டப் பிள்ளையை எப்படியாவது பிடித்துத் தன்முன் கொண்டுவந்து விடும்படி தனது படைத்தலைவனுக்குக் கட்டளை யிட்டான். தன்னைப்பிடிப்பதற்காக வந்த ஸேனாபதியினிடம் சண்டை செய்து நாபாகன் அவனைக்கொன்று கர்வமுற்றிருந்தான். அந்த சங்கதி தெரிந்த அரசன் தனது சேனையோடு சென்று தன் துஷ்டப் பிள்ளையைப்பிடித்து அவனை சிறைப்படுத்தி அவனுக்குத்தகுந்த தண்டனை விதித்தான். அரசன் என்பான் பக்ஷபாதமின்றி யாவரிடத்தும் தனது நீதி நெறியைக்காட்டி எளியவர்க்கு வலியவர் தீங்கிழைக்காதவண்ணம் குடிகளிடம் அன்புற்றுக் காக்கவேண்டுமென்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

---

12. ராஜதர்மம்பற்றிய எதிர்மறைக் கதை:—ஒருநாகல் நந்தன் என்ற அரசன் இருந்தான். அவனது மந்திரி பருசருதகன் என்பான். பாநுமதி யென்பாள் அவனது பட்டமஹிஷியாவாள். அரசன் ஒருக்ஷணமாவது தனது மனைவியைவிட்டுப் பிரிந்திருக்க மாட்டாதாகையால் நீதி விசாரணைகாலத்திலும் அவன் பத்னியைப் பக்கத்திலேயே உட்கார வைத்துக் கொண்டிருந்தான். அநாகரிகமான அவனது அச்செயலை மாற்றுவதற்காக மந்திரி பலவாறான நியாயங்களை எடுத்துக் கூறியும் மன்னவன் மறுத்துவிட்டனன். ஆனாலும் கடைசியில் மந்திரியின் மன்றாட்டத்திற்காக மனைவியின் உருவத்தை பக்கத்தில் வைத்துக் கொள்ளுவதாக மன்னன் ஒப்புக் கொண்டான். உடனே வேந்தன் உத்திரவின்படி சித்திரம் வரைபவோன் ராணியின் உருவப்படம் ஒன்று தயாரித்து ராஜனிடம் கொண்டுவந்து கொடுத்தனன். அப்போது மந்திரியும் ராஜகுருவும் அரசன் பக்கத்திலிருந்தனர். அரசன் குருவினிடம் படத்தைக் காட்டி "அரசியின் உருவம் சரியாய் அமைக்கப் பெற்றிருக்கிறதா?" என்று வினவினன். "எல்லாம் சரிதான். அரசியின் இடது விலாப்புறத்தில் கடுகளவான ஒரு சிறியமச்சமுண்டு. அதுமிகநுட்பமாகையால் 'சித்திரமெழுதுவோனதனை கவனித்திருக்கமுடியாது. அது ஒன்று தவிர மற்றவையெல்லாம் விடாமலும் ஸரியாகவுமிருக்கின்றன" என்றார் ராஜ குரு. உடனே அரசன் எல்லோரையும் வீட்டிற்கனுப்பிவிட்டான். குரு கூறிய ராணியின் மச்சத்தை ராஜாவும் அதுவரை கவனித்தவனல்லன். ஆதலால் அன்று அவன் அதனைக் கவனிக்கும்போது குரு கூறியது ஸரியாக இருந்ததைப் பற்றி அவர்பால் அரசன் மனத்தில் ஸந்தேகம் தோன்றியது. மறுநாள் அரசன் நீதிஸபைக்கு வந்தவுடன் அமைச்சனை நோக்கி "நேற்றுவரை நானும் கண்டுகொள்ளாத அரசியின் உடம்பிலுள்ள அதிநுட்பமான மறுவை நமது குரு கண்டுகொண்ட விதமெப்படி? இதனால் அவ்விருவரும் நடத்தைப் பிசகுள்ளவர்களாக விருக்கலா

மென்று தீர்மானிக்கிறேன். அரசியின்பால் எனக்குள்ள பிரீதியி ஞல் அவளைத்தண்டிக்க என் மனம் நோங்கவில்லை. ஆனலும் வயது, புத்தி, கல்வி இவற்றிற்சிறந்தவரான குரு ஒழுக்கத்தில் மிகவும் தாழ்ந்தவராகவிருப்பதுபற்றி அவரது சிரஸை சேதித்து என்னிடம் கொண்டுவந்து காட்டுவீராக" என்று கண்டிப்பாய் உத்தரவிட்டான். "குரு ஸரஸ்வதி கடாக்ஷம் பெற்றவராகையால் அரசியின் மச்சத்தை ஜ்ஞான திருஷ்டியாலறிந்துக் கூறியிருப்பார். அவரிடம் குற்றமிருப்பதாகத் தீர்மானித்துக் கடுங்கோபம் கொண் டிருக்கும் அரசன் மனத்தை, இப்போது ஸமாதானப்படுத்தித் தெ ளியவைப்பது ஸாத்யமாகாத கார்யம். ஆதலால் பின் ஒரு ஸமயம் அரசனே அவரை வலிய விரும்புவான். அப்போதுதான் இதன் உண்மையை விளக்கவேண்டும்" என்று மந்திரி நிச்சயித்தான். "வேந்தே! நல்லது; உத்திரவின்படி செய்கிறேன்" என்று மந் திரி கூறிவிட்டு குருவினிடம் சென்று நடந்த விஷயங்களைச் செப் பினன். அவன் குருவை தனது கிரகத்திற்குள் எவருமறியாத வண் ணம் பாதாள அறையில் மறைவாக வைத்துக் காத்தனன். உடனே அமைச்சன் சிறந்த சிற்பியைக்கொண்டு குருவின் தலைமாதிரியாகச் செய்வித்து அதனைக்கொண்டுபோய் அரசனிடம் காட்டி அவனைக் களிப்புறச் செய்தான்.

சில மாஸங்கள் சென்ற பிறகு அரசன் குமாரனுகிய ஜயபா லன் என்பான் காட்டிற்குத் தனியே வேட்டையாடப்போய் வெயி லில் களைத்து அங்கோர்மரத்தடியிற்படுத்து இளைப்பாறிக்கொண் டிருந்தான். அப்போது ஒரு புலி கொஞ்ச தூரத்திலிருந்து அவ னைப்பார்த்துப் பாய்ந்து வந்து கொண்டிருந்தது. ராஜகுமாரன் அதனைப்பார்த்து பயந்து அதிவேகமாக அம்மரத்தின்மீதேறிக் கொண்டனன். அப்போது அங்கு விசாலமான ஒரு கிளையில் ஓர் கரடி படுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான். அதற்குள் புலி மரத்தின் கீழே வந்து விட்டது. மேலே கரடியும் கீழே புலியுமிருப்

பதைப் பார்த்து பயந்து அங்குமிங்கும் போக முடியாமல் நடுவில் நின்று உடல் நடுங்கிக்கொண்டிருக்கும் ஜயபாலனை நோக்கி கரடி கூறுகிறது. "ஓ இளவரசே! நீ எதற்கும் அஞ்சாதே; என்னிடம் சரண்புகுந்த உன்னைக்காப்பது எனது கடமை. இங்கே வந்து உட்காருக" என்று அன்போடு கரடி தனது அருகில் வந்து உட்காரும் படி அவனை அழைத்தது. கரடியும் கொடியமிருகமானாலும் அது விசுவாஸமாய்க் கூறும் வசனத்தை அவன் ஒருவாறு நம்பி அதன் பக்கலிற்போய் வீற்றிருந்தான். சிறிது நேரமானவுடன் ராஜகுமாரன் கரடியைப்பார்த்து "ஓ நண்பனே! எனக்கு உறக்கம் வருகிறது. சற்று உனது மடியில் தலைவைத்துப்படுத்துக் கொள்ளுகிறேன். யான் கீழே விழாதபடி நீ என்னைப் பலமாய்க் கட்டிப்பிடித்துக் கொண்டிருக்கவேண்டும்" என்று வேண்டினன். "ஆகட்டும், அப்படியே செய்கிறேன்" என்று கரடி ஒப்புக்கொண்டது.

யுவராஜன் படுத்துறங்கும்போது மரத்தின்கீழுள்ள புலி கரடியைப்பார்த்து "ஓ கரடியே! உனக்குச் சிறிதும் புத்தியில்லை. நம்மைப்போன்று காட்டில் திரியும் விலங்குகளை வேட்டையாடிக் கொல்லுவதற்காகவே வனத்திற்கு வந்த வஞ்சகனுக்கு நீ அபயம் கொடுத்துக் காக்கின்றனையே! இது நமது இனத்தின் தர்மமாகுமா? இப்போதே அவனை கீழே தள்ளிவிடு. நான் அவனைப் புசித்துப் பசியாறிப்போகிறேன். உன்னை நான் ஒன்றும் செய்யவில்லை" என்று இயம்பிற்று. அதனைக் கேட்ட கரடி "ஓ புலியே! எவனாக இருந்தாலென்ன? என்னிடம் வந்து அடைக்கலம் புகுந்தவனை எனக்கு என்ன ஆபத்து வருவதானாலும் கைவிடமாட்டேன்" என்று கண்டிப்பாய்க் கூறி மறுத்துவிட்டது. கொஞ்ச நேரமானவுடன் ஜயபாலன் எழுந்துவிட்டான். அப்போது கரடி அவனைப்பார்த்து "அப்பனே! நான் இப்போது உனது மடியில் தலைவைத்துச் சற்றுத்தூங்குகிறேன். ஜாக்கிரதையாக என்னை நீ பிடித்துக்கொண்டிரு" என்று சொல்லி அவ்விதமே அது தூங்கி

விட்டது. அப்போது புலி ஜயபாலனைப் பார்த்து "அடா! மூடா! என்னைப்போன்றே கரடியும் ஒரு துஷ்ட மிருகம். அது இப்போது எங்கேயோ வயிறாரப் புசித்து வந்திருக்கிறது. பசிவந்தவுடன் உன்னைச் சாப்பிடலாம் என்ற எண்ணத்துடன் நண்பன்போன்று நேசித்துப் பாசாங்கு செய்கிறது. நரமாம்ஸபக்ஷணம் செய்யும் கொடிய விலங்கின் வசனத்தை நம்பிக்கொண்டிருக்கும் உன்னைப் போல மடையன் உலகத்தில் எவனுமிலன். ஆதலால் இப்போது கரடியைக் கீழே தள்ளிவிடு. யான் அதனைப் புசித்துப் போய்விடுகிறேன். நீ அப்பால் ஸுகமாக உன் ஊருக்குப்போகலாம்" என்று கூறிற்று. அதன் வசனத்தை ராஜகுமாரன் சரியென்று நினைத்து அப்படியே கரடியைக்கீழேதள்ளிவிட்டனன். உடனே கரடி விழுத்துக்கீழே விழாமல் ஏதோ ஒருகிளையைப் பற்றி பின்னும் மரத்தின் மீது தொத்திக்கொண்டது.

அப்போது ராஜகுமாரன் புத்தியின்றி தான் செய்த கொடிய தொழிலைப்பற்றிக் கரடியினிடமிருந்து பயந்து நடுங்கிக் கொண்டிருந்தான். அப்போது அவனை நோக்கி "அடா! மனிதப் பதரே! நீ தூங்கும்போது உன்னைத் தின்ன என்னை ஏமாற்ற முயற்சித்த புலியினது வஞ்சனைக்கு நீ வசமாய்விட்டனை. உன்னைப்போன்று நம்பிக்கைத் துரோகம் செய்கின்ற மகாபாபி உலகில் அரிது. என்னை நீ மோசம் செய்ததற்காக உன்னை நான் ஒன்றும் செய்யப்போவதில்லை. ஆனாலும் இந்தப் பாபமுன்னைவிடாது. நீ பித்தம் பிடித்துப் பிசாசுபோல் இக்காட்டில் திரிவாயாக" என்று சபித்தது. புலிகொஞ்சநேரம் காத்திருந்தும் காரியம் பலிக்காததுபற்றி அது இரைதேட வேறிடம் போய்விட்டது. பிறகு கரடியும் கீழே இறங்கி இஷ்டப்படி சென்றது. அதன்பிறகு ஜயபாலன் கரடியின்சாபத்தால் அவ்விதமே அக்காட்டில் பயித்தியம் பிடித்துத்திரிய ஆரம்பித்தான்.

இரவில் அரசன் பகலில் வேட்டைக்குச்சென்ற தனது பிள்ளை நாட்டிற்கு வராதது தெரிந்து உடனே வேலைக்காரர்களோடுடன் வனத்திற்குவந்து தேட குமாரன் அகப்பட்டான். அவனிடம் யார் என்ன கேட்டபோதிலும் "ஸஸேமிரா" என்ற ஒரே வார்த்தையைப் பதிலாகக்கூறுவதைத்தவிர வேறுஒன்றும் கூறுகிறதில்லை. அவன் ஆகாரம் முதலியனவும் அபேக்ஷயின்றி உன்மத்தனாகவிருந்தான். அரசன் மிக்க வருத்தத்துடன் அவனை அரண்மனையழைத்துவந்துப் பாதுகாப்பில் வைத்துக் காத்துவந்தனன். அவனது கொடிய வியாதியைப்போக்குவோருக்குப் பாதி இராஜ்யம் கொடுப்பதாகப் பறையறைவித்தான். பல வைத்தியர்கள் வந்து பார்த்தும் பலனின்றித் திரும்பிவிட்டனர்.

இந்தச் சங்கதிகளை மந்திரி ராஜகுருவினிடம் சொல்ல அவர் அவனைப்பார்த்து "மந்திரி! நீ அரசனிடம் சென்று எனது கிரகத்தில் ஒரு கன்னிகை வந்திருக்கிறாள். அவள் தெய்வத்தன்மை பொருந்தியவள். அவள் திரைக்குள்ளிருந்துதான் மந்த்ரவாதம் செய்வாள். அவள் ஜயபாலனது பிணியைப்போக்க வல்லவள். அவள் இருப்பிடம் விட்டு வேறிடம் வரமாட்டாள்" என்று தெரிவிப்பாயாக" என்றார். உடன் மந்திரிஅவ்விதமே அரசனிடம் தெரிவிக்க அரசன் தன்குமாரனைக் கூட்டிக்கொண்டு மந்திரியின் கிரகத்திற்கு வந்துவிட்டனன். ஒருபெரிய ஹாலில் திரைமறைவாக குரு இருந்துகொண்டனர். அரசன் குமாரனைதிரையின் முன்பாகக் கொண்டுபோய் உட்கார்த்தினன். அப்போது குரு ராஜகுமாரனைப் பார்த்து(கிம்கிருதம்) 'என்னசெய்தாய்?' என்று வினவினர். அவன் "ஸஸேமிரா" என்று கூறினான். உடனே அவர் "ஸ" என்ற எழுத்தில் ஆரம்பித்து கீழ்வருமாறு ஒரு சுலோகம் சொல்லுகிறார்.

"ஸத்பாவம் ப்ரதிபந்நாநாம் வஞ்சநேகா விதக்ததா;
அங்கமாருஹ்ய ஸுப்தாநாம் ஹநநே கிந்து பௌருஷம்."

(இ-ள்) "நல்லெண்ணமுள்ளவரைவஞ்சிப்பதில் ஒரு ஸாமர்த் தியமா? மடியிற்படுத்துத் தூங்குகிறவர்களைக் கொல்லுவதில் என்ன பராக்கிரமம்?" என்பது. உடனே ஜயபாலன் ஸ என்ற எழுத்தை விட்டு "ஸேமிரா" என்ருன். பிறகு குரு "ஸே" என்ற எழுத் தில் ஆரம்பித்து வேறொரு சுலோகம் கீழ்வருமாறு சொல்லுகிருர்.

"ஸேதும் த்ருஷ்ட்வா ஸமுத்ரஸ்ய கங்கா ஸாகர ஸங்கமம்;
ஹத்யா தோஷோ விமுச்யேத மித்ரத்ரோஹோ நமுச்யதே."

(இ-ள்) "ஸமுத்ரத்திலுள்ள அணை, அல்லது கங்கை ஸமுத் ரத்திற் கூடுமிடமாகிய ஸங்கமுகம் இவற்றைப் பார்த்த மாத்தி ரத்தில் ஒருவனைக் கொலைசெய்த பாபமும் நிவிர்த்தியாகும்; ஆனுல் மித்திரனை வஞ்சித்த பாபம் நிவிர்த்தியாகாது" என்பது. உடனே ஜயபாலன் ஸே என்ற எழுத்தை விட்டு "மிரா" என்று கூறினுன். பிறகு குரு "மி" என்ற எழுத்தில் ஆரம்பித்து கீழ்வரு மாறு இன்னொரு சுலோகம் சொல்லுகிருர்.

"மித்ரத்ரோஹீ க்ருதக்னச்ச யச்ச விச்வாஸகாதுக:;
த்ரயஸ்தே நரகம் யாந்தி யாவச்சந்த்ர திவாகரம்."

(இ-ள்) "நண்பனைக்கெடுத்தவன், நன்றி கொன்றவன், நம் பிக்கைத் துரோகம் செய்தவன் ஆகிய மூவரும் சந்திர ஸூர்யர்கள் உள்ளவரை நரகமடைந்து இருக்கின்றனர்" என்பது. உடனே ஜயபாலன் மி என்ற எழுத்தைவிட்டு "ரா"என்று கூறினுன், பிறகு குரு "ரா" எழுத்தில் ஆரம்பித்து கீழ்வருமாறு பின்னு மொரு சுலோகம் சொல்லுகிருர்.

"ராஜந் போதவ புத்ரஸ்ய யதி கல்யாண மிச்சஸி;
தாநம் ப்ரதேஹி தீநேப்யோ பகவாந் தீநவத்ஸல:."

(இ-ள்) ஓ ராஜனே! உன்புத்திரனுக்கு நன்மையை விரும்பு வாயாளுல் எளியவர்க்கு தானம் செய், ஏனெனில் பகவான் எளி

யவர்களிடமே மிக்க அன்புற்றிருக்கின்றவரன்றோ? ” என்பது. உடனே ஜயபாலன் பித்தம் தெளிந்து தனதுசொந்தமான நிலைமையையடைந்தான். ஒருவன்செய்த மகா பாபத்தை ஸபையில் பலர் அறியும்படி வெளிப்படுத்துவது அதனைப் போக்கத்தக்கப் பிராயசித்தமாகுமல்லவா? பிறகு அவன் காட்டில் நடந்த சங்கதிகள் யாவும் ஒளிக்காது எடுத்துக் கூறினன். அதனைக்கேட்ட அரசன் மிக்க ஆனந்தமும் வியப்புங்கொண்டு கூறுகிறான். “ பெண்ணே! காட்டினில் கரடி, புலி, மனிதன் இவர்களுக்கு நடந்த விருத்தாந்தத்தை நாட்டிலிருக்கும் நீ எவ்விதம் தெரிந்துகொண்டனை? என்று கேட்க குரு கீழ் வரும் சுலோகத்தைக் கூறுகிறார்.

“சிரமாராதநாத்துஷ்டா ஜிஹ்வாம் வாணீ மமாச்ரிதா ;
ஜாநாமி தத்ப்ரஸாதேந பாநுமத்யா யதாங்கிதம்.”

(இ-ள்) “வெகுகால மாராதித்தலால் ஸந்தோஷமுற்ற ஸரஸ்வதி எனது நாக்கினில் வந்து வஸிக்கின்றாள். அவளது அருளினால் உனது பத்நியாகிய பாநுமதியின் உடம்பினிலுள்ள மச்சத்தைப்போன்று காட்டில் நடந்த கதையை யறிந்தேன் ” என்று கூறி குரு, திரையை நீக்கிவிட்டனர். உடனே அரசன் அவரைப் பார்த்து மிக்க வெட்கம், அதிக ஆச்சர்யம், அளவற்ற ஸந்தோஷம் இவற்றுடன் அவர் பாதங்களில் ஸாஷ்டாங்கமாய்ப் பணிந்து மன்னிப்புவேண்டினன். நிரபராதியான குலகுருவைக் கொல்லப்பெறும் பெரும் பாபத்தினின்றும் தன்னைத் தப்பவைத்த மந்திரியின் மதிநுட்பத்தையும் ராஜ்ய தந்திரத்தையும் பலவாறாகப் புகழ்ந்தனன். கடைசியில் ராஜகுரு அரசனை உட்காரவைத்துப் பல நீதிகளை உபதேசித்து தனக்கு அவன் கொடுப்பதாகக் கூறின பாதி ராஜ்ய வருமானத்தைத் தர்மத்திற்கு உதவும்படி உத்தரவளித்தார். இப்பவும் “மோசம்” என்ற பொருளை உணர்த்த ஸஸேமிரா என்பதை ஜனங்கள் இக்கதையினாற்றான் உபயோகிக்கின்றனர்.

அரசன் என்பான் அமைச்சனிடம் ஒற்றுமையுற்றும் பெண் ஜாதியினிடம் பேராவல்கொள்ளாமலும் பெரியோரிடம் பொறுமை யின்றி குற்றம் கூறாமலும் எந்த விஷயங்களையும் நிதானித்துத் தீர்மானிப்பதுமான பற்பல நீதிகளைக் கையாண்டு வந்தால்தான் தானும் சுகப்பட்டு தனது இராஜ்யத்திற்கும் இன்பமளிப்பான் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

---

## பிரஜா தர்மம்

ஒரு நாட்டிலுள்ள குடிகள் பிரஜைகள் என்றும் அவர்கள் அனுஷ்டிக்கவேண்டிய தர்மம் பிரஜாதர்மம் என்றும் கூறப்படும். ஒரு நாட்டின் வாழ்க்கை ஒரு பெரிய குடும்பத்தின் வாழ்க்கையையே ஒத்திருக்கின்றது. ஒரு குடும்பத்தின் க்ஷேமத்தின் பொருட்டு அதிலுள்ள பலபேர் களும் அவரவர் கடமைகளை ஒற்றுமையுடன் ஒழுங்காகச் செய்து வந்தாலன்றி அக்குடும்பம் ஒருபோதும் ஸுக ஜீவனம் பெற்று ஓங்கிச் செழித்துத் தழைக்காமலிருப்பது டன் அதன் தலைவன் மனமும் மிகக் கவலையுற்றிருக்குமன் றோ? அதுபோன்று ஒரு நாட்டினர் தத்தம் நெறிமுறை களைக் கடைப்பிடித்து அவற்றின்படி ஒழுகாவிடின் அந் நாட்டின் ஸுகமான வாழ்க்கைக்கு வேண்டிய ஸகல ஸௌகர்யங்களும் ஸரியாய் அமைக்கப்பெறாமல் சீர் குலைந்து அதன் தலைவன் ஸதா ஏக்கமுற்றவனாகவே இருப் பான். ஒரு ஸமயம் ஜனங்கள் நடத்தும் கார்யங்கள் தலைவ னின் கட்டாயத்திற்காகச் செய்யப்படுவதாயினும் அதை விட அவரவர் உணர்ச்சியே அதனைத் தூண்டுவதாக இருந் தால் அக்கார்யங்களின் செம்மையும், செழுமையும் செப்

பவும் வேண்டுமோ? உபாத்தியாயரின் கட்டாயத்தி
நசது ஊக்கத்தினுலேயே கல்வி கற்கின்ற மாண
சிறப்பே இதற்குச் சான்றுகும். ஒரு குடும்பத்தி
கள், புருஷர்கள், குழந்தைகள், சிறுவர்கள், த
வயோதிகர்கள், புத்தியிற் சிறந்தவர்கள், புத்தியில்
தவர்கள், அங்கவீனர்கள், பிணியாளர்கள், ஆ
வேற்றுமைப்பட்ட மனிதர்கள் ஒன்றுசேர்ந்து
கடமையை மற்றொருவர் நடத்த முடியாத நிலை
அவர்கள் பரஸ்பரஸகாயத்தினுலேயே ஜீவித்து
கொண்டிருக்கும் வண்ணம், ஸர்வேசுவரனது
யின் இயற்கை அமைந்திருக்கிறது. அது
மாய்த் தெரிந்த விஷயம். அவ்விதமான அ
சற்று உற்று நோக்குகின்றப் பிரஜைகள் யாவரும்
தர்களுள் அவரவர் கடமைகளைக்கடந்து கையை
கொண்டிருப்பவர் கடைசியாகக் கடுந்துன்பம
என்பதை நன்குணர்ந்து தத்தம் தர்மங்களைச் சி
நடத்தவேண்டியதில் தாமே சிலாக்யமான சிரத்
ருப்பார் என்பதற்கு ஐயமில்லை.

வயிற்றை ஆகாரத்தினுல் நிரப்புவதற்குச்
ளுள்ள உறுப்புகள் யாவும் அவ்வவற்றின் தொ
விடாமற் செய்துகொண்டிருக்கவேண்டும்; அவற்
றின் தொழில் குறைவுபட்டாலும் அந்தமட்டில்
பூர்த்தியில் விக்னம் நேரிடும்; உறுப்புகள் இடை
தற்கு வயற்றின் வாட்டமில்லாமையே கார
இந்த விஷயத்தைத் தெரிந்துகொண்டவர்கள்
செழிப்பிற்கு நாட்டினர் யாவரும் ஸமூகவாழ்க்

றுப் பெற்றிருக்குமாறு அவரவர் தொழில்களில் முயற்சி யுள்ளவர்களாக இருக்கவேண்டுமென்பதை அறிவார்கள். மனித வர்க்கத்திற்கும் மற்ற பிராணி வர்க்கத்திற்கும் ஸம்பந்தப்பட்ட வாழ்க்கையிலேயே பரஸ்பரஸகாயத்தை ஆதாரமாகக் கொண்டிருக்கும் நிலைமை நிதர்சனமாகக் காணப்படுகிறது. ஆதலால் மனிதர்களுள் அவ்விதமான ஸகாயமும், அது நடைபெறவேண்டிய ஒற்றுமையும் இல்லாவிடில் அவர்களின் கவலையற்ற வாழ்க்கையைக் கனவிலும் நினைக்க முடியாது என்பது திண்ணம். உலக வாழ்க்கை ஒன்று அல்லது இரண்டுபேரால் நடக்கக்கூடியதன்று. அது உலகத்தினர் யாவரும் சேர்ந்து செய்கின்ற முயற்சியினாலேயே நடைபெறக்கூடியது. ஒருவன் செய்யும் தொழில் மற்றொருவனுக்கும், அவன் தொழில் வேறொருவனுக்குமாகப் பயன்படுவது போன்றிருந்து ஒரு நாட்டில் உள்ள தொழில்கள் யாவும் சேர்ந்து அந்நாடு முழுமைக்கும் அதிலுள்ள ஒவ்வொரு குடும்பத்துக்கும் அக்குடும்பத்திலுள்ள ஒவ்வொரு மனிதனுக்கும் வேண்டுவனவாகவே இருக்கின்றன. ஒவ்வொரு மனிதனுடைய வாழ்க்கைக்கும் ஒவ்வொரு நாளும் எவ்வளவு பொருட்கள் வேண்டியிருக்கின்றன? என்பதையும் அவற்றை ஒரு மனிதனே நிர்மாணிக்கமுடியுமா? என்பதையும் யோசித்துப்பார்த்தால் பிரஜைகள் ஒவ்வொருவரும் நாட்டிற்கு வேண்டிய ஏதாவது ஒரு தொழிலிற் கடைப்பிடித்து ஒழுகுகின்றவர்களாக இருக்கவேண்டுமென்பது தெள்ளென விளங்கும். பல தொழில்களைப் பயன் பெறுதவண்ணம் அரைகுறையாகக் கற்பதைவிட ஒரு தொழில் தனக்

கும் பிறர்கட்கும் உபயோகப்படும் நிலைமையில் பூர்த்தியா கக் கற்கப்படுவதே மாந்தர்களின் முக்ய தர்மம்.

---

### பிரஜா தர்ம ஸ்தாபன பலன்.

நமது இந்தியாவில் வாழும் ஜனங்களுக்கு வேண்டிய கார்யங்களை அவர்களே செய்து முடித்துக்கொள்ள பல விதமான தொழிற் கல்விகளையும் ஞானக் கல்விகளையும் முன்னோர்கள் ஏற்படுத்தி அவற்றை அவரவர்கள் தர்ம மாகக் கைக்கொண்டு கற்கவேண்டுமென்ற தர்மஸ்தாப னங்கள் செய்திருக்கின்றனர். அவ்விதமான தர்ம ஸ்தாப னத்தினால் உலகத்திற்கு அனேகவிதமான நன்மைகள் காணப்படுகின்றன. தர்மங்களின் வ்யவஸ்தை (உறுதிப் பாடு) இருப்பதனாற்றான் "நாம் இக்கல்வியை அப்யஸித் துத் தேர்ச்சிபெறவேண்டும்; அன்றேல் கெட்டுவிடுவோம்" என்ற ஊக்கம் ஜனங்களின் மனத்தில் ஊன்றி நிற்பதற்கு இடமாகிறது. அப்போது ஒரு தொழிலின் பலன் அற்ப மாயிருந்து அது அதிக கஷ்டத்துடன் ஸாத்யமாக வேண்டியிருப்பினும் அதில் ஆதரவுடன் ஜனங்கள் ப்ர விருத்தி செய்வார்கள். அதனால் அந்தந்த தொழில்களில் அவரவர்களுக்கு விசேஷ அனுபவமுண்டாகும். பிறகு அவர்களின் புத்ரர்கள் பௌத்ரர்கள் (பேரன்கள்) ப்ர பௌத்ரர்கள் (பேரன் பிள்ளைகள்) ஆகிய அந்த குடும்ப பரம்பரையிலுண்டானவர் யாவரும் அந்தத் தொழில்களை அனுஸரித்து அவற்றில் அதிகத் தேர்ச்சியடைந்து மேன் மேலும் புதிது புதிதான விஷயங்களைக் கண்டுபிடிப்பதற்கு வேண்டிய திறமையைப் பெறுவார்கள்.

உலகில் எவன் எந்தக் கல்வியின் மூலமாக ஜீவ னத்தை நடத்தி வருகிறானோ, அவனது வம்சத்தார்கள் அக்கல்வியைக் கற்பதில் விசேஷமான சௌகரியத்தை யடைந்து ஸாமர்த்தியம் பெறுவதுபோன்று மற்றவர் களுக்கு அவ்வித ஸௌகர்யம் ஏற்படாது. மேலும் அந் தந்த வித்யைகளை அவரவர்களே தங்கள் இனத்தார் களுக்கு திரவியத்தில் ஆசையில்லாமல் தொழில் அபி விருத்தி என்ற முக்யமான ப்ரயோஜனத்தை மாத்திரம் எதிர்பார்த்து ஸுலபமாய்க் கற்பித்துவிடுவார். ஒருவன் ஒரு கல்வியைத் தன் தசேத்தில் இனத்தார்களிடமிருந்து கற்க ஸௌகர்யமின்றி அந்யதேசம் போய் அந்யர்களிட மிருந்து அதைக் கற்றுக்கொண்டு வருவதில் நிரம்ப பொருள் செலவுடன் சிரம ஸாத்யமாகவும் இருக்கிறது. அப்போது அவன் ஒரு ஸமயம் அதனைக் கற்காமலே இருந்துவிடுவான். கடைசியாக சிறிது நாட்களில் அக் கல்வியே அந்நாட்டிலிருந்து எடுபட்டதாய் விடும். இவ் விதம் நமது பாரதகண்டமென்ற இந்தியாவில் கொஞ்சகால மாய் அவரவர்கள் தத்தமக்குரிய கல்விகளைக் கற்கவேண்டு மென்ற ஊக்கம் யாதொன்றும் இல்லாதது பற்றி எல்லோ ருமே பணம் அதிகமாகக் கிடைக்கக் கூடியதும், கஷ்ட ஸாத்யமில்லாததும், சுளுவாகத் தோன்றுகிறதுமான கல்விகளிலேயே முயற்சிக்க ஆரம்பித்துவிட்டனர். ஆக லால்கஷ்ட ஸாத்யமான கல்விகளைக் கற்று அவற்றை மறை யாமலிருக்கும்படி செய்து உலகத்திற்கு நன்மையைப் பயக்கின்றவர் எவர்? என்பது தெரியவில்லை. நமது முன் னோர் அருளிய அறிவு நூல்களை அன்ய நாட்டினர் கைக்

கொண்டு ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து வந்ததைப் பார்த்தபிறகுதான் நம் தேசத்திலுள்ள மேதாவிகளுக்கு நம் முன்னோரின் கருணை வெளியாக வேண்டி யிருக்கிறது. நாடுவிட்டுக் கடந்துபோனதுபோக எஞ்சி யிருக்கின்ற அறிவு நூல்கள் நம் தாய்பாஷைகளாகிய ஸம்ஸ்கிருதம், தமிழ் முதலிய தேசபாஷைகளிலிருப்பின் அவற்றைப்படிப்பவர் இன்னார்? என்பது தெரியவில்லை. ஏனெனில் ஆங்கிலம் கற்றவர்களில் பெரும்பாலார் தமிழ் முதலிய தேசபாஷைகளிலுள்ள அறிவு நூல்களைக் கையிலெடுத்துப் படிப்பதே தமக்குப் பெருமைக் குறை என்று நினைக்கின்றனர். அப்படியானால் தேசபாஷைகள்தான் எவ்விதம் ஓங்கும்? அவற்றில் உள்ள அருமையான கருத்துகள்தான் அவர்கள் மனத்தில் எவ்வாறு நோங்கும்? இப்போது கொஞ்சகாலமாய் சிலமேதாவிகள் முயற்சியினால் முன் சொன்ன பழக்கம் குறைவுபட்டு ஆங்கில வல்லுனர்களும் தேசபாஷையிலுள்ள அறிவு நூல்களை ஆராய ஆரம்பித்திருக்கின்றனர். அதுவும் ஒரு நற்காலமே.

---

### இளமையிலேயே மத போதனை அவசியம்.

நம் முன்னோர் நம் நாட்டார்களுக்கு நயது கல்விகளைக்கற்பித்துவந்ததில் அதிகப் பணச்செலவு கிடையாது. பிறநாட்டுக் கல்விமுறைகளை நம் நாட்டில் ஸ்தாபிக்க எவ்வளவு பணச்செலவு நேரிட்டு இருக்கின்றது? என்பது நன்கு விளங்கும். ஆனால் அது கால சந்தர்ப்பத்தை யனுஸரித்துச் செய்யவேண்டியதாயினும் நம்மவர்கள் ஏற்படுத்திய கலாசாலைகளில் மிகுந்த பணச்செல

விட்டு பிறநாட்டுக்கல்விகளைக் கற்பிக்கும் மத்தியில் அற்ப மான பணச்செலவுடன் நமது சிறுவர்களைத் தாய்பாஷை களாகிய தேசபாஷைகளில் தேர்ச்சியுறச்செய்து அவற்றி லுள்ள நூல்களில் சிறுபான்மையாவது அவர்களுக்குக் கற்பிக்கவும் நமது வேதாகம சாஸ்திரங்களைத் தழுவின மதஸம்பந்தமான கல்விகளை அடிப்படையாகவாவது புகட்டவும் எவ்வளவு பேர்கள் முன்வந்திருக்கின்றனர்? என்பதைக் கணக்கிட்டால் அது மிக்க அருமையாகவே இருக்கும். நமது கலாசாலைகளில் நம் மத ஸம்பந்தக் கல்விகளை நம் சிறுவர்களுக்குப் புகட்டவேண்டிய கடமை யையும் சுதந்தரத்தையும் மறந்து அவ்வறிவிற்கு ஒரு சிறு அஸ்திபாரங்கூட ஏற்படுத்தாவிடில் அச் சிறுவர் பெரியவரான பிறகு எதன்பேரில் கட்டடம் கட்ட ஆரம் பிப்பார்கள்? என்பது தெரியவில்லை. அந்த அஸ்திபாரம் இளமையில் இல்லாமல் முதுமையில் கைகூடுவது மிக்க சிரம ஸாத்யமான விஷயம். அதனுலேயே “இளமையிற் கல்” என்முர் ஔவையார். இளமையில் சிறுவர்களுக்கு ஒரு விஷயத்தில் வாஸனை ஏற்படாவிடில் முதுமையில் அவர்கள்மனம் வேறுவிதமாய்த் திரும்பவும் கூடும். பிற நாட்டினர் ஏற்படுத்திய கலாசாலைகளில் ஒவ்வொருவருக்குப் பிலும் ஒரு மணிநேரமாவது சிறுவர்களுக்கு அவர்கள் மதத்தைக் கற்பிக்கவேண்டுமென்ற கட்டாய முறையை நம்மவர்கள் தெரிந்திருந்தும் தெரியாதவர்கள்போல இருக்கும் காரணம் தெரியவில்லை.

பெற்றோர்களின் மனத்திலுள்ள வாஸனைகள் பிள்ளை களிடம் ஸம்பந்திக்கிறபடியால் அவற்றைத் தூண்டினுற்

றான் அவை படரும் தன்மையுற்றனவாகும். தூண்டா விடில் மின்மினிப்பூச்சிபோன்று பிரகாசிப்பதுபோல் தோன்றி கடைசியில் உள்ளேயே அடங்கி மறைந்துவிடும். ஆகையால் ஒவ்வொரு சிறுவனுக்கும் வம்ச பரம்பரையாக மனத்தினில் பதிந்துகொண்டுவருகிற அந்தக் கல்விகளின் வாஸனைகளை ஜன்மந்தோறும் தூண்டிவிட்டுக் கொண்டிருந்தால் அவற்றில் அவர்கள் மிகத்தேர்ச்சிபெற்று தங்களுக்கும் பிறர்கட்கும் ஹிதத்தைச் செய்கின்றவர்களாக இருப்பார்கள். இதற்குக் கடமைப்பட்டவர்கள் சிறுவர்களின் பெற்றோர்கள் மாத்திரமல்ல. அவர்களின் உரிமையை ஏற்றுக்கொண்டு மாணவர்களுக்குக் கல்வி கற்பிக்கின்ற கலாசாலைகளின் ஸ்தாபர்களாகவிருக்கும் தர்மகர்த்தர்களுமே. உலக ஸம்பந்தமான கல்விகளும் மதஸம்பந்தமான கல்விகளும் அதிகப் பணச் செலவில்லாமல் முன் கற்பிக்கப்பட்டு வந்தன. நமது மத ஸம்பந்தமான சில கொள்கைகள் தப்பிதங்கள் என்று புறச்சமயிகள் பிரஸங்கிப்பதைக்கேட்டு நம் சிறுவர்கள் ஏமாற்றமடையும் இக்காலத்தில் உலகக் கல்வியைப்போன்று மதக்கல்வியையும் பணச்செலவு செய்துதான் கற்பிக்கமுடியும். மதக்கொள்கைகளின் அறிவை விசாலப்படுத்துவதற்காகவே மடங்களும், ஆலயங்களும் ஏற்பட்டிருப்பதால் தற்கால நிலைமையைக் கவனித்து மடாதிபதிகளும் ஆலய அதிகாரிகளும் பண உதவிசெய்து கலாசாலா ஸ்தாபகர்களை நமது வேதாகம மதக்கல்வி கற்பிக்க உற்சாகப்படுத்தவேண்டும். நமது தேசத்தில் மறைந்துபோயிருக்கின்ற வேதாந்தங்களின் அறிவு நூல்களும், நியாயங்களும்,

சிற்பங்களும், வைத்தியங்களும், வானசாஸ்திரங்களும், அநேக விதமான தொழிற்கல்விகளும் அன்னியநாட்டுப் புத்தகசாலைகளில் மொழிபெயர்த்தும் மொழிபெயர்க்காமலும் வைத்திருக்கின்ற விபரம், புத்தகத் தொகுதிகளைக் காட்டும் அவர்களுடைய புத்தகப்பட்டியைப் பார்க்கும் போது தெரியவருகிறது.

நமது முன்னோர் செய்த உதவியின் உரிமையை நாம் மறப்பதற்கும் அதை பிறர் ஏற்று நன்மையைப் பெறுவதற்கும் ஸாதகமான காலஸந்தர்ப்பம் நேர்ந்திருப்பதாகச் சொல்லுவது முற்றிலும் பொருந்தாது. ஏனெனில் நமது கடமைகளைக் கடைப்பிடித்து நாம் ஒழுகாத ஒழுக்கத்தின் குறைவே அதற்கு முதற்காரணமாகும். அதனாலேயே நமது முயற்சியில் நாம் தாழ்மையடைந்து வருகிறோம். உலகத்திலுள்ள ஸகலமான ஜீவவர்க்கங்களையும் காப்பாற்றவே பகவான் அவரவர் கடமையான தர்மங்களை ஏற்படுத்தியிருக்கிறார் என்று சாஸ்திரங்களில் கூறப்படுகிறது. கீதையில் * "அர்ஜுனா! பிறர்தர்மம் நன்றாய் அனுஷ்டிப்பதைவிட தனது தர்மத்தில் குறைவிருந்தாலும் அதுவே மேன்மைதரும். தன் தர்மத்தை யனுஷ்டிக்கிறவன் பாபமடைகிறானில்லை. தனது தர்மம் குற்றமுள்ளதாகத்தோன்றின போதிலும் அதை கைவிடக்கூடாது. அது உலக நன்மைக்கானது. அதனால் அவனுக்கு மரணம் நேர்ந்தாலும் அதுவும் மேன்மையே. அன்ய தர்மம் பயத்திற்குக் காரணம். மனிதர் தமது கடமையான கர்மங்களை அனுஷ்

---

* அத். 18. சுலோ. 46, 47, 48.

டிப்பதால் ஸர்வப்பிராணிகளுக்கும் காரணமாய் எங்கும் வியாபித்திருக்கின்ற ஸ்வாமியை ஆராதித்தவர்களாக ஆகின்றனர். அதனாலேயே அவர்கள் நற்கதியடைகின்றனர்" எனப்படுகிறது. ஆதலால் அவரவர் தர்மத்தை கைவிடாது காப்பாற்றுகிறவர்களே உலகத்தில் உண்மையானப் பிரஜைகள் ஆவர். அவர்கள் தர்மம் அவர்களது முன்னோர்களால் அநுஷ்டிக்கப்பட்டு வம்ச பரம்பரையாக வருகின்றதும் சாஸ்த்திரத்தில் விதிக்கப்பட்டதாகவுமிருக்கவேண்டும். இக்கலியுகத்தில் அவரவர் தர்மத்தைச் சிறிது அநுஷ்டித்தாலும் அது உலகத்திற்கு மிகவும் பயன் படக்கூடியதாகவுமிருக்கிறது. ஆதலால் நாட்டிலுள்ள பிரஜைகள் யாவரும் தத்தம்தர்மத்தை உள்ளபடி யுணர்ந்து ஒழுகவேண்டிய சிரமமெடுத்துக்கொள்ளுதல் அவசியம்.

---

## திருஷ்டாந்தக் கதை.

13. பிரஜா தர்மம் பற்றிய கதை:— முன் ஒரு கால் வைகையாற்றில் ஜலப் பிரவாஹம் கரை புரளப் போய்க்கொண் டிருந்தது. அப்போது மதுரைமாநகரத்திற்கடுத்த மேற்றிசை யில் பெரிய உடைப்பு உண்டாகும்போலிருந்தது. அதனை அறிந் பாண்டிய அரசன் " ஜீர்ணமாயிருக்கும் வைகைக்கரையை உயர்த்த நாளை அதிகாலையில் மதுரையிலுள்ள ஒவ்வொரு வீட்டிலிரு தும் தப்பாமல் ஒரு ஆள் வேலைக்கு வரவேண்டும் " என்று பறை யறைவிக்கச்செய்தான். அந்நகரில் அன்றூடம் பிட்டு விற் கிடைத்த லாபத்தினால் ஜீவனம் நடத்தும் ஒரு ஏழைக் கிழவி னது வீட்டில் அவளைத் தவிர வேறு ஒருவருமில்லை. அவள் பொ வேலைக்குப்போய்விடின் அவளது ஆகாரத்திற்கு யாதொரு வ

யும் கிடையாது. அவ்வேலைக்குப் போகாமலிருந்தால் அரசன் ஏற்படுத்திய பிரஜா தர்மத்தினின்றும் வழுவிய குற்றத்திற்கு வலுத்த தண்டனை கிடைக்கும். இம்மாதிரியான ஸங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டு இரவெல்லாம் தூக்கமின்றி மீனாக்ஷிசுந்தர ஸுந்தரேசக் கடவுளை மனத்திலிருத்தி; அவரிடம் தனக்கு நேர்ந்திருக்கும் கஷ்டத்தைத் தெரிவித்துத் தன்னைக் காக்கப் பிரார்த்தித்தனள். உண்மை பக்தர்கட்கு உதவிசெய்யு மூழுதிப்பாடுடைய பகவான் தலையில் கூடையும் தோளில் மண்வெட்டியு முள்ள ஒரு கூலி வேலைக்காரன் வேஷம்பூண்டு விடியற்காலத்தில் அக்கிழவியினது வீட்டு வாசலில் "எவருக்குக்கூலியாள் வேண்டும்?" என்று உறத்துக் கூவினன். அதனைச் செவியுற்ற கிழவி வேகமாய் வெளியே வந்து, "அப்பனே! எனக்குத்தான் கூலியாள் வேண்டும்" என்றனள். "என் தாயே! அம்மணி! இன்று மாலைவரை நீ இட்ட வேலையைச் செய்கிறேன். அதற்கு என்ன கூலி கொடுப்பாய்? என்று அவன் கேட்டனன். அதற்கவள் "என் அய்யனே! நான் ஒரு எளியவள். உனக்குக் கூலி கொடுக்க என்னிடம் யாதொரு பணம், காசு கிடையா. நான் பிட்டு விற்பனை செய்து ஜீவிப்பவள். அதற்காக மாவைச் சட்டியிற்போட்டு வறுக்கும்போது கீழே சிந்தின மாவை அவ்வப்போது திரட்டி வைத்திருக்கிறேன். நீ என்னிடம் அன்பு கூர்ந்து அதனை வாங்கிப் புசிப்பதையே கூலியாக ஏற்று, வைகையாற்றுக்கரையை உயர்த்தப்போகும் ஜனங்களோடு சேர்ந்து அரசனது அதிகாரியினிடம் சென்று, எனக்காக ஆஜர் கணக்குக் கொடுத்துவிட்டு அவர் கட்டளையிட்ட வேலையை ஒழுங்காய் நடத்துவாயாக" என்று அவனுக்குத் தன்னிடம் இரக்கமுண்டாகும்படி கேட்டுக்கொண்டனள்.

அவன் அதற்கு ஸம்மதித்து அதிகாரியிடம் ஆஜர் கொடுத்து அங்கோர் மரத்தடியில் மண்வெட்டியைத் தலையணியாக வைத்துப் படுத்துக்கொண்டு ஆனந்தமாகப் பாடுவதும், அடிக்கடி கிழவி வீட்

டிற்குச் சென்று வேலை சரியாய்ச் செய்வதாகச்சொல்லி சிந்தின பிட்டுமாவை வாங்கிச் சாப்பிடுவதும், அதிகாரி கண்டிக்கும் ஸமயத்தில் தீவிரமாக வேலை செய்கிறவன்போன்று பாவனை காட்டுவதுமாகப் பொழுதுபோக்கிக்கொண்டிருந்தான். மாலைப்பொழுதில் கரையைக் கவனிக்க அரிமர்த்தனன் என்ற பாண்டிய அரசன் பரிவாரங்களுடன் அங்குவந்து சேர்ந்தான். அப்போது கிழவியினது வேலைக்காரன் அவஸரமாக எழுந்து ஒரு பெட்டி மண்ணை வெட்டி பரபரப்புடன் கரையில் கொண்டுபோய்க் கொட்டினன். உடனே கரை சரியானபடி உயர்ந்துவிட்டது. ஆனாலும் அதனைக் கவனியாமல் அரசன் அதிகாரியைப் பார்த்து "யாவரும் வேலை ஒழுங்காய்ச் செய்கின்றனரா?" என்று வினவினன். அப்போது அதிகாரி வேந்தனைப் பார்த்து "அரசே! இப்போது நல்லவன் மாதிரி ஒரு பெட்டி மண்ணைக்கொண்டுபோய்க் கொட்டிவிட்டு அதோ நிற்கின்றானே! அவன் ஒருவன்தான் இங்கு சரியாக வேலை செய்யாதவன்" என்று விடையளித்தான். பிறகு வேந்தன் அவனைக் கூப்பிட்டுத் தன் கையிலிருந்தத்தங்கப்பிரம்பால் அவனது முதுகில் ஒரு அடி அடித்தான். உடன் அரசனுடையவும் மற்று மங்குள்ளார், உலகத்திலுள்ளார் யாவருடையவும் முதுகினில் சுருக்கென்று அந்த அடி விழுந்தது. அப்போதே போலி கூலிக்காரன் மறைந்துவிட்டனன். அதன்பிறகு அரசன் கடைசியாக அவன் கொட்டிய ஒரு பெட்டி மண்ணாலேயே கரை முழுதும் செப்பனிட்டதாயிருப்பதையும் கவனித்தான். பிறகு அவன் பிட்டு விற்கும் ஒரு கிழவிக்குப் பதிலாய் அவள் கூலியாகக் கொடுத்து சிந்தின பிட்டிற்காகவே மண் சுமந்தான் என்பதையும் விசாரித்துத் தெரிந்தான். மதுரைமாநகர் மத்தியில் விளங்கிக்கொண்டிருக்கும் ஸோமசுந்தரேசுவரனே கிழவியினது பக்திக்கிணங்கி அவ்விதம் வந்து வைகைக்கரையை செம்மையாக்கி அகிலமான ஜனங்களையும்

ஆற்று வெள்ளத்தினின்றும் காப்பாற்றினன் என்று தீர்மானித்து பகவானிடம் அரிமர்த்தனன் அதுமுதல் பரமபக்தியுற்றிருந்தான்.

நாட்டின் க்ஷேமத்திற்காக யாவரும் சேர்ந்தோ, தனித்தனி யாகவோ, ஒரே கார்யத்திலோ, பல கார்யங்களிலோ கடமைப் பட்டு முயற்சி யெடுப்பதுதான் பிரஜாதர்மமாகு மென்பதற்கும் அதனை உண்மையாகச் செய்து முடிக்கவேண்டிய சிரத்தையுள்ளவர் கட்குப் பல இடையூறுகள் ஏற்படினும் பகவானே அவற்றை நீக்கி அவர்களது தர்மத்தை நிறைவேற்றிக்கொடுக்க முன்வருவார் என் பதற்கும் இக்கதை நிதர்சனமாகிறது.

---

## வியாபார தர்மம்.

வியாபாரமென்பது ஒருபொருளை அது உண்டான இடத்தில் மாத்திரமல்லாமற் பலவிடங்களிலும் பரவும்படி செய்தலாம். அப்பதத்திற்கு எங்கும் பரவ முயற்சித்தல் என்று பொருள். அதற்குரிய தர்மம் வியாபாரதர்மம் எனப்படும். வியாபாரத் தொழிலினைக் கடமையாகக் கொண்டவர்கள் பலதேசங்களில் ஸஞ்சாரம் செய்தல், வியாபாரப் பொருட்களின் தகுதியையும் விலையையும் நிதானித்தறிதல், தேசகால வர்த்தமானங்களை நன்கு ஆராய்ந்து அறிதல், கணக்கில் வல்லமையுற்றிருத்தல், நம்பிக்கையான நடத்தையுற்றிருத்தல், இன்பமாய்ப்பேசுதல், பொருள்கள் சீக்கிரம் விலையாகக்கூடிய லாபத்தைத் தீர் மானித்துக்கொள்ளுதல் முதலிய குணங்களுள்ளவர்களாக இருக்கவேண்டும். மனிதர்களின் வாழ்க்கைக்குப் பல பொருள்கள் வேண்டியிருப்பதால் ஒருஇடத்தில் இல்

லாத பொருள்களை மறு இடத்திலிருந்து தருவித்து அவர்களின் வாழ்க்கை நன்கு நடைபெறுமாறு நன்மையைச் செய்கின்ற வியாபாரி, புண்யவான் என்றே சொல்லவேண்டும். அந்தத் தொழிலினுலேயே அவனது குடும்ப கால க்ஷேபம் நடக்க வேண்டியதாகிறது. அதற்காக அவன் திரவியம் ஸம்பாதிப்பதில் பேராசைப்படாமல் கிரய(கொள்முதல்)த்திற்கும் விக்ரய (விடுமுதல்)த்திற்கும் நடுவில் தர்ம முறையுடன் கூடின ஒரு லாபத்தை ஏற்படுத்திக்கொண்டு எல்லோருக்கும் ஒரே மாதிரியாக சாமான்களை விலைக்கு விற்கவேண்டும். பொருட்களைக் கொள்ளவும், விற்கவும் வெவ்வேறு அளவு நிறைகளை உபயோகிக்கக்கூடாது. சிறுவர்களையும், மூடர்களையும், ஸாதுக்களையும் வியாபாரத்தில் வஞ்சித்து ஸம்பாதிக்கப் படும் பொருள் நாளடைவில் அழிந்துபோய்விடும். அவ்விதம் ஸம்பாதிக்கிறவன் இம்மையில் நஷ்டம் அடைந்து மறுமையிலும் கஷ்டமடைவான். ‡ "களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண் வீயாவிழுமம் தரும்" என்பது திருக்குறள்.

---

## திருஷ்டாந்தக் கதை.

14. வியாபாரதர்மம் பற்றிய எதிர்மறைக் கதை:— முன் ஒரு வணிகன் இருந்தான். அவன் தனது சரக்குகளை வண்டியிலேற்றி அன்யதேசத்திற் கொண்டுபோய் விற்க ஒரு மலையடிவாரத்

‡ அதி. 29. திருக். 4. பிறர் பொருளை வஞ்சித்தலாகிய களவில் மிகுந்த காதல் (இனிதுபோல் தோன்றி) தான் பயனைத்தருவதாகிய விளைவு காலத்தில் தொலையாத துன்பந்தரும் எ-ள்,

தின் வழியாகப் போய்க்கொண்டிருந்தான். அங்கு ஓர் தபசி ஸமாதி கலைந்து மிக்க பசியுடனிருந்தார். அவர் அவ்வணிகனிடம் சிறிது ஆகாரம் கேட்க அவன் தன்னிடமிருக்கும் ஆகாரத்திற் கொஞ்சம் அவருக்குக்கொடுத்தான். அதனால் அவர் களை தீர்ந்து ஸந்தோஷ முற்று "அப்பனே! வரப்போகும் பஞ்சத்தில் கொள்முதலிற்கு அரைக்கால் பங்கு லாபத்தைக் கருதியே நீ தான்யங்களை விற்க வேண்டும்; அதற்காகவே நான் இவற்றை உனக்கு இனமாக அளிக்கிறேன்" என்று தன்னிடமுள்ள மிக்க விலைபொருந்திய இரண்டு நாகரத்தினங்களை அவனுக்குக் கொடுத்தார். அவன் அவரால் சீக்கிரம் பஞ்சம் வரப்போவதாகத் தெரிந்தவுடன் அந்த இரத்தினங்களை லக்ஷக்கணக்காக விற்று அம்முதல்கொண்டு ஏராளமான தான்யமூட்டைகளை வாங்கி வீட்டில் அடுக்கி வைத்துக்கொண்டனன். அப்படியே சிறிதுகாலத்துள் பஞ்சம் வந்துவிட்டது. மற்ற வியாபாரிகளிடமுள்ள தான்யங்களெல்லாம் செலவானபிறகே தன்னிடமுள்ள தான்யங்களை விற்க அவ்வணிகன் ஆரம்பித்தான். அப்போது அவன் சொன்னதுதான் விலை. முதலுக்கு ஒரு பங்கு முதல் நான்கு பங்குவரை நாளுக்குநாள் இலாபம் வைத்து விலையுயர்த்திக்கொண்டே வந்தான். கடைசியாக ஜனங்கள் அவனிடம் விலை கொடுத்து வாங்கப் பொருளில்லாமல் அக்கொடிய வணிகனிடம் கொதிப்புகொண்டு அவனை நையப்புடைத்து, அவன் சேமித்துவைத்திருந்த தான்யங்கள், பொருள்கள் எல்லாவற்றையும் கொள்ளையடித்துக்கொண்டு போயினர். பிறகு தனக்கும் தன் குடும்பத்தாருக்குமே உணவின்றி அவன் தத்தளித்தான். பேராசை கொண்டு பெறும் பெரிய லாபம் நொடிப்பொழுதில் நாசமாய் விடுவதுடன் கொடிய லாபமுற்றவன் கடுந்துன்பமடைவான் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

---

## விவஸாய தர்மம்.

விவஸாயமென்பதற்கு முயற்சி என்று பொருள். உல கத்திலுள்ள தொழின் முயற்சி எல்லாவற்றிற்குமே விவ ஸாயம் (வ்யவஸாயம்) என்ற பதம் உரித்தாயிருக்கும் போது பயிர்த்தொழின் முயற்சிக்கு மாத்திரம் அது குறிப் பிட்ட பெயராக அமைந்திருக்கிறது. அதனாலேயே உலகி லுள்ள முயற்சிகள்யாவும் பயிரிடும் முயற்சியை ஆதார மாகக் கொண்டிருக்கின்றன என்ற விஷயம் நன்கு புலப் படுகிறது. அதற்குரிய தர்மம் விவஸாய தர்மமாம். விவ ஸாயம் என்பதற்குத் தென்மொழியில் வேளாண்மை என்று பெயர். வேளாண்மை செய்கிறவன் கையை மூடி விட்டால் உலகம் ஸூர்யன் அஸ்தமித்தது போலாய்விடும். வேளாண்மை என்பது மனிதர்களை உயிர்ப்பிக்கின்ற உத்தமமான தொழில். அத்தொழிலினைக் கடமையாகக் கொண்டு நடத்துகிறவர்கள் பிராணிகளைக் காப்பாற்றும் கடவுளின் அளவற்ற அருள்பெற்றவர்கள் என்பது நிச்ச யம். வேளாண்மைக்குத் தகுதியான நிலங்களைப் பண் படுத்திப் பருவத்தில் பயிர் செய்து அமோகமான தான்ய ஸம்பத்துள்ளவன் விஷ்ணுவின் அம்சமுள்ளவனென்றே சொல்லவேண்டும். அவனிடம் தான்யலக்ஷ்மி எப்போதும் வஸித்துக்கொண்டிருப்பாள். அவன் தன் பசியைப்போல தன்னைச் சுற்றியுள்ள மற்றவர் பசிப்பிணியையும் முறை யுடன் தீர்க்க நினைப்பானானால் அவனது வயல்கள் பின் னும் ஏராளமான தான்யங்களைக் கொடுக்கும். *"வித்து

* அதி. 9. திருக். 5. விருந்தினர்களை உண்பித்து மீந்ததைப் புசிப்பவனது புலம் என்ற விளை நிலத்திற்கு வித்தும் விதைக்க

மிடல் வேண்டும் கொல்லோ விருந்தோம்பி மிச்சில் மிசை வான்புலம்" என்பது திருக்குறள். விவஸாய தர்மத்தைக் குறைவுபடாமல் நடத்திவருகிற தேசத்திற்கு ஒருபோதும் துர்பிக்ஷம் (பஞ்சம்) நேரிடாது. நமது தேசத்திற்கு அவசியமில்லாத பல பொருள்கள் பிறதேசங்களிலிருந்து வந்து உலாவிக்கொண்டு நம் தேசத்தில் விளைந்த மிகுந்த தான்யங்களைப் பல வருஷங்களாகப் பறித்துப் போய்க்கொண்டிருப்பன. ஆயினும் வேறு தொழின் முயற்சியிற் பயிற்சியற்ற நம் நாட்டுப்பல்லாயிரம் ஜனங்களின் பசிப்பிணியைக் கொஞ்சம் கொஞ்சமாவது அமிழ்த்திக்கொண்டிருப்பதும், நம்முன்னோரால் அன்புடன் வழி காட்டப்பெற்றிருப்பதுமான விவஸாயதர்மம் ஒன்றே, நாமிதுவரை உயிருடன் பிழைத்திருப்பதற்கும் நமது தேசமும் ஒரு தேசம் என்று சொல்லிக்கொண்டிருப்பதற்கும் காரணமாக இருக்கிறதென்பதை ஸாமான்ய ஜனங்களும் நன்கு அறிவார்கள். வேறு எந்த விதத்திலும் தொழிற் செய்து பிழைக்கும் வழியறியாத நம் தேசத்தினர் இன்னமும் விவஸாயத்தை விருத்தி செய்வதற்குத் தக்க பாடுகள் படுவார்களானல் அனேக ஜனங்கள் தற்காலம் பட்டினியாக இருந்து பிச்சை எடுப்பதற்கும் எடுத்தாலும் போடுவாரின்றி உயிர் துறப்பதற்கும் இடமிராது. இதை நாட்டிலுள்ள புத்திமான்கள் அறிந்து விவஸாய அபிவிருத்திக்குரிய முறைகளைத் தேடவேண்டும். இவ்விதம் தேசத்தினர் யாவரும் விவஸாயத்தையே அந்தந்த தேசத்தில் விருத்தி செய்வதற்குப் பெரும் பிரயத்னம் எடுத்துக்கொள்ள வேண்டும்.

---

வேண்டுமோ? (வேண்டாம், அது தன்படியே விளையும்) எ-ள்.

† "உழுவார் உலகத்தார்க்காணி அஃதாற்று தெழுவாரை யெல்லாம் பொறுத்து" என்பது திருக்குறள்.

---

## திருஷ்டாந்தக் கதை.

15. விவஸாய தர்மம்பற்றிய கதை:—முன்னொருகால் பூபாலன் என்ற கிருஷிகன் (பயிரிடும் தொழிலோன்) ஒருவன் இருந்தான். அவன் வசமாக நஞ்செய்ப் புஞ்செய் நிலங்கள் நிரம்ப இருந்தன. அவற்றினின்று கிடைக்கும் ஏராளமான தான்யங்களில் தன் குடும்பத்திற்குச் செட்டாக செலவு செய்தனபோக மீந்தவற்றை தேச க்ஷேமத்தின்பொருட்டே உபயோகிக்கும் இயல்புடையவன் அவன். ஒருஸமயம் அவனது நாட்டில் பஞ்சம் புகுந்து யாவரையும் பஞ்சாகப்பறத்தியது. அப்போது குடிகளைக் காக்கவேண்டிய காவலனும் அவர்களை மிக்க வருத்தி பகுதிப் பணத்தைப் பறித்துக்கொண்டனன். ஏழை, பணக்காரன் என்ற வித்தியாசமில்லாமல் எவரிடத்திலும் யாதொரு பொருளின்றி குடிகள் மடியலாயினர். அக்காலத்தில் பூபாலன் தனது களஞ்சியங்களிலுள்ள தான்யங்களை அந்நாட்டினர்க்குப் போதுமானபடி நல்கி வந்தனன். பஞ்சம் தீர்ந்தபிறகு பணக்காரரிடம் பாதி விலையே பெறுவதென்றும் எளியவர்களிடம் அதுவுமில்லையென்றும் வாக்களித்தனன். பிறகு சிறிது நாட்களில் பஞ்சம் தெளிந்து நாடும் செழித்தது. பின்னர் ஒருஸமயம் அத்தேயத்தரசனது கொடுங்கோன்மையைக் கவனித்த ஒரு பேரரசன் அவனைச் சிம்மாதனத்தி

---

† அதி. 104. திருக். 2. உழுது பயிர்செய்கின்றவர்கள், அதனை ஆற்றாது (செய்யாமல்) பிறதொழில்களைச் செய்துகொண்டிருப்பவர்க்கெல்லாம் பொருத்துத் தாங்கக்கூடிய அச்சாணியாக இருப்பார். (உழவர் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணியாவர்) எ-ள்.

னின்றும் நீக்கி அந்நாட்டினர்களைக் கூட்டுவித்து "உங்கள் நாட்
டிற்குறிய ஒழுங்கான அரசனை நீங்களே தேர்ந்து எடுங்கள்" என்
றான். அப்போதுப் பிரஜைகள் யாவரும் "தான்யமொருதட்டிலும்
தங்கமொரு தட்டிலுமாக விற்கவேண்டிய துர்ப்பிக்ஷத்தில் தேசம்
ஸுபிக்ஷமாகும்படி தான் தேடிய தான்யங்களைத் தவக்கமின்றி
ஈந்து எங்களை உயிர்ப்பித்த மகான், பூபாலன் என்ற இந்த கிரு
ஷிகனே. ஆதலால் இவனே இந்நாட்டிற்குறிய பூமி பாலன்"
என்று ஒரே அபிப்ராயமாகக் கூறினர். பூபாலன் (பூமியைக்
காப்பவன்) என்ற பெயருக்குத்தக்கபடி செயலும் அவனிடமிருப்
பதுபற்றி அவனையே அப்பேரரசன் சிற்றரசனுக்கிச் சென்றனன்.
விவஸாய தர்மத்தை யுள்ளபடி யுணர்ந்து நடப்பவர் கடவுள்
போன்று யாவரையும் காக்கும் திறன்படைப்பார் என்பதற்கு
இக்கதை நிதர்சனமாகிறது.

---

## தேச தர்மம்.

தேச தர்மம் என்பது தேசத்திலுள்ள ஜனங்கள் யாவ
ரும் பரஸ்பரம் விரோத பாவனை யின்றி, தேச க்ஷேமத்
தின் அபிவிருத்திக்குப் பொதுவாயுள்ள நன்மையான கார்
யங்களில் ஒற்றுமையான மனப்பான்மையுடன் வேறு எக்
காரணத்தை யிட்டும் பிளவு படாமல், ஒருவர்க்கொருவர்
உதவும்படியான கடமைகளைக் கடைப்பிடித்து ஒழுகுதல்
என்ற பொருளை யுணர்த்துகிறது. அதை தேசத்தினர்
தர்மம் என்றே பொருட்படுத்தவேண்டும். பரஸ்பரம்
உதவியினாலேயே உலகம் நடைபெற்று வரும் வண்ணம்
அமைந்திருக்கிற ஈசுவர ஸ்ருஷ்டியும் நமக்கு முற்கூறிய
கருத்தைக் கண்ணாடிபோல் காண்பிவிக்கின்றது. ஒரு

தேசத்தினர் பலவகையாகப் பிரிக்கத்தக்க நிலைமைகளை யடைந்திருப்பதால் அவர்களின் கடமைகளைத் தனித்தனிப் பிரித்துக் கூறுதல் மிக்க விரிவாகும். ஆதலால் அவர்கள் எல்லோரையும் சேர்த்து வலியவர்கள், எளியவர்கள் என்ற இரண்டு பிரிவினர்களாக மாத்திரம் எடுத்துக்கொண்டு அவர்களின் கடமைகளைக் கூறுவதனாலேயே தேச தர்மம் கூறினதாக ஆய்விடுகின்றது. இங்கே வலியவர்கள் என்பது பணக்காரர்கள் என்றும், எளியவர்கள் என்பது ஏழைகள் என்றும் பொருட்படுத்திக்கொண்டு அவர்களின் கடமைகள் கூறப்படுகின்றன.

ஸர்வ உலகங்களுக்கும் ரக்ஷகனாகவும் நாயகனாகவு மிருக்கின்ற பகவானுக்கு ஜீவாத்மாக்கள் அனைவரும் அடிமைகள். அவர்கள் எவ்விதத்திலும் ஈசுவரனுக்குத் தொண்டு செய்யவே கடமைப்பட்டிருக்கின்றனர். உலகத்திலுள்ளப் பிராணிகளுள் மனிதர்களுக்கு மாத்திரம் பகுத்தறிவைத் தந்தருளிய பகவானின் கருத்தை யுணர்ந்து நாம் எவ்விதமான தொண்டு செய்து அவரை ஸந்தோஷப் படுத்தவேண்டுமென்பதை நமது அறிவினால் ஊகித்தறிய வேண்டும். பகவான் உலகத்தில் பலரை எளியவர்களாகவும், சிலரை தனிகர்களாகவும் படைத்திருக்கின்றனர். தனமுள்ளவர் தனிகர் எனப்படுவார். ஜனங்களுள் சிலர்களிடம் மாத்திரம் அதிகமான பணம் எப்போதும் கையில் புழங்கிக்கொண்டிருக்கும்படியாகவும், அவர்கள் அதை தமது இஷ்டப்படி செலவுசெய்துகொள்ளும்படியாகவும் அவர்களது பூர்வ ஜன்ம புண்ய வசத்தினாலேயே அவர்களை அவ்விதம் ஈசுவரன் படைக்கவேண்டி வந்திருக்கிறது.

ஆகிலும் யஜமானனின் உள்ளமறிந்து அவன் பணத்தைச் செலவிடுகின்ற வேலைக்காரன் போன்று அப்பணக்காரர்கள் உலக நாயகனாகிய பகவானின் தொண்டர்களாகையால் அவனது இச்சைப்படியே அவன் கொடுத்த பொருளை செலவுசெய்யக் கடமைப்பட்டிருக்கின்றார்கள் என்பது நிச்சயம். யஜமானனால் கொடுக்கப்பட்ட பொருளை அவன் கருத்திற்கிணங்காது தன்னிச்சையாகச் செலவிடுகிற ஒரு அடிமை அவனால் உடனே தண்டிக்கப்பட்டுத் திருத்தப்படுகிறான். அதுபோன்று பொருளைச் செலவிடுவதில் ஈசன் கருத்தின்படி நடவாதவர்களுள் சிலர் இந்த ஜன்மத்திலேயும், சிலர் மறு ஜன்மத்திலும் தண்டிக்கப்பட்டுத் திருத்தப்படுகின்றனர். அவ்விதம் நம்மை சிக்ஷித்துத் திருத்துகின்ற பகவான் ஒரு யஜமானன் போன்று நமக்குப் புலப்படாமலும், நமது நேரில் இன்ன தப்பிதத்திற்கு இவ்விதமான சிக்ஷை என்று எடுத்துக் கூறாமலுமிருப்பதால், நமக்கு வரும் இன்ப துன்பங்கள் எப்படியோ தன்படியே வருகின்றன என்று பலரும் நினைக்கின்றனர். அப்படி நினையாமல் அதன் உண்மையைத் தெரிந்துகொள்வதற்காகவே சாஸ்த்ரங்களும், மகான்களின் உபதேசங்களும், மூத்தோர்சொல்வார்த்தைகளும் ஏற்பட்டிருக்கின்றன.

பகவான் உலகத்தையும் அதிலுள்ள பஞ்ச பூதங்களையும் அவற்றின் சேர்க்கையினால் அநேக விதமான ஜட வஸ்துக்களையும் அவற்றை அனுபவிக்க பற்பல சேதன வஸ்துக்களையும் ஸ்ருஷ்டித்திருக்கிறார். பகவானின் ஸ்ருஷ்டியிலுள்ள சேதனர்களாகிய ப்ராணிகள் யாவும் அவர் தந்தருளிய வஸ்துக்களில் ஸமமான பாகமுடையவர்களே.

அப்படியிருக்க சிலர் மிகுந்த பொருட்களுற்றவர்களாக வும், பலர் அவ்வாறில்லாமலும் ஸ்ருஷ்டியின் இயற்கை காணப்படுவதற்குக் காரணமென்ன? என்பதை நாம் ஆராயவேண்டும். உலகத்தில் எளியவன் பசி தீர உண்ப தற்குக் கால்படி யரிசி வேண்டுமானால் பணக்காரன் பசிதீர உண்பதற்கு ஒரு மரக்காலரிசியாவது புசிக்கும்படியாக அவன் வயிற்றைப் படைத்தவர் படைத்திருக்கின்றாரா? இல்லை. அப்படியிருக்க அவன் வசம் மாத்திரம் நிரம்பிய பொருட்கள் அமைய, அவனது பூர்வ ஜன்ம புண்யமும் அதனாலேற்பட்ட சரீர புத்தி வலிமையுமே காரணமாக விருக்கின்றன. அவ்விதம் பெருமையுற்ற பணக்காரன் செய்யவேண்டுவதென்ன? தன்னிடமுள்ள பொருட்களில் தான் அனுபவித்தனபோக மீந்தனவற்றை உலகத்தாரிடம் பிரித்துக்கொடுத்து அவர்களைக் காப்பாற்றும் தொழிலினை ஏற்று உயிர்களுக்குத் தொண்டு செய்து அதனால் சந்தோ ஷிக்கின்ற ஸர்வேசுவரனுக்கு நிஜமான தொண்டனாகிறான். அவ்விதமே நடைபெற்று வருகிற உலக இயற்கையை உற்றுநோக்கின் முற்றும் புலப்படும். அந்த தனிகர் தாம் பெற்ற செல்வத்தைப் பிறர்கட்கு எவ்விதம் ஈவித்துக் கொடுக்கக் கடமைப் பட்டவர் என்பதைத் தெரிந்து கொள்ளவேண்டியது மிகுந்த புத்தி நுட்பத்தின் திறமை யான வேலையாகும். ஸூக்ஷ்மபுத்தி, கல்வி, கேள்வி, அறிஞ ராகிய பெரியோர் வார்த்தை, உலகானுபவம் இவற்றைத் தழுவி கருணையினால் ஒழுங்காகத் தம்மிடமுள்ள பொருட் களைப் பங்கிடுகின்ற தனிகர்களே தனம் படைத்தவரெனப் படுவார். அப்படி யல்லாதார் தனத்தைப் பாழாக்கினவ

ராவர். தனம் என்பதற்கு வடமொழியில் ரிக்தம் என்னும் ஒரு பெயருண்டு. அதற்குப் பிரிக்கப்படும் வஸ்து என்றே பொருள். முற்கூறிய வண்ணம் செல்வம் பெற்றிருக்கின்றவர்கள் செய்யவேண்டிய கடமைகளாவன :—

தனிகன் தன் கிரகத்தில் போஷிக்கவேண்டியவர்களைக் காப்பாற்றின பிறகு மீந்த பொருளைக்கொண்டு தன்னைச் சூழ்ந்து சுற்றிக்கொண்டிருக்கிற எளியவர்களான சுற்றத்தார்களைக் காப்பாற்றவேண்டும். அவர்கள் அவனது செல்வத்தைப் பெருக்குவதற்கு அவன் இட்ட வேலைகளை ஒழுங்காயும் உண்மையாயும் செய்துமுடிக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஒருவன் பணக்காரனாயினும் பலர்களுடைய உதவியினாற்றான் தான் கருதிய காரியங்களைச் செய்யமுடியும். சுற்றத்தார்க்கும் கொடுத்து மீந்தபொருட்களைத் தன் ஊர்க்காரர் தனது நாட்டினர் ஆகிய இவர்களுக்குப் பங்கிடவேண்டும். அதிலும் மீந்த பணமுடையவர்களே உலகத்தார் அனைவருக்கும் அப்பணத்தைப் பங்கிட வேண்டியவராவர். ஊர்க்காரர் நாட்டிலுள்ளவர்களுக்குப் பங்கிடவேண்டிய முறையாவது :—எளிய ஜனங்களிடம் தர்மவட்டியை எதிர்பார்த்து அவரவர் தகுதிக்குத் தக்கவாறு திரவியத்தைக் கொடுத்து தொழில் முயற்சி செய்யும்படியாக அவர்களைத் தூண்டி அப்பணத்தை அவர்கள் துர்விநியோகம் செய்யாமல் ஒழுங்காய் நடப்பதை ஜாக்ரதையாக கவனிக்க வேண்டும். எளியவர்கள் சோம்பேறிகளாய்த் திரியாமல் நாட்டிற்கு வேண்டிய கல்வி, தொழில்முறைகளில் பணக்காரன் உதவியினாலும் ஸொந்த ஊக்கத்தினாலும் தேர்ச்சி பெற்று அவற்றில்

மோசக்கருத்தில்லாமல் உண்மையுடன் உழைப்பெடுத்து தத்தம் வேலைத்திறமைகளை நாடோறும் அபிவிர்த்திசெய்து கொள்ளவேண்டும். விளைபொருள்களை நாம் உபயோகிப்பதற்குமுன் அவற்றில் பலவித மாறுதல்கள் ஏற்படவேண்டியிருப்பதால் அவற்றை நமது நாட்டினர்களுக்குத் தக்க ஊதியம் கொடுத்து அவர்களைக் கொண்டே நடத்திக் கொள்ளவேண்டும். நமது போக்குவரத்துக்குரிய ஸாதனங்களையும், வீட்டில் உபயோகப்படும் கருவிகளையும், பின்னும் வாழ்க்கைக்குரிய மற்ற எவ்விதமான சாமான்களையும் நமது நாட்டினர்களைக் கொண்டே செய்வித்துக் கொள்ள வேண்டும். உள் நாட்டினர் செய்யும் சாமான் சிறிது நயமில்லாமலிருப்பினும் விலை அதிகமாயிருப்பினும் அதுவே நமக்கு விரும்பத்தக்கது. விலை கொடுத்து வாங்கத்தக்கது. விசேஷ அபிமானம் செலுத்தத் தக்கது. ஏனெனில் நமது கண்ணெதிரில் வருந்துகின்ற நம் அருமை ஸகோதரர்களின் பசிப்பிணியைத் தீர்க்கும் முறை அதுவேயாகுமன்றோ? வேறு முறையை அனுஸரித்தால் நமது எளிய சகோதரர் எவ்வாறு உலகத்தில் உயிருடன் பிழைத்திருப்பார்? இன்று நாம் அதிக விலை என்று நினைத்துக்கொடுத்த பணம் நாளை வேறொரு காரணத்தால் நமது கையில் வந்து சேரும். அது திரும்ப பின்னொரு காரணத்தால் மற்றொருவர் கையில் போகும். அதுவே சிறிது நாட்களில் நமது பிள்ளைகள் கையில் வேறொரு காரணம்பற்றி வந்து சேரும். இவ்விதமாக நம்மிடம் விளைந்த பணம் நமது நாட்டினர்களாகிய பெரிய குடும்பத்தைக் காப்பாற்றுவதற்காக நம் தேசமாகிய வீட்டிலேயே சக்ரம் போன்றுச் சுற்றிச்சுற்றி

வந்துகொண்டிருக்கும். ஒரு நாட்டில் வசிப்பவர்களுள் ஒருவன் தற்காலம் பணக்காரனாக இருந்தாலும் அவனே பிற்காலம் எளியவனாகலாம். அல்லது அவன் பிள்ளைகளும், பேரன்களும் பணக்காரர்களாக இருப்பது என்ன உறுதி? ஒரு நாட்டின் வருமானம் அந்நாட்டிலேயே சுற்றிக்கொண்டிருந்தால் பணக்காரன் ஏழையாகும்போது அவனும் அவன் பெண்டு பிள்ளைகள் பேரன்கள் யாவரும் தொழின் முயற்சியால் அவ்வருமானத்தில் ஸரியான பங்கு பெறலாம். நமது பணங்கள் எல்லாம் அயல்நாட்டுச் சாமான்களின் விலையாக அன்னிய நாட்டிற்கே நாடோறும் ஏராளமாய்ப் போய்க்கொண்டிருக்கும்போது எந்த பணக்காரனிடம் எந்தப் பணம் திரும்ப வரப்போகின்றது? எதைக்கொண்டு முயற்சிசெய்து நாட்டினர், பிழைக்கும் வழியை நிலைநாட்டுகிறவர்களாக ஆவர்? இவ்விதம் அறிவீனமான நிலைமையிலிருக்கிற பணக்காரன் தன் நாட்டினர்களுக்கு மாத்திரமா கேட்டை விளைவிக்கிறான்? தனக்கும் தன் பெண்டு பிள்ளைகள் முதலியவர்கட்கும் பெருங்கேட்டை யுண்டுபண்ணினவனாவன். ஆதலால் பணக்கா காரர் ஏழைகளிடம் அன்பு கூர்ந்து அவர் செய்யும் வேலைகள் இயந்திர வேலைகளைவிட கொஞ்சம் தணிவாக இருந்தபோதிலும் தனிகர் அவற்றையே அபிமானிக்க வேண்டும். கீதையில் * "சிறந்தவன் எதைச் செய்கின்றானோ; அதனையே உலகத்தில் மற்றவர் பின்பற்றுவார்" என்று சொன்னபடி தனவான்கள் அபிமானிக்கின்றதையே மற்றவர்களும் அபிமானிப்பார்கள். அதனால் பல்லாயிரம் குடிக

* அத். 3. சுலோ. 21.

ளின் குடித்தனம் அழியாமல் நீடூழி வாழ்ந்து பெருகும். இதுவே தனிகர்களின் முக்ய கடமை. ‡ "சுற்றத்தார் சுற்றப்படவொழுகல் செல்வம் தான் பெற்றத்தாற் பெற்ற பயன்" "நச்சப்படாதவன் செல்வம் நடுவூருள் நச்சு மரம் பழுத்தற்று" என்று திருக்குறள் கூறுகிறது.

எளியவர்கள் தமது புத்தி நுட்பத்தை உலகத்தோருக்குப் பயன்படக்கூடிய நல்ல துறைகளில் உபயோகப் படுத்தும்போது அவர்கள் தம்மையும், தம் குடும்பத்தையும் தம் நாட்டினர்களையும், பொதுவாக உலகத்தையும் காப்பாற்றக்கூடிய தன்மையுற்றவர்களென்று கருதப்படுவார்கள். அவர்களுக்குப் பணக்காரர்களின் உதவி பல வழிகளாலும் தன்படியே ஏற்படும். அப்படியின்றி கடவுள் கொடுத்த தமது ஸாமர்த்தியத்தைச் சோம்பேறித்தனத்தினால் விருத்தி செய்துகொள்ளாமல், தரித்திரத்தன்மையினால் குடும்பத்தைக் காப்பாற்றும் வழியறியாது கெட்ட நடைகளிற் பிரவேசிக்கின்ற ஏழைகளை கடவுள் பின்னும் தரித்திரர்களாகவே பிறப்பித்துத் தண்டிப்பார். ஆதலால் வலியவர் எளியவர் என்ற தேசத்தினர் எல்லோரும் பரஸ்

‡ அதி. 53. திருக். 4. அதி. 101. திருக். 8. ஒருவன் செல்வத்தைப் பெற்றதனால் உண்டாகும் பயனாவது தன்னைச் சுற்றியிருக்கும் சுற்றத்தார் தன்னிடமுள்ள சுற்றமாகிய உறவினால் தான் சூழப்படும் வகையறிந்து அவர்களைத் தழுவி நடத்தலாம் என்றும், (எளியவர்க்குச் சமீபமாயிருந்தும் முறையுடன் ஒன்றுங் கொடாமையால்) நச்சப்படாதவன் (அவர்களால் இச்சிக்கப்படாதவனின்) செல்வம் ஊர்நடுவில் உள்ள எட்டிமரம் பழுத்திருப்பது போலும் என்றும் பொருள்.

பரம் ஸகோதரபாவனையுடன் ஒருவரையொருவர் வஞ்சிக்காமல் நேசப்பான்மையாகவிருந்து தத்தம் கடமைகளை நெறிதவறாது நடத்தி வருகின்றவர்களின் தேசம் பல நன்மைகளுக்கு உறைவிடமாக இருக்குமென்பது திண்ணம். இதுவே முக்யமான தேச தர்மமாகும்.

## திருஷ்டாந்தக் கதை.

16. தேச தர்மம் பற்றிய கதை:—ஒரு அரசி பிறநாட்டி லிருந்துவந்த ஒரு அருமையான வஸ்துவைப்பார்த்து அது தனக்கு வேண்டுமென்று தன் கணவனிடம் சொன்னாள். அப்போது அவன் அதை என்ன விலை கொடுத்தாவது வாங்கித் தன் மனைவி கையில் அளித்து அவளைக் களிப்பிக்க யத்தனித்தான். அப்போது அம் மாதரசியாகிய அந்நாட்டரசி அரசனிடம் சொன்னதாவது:— "ஓ நாதா! நான் அந்த வஸ்துவை விரும்பவில்லை. அம்மாதிரியான வஸ்து நமது அருமைப்பிள்ளைகளாகிய நம் நாட்டினர்களால் செய்யப்படவேண்டியதை விரும்புகிறேன். அவர்கள் செய்த அந்த வஸ்துவே நமது மனதைக் களிப்பிக்கக்கூடியது" என்றாள். அது முதல் அத்தேசத்தில் அந்தப்பொருளைப்பற்றின தொழின் முயற்சி அந்நாடெல்லாம் பரவி ஓங்கிச் செழித்தது. தேசத்தாரிடம் அவ்வரசிக்குள்ள கருணையைப் பாருங்கள். நம் தேயத்து மாதரசிகளும் முற்கூறிய விஷயத்தை நன்கு கவனிப்பின் அவர் மூலமாய் ஆடவர்களும் அம்முயற்சியில் தேர்ச்சி பெற்று நாட்டினில் செல்வம் செழிக்கச்செய்வார் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

## குண தர்மம்.

மனிதர் செய்யும் பற்பல செய்கைகட்குக் காரணமான பலவித எண்ணங்களைத் தோற்றுவிக்கின்ற மனத்

தின் இயற்கை, குணமெனப்படும். அதற்கு (எண்ணங்களை) பெருக்குகின்றது என்று பொருள். அதனால் செய்விக்கப் படும் கார்யம் குணதர்மமாகும். அக்குணம் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்று மூவகைப்படும். அவற்றுள் ஸத்வம் என்பது வெண்மை நிறமான ஸ்படிகம் போன்று ப்ரகா சித்துக்கொண்டு மனிதர்கள் அறிவினை ஸம்பாதித்து ஸதா ஸந்தோஷமாக இருக்கும்படி செய்கின்றது. ரஜஸ் என் பது சிவப்பு நிறமான நற்செங்கற்பொடி போன்ற தன்மை யுற்று அடையப்படாதவற்றை அடையவேண்டுமென்றும் அடைந்தவற்றை விடாமல் அநுபவிக்கவேண்டுமென்றும் விருப்பமுண்டுபண்ணி காணப்படுகின்றனவும், கேட்கப் படுகின்றனவுமாயிருக்கிற பொருட்களில் மனிதரை மிக்க ஆவலுறச் செய்துகொண்டிருக்கிறது. தமஸ் என்பது கருப்பு நிறமான இருள்போன்ற தன்மையுற்று மனிதர் கட்கு அஜ்ஞானத்தைப் படரச்செய்து உண்மை யறிய முடியாமல் எவ்விஷயங்களிலும் பிரமத்தை யுண்டாக்கி அஜாக்ரதை, சோம்பல், தூக்கம் முதலியவற்றையும் உண்டு பண்ணுகிறது. மனத்திலுள்ள முற்கூறிய மூன்று குணங் களில் இரண்டு குணங்கள் அடங்கி எந்த ஒரு குணம் மேல்நோக்கி யிருக்கின்றதோ, அதுதான் கார்யத்தைச் செய்வதாகும். மற்றவை தூங்குகிறவன்போல் அடங்கி யிருக்கும். ரஜஸ் தமஸ் இவை யடங்கி ஸத்வம் மேலிட் டிருக்கும்போது மரித்தவர்கள், ஜ்ஞானிகளடையும்படி யான உத்தமமான உலகங்களை அடைகின்றனர்." ஸத்வம், தமஸ் இவை அடங்கி ரஜஸ் மேலிட்டிருக்கும்போது மரித் தவர்கள், கர்மங்களில் பற்றுள்ள மனுஷ்ய ஜன்மத்தை

அடைகின்றனர். ஸத்வம், ரஜஸ் இவையடங்கி தமஸ் மேலிட்டிருக்கும்போது மரித்தவர்கள், பகுத்தறிவில்லாத பசுக்கள் முதலிய தாழ்ந்த ஜன்மம் பெறுகின்றனர். ஸத்வ குணத்தின் கார்யம் உயர்ந்ததாகவும் ரஜோகுணத்தின் கார்யம் நடுத்தரமாகவும் தமோகுணத்தின் கார்யம் தாழ்ந்ததாகவுமிருக்கும். அக்குணங்களால் மனிதர்களைக் கொண்டு செய்விக்கப்படுகின்ற முக்யமான சில கார்யங்கள் அடியிற் கூறப்படுவன :—

ஸாத்விகர் (ஸத்வகுணம் மேல்நோக்கினவர்) சிவன், விஷ்ணு, ராமன், க்ருஷ்ணன், கணபதி, ஷண்முகன், அம்பிகை முதலிய மகாதேவதைகளை ஆராதிப்பார். ராஜஸர் (ரஜோகுணம் மேலிட்டவர்) யக்ஷர், ராக்ஷஸர் முதலியவர்களைப் பூஜிப்பார். தாமஸர் (தமோகுணம் மேல்கொண்டவர்) பூதங்கள், ப்ரேதங்கள், பிசாசங்கள், சண்டி, சாமுண்டி முதலியவர்களைப் பூஜிப்பார். ராஜஸர்களும் தாமஸர்களும் சாஸ்திர விதிகளை யறியாதவர்களாய் மந்த புத்தியுடன் டம்பம், அகங்காரம், கர்வம், ஆசை இவற்றுடன்கூடி சரீரத்தையும் அதன் உறுப்புகளையும கஷ்டப் படுத்திக்கொண்டு அற்பமான உலக இன்பத்தை நாடி அற்ப பலனைக்கொடுக்கக்கூடிய தேவதைகளைப் பூஜிப்பார். ஸாத்விகர் ஆயுள், பலம், ஆரோக்யம், ஸுகம், ஸந்தோஷம் இவற்றை விருத்திசெய்கின்றதும் மனத்தில் மேலும் ஸத்வகுணத்தைப் படரச்செய்கின்றதும் மனத்திற்கு இன்பமானதுமான நல்ல ரஸத்துடன் கூடின ஆகாரத்தைப் புசிப்பார். ராஜஸர், அதிகமான உறைப்பு, புளிப்பு, உப்பு, சூடு இவற்றுடன்கூடி க்ரூரமானதும் மனவருத்தம்,

வியாதி இவற்றை உண்டுபண்ணுகிறதுமான ஆகாரத்தைப் புசிப்பார். தாமஸர், ஸரியான பக்வமில்லாததும் ரஸமில்லாததும் துர்க்கந்தமுள்ளதும் சாப்பிட்டு மீந்ததும் சுத்தமில்லாததும் ராத்திரிகடந்ததுமான ஆகாரத்தைப் பிரியமாய்ப்*புசிப்பார். ஸாத்விகர் தேசம், காலம், பாத்ரம் இவற்றை யறிந்து யாதொரு பிரதிபலனைக் கருதாமலும், ராஜஸர் பிரதிபலனைக் கருதியும், தாமஸர் தானதர்மங்களை யுணராமல் தான பாத்திரர்களை அவமதித்துக்கொண்டும் தானம் செய்வார். ஸாத்விகர் உலக இன்பத்தை நாடாமலும், ராஜஸர் டம்பம், புகழ், பெருமை இவற்றை நாடியும் மனம், வாக்கு, காயம் என்ற திரிகரணங்களை நல்வழிகளிற் புகச்செய்வார். தாமஸர் ஒருவரைக் கெடுத்து மற்றொருவருக்கு நன்மை செய்வதற்காக நன்னெறி போன்ற தீயவழிகளிலேயே முக்கரணங்களையு முபயோகிப்பார். ஸாத்விகர் கர்மாநுஷ்டானங்கள் கடமையெனத் தீர்மானித்து சாஸ்திர முறைப்படி அவற்றைச் செய்து பலனை ஈசுவரார்ப்பணம் செய்துவிடுவார். ராஜஸர் காம்யபலனைக்கருதியும் டம்பத்திற்காகவும் கர்மங்களைச் செய்வார். தாமஸர் பிரதிபலனைக்கருதியும் சாஸ்திர நெறிமுறைகளைத் தழுவாமலும் புரோஹிதர் முதலியவர்கட்கு மரியாதையின்றியும் அசிரத்தையாகவே கர்மங்களைச் செய்துமுடிப்பார்.

---

### ஸத்வத்தில் மனத்தைப் பழக்குதல்.

இந்திரியங்கள் வழியாக மனம் வெளி விஷயங்களிற் சென்று கலங்காமல் சாந்தகுணம் பெற்றிருக்கும் ஸமயமே ஸத்வகுணமாகும். மனம் தன் வசமின்றி பல விஷயங்

களிற் புகுந்து ஸதா அலைந்துத் துன்பமுற்றிருக்கும் ஸமயம் ரஜோகுணமாகும். சிறிதும் சுறுசுறுப்பின்றி மனம் ஒரு விஷயத்தையும் கிரஹிக்க சக்தியற்று அஜ்ஞானம், தூக்கம், சோம்பல் முதலியவற்றால் மயங்கியிருக்கும் ஸமயம் தமோகுணமாகும். நமது மனத்திலுள்ள முற்கூறிய மூன்று குணங்களில் ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் அடங்கி ஸத்வகுணம் மேலிட்டிருக்கும்படியாகவே அம் மனத்தை நாம் பழக்கிக்கொண்டு வரவேண்டும். அதற்கு நமது முயற்சியே முக்ய காரணமாகும். "நமது மனம் கொடியது, அதைத் திருப்ப நம்மால் முடியாது" என்று அதுபோகும் போக்கிலே விட்டுக்கொண்டு சும்மாயிருக்கக் கூடாது. கொடிய மனத்தை நல்வழியில் திருப்பவேண்டும் என்ற எண்ணம் உண்டானால் அதுவே நல்ல அதிர்ஷ்ட ஸமயமாகும். அதுமுதலே முயற்சிக்கலாகும். அம்மனமே பின்பு நல்லதாய் மோக்ஷவழியைக் காண்பிக்கும். "மனிதன் ஸம்ஸாரத்திற் கட்டுண்டு இருப்பதற்கும் அதினின்று விடுபடுவதற்கும் அவனது மனமே காரணம்" எனப்படுகிறது. நமது மனம் நம் பழக்கத்தையே பின்பற்றக் காத்துக்கொண்டிருக்கின்றது. அதுபோன்று நமது சரீரமும் நாம் பழக்கும் விதமெல்லாம் நமக்கு ஸ்வாதீனமாயிருக்கும்படி கடவுள் அதைப் படைத்திருக்கிறார். ஆகையால் யாவரும் மனத்தையும் சரீரத்தையும் நல்ல விஷயங்களிலேயே பால்யம் முதல் பழக்கவும் அப்பழக்கத்தை நாளுக்குநாள் விருத்தியாக்கவும் முயற்சித்துக்கொண்டு வந்தால் பிறகு ஸத்வகுணம் நிறைந்து நமது மனமே நமக்கு சாந்தம் என்ற பேரானந்தத்தைக் கொடுக்கும்.

இவ்விதம் உண்மையாய் நிலைபெற்ற ஆனந்தம் நமக்குள் ளேயே யிருக்கிற உண்மை யறியாமல் நிலையில்லாத அற்ப மான ஆனந்தம் பெற வெளி விஷயங்களைத் தேடிச்செல் லுவதனால் மனத்திற்கு அது துன்பமாகமுடியுமே யல்லது இன்பமாகமாட்டாது என்று அறிந்துகொள்க.

---

## திருஷ்டாந்தக் கதை.

**17. குணதர்மம் பற்றிய கதை:**—உஜ்ஜயினி நகரத்தில் பர்த்திருஹரி என்ற அரசன் இருந்தான். ஒரு முனிவர் அவனி டம் வந்து ஒரு பழத்தைக் கொடுத்து "வேந்தே! இது தெய்வப் பிரஸாதம் பெற்றது. இதுபோன்ற பழம் உலகில் கிடையாது. நீ இதனைப் புசித்து ஆயிரம் ஆண்டுகள் அரசு புரிவாயாக" என்று கூறிப் போயினர். அவன் அதனைப் புசிக்கப் போகும்போது "எனது பிராண நாயகியாகிய அனங்கஸேனை என்பாள் மரித்து யான் உயிருடனிருப்பின் அவளைப் பிரிந்த துயரம் ஆற்றவொண் ணாது" என்று நினைத்து அவளிடம் அதனைப் புசிக்கும்படி கொடுத் தான். அவள் அதனை வாங்கி அந்தப்புரம் போய் புசிக்கப்போகும் ஸமயத்தில் "நான் பிழைத்திருந்து எனது சோரநாயகனாகிய குதிரைப்பாகன் இறப்பின் அவனைப்பிரிந்து தனியே யான் எவ் விதமிருப்பேன்? என்று எண்ணி அவள் அதனை அவனிடம் புசிக் கக்கொடுத்தனள். அவன் அதை வாங்கித் தனக்குப் பிரியமான ஒரு எரு விற்பாளிடம் கொடுத்தான். அவள் அதனை வாங்கி எருக்கூடையின்மீது வைத்துக்கொண்டு தெரு வழியே சென்ற னள். அரசன் மேடையின் சன்னலண்டை யிருந்தபோது அகஸ் மாத்தாக அதனைக் கண்ணுற்றான்.

உடனே அரசன் வேலைக்காரன் மூலமாய் அந்தப்பழத்தை வாங்கிவரச்செய்து முனிவரை அழைப்பித்து "ஓ பெரியாரே! தாம் கொடுத்த பழம் போன்ற வேறு பழம் இதோ இருக்கின்றதே என்றான். அப்போது முனிவர் "அரசே யான் கொடுத்த அப்பழத்தை நீ புசித்தனையா? என்று வினவ அரசன் நடந்ததை நவின்றான். பிறகு முனிவர் "ராஜனே! ராணியைக் கண்டித்து அதன் உண்மையை விசாரிக்கவேண்டும்" என்றார். உடன் அரசன் வாளை உருவிக்கையில் வைத்துக்கொண்டு மனைவியைக் கடிந்து விஷயத்தைக் கேட்கும்போது அவள் உள்ளதை உரைத்தனள். குதிரைப்பாகனும் தனது செய்கையைத் தெரிவித்தனன். பிறகு அரசன் முனிவரை அனுப்பிவிட்டு உலக வாழ்க்கையினிடம் மிக்க வெறுப்பு கொண்டு கீழ்வரும் சுலோகத்தைக் கூறுகிறான்.

> "யாம் சிந்தயாமி ஸததம் மயி ஸா விரக்தா
> ஸாப் யந்யமிச்சதி ஜநம் ஸஜநோந்யஸக்த: ;
> அஸ்மத்க்ருதேபி பரிதோஷமியாதிஹாந்யா
> திக்தாஞ்ச தஞ்ச மதனம் ததிமாஞ்ச மாஞ்ச."

(இ-ள்) "எவளை யான் எப்போதும் நினைத்துக்கொண்டிருக்கிறேனோ; அவள் என்னிடம் வெறுப்புற்று வேறொருவனை விரும்பிக்கொண்டிருக்கிறாள். அவனோ பின்னொருவளை விரும்பிக்கொண்டிருக்கிறான். இவ்வுலகில் என்னையும் விரும்பிக்கொண்டிருப்பவள் வேறொருவள் இருப்பாள். ஆதலால் அவளையும் அவனையும் இவளையும் என்னையும் இவ்விதமான புரட்டுகளுக்குக் காரணமான மன்மதனையும் சுடு" என்பது.

இவ்விதமாக பர்த்திருஹரி குடும்பத்திலிருந்து இல்வாழ்க்கை நடத்துவதில் பரம வைராக்யம் பெற்றுத் தனது தம்பியாகிய

விக்ரமார்க்கனிடம் அப்பழத்தைக் கொடுத்துப் புசிக்கச்செய்து அவனுக்கே முடிசூட்டித் தவஞ்செய்ய வனஞ்சென்முன். அவன் உலக நன்மைக்காக நீதி சதகம், சிருங்கார சதகம், வைராக்ய சதகம் என்ற மூன்று சதகங்களடங்கிய “ஸுபாஷிதம்” (நன்மொழி) என்ற அருமையான ஒரு கிரந்தத்தை இயற்றி வெளியிட்டிருந்கிமுன். அது இந்தியாவிலுள்ள எல்லா பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு மாந்தர் தமது வாழ்நாளில் இளமைமுதல் ஆயுள்வரை நடந்துகொள்ளவேண்டிய நல்லொழுக்கங்களை நன்கு உணருமாறு விளக்கிக்கொண்டிருக்கிறது. ரஜோகுணம், தமோகுணம் மேல்நோக்கி யிருக்கும்போது பர்த்திருஹரி மனைவியினிடம் மயங்கித்தயங்கி யிருந்தனன். உலகத்தின் கபட கார்யங்களை கவனித்த பிறகு ஸத்வம் மேலிட்டவுடன் மனம் சாந்தமாய் அவன் விஷயங்களில் வெறுப்புற்று ஆத்மானந்தத்தில் விருப்பங்கொண்டு முயற்சிக்கலானுன். ஆதலால் யாவரும் நாளடைவில் ஸத்வ குணத்தை எழுப்பி மனம் தெளிவாகும் வண்ணம் நற்கார்யங்களிற் பழகவேண்டும் என்பதற்கு இக்கதை நிதர்சனமாகிறது.

முற்றிற்று.





உ

கடவுள் துணை.

# வேதாகம தர்ம வித்யா

அல்லது

## ஹிந்துமத தர்ம விளக்கம்.



## முதல் தொகுதி.

## மூன்றும் பாகம்.

### முதல் அதிகாரம்.

### உத்தேச தர்மம்.

(குறித்த தர்மம்)



உத்தேச தர்மம் என்பது குறிப்பிட்ட ஒரு வர்க்கத்தினர்களையும் அவர்களது அநுஷ்டானங்களையும் குறித்து விதிக்கப்பெறும் தர்மம் எனப்படும். அது பலவகையாக விருப்பினும் 1. வர்ணதர்மம் 2. ஆசிரம தர்மம் 3. ஸம்ஸ்கார தர்மம் 4. சிராத்த தர்மம் என நான்கு வகையாகப் பிரிக்கப்பட்டு அவை இதன்பின் கூறப்படுவன.



## இரண்டாம் அதிகாரம்

### வர்ண தர்மம்.

வர்ணம் என்பதற்கு ஜாதி என்று பொருள். அதற்குரிய தர்மம் வர்ண தர்மம் எனப்படும். ஸ்தாவரங்கள், விலங்குகள் என்பது பொதுவாகவிருப்பினும், அவற்றுள்ளும் பற்பல ஜாதிகள் பகவானால் படைக்கப்பட்டிருப்பதைப் பார்க்கின்றோம். அந்தந்த ஜாதி அவரவர் குணத்தைப் பொருத்திருப்பினும், அக்குணம் அந்தந்த ஜாதியின் விதையிலேயே ஸூக்ஷ்மமாய் அவரவர் கர்மத்தின்படி பகவானால் அமைக்கப் பெற்றிருக்கிறது. அவ்விதமான ஈசுவரனது அமைப்பை மற்றவரால் மாற்றமுடியாது. வேம்பு சந்தனமாகுமா? புலி பசுவாகுமா? வேப்பம் விதையை வெகுகாலம் தேனில் ஊரவைத்து விதைத்தாலும் அது தித்திக்கும் பழத்தை யுண்டுபண்ணுமா? மிளகாயும் கரும்பும் ஓரே பூமியில் முளைத்து ஓரே ஜலத்தினால் வளர்க்கப்படினும் மிளகாய் உறைப்பதற்கும் கரும்பு தித்திப்பதற்கும் காரணமாகவிருப்பது அவற்றின் விதைகளது குணங்களே யாம். அவ்விதமே மனிதர்களுள்ளும் பகவான் அவரவர் கர்மமாகிய விதையின் குணத்தைத் தழுவிப் பிறவியிலேயே வெவ்வேறு ஜாதியினரைப் படைத்திருக்கின்றனர். கீதையில் * "ஸத்வம் முதலிய குணங்கள், கர்மங்கள் இவற்றின் வேற்றுமையைப் பொருத்து நான்கு வர்ணங்கள் என்னால் ஸ்ருஷ்டிக்கப் பெற்றிருப்பன" என்று பகவான் கூறுகிறார். ஆதலால் ஜாதி என்பது

* அத். 4. சுலோ. 13.

பிறவியிலேயே ஏற்படுவதன்றி பிறந்தபிறகு ஏற்படுத்தக் கூடியதல்ல. அந்த வர்ணம் பிராஹ்மணத்வம், க்ஷத்திரியத்வம், வைசியத்வம், சூத்ரத்வம் என நான்கு வகைப் படும். வேதத்தில் "பிரம்மாவின் முகத்தினின்றும் பிராம் மணரும், புஜங்களினின்றும் க்ஷத்திரியரும், தொடைகளி னின்றும் வைசியரும், பாதங்களினின்றும் சூத்திரரும் உண்டாயினர்" எனப்படுகிறது. அவர்களது தர்மம் இதன்பின் கூறப்படும்.

வேதத்தையும் பிரம்ம ஜ்ஞானத்தையும் உபதேசிக்கத் தகுதியுற்றவன் பிராம்மணன் ஆவன். அவனது தர்மம் பிராம்மண தர்மம் எனப்படும். வேதமோதல், ஓதுவித்தல், யாகம் செய்தல், செய்வித்தல், தானம் கொடுத்தல், வாங் கல் என்ற ஆறு தொழில்கள் பிராம்மண தர்மங்கள். அவற் றுள் ஓதுவித்தல், யாகம் செய்வித்தல், தானம் வாங்கல் இம்மூன்றும் பிராம்மணனது ஜீவனோபாய தர்மங்களாம். முற்கூறியவைகளே பிராம்மணனுக்கு முக்யமாகக் கூறப் பட்டிருப்பினும் அவற்றினாலேயே ஜீவனம் நடத்தமுடியாத கஷ்டகாலத்திற் கைப்பற்றி நடத்தவேண்டிய சிலதொழின் முறைகள் மநுஸ்மிருதியில் *"1. வேத வித்தையைத் தவிர மற்ற லௌகிகமான வித்யைகளினால் ஜீவனம் செய் தல் 2. சிற்பத்தொழிற் செய்தல் 3. ஒருவரிடம் உத்யோ கம் செய்து சம்பளம் வாங்கிப் பிழைத்தல் 4. பிறர்கட்குத் தொண்டு செய்து பிழைத்தல் 5. பசுக்களைக் காப்பாற்று தல் 6. வியாபாரம் செய்தல் 7. விவஸாயம் செய்தல்

* அத். 10. சுலோ. 116.

8. அற்பமாகக் கிடைத்ததைக் கொண்டு சுருக்கமாய்ச் செலவுசெய்து வாழ்நாளை ஸந்தோஷமாக நடத்திக்கொள்ளுதல் 9. உபாதானம் எடுத்து உண்ணல் 10. பணத்தைத் தர்ம வட்டிக்குக்கொடுத்து ஜீவித்தல் என்ற இந்த பத்து விதமான கார்யங்களும் பிராம்மணர்களுக்கு ஆபத்காலத்திய ஜீவன தர்மங்களாம்'' என்று கூறப்படுவன. இவற்றை நடத்திக்கொண்டு வைதிக தர்மங்களையும் கூடிய மட்டில் விடாமல் நடத்துகிற பிராம்மணர்களே கலியுகத்திற் சிறந்தவர்களாகக் கருதப்படுவார்கள். முற்றிலும் வைதிகதர்மத்தைத் தழுவுகின்றவர் சிறப்புபற்றிக் கூறவும் வேண்டுமோ?

ஆபத்தினின்றும் காப்பவன் க்ஷத்திரியன் ஆவன். வியாபார நிமித்தம் தேச ஸஞ்சாரம் செய்கிறவன் வைசியன் ஆவன். க்ஷத்திரிய வைசியர்களுக்கு வேதமோதல், யாகம் செய்தல், தானம் கொடுத்தல் என்ற மூன்று தர்மங்கள் விதிக்கப்பட்டுள்ளன. முற்கூறிய மூன்று வர்ணத்தார்களுடைய கடமைகள் ஒழுங்குபெறப் பாடுபட்டு உபகாரம் செய்கிறவன் சூத்ரன் ஆவன். அவனுக்கு வேதமோதக்கூடிய அதிகாரமில்லாவிடினும் வேத வேதாந்த தாத்பர்யங்களை பிராம்மணன் முகமாகவும் புராணங்கள் வாயிலாகவும் தெரிந்துகொள்ள அதிகாரமுண்டு. ஸ்திரீகளுக்கும் அவ்விதமே. கீதையில் ‡ "சமம், (மனத்தை யடக்குதல்) தமம், (வெளி யிந்திரியங்களை யடக்குதல்) தபஸ், திரிகரண சுத்தி, பொறுமை, நேர்மை, அறிவு, விசேஷஅறிவு, ஆஸ்திக்யம் இவை பிராம்மணனுடையவும்,

‡ அத். 18. சுலோ. 42-44.

வீரத்தன்மை, பலம், தைர்யம், ஸாமர்த்தியம், யுத்தத்தில் புறங்காட்டி ஓடாமை, தானம், யாவரையும் அடக்கி ஆளு தல் இவை க்ஷத்திரியனுடையவும், பயிர்த் தொழில், பசு பரிபாலனம், வியாபாரம், இவை வைசியனுடையவும், சுச்ரூஷை செய்தல் சூத்திரனுடையவும் இயற்கையினுண் டான கர்மங்கள்'' எனப்படுகிறது. பிரம்மாவின் முகம், புஜங்கள், தொடைகள், பாதங்கள் இவற்றினின்றும் உண் டானவர்கட்கு அந்தந்த உறுப்புகளின் கார்யங்களாகிய வேத அத்யயனம், சத்துருக்களை வெல்லுதல், தேச ஸஞ் சாரம் செய்தல், உழைப்பெடுத்தல் என்ற கார்யங்கள் முறையே விதிக்கப்பட்டுள்ளன. அவரவர் தர்மங்களைச் செய்கின்றவர்கட்கு நற்கதியும், செய்யாதவர்கட்கு துர்க் கதியும் விதித்திருப்பன. மேலளாவிய பார்வையில் பிராம் மண தர்மம் சுளுவாகவும் ஸுகமாகவும் பிறர்கட்குத் தோன்றினும் அவற்றை நிறைவேற்றுதலில் உள்ள கஷ்டம் மற்றவர் தர்மத்தில் கிடையாது. தனது தர்மத்தை ஒழுங் காய் நடத்தும் பிராமணன் அடைகின்ற நற்கதியையே, ஸ்வதர்மத்திலுள்ள மற்ற வகுப்பினரும் அடைகின்றனர். ஒரு வகுப்பினர் மிக்க வருந்தி அடையும் பலனே பிற வகுப்பினர்கட்கு எளிதிற் கிடைக்கக்கூடியதாக விதித் திருக்கும் சாஸ்திரங்கள் அவர்களுக்கே அநுகூலமாயி ருக்க அவற்றின் மீதும் அவற்றைக் கையாளுகின்றவர் மீதும் குறை கூறுதல் மனத்திலுள்ள வேற்றுமையைக் காட்டுவதாகும். எந்த வகுப்பினராயினும் அவரது ஒழுக் கங்களினின்றும் நழுவினவர் அவர்களுள் மிகத்தாழ்ந்தவ ராகவும் பின் தணிந்த ஜன்மம் பெறவேண்டியவராகவும்

ஆவர். அவரவர் ஒழுக்கம் தவறாதவர் சிறந்தவராக விருப்பதுடன் மேலும் உயர்ந்த ஜன்மமும் பெறுவார். இதன்பின் ஆசிரம தர்மம் கூறப்படும்.

---

## மூன்றும் அதிகாரம்.

---

## ஆசிரம தர்மம்.

ஆசிரமமென்பது தத்வஜ்ஞானத்தை உணருவதற்கு ஸாதகமாகப் படிப்படியாயுள்ள ஒரு விரதம். ஆசிரமம் என்பதற்கு சிரமம் எடுத்துக்கொள்ளவேண்டிய நிலைமை என்று பொருள். ஒரு ஆசிரமத்திலிருந்து சிரமத்துடன் அநேக தர்மங்களை அனுஷ்டித்து அதனின்றும் ஒழிவடைந்து வேறொரு ஆசிரமம் பெறவேண்டும். அவ்வாசிரமத்தின் தர்மங்களை அனுஷ்டித்தபிறகு அதற்கடுத்த ஆசிரமத்திலிருந்து சிரமப்படவேண்டும். அவ்விதம் செய்யப்படுமானல் மனத்திற்கு உலக விஷயங்களை அனுபவிப்பதனல் உண்டாகும் கஷ்டம் புலப்படும். அப்போது கொஞ்சம் கொஞ்சமாக அவற்றில் நசைதீர்ந்து மனம் சலனமற்று சாந்தமாகஒடுங்கி இளைப்பாறுவதற்கு முயற்சிக்கும். அதன்பிறகு விஷயஸுகத்தை வெறுத்து ஆத்மஸுகத்தைப் பெறவேண்டுமென்ற எண்ணத்தினல் தத்வ விசாரணையில் மனம் உறுதியாக நிற்கும். அதற்காகவே முன் சொன்ன ஆசிரமம் ஒவ்வொரு படியாய் சாஸ்திரங்களில் நான்குவிதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அவை:—பிரம்ஹசர்யம் (வேதமோதல்) கார்ஹஸ்த்யம் (இல்லறம்) வான

ப்ரஸ்தம் (வனஞ்செல்லுதல்) ஸந்யாஸம் (துறவறம்) என்பன. அவற்றின் தர்மங்கள் இதன்பின் கூறப்படுவன.

---

## ப்ரம்ஹசர்யம்.

### (வேதமோதல்)

ப்ரம்ஹம் என்ற பதம் படர்ந்த தன்மையுள்ளது என்ற பொருளுற்றிருப்பதால் அதற்கு அத்தன்மையுள்ள பரமாத்மா என்ற பொருளுடன் வேதம் என்றும் ஒரு பொருள் உண்டு. அதை அப்யாஸம் செய்கிறவன் ப்ரம்ஹசாரி எனப்படுவான். அவனது தன்மை ப்ரம்ஹசர்யம் எனப்படும். வேதமோதும் தொழிலினைக் கடமையாகக் கொண்டு ஆரம்பிக்குமுன் உபநயனம் என்ற கர்மத்தினால் தனக்கு ஸம்ஸ்காரம் செய்துகொள்ளாமல் வேதத்தை அத்யயனம் செய்ய ஆரம்பிக்கக்கூடாது. உபநயன காலத்தில் உபதேசிக்கப்படும் காயத்ரி என்ற மஹாமந்த்ரம் "ஜபிக்கிறவனைக் காப்பாற்றுகிறது" என்ற பொருளுள்ளது. அதில் மும்மூர்த்திகளின் வடிவமான பிரம்மஸ்வரூபமாக இருக்கின்ற ப்ரணவம் முதலில் சேர்க்கப்பட்டிருக்கிறது. அதற்கு (ஈசுவர ஸ்வரூபத்தை நன்றாய்த் தியானித்து) ஸ்துதிக்க ஸாதனமாயிருப்பது என்று பொருள். அதுவே பிரம்மாவின் முகங்களினின்றும் வேதங்கள் வெளியாவதற்கு முன் வேதப் பொருளின் ஸாரமாக வெளியாயிற்று. பிறகு ரிக், யஜுஸ், ஸாமம் என்ற மூன்று வேதங்களின் கருத்தை அடக்கிக்கொண்டிருக்கும் மூன்றுபதங்கள் சேர்த்திருப்பன. அதன்பிறகுள்ள

காயத்ரீயின் மூன்று பாதங்களில் "நம் புத்தியிலுள்ள விருத்திகளை ஏவிக்கொண்டிருக்கிறவரும், உலகம் தோன்றி ஒடுங்குவதற்குக் காரணமாக விருப்பவரும், ஒளிகட்கெல்லாம் மேலானதாக எப்போதும் ப்ரகாசித்துக்கொண்டிருப்பவருமான பகவானுடைய மிகச் சிறந்த தேஜஸ்ஸை தியானம் செய்கிறோம்" என்ற கருத்து அடங்கியிருக்கிறது. அந்த மந்த்ரத்தை நாள்தோறும் ஜபிக்க சித்தசுத்தி யுண்டாகும். அஜ்ஞானம் விலகும். ஜ்ஞானோதயமாகும். அந்த ஜபமில்லாதவன் வேத அத்யயனம் செய்ய அனர்ஹனாகிறான். உபநயன மென்பது வேதத்தைக்கற்கும் யோக்யதையை உண்டுபண்ணி வேதத்தின் ஸமீபத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கின்றது என்ற பொருளுள்ளது. காயத்ரியில் மூன்று வேதங்களின் ஸாரமான பொருள் அடங்கியிருப்பதால் வேதங்கள் முழுதும் அப்யசிக்காதவர்கள் காயத்ரியின் ஜபத்தினாலேயே வேதமோதினவர்களாகக் கருதப்படுவார்கள். பகவத்கீதையில் * "நான் வேதங்களுள் பிரணவமாக இருக்கிறேன்." † "நான் § சந்தஸ்ஸுகளில் காயத்ரியாக இருக்கிறேன்" என்று பகவானே பகருகின்றார். ஆதலால் அவர்கள் காயத்ரியைக் கொஞ்சமாவது ஜபிக்காவிடில் பதிதர்கள் (வேதசாஸ்திர நெறிவழுவினவர்கள்) ஆய்விடுவார்கள்.

உபநயனமான பிறகு பிரம்மசாரிகள் வேதங்களைக் கற்க ஆரம்பகாலமாகிய சிராவணம் முதல்கொண்டு வேதாரம்பம் செய்யவேண்டும். உபநயன காலத்தில் அவர்கள்

---

* அத். 7. சுலோ. 8. † அத். 10. சுலோ. 35. § விருத்தம்.

தண்டம் (கம்பு) யஜ்ஞோபவீதம் (பூணூல்) மேகலை (அரை நாண்) கிருஷ்ணாஜிநம் (மான்தோல்) வெளுப்பு வஸ்திரம் இவற்றை அவற்றிற்குரிய மந்த்ரங்களுடன் தரித்துக்கொண்டு அவற்றைத் தவரவிடாமல் காப்பாற்றிக்கொண்டு தினந்தோறும் காலையிலும் மாலையிலும் ஸமிதாதானம் (ஸமித்துக்களை ஹோமம் செய்தல்) என்றக் கிரியைசெய்து கொண்டும் வரவேண்டும். குருவினிடம் வேதமோதும் போது அவருக்குப் பணிசெய்துகொண்டு சுத்தமான கிரகங்களில் பிக்ஷை எடுத்து உண்டு ஸ்வரங்கள், அக்ஷரங்கள் தப்பிதமின்றி வெகு ஜாக்ரதையுடன் வேதத்தை அத்யயனம் செய்யவேண்டும். புரசு, அரசு, பில்வம் என்ற தண்டங்கள் பிராம்மண, க்ஷத்திரிய, வைசியர்களுக்கு முறையே வேண்டுவன. அவை தலைவரை எட்டக்கூடியனவாக இருக்க வேண்டும். பிரம்மசாரி மோக்ஷத்தில் விருப்பத்தினாலும் சாஸ்திர விதிகளைக் கடக்கக்கூடாதென்ற புத்தியினாலும் சாந்தனாகவிருந்து நித்ய நைமித்திக கர்மங்களை அநுஷ்டிக்க வேண்டும். காம்யகர்மத்தை அவன் அநுஷ்டிக்கக் கூடாது. பிரம்மசாரி அத்யயனம் முடியும்வரை அவன் விவாகத்தை விரும்பக்கூடாது. அதனாலேயே தற்காலம் வேதமோதாதவர்களும் விவாகமாகாவிடின் பிரம்மசாரி எனப்படுகின்றனர். குருவின் கிரஹத்திலேயே வசித்துக் கொண்டு அவருக்குக் கீழ்ப்படிந்து தனது ஸகபாடிகள் (கூடப்படிக்கின்றவர்கள்) ஆகிய மற்றவர்களுக்குத் துன்பமிழைக்காமல் ஒழுங்காய் அத்யயனம் செய்துவரவேண்டும். இதுவே குருகுலவாஸம் எனப்படும். இங்கே குலம் என்பதற்கு கிரகம் என்று பொருள்.

---

## கார்ஹஸ்த்யம்.

(இல்லறம்)

கிரகம் என்பது வீடு என்றும் பத்னி என்றும் பொருள் உள்ளது. வீட்டில் பத்னியுடன் இருப்பவன் கிரஹஸ்தன் எனப்படுவான். தென்மொழியில் அவன் இல்வாழ்வான் எனக்கூறப்படுவான். அவனது தன்மை கார்ஹஸ்த்யம் என்றும் இல்வாழ்க்கை என்றும் கூறப் படும். பிரம்மசாரி குருகுலத்தில் வாஸஞ்செய்து வேதாத் யயனம் பூர்த்தியான பிறகு குருவின் அநுமதி பெற்று பிரமமசர்ய விரதத்தை முடித்துக்கொண்டு நல்ல இலக்ஷ ணங்களுடன் கூடின பெண்ணை விவாகஞ்செய்துகொள்ள வேண்டும். புருஷனுக்குப் பெண் குறைந்தது ஆறுவய தாவது இளையவளாக இருக்கவேண்டும். அதற்குக் குறைந்தபேதம் மத்யமமாகும். விதிப்படி பத்னியை விவா கம் செய்துகொண்டவன் தனக்கு விதித்தத் தொழில்களி னால் தனம் ஸம்பாதித்துத் தன் சக்திக்குற்றவாறு கிரக கிருத்யங்களின் செலவுகளை நடத்திக்கொள்ளவேண்டும். பிதுருக்களை சிராத்தத்தினாலும் தர்ப்பணத்தினாலும்,தேவர் களைப்பூஜித்தலாலும் ஹோமம்செய்வதினாலும், அதிதிகளை அன்னமிடுவதினாலும், ரிஷிகளை அத்யயனம் செய்த வேதத் தை மறக்காமல் தினந்தோறும் சிறிதுகாலமாவது சொல் லிக்கொண்டிருப்பதினாலும், பிரம்மாவை புத்ரர்களின் உற் பத்தியினாலும், காகம் முதலிய பூதங்களை பலியன்னம் கொடுப்பதினாலும், உலகமனைத்தையும் பிரீதியினாலும் ஸந் தோஷப்படுத்துகிற கிரகஸ்தன் நல்ல உலகங்களை அடை கிறான். தேவர்களையும், ரிஷிகளையும், பிதுருக்களையும்,

கிரகத்திலுள்ள தேவதா விக்ரஹங்களையும் பூஜித்து அதிதி களுக்கன்னமிட்டபிறகு மீந்ததை கிரகஸ்தன் புஜிக்கவேண் டும். சம்பளம் வாங்காமல் மாணவர்களுக்கு அத்யயனஞ் செய்துவைப்பது பிரம்மயஜ்ஞயம். தர்ப்பணஞ் செய்வது பிதிருயஜ்ஞயம். ஹோமஞ் செய்வது தேவயஜ்ஞயம். பலியன்னம் கொடுப்பது பூதயஜ்ஞயம். அதிதிகளை பூஜித்து அவர்களுக்கு அன்னமிடுவது மனுஷ்ய யஜ்ஞயம். முற்கூறிய பஞ்சமகாயஜ்ஞயங்களைத் தனது பக்தியனு ஸரித்துத் தினந்தோறும் விடாமல் நடத்துகிற கிரகஸ்தன் ஸூநாதோஷங்களையடைந்த போதிலும் அவை அவனை பாதிக்கமாட்டா. வீட்டில் உரல், உலக்கை, இயந்திரம், அடுப்பு, அறுமணை, தண்ணீர்க்குடம், முறம், துடைப்பம் முதலிய ஸாமான்களை உபயோகிக்கும்போது தெரியாமல் அகஸ்மாத்தாக நேரிடும் புழு, பூச்சி முதலிய பிராணிஹிம் ஸையின் தோஷங்கள் ஸூநா (ஹிம்ஸையாலுண்டாகும்) தோஷங்கள் எனப்படும். கிரஹஸ்தன் நித்ய, நைமித்திக (அமாவாசை, கிரஹணம் முதலிய நிமித்தத்தில் செய்ய வேண்டிய) கர்மங்கள், புண்யதீர்த்த யாத்திரை, போஷிக்க வேண்டியவர்களைக் காப்பாற்றுதல் இவற்றைச் செய்து கொண்டிருப்பதால் நற்கதியடைகிறான். மாதா, பிதா, குரு, பார்யை, குழந்தைகள், எளியவர்களான பந்துக்கள், அயலூரிலிருந்து வந்த அதிதிகள், பிரும்மசாரிகள், ஸந்யா ஸிகள் ஆகிய இவர்கள் கிரகஸ்தனால் போஷிக்கத்தக்கவர் கள். * " இல்வாழ்வானென்பான் இயல்புடைய மூவர்க் கும் நல்லாற்றினின்ற துணை" என்பது திருக்குறள்.

---

* அதிகாரம் 5. திருக்குறள் 1. தத்தம் ஒழுக்கத்தினின்றும் வழுவாது இயல்பினையுடைய பிரம்மசாரி, வானப்ரஸ்தன், ஸந்

கிரகஸ்தன் செய்யவேண்டிய நித்ய கர்மங்களாவன:— விடியற்காலத்திலெழுந்து தந்தசுத்தியான பிறகு ஸூர்யன் உதிப்பதற்குமுன் ஸ்நாநஞ்செய்யவேண்டும். அது ப்ராஜாபத்ய [பிரம்மாவிற்குத் திருப்தியை உண்டுபண்ணுகிற] ஸ்நாநமாகும். அது ஸர்வ பாபங்களையும் போக்கும். தீர்த்த ஸ்நாநம் செய்ய அசக்தன் மந்த்ர ஸ்நாநம், பஸ்ம ஸ்நாநம் முதலியவற்றைச் செய்துகொள்ளவேண்டும். ஏதாவது ஒருவித ஸ்நாநம்செய்து சுத்தமாகாமல் மற்ற கர்மங்களைச் செய்யக்கூடாது. பிரம்மசாரி காலையில் மாத்திரமும் கிரகஸ்தன், வானப்ரஸ்தன் இருவரும் காலையிலும் நடுப்பகலிலும், ஸந்யாஸி, காலை, நடுப்பகல், மாலையாகிய மூன்று காலங்களிலும் ஸ்நாநம் செய்யவேண்டும். பிறகு ஸந்திகாலங்களில் ஸந்த்யாதேவியை உபாஸித்து காயத்ரி, பஞ்சாக்ஷரி, அஷ்டாக்ஷரி முதலிய மகாமந்த்ரங்களை ஜபிக்கவேண்டும். அவற்றை ஆயிரமுறை ஜபிப்பது உத்தமம். நூறுமுறை ஜபிப்பது மத்யமம். பத்துமுறை ஜபிப்பது அதமம். மகாமந்த்ரங்களை பரப்ரம்ஹஸ்வரூபமாகவே அறியவேண்டும். மந்த்ரமானது தான் அறியாமல் செய்யும் பாபங்களைப் போக்கி மனத்தின் மலங்களை நீக்குகிறது. ஜபம் செய்யும்போது பிறர்களைத் தொடல், அவர்களுடன் பேசுதல், உலக விஷயங்களை நினைத்தல், பார்த்தல், கேட்டல் ஆகிய இவைகளையகற்றி ஜபத்தைக் கணக்கிட்டுக்கொண்டு மௌனமாய் ஜபிக்கவேண்டும். திரிகரணங்

---

யாஸி ஆகிய மூவர்களும் நல்லொழுக்க வழிகளில் நிலைபெற்றிருக்கும் வண்ணம், அவர்களுக்கு வேண்டியவற்றை ஈந்து நல்வழித் துணையாக நிற்கின்றவனே இல்வாழ்வான் எனப்படுவான் எ-ன்.

களால் இரவில் செய்யப்படும் பாபங்கள் விடியற்கால அநுஷ்டானத்தினாலும் பகலில் செய்த பாபங்கள் நடுப் பகல், ஸாயங்காலம் இவற்றில் செய்யப்படும் அநுஷ்டானங்களினாலும் விலகுகின்றன. காலையில் நித்யகர்மத்தைச் செய்யாதவன் வேறு எந்த கர்மங்களைச் செய்யவும் அனர் ஹன் ஆகிறான். ஸந்திகளிற்குரிய அநுஷ்டானத்தைச் செய்யாமல் தினந்தோறு உண்ணலும் உறங்கலுமாகக் காலங்கழிப்பவன் ஜீவதசையில் பதிதனாகவும் மரித்தபிறகு தாழ்ந்த ஜன்மமுள்ளவனாகவும் ஆகிறான். வியாதி முதலிய ஆபத்துகளின்றி சொஸ்தமாக இருக்கிறவன் சோம்ப லினால் ஸந்த்யாகால அநுஷ்டானங்களைச் செய்யாமல் விட்டுவிட்டால் அவன் விட்ட நாட்களுக்குத் தக்கபடி யானப் பிராயச்சித்தம் செய்யவேண்டும். ப்ரஸவத்தினா லும் மரணத்தினாலும் ஆசௌச (தீண்டாமை) முள்ளவ னும் ஸந்த்யாவந்தனத்தை விடாமல் செய்து ப்ராணாயாம மின்றி மந்த்ரங்களை மனத்தினாலே நினைத்துக்கொள்ள வேண்டும். வாயினால் அவற்றை அப்போது உச்சரிக்கக் கூடாது. ஸ்நாநம், ஸந்த்யாவந்தனம், ஜபம், ஹோமம், தேவதைகளின் பூஜை, அதிதிபூஜை முதலியன நித்யகர் மங்களாகையால் கிரகஸ்தன் அவற்றை தினந்தோறும் விடாமல் செய்யவேண்டும்.

---

கிரகஸ்த தர்மச் சிறப்பு.

குரு வாக்யத்தையும் சாஸ்திர விதிகளையும் கடந்து தர்மங்களை ஒழுகாதவர்கள் கடவுளிடம் செய்யும் பக்தி யும் வேதசாஸ்திரங்களைப் படித்தலும் கபடமாகவும் பல

னற்றதாகவும் ஆய்விடும். எந்த ஆசாரம் பெரியோர்களால் ஏற்பட்டு நியாய ஸம்மதமாக அனுஷ்டிக்கப்பட்டு வருகிறதோ, அவ்வாசாரத்தை அத்தேசத்திலுள்ளவர்கள் ஒழுக வேண்டும். அதுதான் தேசாசார மெனப்படும். தேவர்களாலும் முனிவர்களாலும் அனுஷ்டிக்கவேண்டியதை மனிதன் செய்யவேண்டியதில்லை. கிரகஸ்தன் நாஸ்திகத்தன்மை, வேதாகம நிந்தை, சாஸ்திரநிந்தை, தேவநிந்தை, த்வேஷம், கர்வம், கோபம், கொடியஸ்வபாவம் இவற்றைத் தள்ளவேண்டும். அவன் புத்திமானுகவும், கெட்ட கார்யங்களில் வெட்கமுற்றவனுகவும், பொறுமையுற்றவனுகவும், ஆஸ்திகனுகவும், வணக்கமுள்ளவனுகவுமிருந்து அனுஷ்டிக்கும் தர்மங்களால் நற்கதியடைகிறுன். "கரும்புத் தோட்டத்திற்குத் தண்ணீர்ப் பாய்ச்சும்போது அதன் மத்தியிலுள்ள புற்களும் செடிகளும் கொடிகளும் நனைக்கப்படுவனபோன்று தர்மமார்க்கத்திற் செல்லுகிறவனுக்குத் தன்படியே கிடைக்கும் திரவியம், கீர்த்தி இஷ்டவஸ்துக்களையடைதல் இவற்றுல் கிரகஸ்தன் திருப்தியடையவேண்டும்" என்று தர்ம சாஸ்திரங்களிற் கூறப்படுகிறது. பகவத்கீதையில் * "ஓ அர்ஜுனு! ஜனகர் முதலானவர்கள் கர்மத்தினுலேயே மோக்ஷத்தை யடைந்திருக்கின்றனர். உலகத்தார் கர்மத்தை விடாமலிருப்பதற்காக ஜ்ஞானிகளும் கர்மத்தை அனுஸரிப்பதால் நீயும் அதற்காகவாவது கர்மத்தைச் செய்யவேண்டும். உலகத்தில் சிறந்தவன் செல்லும் வழியை மற்றவரும் பின்பற்றுவர். மூவுலகங்களிலும் எனக்கு யாதொரு கர்மமும் செய்யவேண்டியதில்லை. அடையவேண்டிய வஸ்து யாதொன்று

* அத். 3. சுலோ. 20—26.

யில்லை. ஆயினும் எனது கர்மத்தில் நான் இருக்கிறேன். நான் எனது கடமையாகிய கர்மத்தைச் செய்யாமலிருப்பின் உலகத்திலுள்ள மற்ற ஜனங்களும் என்னைப் பின்பற்றி அவரவர் கர்மத்தைச் செய்யாதொழிவார்கள். அதனால் நான் அவர்களைக் கெடுத்தவனாவேன். வித்வான்கள் கர்மத்தின் பலனை அபேக்ஷியாமல் அதனைக் கடமையெனச் செய்வார்கள். அவித்வான்களோ பலனை விரும்பி கர்மத்தைச் செய்வார்கள். இதுதான் இருதிறத்தினர்களுக்குமுள்ள பேதம். கர்மத்தில் சிரத்தையுள்ள அஜ்ஞானிகள் முதலில் பலாபேக்ஷையுடன் கர்மத்தைச்செய்தும் பிறகு பலாபேக்ஷையில்லாத நிஷ்காமகர்மங்கள் செய்தும், ஸித்தி பெறவேண்டியவர்களாக இருக்கிறார்கள். ஆதலால் வித்வான் அவர்கள் புத்தியை பேதப்படுத்தாமல் தானும் சிரத்தையோடு கர்மத்தை யனுஷ்டித்து வரவேண்டும்'' எனப்படுகிறது. ஆதலால் தர்மங்களை ஸரியாய் நடத்துகிற கிரகஸ்தன் தெய்வமாக நினைக்கப்படுவான். † "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந் தெய்வத்துள் வைக்கப்படும்'' என்பது திருக்குறள்.

---

## வானப்ரஸ்தம்.

(வனஞ்செல்லுதல்)

ஆயுளின் முதல்பாகத்தைக் கல்வியறிவு ஸம்பாதிப்பதிலும், இரண்டாம் பாகத்தை இல்வாழ்க்கையிலும்

---

† அதி. 5. திருக். 10. மண் உலகத்துள் இல்லறத்தோடு கூடி வாழும் இயல்பினால் வாழ்கின்றவன் விண் உலகத்திலுள்ள தேவர்களுள் ஒருவனாக வைத்து நன்கு மதிக்கப்படுவான் என்று பொருள்.

போக்கினபிறகு மூன்றும் பாகத்தில் இல்வாழ்க்கையின் பலவித துன்பங்களால் சஞ்சலமான மனத்தைச் சாந்தப் படுத்திக்கொள்ளுவதின்பொருட்டு, குடும்பபாரத்தை ஸரி யான வயதுவந்த குமாரனிடம் ஒப்புவித்துவிட்டு வனத் திற்குத்தபஸ் செய்யப்போகிறவன் வநப்ரஸ்தன் எனப்படு வான். வநப்ரஸ்தன் என்பதற்கு வநத்திற்குச்செல்லுகிற வன் என்று பொருள். அவன் தன்மை வாநப்ரஸ்தமெனப் படும். அவன் தனது பார்யை தனக்குப்பணிவிடை செய் வதற்குத் தன்னுடன்வர ஸம்மதித்தவளாக இருந்தால் அவளைமாத்திரம் கூட அழைத்துக்கொண்டு வநத்திற்குப் போகலாம். அங்கே ரிஷிகளுடன் சேர்ந்து அவர்களிட மிருந்து தத்வஜ்ஞானத்திற்கு ஸாதகமான விஷயங்களைக் கேட்டு அதற்குரிய தர்மங்களை அநுஷ்டிக்கவேண்டும். சாகம் (காய்கறி) கந்தம் (கிழங்கு) மூலம் (வேர்) பலன் (கனி) முதலிய பரிசுத்தமான ரிஷிகளின் ஆகாரத் தினல்தேகயாத்திரை நடத்திக்கொள்ளப் பழகிக்கொண்டு அவ்விதமான ஆகாரத்தையே ஏற்றுக்கொள்ளவேண்டும். இந்த ஆசிரமத்தில் ஸம்ஸாரத்திலுள்ள ஸகல தர்மங்களை யும் மறந்துவிட வேண்டும். நிவிர்த்தி மார்க்கத்திற்குரிய ஸந்யாச ஆசிரமத்தைப் பெறவேண்டியதற்கு ஸாதகமான வைராக்ய தர்மத்தை நன்கு கடைப்பிடித்து ஒழுகவேண் டும். நாயின் கக்கலிற்போன்று விஷயஸுகத்தில் தோன் றும் வெறுப்பு வைராக்யமெனப்படும். இந்த ஆசிரமம் கிரகஸ்தனை கிரகஸ்தாசிரமத்திற்குப்பின்னல் ஸந்யாஸாசிர மத்திற்குத் தகுதியுள்ளவனுகும்படி செய்கிறது. அதனல் இதை அதற்கு முந்தினதாக அநுஷ்டிக்க வேண்டியது.

இதில் வனத்திலுள்ள பசு, மான் முதலிய ஸர்வ ப்ராணிக ளிடமும் கருணையும் அன்பும் ஓரேவிதமாய் உண்டாகி றது. அந்தப்பிராணிகளும் அந்த வானப்ரஸ்த ரிஷிகளை அவ்விதமே நேசிக்கின்றன. அவர்களுக்கும் அப்பிராணி களுக்கும் பரஸ்பரம் அன்பின் மிகுதியால் பயந்தோன்று மல் மிக்க நம்பிக்கை உண்டாகிறது. அதனால் இருதிறத் தினர்கட்கும் பழிபாவம் முதலியன அணுகமாட்டா. * "மன்னுயிரோம்பி யருளாள்வாற்கில்லென்ப தன்னுயி ரஞ்சும் வினை" என்பது திருக்குறள். அவர்கள் ஸன்னி தான மகிமையினால் ஜன்ம வைரிகளான புலியும் பசுவுங் கூட சேர்ந்து ஓரிடத்தில் வஸிக்கும். இந்த ஆசிரமம் கலியுகத்திற்கு இல்லை என்று கூறுவர் சிலர்.

---

## ஸந்யாஸம்.

(துறவறம்)

வேதாகமங்கள் முதலிய ஸகல சாஸ்திரங்களையும் முறைப்படி கற்று குருதக்ஷிணை கொடுத்து, அவர் உத்திர வின்பேரில் தர்மபத்னியை விவாகம் செய்து அவளுடன் கிரகஸ்த தர்மங்களை ஒழுகி, வானப்ரஸ்தத்தில் மனத்திற்கு வைராக்யத்தை யுண்டுபண்ணிக்கொண்டு, ஆயுளின் நான் காவது பாகத்தில் ஸர்வஸங்க பரித்யாகம் (எல்லாப்பற்

---

* அதிகாரம் 25 திருக்குறள் 4. மற்ற உயிர்களைக் காப்பாற்றி அவைகளிடம் கருணையுற்றவர்களுக்கு தம் உயிரைப்பற்றி அஞ்சும் படியான கொலை முதலிய பாவத்தொழில் கிடையாது என்று கூறுவர் பெரியோர் என்று பொருள்.

றும் அறல்) என்ற தர்மத்தை ஏற்று மோக்ஷத்தில் மாத்திரம்பற்றின மனதுடையவன் ஸந்யாஸி எனப்படுவான். அவனது தன்மை ஸந்யாஸம். அதற்கு முற்றும் துறத்தல் என்று பொருள். உலகப்பற்றுகளை வெளிக்கு மாத்திரம் விட்டவர்கள்போலிருந்து மனத்தில் அவற்றின் நசை யறுதவர்கள் ஸந்யாஸிகள் ஆகார். ‡ "நெஞ்சிற்றுறவார் துறந்தார் போல் வஞ்சித்து வாழ்வாரின் வன்கணாரில்" என்பது திருக்குறள். வெளிவேஷங்களில்லாவிடினும் மனப்பற்று அற்றவனே துறவிகளுள் தலைவன் எனப்படுவான். ஐம்புலன்களையடக்கி, அவற்றின் வழியே மனத்தில் உண்டாகும் மெய்ப்பொருளல்லவற்றை மெய்ப்பொருள் என்று உணரும் உணர்ச்சியை நீக்கி, விஷயஸுகத்தின் அவாவினைக்களைந்து மெய்ப்பொருள் காணும் அறிவினைப்பெற்ற துறவிகளே முடிவில்லாத முக்தியின்பம் பெறுவார். § "இன்பமிடையறாதீண்டும் அவாவென்னும் துன்பத்துட்டுன்பங்கெடின்" என்ற திருக்குறள் அவ்விதமே கூறுகிறது. சரீரத்திலுள்ள பற்றை நீக்கவும், க்ஷேத்ரேஷணை (மண்ணாசை) தாரேஷணை (பெண்ணாசை) வித்தேஷணை (பொருளாசை) புத்ரேஷணை (பிள்ளையாசை) முதலிய ஸகலமான ஆசைகளை வெறுக்கவும், சரீரமே

---

‡ அதி. 28. திருக். 6. மனதில் துறவுறுதவர்கள் துறவிகள் போன்று வஞ்சித்து வாழ்வார்களானால் அவர்களைவிட இரக்கமில்லாதவர் உலகத்தில் எவருமில்லை என்று பொருள்.

§ அதி. 37. திருக் 9. ஆசை என்று சொல்லப்படுகிற துன்பங்களுக்குள்ளே மிகுந்த துன்பமானது கெடுமாயின் முக்திபெற்றவிடத்தேயல்லாமல் இங்கேயும் (ஈண்டும்) இன்பம் இடையறாமல் தொடர்ந்து உண்டாகும் என்று பொருள்.

நான் என்ற அகந்தை (அகப்பற்று)யும், வீடு, பொருள், பெண்டு, பிள்ளைகள் முதலியன என்னுடையவை என்ற மமதை (புறப்பற்று)யும் அற்று ஆத்மாவை மற்ற வஸ்துக்களிடமிருந்து பிரித்துவைத்துக்கொண்டிருக்கிற ஸந்யாஸி, உலகத்தாருடன் பழகிக்கொண்டிருந்தபோதினும், நன்றாய்க் கனிந்த புளியம்பழம் தனது தோட்டினுள் இருந்தபோதிலும் அதில் ஒட்டாமலிருப்பதுபோலும் தாமரையிலையிலுள்ள நீர்த்துளிகள் போன்றும் ஒன்றிலும் ஒட்டாமலேயிருந்து தனது ஆத்மா உயர்ந்த பதவியடைய வேண்டிய நெறிகளைத் தழுவியிருப்பான். * "யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க்குயர்ந்த வுலகம் புகும்" என்பது திருக்குறள். ஆத்மாவை மற்ற வஸ்துக்களிடமிருந்து பிரிக்கும் முறை இதன் இரண்டாம் தொகுதியில் கூறப்படும். அவ்விதமான ஸந்யாஸி எப்போதும் சாந்தனாகவும் பிரம்மவித்தையை ஸதா மனனம்செய்து கொண்டும் யோகாப்யாஸத்தில் பற்றுற்றவனாகவுமிருக்க வேண்டும். ஸந்யாஸி வனத்தில் கந்தமூலபலாதிகளை உண்டு வஸிப்பதுதான் உத்தமம். அதற்குப் பழகாதவர்கள் கிராமத்தில் ஒருநாளும் பட்டணத்தில் ஐந்து நாட்களும் சுத்தமான பிக்ஷை யெடுத்து உண்டு வஸிக்கவேண்டும். மழைகாலத்தில் ஒரே இடத்தில் நான்கு மாஸங்கள் வஸிக்கலாம். அதற்கு சாதுர்மாஸ்ய விரதம் என்று பெயர்.

---

* அதி. 35. திருக். 6. தானல்லாதவுடம்பை யான் என்றும் தன்னோடு ஸம்பந்தமில்லாத பொருளை எனது என்றும் நினைத்து அவைகளிற் பற்று ஆகிய மயக்கத்தை அறுத்தவன் தேவர்க்கும் அடைதற்கரிதாகிய மேலான முக்தியுலகம் புகுவான் எ-ன்.

முதலில் பிரம்மசாரியாகவும், பிறகு கிரகஸ்தனாகவும், அதன் பிறகு வானப்பிரஸ்தனாகவும் இருந்து ஸந்யாஸம் பெறுவது கிரமஸந்யாஸ மாகும். பிரம்மசர்யத்திலிருந்தோ கிரகஸ்தாசிரமத்திலிருந்தோ ஸந்யாஸம் பெற பக்வமுள்ளவர்கள் நினைத்தபோதே அவ்வாசிரமம் பெறலாம். சிலர்கட்கு பூர்வ ஜன்மத்திற் பழகின தீவிரமான வைராக்யம் எந்த ஸமயத்தில் எழும்புகிறதோ, அவர்கள் அப்போதே ஸந்யாஸம் பெறலாம். "என்று விரக்தியுண்டாகிறதோ, அன்றைக்கே துறவியாகக் கடவது" என்று வேதம் கூறுகிறது. மற்ற ஆசிரமங்களுக்கெல்லாம் ஸந்யாஸமே மேலானது. அப்படியிருப்பினும் பிரம்மசர்யம் முதலிய நான்கு ஆசிரமங்களும் கிரகஸ்தாசிரமத்தினாலேயே நிலைபெறுகின்றன. சாஸ்திர விதிப்படி அந்தந்த கர்மங்களை அந்தந்த ஆசிரமத்தில் நடத்தி வருகிறவன் வேதாந்த விசாரணைசெய்து பிரம்ம ஸாக்ஷாத்காரம் (நேரில் பார்த்தல்) பெறத் தகுதியுள்ளவனாகிறான். ஆதலால் நான்கு ஆசிரமங்களும் தனித்தனியே மோக்ஷம் பயக்கவல்லனவாம். நான்காசிரமிகளுக்குள்ளும் சாஸ்திர விதிப்படி ஒழுகும் கிரகஸ்தன் மற்ற மூன்றாசிரமிகளுக்கும் பிக்ஷை கொடுத்து அவர்களைப் பாதுகாத்தலினாலே அவன் உயர்ந்தவனென்று சொல்லப்படுகிறான். நதிகள் சமுத்திரத்தை நாடுவதுபோன்று எல்லா ஆசிரமிகளும் கிரகஸ்தனையே நாடுகின்றனர். கிரகஸ்தாசிரமத்திலிருந்தே ஆத்மவிசாரம் செய்து பிரம்மஸ்வரூபம் பெறலாம். இதனாலேயே ஔவையார் * "இல்லறமல்லது நல்லறமன்று"

* கொன்றைவேந்தன். ஸூத்ரம் 3.

என்று கூறியிருக்கிறார். ஸந்யாஸ ஆசிரமமே ஸாயுஜ்ய மோக்ஷமடைய ஸாதனமாயிருப்பது என்று சில மகான்களின் அபிப்பிராயம்.

---

### ஆசிரமிகளின் உட்பிரிவுகள்.

முற்கூறிய நான்கு ஆசிரமிகளுள் ஒவ்வொருவனும் நான்கு வகைப்படுவான். அவர்களில் பிரம்மசாரி என்பான் காயத்ரன், பிராம்ஹன், ப்ராஜாபத்யன், நைஷ்டிகன் என நான்கு விதமாகக் கூறப்படுவான். உபநயத்திற்குப் பின் மூன்று நாள் உப்பு சேராமல் ஆகாரம் செய்துகொண்டு காயத்ரியை ஜபிக்கின்றவன் காயத்ர (காயத்ரி ஸித்திசெய்கின்ற) பிரம்மசாரி. வேதத்திற்குப் பன்னிரண்டு வர்ஷங்கள் வீதம், நான்கு வேதங்களுக்கும் நாற்பத்தெட்டு வர்ஷங்கள் குருகுலவாஸஞ் செய்துகொண்டு அத்யயனம் செய்கிறவன் பிராம்ஹ (வேதஸித்தி செய்கின்ற) பிரம்மசாரி. கிரகஸ்தனுக விருப்பினும் அன்ய ஸ்திரீகளை மனத்தினுற்கூட சிந்தியாமல் தனது சொந்த பத்னியினிடமே விரத தினங்களையும் விலக்கப்பட்ட தினங்களையும் நீக்கி மற்ற தினங்களில் ஸங்கமம் செய்கிறவன் ப்ராஜாபத்ய (பிரம்மாவிற்குப் பிரியமான) பிரம்மசாரி. வேதாத்யயனம் முடிந்தும் இல்லறம் பெறுமல் ஆயுள்வரை பிரம்மசாரியாகவுள்ளவன் நைஷ்டிக (விரத நிஷ்டையுள்ள) பிரம்மசாரி.

கிரகஸ்தன் என்பான் வார்த்தாவ்ருத்தன், யாயாவரன், சாலீனவ்ருத்தன், கோரஸந்யாஸிகன் என நான்கு விதமாகக் கூறப்படுவான். கிருஷி (விவஸாயம்) பசுபரிபா

லனம், வியாபாரம் இவற்றைப் பிறர் நிந்திக்க இடமில்லா மல் முறைப்படி நடத்துகிறவன் வார்த்தாவ்ருத்தன் (வியா பாரம் முதலியவற்றால் ஜீவிக்கிறவன்). வேதத்தை அத்ய யனம் செய்தல் செய்வித்தல், யாகம் செய்தல் செய்வித் தல், தானம் கொடுத்தல் வாங்குதல் இவற்றைச் செய்கிற வன் யாயாவரன் (அலைந்து திரிந்து ஸம்பாதித்து ஜீவிக்கிற வன்). வேதமோதல், யாகம் செய்தல், தானம் கொடுத்தல் இவற்றைத் தான் மாத்திரம் செய்துகொண்டு பிறர்களிடம் ப்ரதிப்ரயோஜனம் பெற்று வேதமோதுவித்தல், யாகம் செய்வித்தல், தானம் வாங்குதல் இவற்றைச் செய்யாம லிருப்பவன் சாலீனவ்ருத்தன் (வீட்டிலிருந்து ஜீவிக்கிற வன்). தினந்தோறும் * உஞ்சவிருத்திசெய்து அதனாலேயே தனது குடும்பத்தைப் போஷித்துக்கொண்டு எப்போதும் மனதில் திருப்தியடைந்து சாந்தனாக இருப்பவன் கோர ஸந்யாஸிகன் (உக்ரமான ஸந்யாஸிக்கொப்பானவன்).

வாநப்ரஸ்தன் என்பான் வைகாநஸன், ஔதும் பரன், வாலகில்யன், பேநபன் என்று நான்கு விதமாகக் கூறப்படுவான். உழுது பயிரிடாமல் வநத்தில் தன்படியே முளைத்த பயிர்களின் தான்யங்கள், செடி கொடி மரங் களின் பழங்கள் இவற்றை ஆகாரமாகக்கொண்டு பஞ்ச மகாயஜ்ஞங்களையும் தினந்தோறும் விடாமல் செய்கிறவன் வைகாநஸன் (விகனஸ் என்ற ரிஷியின் மதத்தைத் தழு வினவன்). நீவாரம், சாமை என்ற இரண்டு தான்யங்களை

---

* வயல்களில் கீழே உதிர்ந்து கிடக்கும் தான்யங்களைப் பொறுக்குதல்.

யும் மற்றும் பழங்களையும் புசித்துக்கொண்டு பஞ்சமகா யஜ்ஞங்களை தினந்தோறும் செய்கிறவன் ஔதும்பரன் (உதும்பரர் மதத்தைத் தழுவினவன்). தலையில் சடையும் இடுப்பில் மரவுரி, மான் தோல்களையும் தரித்து ஔதும்பரனின் ஆகாரத்தை ஏற்று பஞ்சமகாயஜ்ஞங்களைச் செய்கிறவன் வாலகில்யன் (வாலகில்யர் மதத்தைத் தழுவினவன்) உதிர்ந்த சருகுகள், பழங்கள் இவற்றையே ஆகாரமாகக்கொண்டு வநத்தில் தன்னிஷ்டமான இடத்தில் வஸித்துக்கொண்டு தபஸ் விரதம் இவற்றைச் செய்கிறவன் பேநபன். (பேநபர் மதத்தைத் தழுவினவன்).

ஸந்யாஸி என்பான் குடீசகன், பஹூதகன், ஹம்ஸன், பரமஹம்ஸன் என்று நான்கு விதமாகக் கூறப்படுவான். * திரிதண்டம், ஜலகமண்டலு, சுத்தமான பாதக்குறடு, தர்ப்பம் மான்தோல் முதலிய ஆஸனம், சிகை, யஜ்ஞோபவீதம், காஷாய வஸ்த்ரம் இவற்றை தரித்துக்கொண்டு தனது கிராமத்தில் புத்ரர்கள் பந்துக்கள் ஆகிய இவர்களின் வீடுகளில் மாத்திரம் பிக்ஷை எடுத்து உண்பான் குடீசகன் (பந்துக்கள் வீடுகளில் மாத்திரம் பிக்ஷை எடுப்பவன்). குடீசகனின் அடையாளங்களைத் தரித்துக்கொண்டு நன்னடத்தையுடைய கிரகங்களில் பிக்ஷை எடுத்து உண்பான் பஹூதகன் (பல வீடுகளில் பிக்ஷை

---

* மனம், வாக்கு, செய்கை இம்மூன்றையும் தண்டித்து அடக்கினதற்கு அடையாளம். ப்ராணாயாம (சுவாஸ நிரோத) த்தால் மனமும் உலக ஸம்பந்தமான வார்த்தைகளைப்பேசாததால் வாக்கும் உலக காரியங்களில் முயற்சியின்மையால் செய்கையும் அடங்கும்.

எடுப்பவன்). ‡ ஏகதண்டம், ஜலகமண்டலு, சிகை, யஜ்ஞோபவீதம், சுத்தமான ஆஸனம், பாதக் குறடு § காஷாயம் இவற்றை தரித்துக்கொண்டு கிராமத்தில் ஒரு நாளும், பட்டணத்தில் ஐந்து நாட்களும் புண்ய தீர்த்த முள்ள க்ஷேத்ரத்தில் எட்டு நாட்களும் வஸித்துக்கொண்டு யோக்யமான கிரகங்களில் பிக்ஷை எடுத்து உண்பான் ஹம்ஸன் (மனத்தில் எப்போதும் ஹம்ஸம் என்ற பரமாத் மதியானமுள்ளவன்). சிகை, யஜ்ஞோபவீதம் இவற்றை விட்டு ஏகதண்டம், ஜலகமண்டலு இவற்றை மாத்திரம் தரித்து கௌபீனம் மாத்திரம் கட்டிக்கொண்டு மரத்தி னடியில் உள்ள குடிசை, கிராமத்திலிருந்து விலகியிருக்கிற தனித்த மடம், தேவாலயங்கள் இவற்றில் இருந்துகொண்டு உள்ளங்கையினாலேயே சுத்தமான பிக்ஷை எடுத்து உண் பான் பரமஹம்ஸன் (ஹம்ஸர்களுள் சிறந்தவன்). குரு விற்குப் பணிவிடைசெய்தல் பிரம்மசாரிகளுக்கும், தானங் கொடுத்தல் கிரஸ்தர்களுக்கும், விரதங்களை யனுஷ்டித்த லாகிய தவஞ்செய்தல் வானப்ரஸ்தர்களுக்கும், மனத்தை யடக்கி சாந்தமாக இருத்தல் ஸந்யாஸிகளுக்கும் முக்ய மான தர்மமாம். முற்கூறிய ஆசிரமிகளுள் முறையே முந்தியவனைவிடப் பிந்தியவன் சிறந்தவன்.

---

‡ அஜ்ஞானத்தைத் தண்டித்து ஜ்ஞானஸ்வரூபமாக இருப்ப தற்கு அடையாளம்.

§ மனத்திலிருக்கும் உலகப்பற்றுகிய சிவப்பு நிறமான ஆசைக ளை வெளியாக்கினதற்கு அடையாளம்.

## நான்காம் அதிகாரம்.

---

### ஸம்ஸ்கார தர்மம்.

ஸம்ஸ்காரமென்பது சில மந்த்ரங்களினாலும் தந்த்ரங்களினாலும் சரீரத்திலுள்ள ஜீவாத்மாவின் சக்தியை புதுப்பித்து விசாலப்படுத்துவதற்கும் அவனுக்கு ஸம்பவிக்கும் இடையூறுகளை நிவிருத்திப்பதற்கும் அனுகூலமாக அவனது சரீரத்தைப்பற்றி செய்யப்படும் ஒருவித கர்மம். அதனால் வஸ்திரத்தில் மறைந்திருந்த ஸ்வயமான வெண்மை வெள்ளாவியினால் வெளியாவதுபோன்று ஆத்மாவினிடம் மறைந்திருக்கும் சக்தி புதுப்பிக்கப்பட்டுப் பிரகாசிக்கிறது. ஸம்ஸ்காரமென்பதற்கு "புதுப்பிக்கப்படுகிறது" என்று பொருள். தகப்பனது பீஜதோஷங்களும் தாயினது கர்ப்பதோஷங்களும் ஜனிக்கின்றவனது சரீரத்திற் பற்றுவதால் அவை அதன்மூலமாய் அவனது ஆத்ம சக்தியை மறைக்கக்கூடியன. ஆதலால் அவற்றைப்போக்க ஸம்ஸ்காரம் விதிக்கப்பெற்றிருக்கிறது. அது பூர்வ ஸம்ஸ்காரம், உத்தர ஸம்ஸ்காரம் என இருவகைப்படும்.

---

### பூர்வ ஸம்ஸ்காரம்.

பூர்வ ஸம்ஸ்காரமென்பது பிழைத்திருக்கும் சரீரத்திற்குச் செய்யும் ஸம்ஸ்காரமாம். அது நாற்பது வகைப்படும். அவை கர்ப்பாதானம், பும்ஸவனம், ஸீமந்தோந்நயனம், ஜாதகர்மம், நாமகரணம், அன்னப்பிராசனம், சௌளம், உபநயனம், நான்குவேத விரதங்கள், விரதஸ்

நாநம், விவாஹம், ஐந்து மகாயஜ்ஞங்கள், ஏழு பாகயஜ்ஞங்கள், ஏழு ஹவிர்யஜ்ஞங்கள் ஏழுஸோமஸம்ஸ்தைகள் என்பன. கர்ப்பாதானம்முதல் உபநயன மீறாகவுள்ளன முதல் மூன்று வர்ணத்தார்கட்கும் அவசியம் செய்யவேண்டுவன. உபநயனத்திற்குப் பின்னுள்ளவை விவாகத்தில் விருப்பமுற்ற புருஷர்கட்கு அவசியமானவை. ஸ்திரீகட்கு உபநயன ஸ்தானத்தில் விவாஹம் விதித்திருப்பதால் அது அவர்களது விருப்பத்தைப் பொருத்ததல்ல. அது அவர்கட்கு மிக்க அவசியமானது. நான்காம் வர்ணத்தார்கட்கு கர்ப்பாதானம் முதல் சௌளமீராகவுள்ளன அவசியமானவை. அவை வேதமந்த்ரங்களின்றி செய்யவேண்டுவன. அவர்களுள் ஸ்திரீகளுக்கு விவாகம் அவசியம். இஷ்டப்பட்டால் அது புருஷர்கட்கும் அவசியம். அந்த ஸம்ஸ்காரங்கள் பின் விவரிக்கப்படுவன.

கர்ப்பாதானம் (கர்ப்ப-ஆதானம்) என்பது கர்ப்பத்தை உண்டுபண்ணுதல் என்ற பொருளுள்ளது. அந்த ஸமயத்தில் ஸ்திரீபுமான்கள் மனத்தில் அசுத்தமான எண்ணங்களுடனாவது, கேவலவிஷயானுபவ இச்சையுடனாவது இல்லாமல் "குடும்ப நன்மைக்காக ஒரு சிசு உற்பவிக்குக" என்று ப்ரார்த்தித்துக் கொள்ளவேண்டும். அப்போது தாயின் கர்ப்பத்தில் தகப்பனின் பீஜத்தால் சிசுவிற்கு அன்னமயகோசம் உண்டாகிறது. கர்ப்பாதானத்திற்கு விலக்கின காலங்களை நீக்கி விதித்த காலங்களை ஏற்றுக்கொள்ள வேண்டும். ஸ்திரீகளின் விலக்க தினங்களாகிய மூன்று நாட்களும், ருது நிற்காவிடில் நான்காம் நாளும், மாஸப்பிறப்பும், அஷ்டமி, ஏகாதசி, துவாதசி, திரயோதசி,

சதுர்தசி, அமாவாஸ்யை, பௌர்ணமி திதிகளும், மற்றும் விரத தினங்களும், பகலும் விலக்கக்கப்பட்ட காலங்கள். ஸ்திரீகள் விலக்கத்தினின்றும் ஸ்நாநம் செய்து சுத்தமான தினமாகிய நான்கு அல்லது ஐந்தாம் நாள்முதல் பதினாரு வது நாள்வரையுள்ள தினங்கள் விதித்த தினங்கள். அவற்றில் முற்கூறிய விலக்கிய விரத தினங்கள் வந்தால் அவற்றை நீக்கிவிடவேண்டும். விதித்த நாட்களில் ஐந்து, ஏழு முதலிய ஒற்றைப்பட்ட ராத்திரிகளிலும் ஆறு, எட்டு முதலிய இரட்டைப்பட்ட ராத்திரிகளிலும் கர்ப்பாதானம் செய்ய முறையே பெண்ணும் ஆணும் உண்டாகும். விலக்கிய காலங்களில் கர்ப்பாதானம் செய்தால் பிறக்கும் சிசு அங்கவீனம், பலவீனம், அற்பாயுள் முதலிய குற்றங்களுற்றிருப்பதுடன் தம்பதிகட்கும் முற்கூறிய குற்றங்களுண்டாகும். பும்ஸவனம் (பும்–புருஷப்பிரஜை, ஸவனம்–உண்டுபண்ணுவது) என்பது கர்ப்பமுண்டான மூன்று அல்லது நான்காவது மாஸத்தில் புருஷப்பிரஜை உண்டாவதற்காகச்செய்யப்படும் ஸம்ஸ்காரம். அதை ஸீமந்தத்தோடு சேர்த்தும் செய்யலாகுமென்று சிலர் கூறுவதால் தற்காலம் அவ்விதமாகத்தான் நடந்து வருகிறது. ஸீமந்தோந்நயனம் (ஸீமந்த–வகிடு, உந்நயனம்–பிரித்தல்) என்பது கர்ப்பத்தின் ஆறு அல்லது எட்டாவது மாஸத்தில் தாயாரின் தலைமயிர் வகிடு பிரித்தல் என்ற ஸம்ஸ்காரம். சிசுவின் அவயவங்கள் அப்போதுதான் பூர்ணமாவதால் அவை நன்றாய் அமையுமாறு சில மந்த்ரங்களுடன் தந்த்ரங்களும், அதில் செய்யப்படுகின்றன. தாயாரின் சிரஸிலுள்ள பிரம்மரந்திரத்தின் வழியாக சிசுவிற்கு சில சக்தி

கள் அந்தசமயத்தில் உண்டுபண்ணப்படுகின்றன. அப்போது ப்ராணமயம், மனோமயம், விஜ்ஞானமயம், ஆனந்தமயம் என்ற மற்ற நான்கு கோசங்களும் சிசுவிற்கு உற்பவிக்க ஐந்து கோசங்களுடன் கூடின சிசுவினது சரீரம் பூர்ணமாகிறது. முற்கூறிய மூன்று ஸம்ஸ்காரங்களும் மாதா, சிசு இருவர்களின் க்ஷேமத்திற்காக ஏற்பட்டன.

ஜாதகர்மம் என்பது குழந்தை பிறந்தவுடன் பிதாவால் செய்யப்படுகிறது. தகப்பன் புத்திரோற்பத்தியால் ஸந்தோஷித்து அதன் கர்ப்பவாஸத்தினுல் உண்டான தோஷங்களை நீக்கவும், தீர்க்கமான ஆயுள், புத்தி, க்ஷேமம் இவற்றைக் கோரிக்கொண்டும் வெல்லம், நெய், தேன் மூன்றையும் சேர்த்துப் பொன்னை உறைத்து அதன் நாக்கில் தடவவேண்டும். ஜாதகர்மம் என்பதற்குப் பிறந்த சிசுவிற்குச்செய்யப்படுவது என்று பொருள். நாமகரணமென்பது பெயரிடுதலாம். குழந்தை பிறந்து பதினென்று, பன்னிரண்டாம் நாட்களில் பிராமணரும், பதினமும் நாளில் க்ஷத்திரியரும், இருபது, இருபத்திரண்டாம் நாட்களில் வைசியரும், முப்பது முப்பத்திரண்டாம் நாட்களில் சூத்திரரும், முற்கூறிய நாட்கள் தவறினுல் அன்னப்பிராசனத்திற்குமுன், பொருந்திய ஏதாவது ஒரு நல்லநாள் பார்த்து யாவரும் சிசுவிற்கு நாமகரணம் செய்தல்வேண்டும். பிராமணர்கள் பெயர் மங்கள வாசகமாகவும் ஸந்தோஷம் தொனிக்கிறதாகவும் க்ஷத்திரியர்கள் பெயர் வீர்ய வாசகமாகவும் ரக்ஷணை தொனிக்கிறதாகவும், வைசியர் பெயர் தனவாசகமாகவும், சூத்திரர் பெயர் புஷ்டி, பணிவிடை தொனிக்கிறதாகவும் இருக்கவேண்

டும். பத்ரதேவன், சக்திபாலன், தனபாலன், பலதாஸன் என்பவை போன்றன முறையே நால்வர்க்கும் பெயர்களாம். ரிஷிகள், குலதேவதை, முன்னோர் இவர்களின் பெயரிடுவது சிலாக்யமென்பார் சிலர். ஸ்திரீகளின் பெயர் ஸுகமாய் உச்சரிக்கக்கூடியதாயும், கொடூரமற்றதாயும் தெள்ளிய பொருளமைந்ததாயும், மங்களகரமாயும், மனதிற்கின்பமாயும், ஆசீர்வாத வாசகம் போன்று கடையெழுத்து நெடில் (நீண்ட) எழுத்தாகவும், யசோதா, ஸீதா, பார்வதீ, கௌரீ, கல்யாணீ என்பன போன்றதாகவும் இருக்கவேண்டும். பிறந்த நான்காம் மாசத்தில் சிசு ஸூர்யனைப் பார்க்க வெளியிற் கொண்டுபோதல் என்ற உபநிஷ்க்ரமணம் (வெளியிற் கொண்டுபோதல்) என்பதையும் ஸம்ஸ்காரமாகக் கூறுவர் சில முனிவர். அன்னப்பிராசன மென்பதற்கு சிசுவின் ஆறும்மாஸத்தில் அதற்கு திரவரூபமான உணவுடன் அன்னரூபமான உணவை உண்பித்தல்எனப்படுகிறது. சௌளம் (குடுமி வைத்தல்) என்பது குழந்தையின் முதல் ஆண்டின் முடிவிலேனும் அல்லது அவரவர் குலாசாரப்படி மூன்று, ஐந்து, ஆகிய ஆண்டுகளிலும் செய்யப்படும். கர்ணவேதனம் (காது குத்தல்) என்ற ஸம்ஸ்காரம் தக்ஷிணதேசத்தில் குழந்தை பிறந்த பன்னிரண்டாம் நாளிலும், முதலாண்டு நிறைவிலும் சௌளத்துடன் சேர்த்தும் நடத்தப்படுகிறது. அதுவும் ஸம்ஸ்காரமென்பர் சிலர். அக்ஷராப்யாஸம் (எழுத்து கற்றுக்கொள்ளல்) என்பதும் தனி ஸம்ஸ்காரம் என்பர் சிலர். பிறந்த ஐந்தாம் வயதில் நல்ல அநுக்ரஹ சக்தியுள்ள உபாத்யாயரைக்கொண்டு பாலனுக்கு அக்ஷராரம்

பம் செய்விக்க வேண்டும். முற்கூறிய ஸம்ஸ்காரங்களினால் சிசுவினது சரீரம் அடிக்கடி நேர்மையாக்கப்பட்டு பிறந்தவன், குழந்தைப் பிராயத்தைக் கடந்து பிள்ளைப்பிராயமடையும்போது அவனுக்கு உபநயனம் செய்யவேண்டும்.

உபநயனமென்பது ஆசார்யரின் ஸமீபத்திற்கு அல்லது வேதத்தின் ஸமீபத்திற்குப் பையனைக்கொண்டுபோகுதலாகும். அதற்கு ஸமீபத்திற்குக் கொண்டுபோதல் என்று பொருள். அதனால் இரண்டாவது ஜன்மம் ஏற்படுகிறது. மனுஸ்மிருதியில் * "காமத்தினால் மாதா பிதாக்கள் சேர்ந்து புத்ரன் தாயின் கற்பத்தினின்றும் உற்பவிக்கிறான். அது அவனுடைய ஸ்தூல ஜன்மம். வேதங்களின் கரைகண்ட ஆசார்யன் உபதேசித்த காயத்ரி மந்த்ரத்தின் மூலமாய் ஏற்பட்ட ஜன்மம் (பிறப்பு) தான் ஸத்யமானதும் ஜனன மரண மற்றதும் ஸூக்ஷ்மமுமான பிறப்பு" எனப்படுகிறது. பிராமணர் புருஷப் பிரஜைக்கு கர்ப்பத்தினின்றும் எட்டாவது (பிறந்த ஏழாவது) வயதில் உபநயனம் செய்யவேண்டும். பதினாறு வயது முடியும் வரை அதனைச் செய்யலாம். க்ஷத்திரியர்க்குப் பிறந்தபின் பத்து முதல் இருபத்திரண்டு வயது வரையிலும் வைசியர்க்குப் பதினொன்று முதல் இருபத்து நான்கு வயது வரையிலும் உபநயனம் செய்யலாம். ஆனாலும் அதற்குரிய காலத்தில் கூடியமட்டில் அதை முடித்துச் செய்வது சிலாக்யம். காயத்ரி மந்த்ரத்தில் பிரும்ஹ ஸ்வரூபம் நிரூபிக்கப்படுவதாலும் வேத அத்யயனத்திற்கு அது முக்ய அங்கமாகவிருப்பதாலும் அதன் உபதேசம் பிரம்ஹோபதேசமென்று கூறப்

* அத். 2, சுலோ. 147, 148.

படும். அதற்குமுன் ஆசார்யன் சிறுவனுக்கு யஜ்ஞோப வீததாரணே (பூணூல் தரித்தல்) கௌபீனம் (கோவணம்) நூதன வஸ்த்ரம் இவற்றை தரித்தல், இடுப்பில் தர்ப்பப் புல்லேக் கயிராகத்திரித்து மூன்று சுற்றுள்ள அரை நாணுக தரித்தல், கிருஷ்ணுஜினம் (புள்ளிமான் தோல்) தரித்தல் ஆகிய இவற்றை அடையாளங்களாக அந்தந்த மந்த்ரங் களுடன் ஏற்படுத்திய பின்னர் ஆசார்யனுக்கும் சிஷ்ய னுக்கும் சில ப்ரசிேனுத்தரங்கள் (வினு விடைகள்) ஆன பிறகு ஆசார்யன் சிஷ்யன் பேரில் ஜலத்தை ப்ரோக்ஷித்து அவன் ஹ்ருதயத்தின் மேல் கையை வைத்துக்கொண்டு "உன் மனத்தை எனது ஆஜ்ஞைக்குட்படுத்துகிறேன். உன் மனம் என் மனதைத் தொடரட்டும். நீ என் வார்த்தையில் பூர்ண விசுவாஸத்துடன் ஸந்தோஷிப்பாயாக" என்ற விதி வாக்யங்களேச் சொல்லி, பிருமோபதேசம் செய்து புரசு, அல்லது அரசு, அத்தி முதலிய தண்டங்களேக் கொடுக்கிறுன். அதன்பின் சிறுவன் பிரம்மசாரியாகிறுன். அவன் மூன்று இழைகளும் மூன்று முடிப்புகளுமுள்ள பூணூல் (பூணும் நூல்) தரித்தல் மனம், வாக்கு, காயம் என்ற மூன்றையும் அடக்கி யாளவேண்டும் என்பதற்கு அறிகுறி. கௌபீனம் தரித்தல், இந்திரியத்தை அடக்கி ஆளவேண்டுமென்பதற்கு அறிகுறி. புது வஸ்த்ரம் தரித் தல் புது ஜன்மம் வந்ததற்கு அறிகுறி. மூன்று சுற்றுக ளுள்ள அரைநாண் தரித்தல், வேதத்திலுள்ள கர்ம காண் டம், உபாஸனுகாண்டம், ஜ்ஞானகாண்டம் ஆகிய மூன்றை யும் தழுவி இருப்பதற்கு அறிகுறி. கிருஷ்ணுஜிநம் தரித் தல், மான் போன்று சாந்தகுணமுடையவனுக இருப்ப

தற்கு அறிகுறி. தண்டம் தரித்தல் காமம், கோபம் இவற்றை அடக்குவதற்கு அறிகுறி.

நான்குவேத விரதங்கள் என்பன பிரம்மசாரி குரு குலத்தில் வேதங்களை ஸாங்கோபாங்கமாய் (அவற்றின் அங்க உபாங்கங்களுடன்) அத்யயனம் செய்த பிறகு தன் னாலியன்ற குரு தக்ஷிணை கொடுத்து குருவினது அநுமதி பெற்று விவாஹம் செய்துகொள்வதற்கு முன் பிரம்ம சர்ய விரதத்தை ஸமாப்தி செய்துகொள்வதற்காக அநுஷ் டிக்கப்பெறும் ப்ராஜாபத்யம், ஸௌம்யம், ஆக்னேயம், வைசுவதேவம், என்று கூறப்படுவனவாம். இந்நான்கிற் கும் சேர்ந்து ஸமாவர்த்தனம் (பிரம்மசர்யத்திலிருந்து திரும்புதல்) என்று பெயர். விரத ஸ்நாநம் என்பது முற் கூறிய நான்குவிரதங்களைத் தனித்தனி உபக்ரம (ஆரம்பம்) உத்ஸர்ஜன (முடிவு) ங்களுடன் செய்து ஸம்பூர்ணமான பிறகு வைதிக மந்த்ர பரிசுத்தமான கும்பங்களிலுள்ள தீர்த்தத்தால் ஸ்நாநம் செய்தலாம். அவ்விதம் ஸ்நாநம் செய்தவன் ஸ்நாதகன் எனப்படுவான்.

விவாஹமென்பது பர்த்தா, பத்னியையும் பத்னி, பர்த் தாவையும் ஏற்றுக்கொள்ளுதல் என்ற தாத்பர்யமுள்ளது. அதற்கு வகித்துக்கொள்ளுதல் என்று பொருள். முற் கூறிய ஸ்நாதகன் தனது வர்ணத்திலுள்ளவளும் மங்கள குணமமைந்தவளுமான அழகுள்ள ஸ்திரீயை விவாகம் செய்துகொள்ளவேண்டும். விவாக காலத்தில் மாப்பிள்ளை மணப்பெண்ணுடன் சொல்லுகிறதாவது :— "நீ நல்ல குழந்தையைப் பெறுவதற்காக நான் உன் கையைப்

பிடித்துக்கொள்ளுகிறேன்" என்று சொல்லி புமான் ஸ்திரீ யின் கையைப் பிடித்துக்கொள்ளுகிறான். பாணிக்கிரஹ ணம் (கையைப் பிடிப்பது) ரிஷிகள் காலமுதல் விவாகத் தின் முக்ய அங்கமாக நடந்துவருகிறது. அது கிரகஸ்த தர்மத்திலிருந்து ஸம்பாதிக்கப்பெறும் புண்யத்தில் இரு வருக்கும் ஸமபாகமுண்டு என்பதற்கு அறிகுறி. மாங் கல்யதாரணம் (தாலிகட்டுதல்) ஸ்மிருதிகளிற் கூறவிடினும் சிஷ்டாசாரத்தில் வெகுகாலமாக அதுவும் ஒரு முக்ய அங் கமாய் அனுஷ்டிக்கப்பெற்று வருகிறது. அது புருஷன் பெண்ணை அடைக்கலமாக ஏற்றுக்கொண்டதற்கு அறி குறி. பர்த்தா கன்னிகையின் காலை கையாற் பிடித்து ஏழடி வைக்கச்செய்தல் இருவருடைய ஸ்நேகம் உறுதி யாய்விட்டதற்கு அறிகுறி. கன்னிகையின் காலால் பர்த்தா அம்மியை மிதிக்கச்செய்வதில் "சிலைபோன்று நீ உறுதியாக இரு" என்று புருஷன் பெண்ணை வாழ்த்துகிறான். நெற் பொரிகளை அக்னியில் ஹோமம் செய்தல் இருவருடைய நட்பும் மென்மேலும் பெருகிப் பொங்கிக்கொண்டிருக்க வேண்டுமென்பதற்கு அறிகுறி. இருவரும் அக்னியைப் பிரதக்ஷணம் செய்வது "நாம் என்றைக்கும் பரஸ்பரம் துரோக சிந்தையின்றி ஒத்துவாழக் கடவோம்" என்று அக்னி ஸாக்ஷியாக பிரதிஜ்ஞை செய்துகொள்வதற்கு அறி குறி. நமஸ்காரம் செய்தல் அக்னி முதலிய ஸர்வ தேவ தைகளும் தம்பதிகளின் கொள்கைகளை நிறைவேற்றிக் கொடுக்கவேண்டும் என்பதற்கு அறிகுறி. கிரஹப்ரவேச ஸமயத்தில் புருஷன் ஸ்திரீயிடம் "புருஷனான என்னு டன் நீ நீடூழி வாழ்வாயாக. எனது கிரகம் உன் ஸ்வாதீன

மாக இருக்கிறது. அதற்கு நீ அதிகாரியாகவிரு. குடும்ப கார்யங்களை வகித்து ஜாக்ரதையுடன் ஆளு. இதோ இருக்கிற உன் புருஷனை என்னுடன் மக்களைப் பெறு. உன் குழந்தைகளிடம் அன்பு பாராட்டு. வயதுசென்ற உன் பூந்துக்களுடன் நீ பணிந்து பேசுவாயாக" என்று சொல்லுகிறான். அப்போது இருவர்களுக்கும் ஆசீர்வாதமாக சில வேதவாக்யங்கள் சொல்லப்படுகின்றன. அவற்றில் "இங்கே வஸியுங்கள். பிரிவினையின்றி யிருங்கள். பூர்ண ஆயுள் உள்ளவர்கள் ஆகுக. உங்களுடைய கிரகத்தில் புத்திரர்கள் பௌத்ரர்களுடன் கூடி உல்லாசமாக இருங்கள். மணமகள் அன்பையும் இளகிய மனத்தையும் உடையவளாகக் குடும்பத்தில் எல்லோருக்கும் நல்லவளாக இருந்து குடும்பத்தை ஆண்டு ஸந்தோஷத்தைக் கொடுப்பாளாக. அவள் வயிற்றில் தீரர்கள் உண்டாவதாக" என்ற கருத்துக்கள் அடங்கியிருக்கின்றன. விவாகத்திற்குப் பின்ரிஷி, தேவ, பிதிர், பூத, மனுஷ்யர்களைத் திருப்தி செய்கின்ற பஞ்சமகாயஜ்ஞங்கள் என்ற ஸம்ஸ்காரங்கள் கிரகஸ்தாசிரமத்திற்குத் துணையாகச் செய்யவேண்டுவன.

அஷ்டகா, அன்வஷ்டகா, (மாக, பால்குன மாஸங்களது முறையே கிருஷ்ணாஷ்டமி, நவமி) பர்வகாலம் இவைகளிற் செய்யவேண்டிய மூன்று சிராத்தங்கள், சிரவணம், திருவாதிரை, சித்திரை, அசுவனிகளோடு சேர்ந்துள்ள பௌர்ணமிகளிற்செய்யவேண்டிய ஸர்ப்பபலி, ஈசானபலி முதலியன ஏழுபாக யஜ்ஞங்கள். அக்னியாதேயம், அக்னிஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், ஆக்ரயணம், சாதுர்மாஸ்யம், நிரூடபசுபந்தம், ஸௌத்ராமணி என்பன ஏழு

ஹவிர்யஜ்ஞங்கள். அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம், ஷோடசி, வாஜபேயம், அதிராத்ரம், அப்தோர்யாமம் என்பன ஏழு ஸோம ஸம்ஸ்தைகள் (ஸோம லதையைக்கொண்டு செய்யவேண்டிய யாகங்கள்). யஜ்ஞம் என்பதற்கு யாகம் (தேவதைகளை ஸந்தோஷப்படுத்தல்) என்றும், பாகம் என்பதற்கு பக்வம் செய்தல் என்றும், ஹவிஸ் (ர்) என்பதற்கு தேவர்களுக்குக் கொடுக்கப்படும் வஸ்து என்றும் பொருள். கர்ப்பாதானம் முதல் விரதஸ்நாநமீறாகவுள்ளன, ரிஷி ஸம்ஸ்காரங்கள். அவற்றின் பின்னுள்ளன, தேவ ஸம்ஸ்காரங்கள். ரிஷி ஸம்ஸ்காரமுற்றவன் ரிஷிகள் உலகமும், தேவ ஸம்ஸ்காரமுற்றவன் தேவருலகமும் பெறுவான். தேவ ஸம்ஸ்காரங்கள் யாவும் இக் கலியுகத்தில் செய்யப்பெற்றவர்கள் மகான்களாகக் கருதப்படுவார்கள். மற்றவர்களால் இயன்றளவான ஸம்ஸ்காரங்களாவது செய்யப்படவேண்டுவன. கர்ப்பாதானம் முதல் ஐந்து மகாயஜ்ஞங்களீறாகவுள்ளன பதினாறு ஸம்ஸ்காரங்கள் மிக்க அவசியமாவன என்பாருமுளர். முன் சொன்ன ஸம்ஸ்காரங்களைப் பெற்றவர்கள் ஜீவ காருண்யம், பொறுமை, பொறாமையின்மை, சித்தசுத்தி, மனோவிசாலம், பிறரைத் துன்புறுத்தாமை, நற்காரியங்களிற் பற்று, பேராசையின்மை ஆகிய எட்டு நற்குணங்களைப்பெற்று இம்மை மறுமைகளில் இன்பமுறுவார்.

---

## உத்தர ஸம்ஸ்காரம்.

மனிதர் இறந்தபிறகு அவர்கள் நல்ல உலகத்திற்குப் போகத்தடையாகவிருக்கின்ற சிற்சில இடையூறுகளைப்

போக்குவதற்குரிய ஸம்ஸ்காரம் உத்தர ஸம்ஸ்காரம் எனப்படும். மரண ஸமயத்தில் ஜீவன் அன்னமயகோசத்தைவிட்டு பிராணமயம் முதலிய மற்ற கோசங்களில் மாத்திரமிருந்துகொண்டு விலகுகின்றான். முதலில் அன்னமய கோசத்தையே மற்ற கோசங்கள் மருவிச்சேர்ந்துகொண்டிருந்தபடியால் மனிதர்கள் மரணமடைந்தபிறகும் அவர்களின் ஜீவன் அன்னமயகோசமாகிய ஸ்தூல சரீரத்தையே அபிமானித்துக்கொண்டு அதைவிட்டுப்போக மனமில்லாமல் சுற்றிச் சுற்றி வருகிறான். அப்போது ஜீவனுக்கு இவ்வுலகத்தை விட்டு விலகவேண்டிய ஊர்த்துவ கமன (உயர்ந்துபோதல்) த்திற்குத் தடை யுண்டாகிறது. அந்தத் தடையை நீக்கும் பொருட்டே உத்தர ஸம்ஸ்காரம் ஏற்பட்டிருக்கிறது. முதலில் அன்னமய கோசத்தை அழிக்கவேண்டியது முக்ய ஸம்ஸ்காரம். சாந்தோக்ய உபநிஷத்தில் * "மரணமடைந்தவன் முதலில் எங்கே இருந்து உண்டானானோ, அந்த இடத்திலேயே அவனைத் திரும்ப அக்னியின் மூலமாய் புத்ரர் முதலியவர்கள் சேர்ப்பிக்கின்றனர்" எனப்படுகிறது. இதனால் ஸ்தூல சரீரத்திற்கு அக்னியினால் தகனம் செய்யப்படும் ஸம்ஸ்காரம் சிறந்ததாகச் சொல்லப்படுகிறது. ஸந்யாஸிகளுக்கு முன்னமே அன்னமயத்தில் பற்று விட்டுப்போயிருப்பதால் அதை உடனே எரித்து நீற்றுவிடவேண்டிய அவசியமின்மையால் கனன (புதைத்தல்) ஸம்ஸ்கார மேற்பட்டுள்ளது.

மரித்த சரீரத்திற்கு அக்னி வைக்குமுன் கர்த்தா அதை வைத்து தகனம் செய்யவேண்டிய இடத்தை

---

* அத். 5. கண்டம் 9.

மூன்று தரம் சுற்றி வந்து ஒரு மந்த்ரத்தைச் சொல்லிக் கொண்டு ஜலத்தை அந்த இடத்தில் புரோக்ஷிக்கிறான். அதன் பொருள் "போங்கள், விலகுங்கள், இவ்விடத்தை விட்டு வெளியேறுங்கள்" என்பது. இதனால் கர்த்தா அவ்விடமுள்ள பூதங்களை ஓட்டுகிறான். பிரேதம் எரிந்து கொண்டிருக்கையில் "ஓ ஜீவனே! செல்லு, செல்லு, புராதனமான மார்க்கங்களிற் செல்லு" என்று பொருளுள்ள மந்த்ரங்கள் கூறப்படுகின்றன. மரணமடைந்தபின் ஜீவன் மற்ற கோசங்களுடனிருந்துகொண்டு ஸ்தூல சரீரத்தில் வெகு நாட்களாகப் பற்றி இருந்த அபிமானத்தின் வாஸனையை விலக்க முடியாமல் மேலே போவதற்குத் தடைப் பட்டுக்கொண்டிருக்கும்போது, அவனது சுற்றத்தார்களும் அவனை அபிமானித்து சோகத்தினால் அழுவார்களானால் பலநாட்களாகப்பற்றியிருந்த அவர்களிடமுள்ள அபிமான வாஸனையை முற்றும் துறந்து மேற்போக ஜீவன் மிகவும் தடையுற்றவனாவான். ஆதலால் சுற்றத்தார் மரித்தவனைப் பற்றி சோகத்தை வெளியிடுவது அவனது மேல்நோக்கத் திற்கு இடைஞ்சலாக இருப்பதை உணர்ந்து தங்களால் கூடியமட்டில் சோகத்தையடக்கி தைர்யத்தைக் கைப்பற்று வதே சிறந்த கார்யமாகுமென அறியவேண்டும். மேலும் "பழைய வஸ்திரத்தைக் களைந்து புது வஸ்திரம் தரிப்பது போன்றும், பால்யம் நீங்கி யௌவனம் அடைவது போன் றும் ஜீவன் ஒரு சரீரத்தைவிட்டு மறு சரீரம் பெறுகிறான்" என்ற மரணத்தின் உண்மையை அறிந்தவர்கள் சோகப் படவேண்டிய அவசியமில்லை. உற்சாகத்துடன் அவனது மேல் நோக்கத்தைக் கருதி அதற்கு வேண்டிய முறைகளை

சாஸ்திரப்படி அனுஷ்டிக்க வேண்டும். தகனத்தின் மறு தினம் அல்லது மூன்றாம்நாள் மரித்த சரீரத்தின் அஸ்தி கள் (எலும்புகள்) சேர்க்கப்பட்டு பூமியில் புதைக்க அல் லது ஓடுகிற ஜலத்தில் போட அன்னமயகோசம் சிதறுண்டு பொய்த்துப் போகிறது. அதன்பிறகு ஜீவனை பிதிருக்கள் கோஷ்டியில் சேர்ப்பிக்கவும் சேர்ந்த பின்னும் செய்ய வேண்டிய சில சிராத்தங்கள் இதன்பின் கூறப்படும்.

## ஐந்தாம் அதிகாரம்.

## சிராத்த தர்மம்.

நமது முன்னோர்களாகிய பெரியோர்களிடத்தும் ஜ்ஞான திருஷ்டியுள்ள நமது மகர்ஷிகள் வாயிலாக வந்த சாஸ்திரங்களிடத்தும் நிறைந்த நம்பிக்கையினால் மரண மடைந்த மாதா, பிதா முதலியவர்களைக் குறித்து புத்தி ரன் முதலியவர்களால் சாஸ்திரங்களிற் கூறிய சில தினங் களிற் செய்யப்படும் வைதிகமான ஒருவித கர்மம் "சிராத் தம்" எனப்படும். அதற்கு சிரத்தையுடன் செய்ய அல் லது கொடுக்கப்படுவது என்று பொருள். குரு, வேதாகம சாஸ்திரங்கள் இவைகளிடம் உள்ள நம்பிக்கை சிரத்தை எனப்படும். சிராத்தத்திற்குரிய தர்மம் சிராத்த தர்மமாம்.

### சிராத்தம் பிதிருக்களைச் சேரும் முறை.

வேத சாஸ்திரங்களிற் கூறிய வைதிக கர்மங்கள் யாவுமே சிரத்தையுடன் செய்ய வேண்டுவனவாயிருக்க

இதற்கு மாத்திரம் சிராத்தம் என்ற குறிப்பிட்ட பெயர் வைக்கக் காரணமென்ன? என்பதை நாம் இங்கு ஆராய வேண்டும். இதில் வேத சாஸ்திரங்களில் நம்பிக்கை இல்லாத மதஸ்தர்கள் கூறும் ஆக்ஷேபங்களாவன :—1. மரணமடைந்தவர்கள் அவரவர் வினைப் பயனுக்குத் தக்கவாறு வேறு ஜன்ம மடைவதாகக் கூறுவதால் நாம் அவர்களைப் பற்றி சிராத்தத்தில் கொடுக்கப்படும் வஸ்து அவர்களை எவ்விதம் சாரும்? 2. மரித்தவர்களை உத்தேசித்து சிராத்தத்தில் கொடுக்கப்படுவது அவர்களிடம் போய்ச் சேருவதானால் அயலூருக்குப் போகின்றவனுக்கும் சிராத்தம் செய்துவிடலா மாதலால் அவன் வழியில் சாப்பிடுவதற்காக ஆகாரம் எதற்குக் கொண்டுபோக வேண்டும்? 3. ஸ்வர்க்கத்திலுள்ளவர்களும் சிராத்தத்தினால் புசித்து திருப்தி யடைவார்களானால் நமது வீட்டின் மேடையிலுள்ளவர்களையும் சிராத்தத்தினாலேயே ஏன் புசிப்பிக்கக் கூடாது? இவை போன்ற பல ஆக்ஷேபங்கள் சாஸ்திரக் கருத்தை ஆராயாத நம்மவர்களின் மனத்திலும் ஸந்தேக ரூபமாக எழும்பிக்கொண்டிருக்கின்றன. இவற்றிற்கெல்லாம் ஸமாதானம் நமது சாஸ்திரங்களின் மூலமாய்த் தெரிந்துகொள்ள வேண்டுவதும் அப்படித் தெரிந்ததில் பின்னும் ஸந்தேக முறாமல் சாஸ்திர விதிகளில் முற்றும் நம்பிக்கையினாலேயே சிராத்தம் நடத்தவேண்டுவதும் எவ்வகையிலும் அது விடக்கூடாதது பற்றி அதற்கே அப் பெயர் குறிப்பாகவும் சிறப்பாகவும் ஏற்படுத்தலாயிற்று.

முற்கூறிய ஸந்தேகங்கட்கு ஸமாதானங்களாவன:— மரித்தவர்கள் வினைப்பயன்படி பெற்ற ஜன்மம் நாமறியா

விடினும் அவர்களுக்கு பிதிருக்கள் என்றே பெயர். அவர்கள் மறு ஜன்மத்தில் மனிதர்களாகவோ தேவர்களாகவோ பசு, பக்ஷி முதலியனவாகவோ பிறந்து இருக்கலாம். மனுஸ்மிருதியில் ‡ "பிதிருக்களை உத்தேசித்து சிராத்தத்தில் நாம் கொடுப்பதை ஸோமஸதர், அக்னிஷ்வாத்தர், பர்ஹிஷதர், ஸோமபர், ஹவிர்புஜர், ஆஜ்யபர், ஸுகாலினர் என்ற அந்தந்த வர்ணங்களுக்குரிய பலவகையான பிதிரு தேவதைகள் (பிதிருக்களிடம் வஸ்துக்களை சேர்ப்பிக்கின்ற தேவதைகள்) பலவகையான ஜன்மம் பெற்ற பிதிருக்களின் ஜன்மத்திற்குத் தக்க ஆகாரமாக (தேவர்களானால் அமிருதமாகவும் மனிதர்களானால் அவர்களுக்குரிய அன்னமாகவும் திர்யக் ஜந்துக்களானால் புல் பூண்டு முதலியனவாகவும்) மாற்றி அவர்களிடம் சேர்ப்பிக்கின்றார்கள்" என்று கூறப்படுகிறது. அதனால் பிதிருக்கள் தாங்கள் எடுத்த அந்த ஜன்மத்தில் ஆகாரத்திற்கு குறைவின்றி ஸுகமாய் ஜீவனம் செய்கிறார்கள். அது ஸூக்ஷ்ம ரூபமாய் நடப்பதால் அதனை நாம் எல்லோரும் ஸ்தூலமாய் அறிந்துகொள்ள முடியாது. பிதிரு தேவதைகள் தேவதாஸ்வரூபமாக இருப்பதால் அவர்கள் அதை ஸூக்ஷ்மமாய் நடத்த ஈசுவரன் அவர்களுக்குப் பல ஸித்திகளைக் கொடுத்திருக்கிறான். பிறப்பில்லாத பிரம்ம ஸ்வரூபம் பெற்ற பிதிருக்களுக்கும் நாம் சிராத்தம் செய்வதால் ஆகார அபேக்ஷையில்லாத அவர்கட்குக் கொடுக்கப்பட்ட சிராத்த வஸ்துவை பிதிரு தேவதைகள் சிராத்தம் செய்தவனுடைய ஆகாரமாக மாற்றித் திரும்ப அவனிடம்

---

‡ அத். 3. சுலோ. 195, 196, 197.

கொடுத்து விடுவதால் அவன் ஸகல போகபோக்யங்களை யும் அனுபவிக்கக்கூடிய அன்னபானாதிகளுடன் நிறைந்த ஐசுவர்யமுள்ளவனாகிப் பிறகு மோக்ஷமடைகிறான்.

நாம் அன்ய தேசத்திலுள்ள ஒருவனுக்கு அனுப்ப வேண்டிய ரூபாய் தபாற் கூட உத்தியோகஸ்தரிடம் செலுத்தின பிறகு அதுவே பெற்றுக்கொள்ளவேண்டிய வன் உள்ள தேசத்தில் வழங்கும் நாணயமாக மாற்றிக் கொடுப்பிக்கப்படுவதும், அவன் அங்கு இல்லையானால் அது அனுப்பினவனுக்கே திரும்பிவந்துவிடுவதும், அதை அவன் தான் கொடுத்த நாணயமாகவே பெற்றுக்கொள்ளாமல் பலவிதமான நாணயங்களாக மாறிப் பெற்றுக்கொள்ளுவ தும் தற்காலம் நமது அனுபவத்தில் தெரிந்திருக்கிறது. இவ்விதமாக ஜனங்களைக் காப்பாற்ற ஒருவித ஸௌகர்ய மான உபாயம் ஒரு நாட்டு அரசன் புத்தியிற்றோன்றி நடத்தப்படுமானால், பல உலகங்களுக்கும் அரசனாக விளங்கும் பகவான், ஸ்ருஷ்டி யாரம்பமாகிய பண்டை கால முதலே பல ஜன்மம் பெற்ற பிதிருக்கள் என்றப் பிராணிகளைக் காப்பாற்ற பலவகையான பிதிரு தேவதை கள் மூலமாய்ப் பிராணிகளின் பரஸ்பர ஸகாயத்தை முற் றப் பெறும்படி செய்வது முடியாத கார்யமாகுமா? "சிராத்தம் செய்யவேண்டும்" என்று நமது சாஸ்திரங்க ளில் வரைந்து வைத்திருக்கும் முக்கால முணர்ந்த முனி வர்கள் கூறிய பல விஷயங்களைப்பற்றின வாக்யங்கள், நமக்கு உண்மையாகவும் உபயோகமாகவும் ஏமாற்ற மில் லாதனவாகவும் எட்டி ஆலோசித்தால் எல்லாமே நன்மை யைப் பயக்கத்தக்கனவாகவு மிருக்கும்போது சிராத்த

விஷயத்திலும் நாம் பூர்ண நம்பிக்கை யுள்ளவர்களாகவே இருக்கவேண்டும். மரித்தவர்களுக்கு சிராத்தத்திஞல் ஸகாயம் செய்யவேண்டுமென்றும், அதில் அவர்கட்குக் கொடுக்கப்படுவதை அவர்களிடம் ஒழுங்காய்ச் சேர்ப்பிக்கவேண்டிய கட்மைதான் பிதிரு தேவதைகளுக்கு ஏற்பட்ட அதிகாரம் என்றும், ஸர்வ வல்லமையுள்ள பகவான் சாஸ்திர மூலமாய் ஒரு சட்ட முண்டாக்கி யிருக்கிருர். அப்படியிருக்க உயிருடனிருந்துகொண்டு அயலூருக்குப் போனவனுக்கும் வீட்டு மாடியிற் போய் உட்கார்ந்திருப்பவனுக்கும் சிராத்த வஸ்துவை ஏன் சேர்ப்பிக்கக்கூடாது? என்ற ஆக்ஷேபம் செய்கிறவர்கள், தபாற் கூட உத்தியோகஸ்தர் சட்டப்படி தகுதியில்லாதவர்களுக்குநாணயத்தைச் சேர்ப்பிக்கமாட்டார் என்ற அவரது கடமை யறியாதவர்களாகின்றனர். அரசஞல் நியமிக்கப்பட்டவர் அவன் இடாத ஆணையை அனுவசியமாய் ஏன் செய்வார்? ஆஞல் கடவுள் ஏன் அவ்விதமும் சட்டம் செய்யவில்லை? என்று கேட்க அற்ப அறிவினர்களான நாம் அதிகாரிகளல்ல. தகப்பன் செய்கின்ற நன்மைகளைக் குழந்தைகள் பெற்றுக் கொள்ள வேண்டுமேயல்லாது நன்மை யல்லாதவற்றையும் நன்மையாக நினைக்கக்கூடிய சிற்றறிவுள்ள குழந்தைகளின் யோசனையின்படி தகப்பன் நடக்க வேண்டியது அவசியமா? என்பதை யோசித்துப்பார்க்கவேண்டும்.

---

## சிராத்தத்தின் பிரிவுகள்.

நம்மால் பார்க்கப்படும் ஸ்தூல சரீரத்தினின்றும் ஜீவாத்மா வெளிக்கிளம்பி யாதஞ (துன்பமனுபவிக்கத்

தக்க) சரீரத்திற் பிரவேசித்தல் மரணமெனப்படும். அப்படி மரணமடைந்தவர்களின் ஸ்தூல சரீரத்தில் அக்னியை வைத்தபின் அதில் குடியிருந்த ஆத்மா ஐந்து ஜ்ஞானேந்த்ரியங்கள், ஐந்துகர்மேந்த்ரியங்கள், ஐந்து வாயுக்கள், மனம் ஆகிய பதினாறும் சேர்ந்த லிங்க சரீரமென்ற ஸூக்ஷ்ம சரீரத்துடனும், அவித்யை என்ற காரண சரீரத்துடனும் யாதனா சரீரத்திலிருந்துகொண்டு முன் தனது ஸ்தூல சரீரத்திற்பற்றின அபிமானத்தால் அது முன் இருந்த இடத்தைவிட்டுப் போகப்பிரியமின்றி ப்ரேதரூபமாய் அங்கேயே பத்து, பதினைந்து நாட்கள் வரை சுற்றிக்கொண்டிருக்கிறான். ஆதலால் ப்ரேத கர்மம் செய்கிற கர்த்தா அதன் ஸ்தூல சரீரத்திற்குப்பதிலாய் ஒரு சிலையை அங்கே புதைத்து அதனிடம் அந்த ப்ரேதத்தை ஆவாகனம் செய்யவேண்டும். அந்த ப்ரேதம் அப்போது வஸ்திரமில்லாமலும் மிகுந்த பசிதாகத்துடனும் இருள் சூழ்ந்ததாகவுமிருப்பதால் அதற்கு அவ்விதமான கஷ்டங்களை நீக்க உடன் நக்ன (வஸ்திரமில்லாதவனுக்குரிய) சிராத்தம் செய்யவேண்டும். அதில் வரித்த பிராமணனுக்கு வஸ்திரம், தீபம், தண்டுலம் முதலியன தக்ஷிணையுடன் கொடுக்க வேண்டும். கர்த்தா முதல்நாளன்று மூன்று தர்ப்பணங்களும், இரண்டாம்நாள் முதல் ஒவ்வொரு தர்ப்பணமாக அதிகமாக்கி பத்தாம்நாள் பன்னிரண்டு தர்ப்பணங்களும், எல்லாமாக எழுபத்தைந்து தர்ப்பணங்களும் அக்கணக்கின்படி* ஒவ்வொருநாளும் ஏகோத்தரவிருத்தி (ஒவ்வொன்று மேன்மேல் அதிகமான) சிராத்தங்களும் பிரேதத்தின் பசிதாக மடங்கச் செய்யவேண்டும். முதல்நாள் முதல்

பதினேரும்நாள் வரை ஒற்றைப்பட்ட தினங்களாகிய ஆறு நாட்களில் ஆறு நவ (புதிதான) சிராத்தங்கள் ப்ரேதத்திற்கு குளிர், காற்று, உஷ்ணம் இவையடங்கச் செய்ய வேண்டும். இவற்ருல் ப்ரேதம் வஸ்திரம் கட்டிக்கொண்டு வெளிச்சமுற்று பசி, தாகம், சீதம், உஷ்ணம் முதலியன அடங்கினதாக ஆகிறது. இந்த சிராத்தங்கள் க்ரூரத்தன்மையினுல் அன்ன ரூபமாக நடத்தக்கூடாமையால் ஆம ரூபங்களாகவே நடத்தப்படுகின்றன. பதினேரும் தினத்தில் ப்ரேதத்தை உத்தேசித்து ஏகோத்திஷ்ட (ஒருவனை உத்தேசித்த) சிராத்தம் அன்ன ரூபமாகவே செய்யவேண்டும். அப்போது மரித்தவன் ப்ரேதத்தன்மை நீங்கி பிதிருத்தன்மை யடைய வித்தனுகிருன்.

பிறகு அவனுக்குப் பன்னிரண்டு மாஸங்களில் பதினுறு மாஸிக சிராத்தங்கள் செய்யவேண்டும். ஒவ்வொரு மாஸத்திற்கு ஒவ்வொரு மாஸிகமும் பன்னிரண்டு மாஸங்களில் அவ்வப்போது நான்கு ஊன (குறைவுக்கான) மாஸிகங்களும் ஆக பதினுறு மாஸிகங்கள் செய்து அதன் பிறகு பிதிருத்தன்மையுற்றவனை நமது முந்தின பிதிருக்களுடன் சேர்ப்பிக்க வர்ஷ முடிவில் ஸபிண்டீகரண சிராத்தம் செய்து வர்ஷ சிராத்தம் செய்யவேண்டும். அதன் பிறகு ப்ரதி வர்ஷமும் சிராத்தம் செய்தால் போதும். ஏனெனில் பிதிருத் தன்மை பெற வித்தனுக இருப்பவனுக்கு நமது ஒரு மாஸம் ஒரு நாள். மற்ற பிதிருக்களுடன் சேர்ந்து பிதிரு ரூபமாக இருப்பவனுக்கு நமது ஒரு வருஷம் ஒரு நாள். தற்காலம் கர்த்தா ஒரு வருஷம் வரை உயிருடனிருப்பதைப்பற்றி ஸந்தேகித்து ஸபிண்டீ

கரணம் (புதிய பிதிருவை பழைய பிதிருக்களுடன் சேர்ப்பிப்பது) முக்யமாதலால் அவன் மரித்த பன்னிரண்டாவது நாளில் பதினாறு மாஸிகங்களுக்குப் பதிலாய் ஷோடசம் (பதினாறுள்ளது) என்ற சிராத்தம் ஆமரூபமாயும் ஸபிண்டீகரணம் அன்னரூபமாயும் செய்யப்பட்டு மரித்தவனின் கிரியை பூர்த்தியாக்கப்படுகிறது. இதனை சூத்திரர் பதினாருவது நாளில் அவரது முறைப்படி செய்யவேண்டும். பிறகு கர்த்தா உயிருடனிருந்தால் அவ்வக்காலங்களில் மாஸிகங்களையும் வர்ஷமுடிவில் ஆப்திகம் (வர்ஷத்திற் செய்வது) என்ற சிராத்தத்தையும் அன்னரூபமாகச் செய்யவேண்டும்.

முற்கூறிய ஏகோத்திஷ்டம், ஸபிண்டீகரணம் முதலிய சிராத்தங்களினால் மரணமடைந்தவர்கள் முந்தின பிதிருக்களுடன் சேர்ந்தபிறகு அவர்களைக் குறித்து "பார்வணம்" (குறிப்பிட்ட தினத்திற் செய்யப்படுவது) என்ற சிராத்தம் செய்யவேண்டும். அது மூன்று பிதிருக்களை உத்தேசித்து செய்யப்படுகிறது. அதைப்பற்றி பின் விரிவாக விவரிப்போம். அந்த சிராத்தம் நித்யம், நைமித்திகம், காம்யம் என மூவகைப்படும். மரித்தவர்களின் திதி, ஸங்க்ரமம், (மாஸப்பிறப்பு) அமாவாஸ்யை முதலிய காலங்களில் செய்யப்படும் சிராத்தம் நித்யம் (அவ்வக்காலங்களில் தவராமல் செய்யக்கூடியது). சந்த்ரஸூர்ய கிரஹணம் முதலிய காலங்களிற் செய்யப்படும் சிராத்தம் நைமித்திகம் (நிமித்தத்தினாலாவது). புண்யமான சில திதி வார நக்ஷத்திர யோகங்களின் சேர்க்கை, வ்யதீபாதம், யுகாதி, மன்வாதி முதலிய மகா யோகங்களிற் செய்யப்படும் சிராத்தம் காம்-

யம் (விரும்பிச்செய்யப்படுவது). இம்மூன்றுள் நித்யமும் நைமித்திகமுமான சிராத்தங்களைக் கட்டாயம் செய்ய வேண்டும். அப்படிச் செய்யாதவன் பதிதனாய்விடுவான். உலக ஸம்பத்தை விரும்பி காம்ய சிராத்தம் செய்கிறவனுக்கு அவனது இஷ்டம் நிறைவேறுகிறது. அப்படியின்றி அதன் பலனை ஈசுவர அர்ப்பணம் செய்கிறவனுக்கு சித்தசுத்தி யுண்டாகி அஜ்ஞானம் விலகி ஜ்ஞானோதயமாய்ப் படிப்படியாக மோக்ஷம் ஸித்திக்கிறது. ஆதலால் காம்யத்தை அவ்விதமாகச் செய்வது சிலாக்யம். ஆனால் அதைச் செய்யாதவன் பதிதன் ஆகமாட்டான்.

சிராத்தம் அன்னரூபம், ஆமரூபம், ஹிரண்யரூபம் என்று மூன்று விதம். பதார்த்தங்களை பக்வம் செய்து தக்ஷிணையுடன் கொடுப்பது அன்னரூபம். பதார்த்தங்களை பக்வம் செய்யாமல் தக்ஷிணையுடன் கொடுப்பது ஆமரூபம். தக்ஷிணை மாத்திரம் கொடுப்பது ஹிரண்யரூபம். அதனால் அவற்றிற்கு முறையே அன்ன (புசிக்கக்கூடிய) சிராத்தம், ஆம (பக்வமில்லாத) சிராத்தம், ஹிரண்ய (பொன்வடிவமான) சிராத்தம் எனப் பெயர்களுள்ளன. பிதிருக்கள் மரித்த திதிகளில் பிராமணர் எவ்விதத்திலும் கட்டாயம் அன்ன சிராத்தமே செய்து தீரவேண்டும். மற்றவர் அவரவர் முன்னோர் வழக்கப்படி சாஸ்திரங்களிற் கூறிய சிராத்தங்களைச் செய்யவேண்டும். பிதிருக்கள் மரித்த திதியல்லாத மற்ற அமாவாஸ்யை முதலிய பிதிரு தினங்களில் அன்ன சிராத்தம் செய்ய ஸௌகர்யமும் சக்தியுமில்லாதவர்கள் ஹிரண்யசிராத்தமாவது அதற்கும் முடியாவிடின் தீர்த்தத்தில் தில (எள்ளுடன் கூடின) தர்ப்

பணமாவது செய்யவேண்டும். பிறகு மரண திதிகளில் சிராத்தம் செய்ய சக்தியில்லாமற்போனால் பிச்சை எடுத்தாவது அதைச் செய்யவேண்டும். உண்மையில் சிராத்தம் செய்ய ஸௌகர்யமும் சக்தியுமில்லாதவர்களுக்கு பொருள் முதலியவற்றால் சிராத்தத்தை நடத்திக் கொடுக்க சக்தியுற்றவர் அதை நடத்திக்கொடுத்தால் மிகுந்த புண்யம் பெறுவார் என்றும் அப்படிச் செய்யாவிடின் பாபம் பெறுவார் என்றும் நமது சாஸ்திரங்கள் முறையிடுவன.

சிராத்தத்தில் ஹோமம் செய்தல், பிராமணர்களைப் பூஜித்துப் புஜிப்பித்தல், விகிர (உதிர்ந்த) அன்னத்தை பிதிருகளுக்கு நிவேதனம் செய்தல், பிண்டதானம் செய்தல் இந்நான்கும் அங்கி (அங்கத்துடன்கூடினவை) களாம். மற்ற மந்த்ர தந்த்ரங்கள் அவற்றின் அங்கங்களாம். சிராத்தத்தை அதன் அங்கங்களுடன் பூர்ணமாய் நிறைவேற்ற வேண்டும். சிராத்தம் செய்தால் அதன் அங்கமாகத் தர்ப்பணமுஞ் செய்ய வேண்டும். பிதிரு மரண திதிகளில் கிரஹணம் வந்தால் அன்று ஆமரூபமாயாவது ஹிரண்ய ரூபமாயாவது சிராத்தம்செய்துவிட்டு உபவாஸம்(பட்டினி) இருந்து மறுநாள் அன்னரூபமாய் சிராத்தம் செய்வது உத்தமம். அல்லது கர்த்தா அன்று பட்டினி இருந்தாவது மறுநாள் சிராத்தம் செய்ய வேண்டும். அத்திதிகளில் ஆசௌசம் (சுத்தியின்மையாகிய தீண்டாமை) நேரிடின் அது கழிந்த தினத்தில் சிராத்தம் செய்யவேண்டும். பிதிரு மரண திதியை மறந்துபோனவர்கள் ஞாபகம் வந்தவுடன் முறைப்படி சிராத்தஞ் செய்யவேண்டும். கிரகத்தில் நடக்கும் உபநயனம், விவாகம் முதலிய சுபகார்யங்கள் நன்று

முடிவுபெறுமாறு முதலில் நாந்தீ சிராத்தத்தினால் நாந்தீ முக தேவதைகளின் மூலமாய் பித்ருக்களை திருப்திசெய்ய வேண்டும். முக்யமான இவற்றுடன் மஹாலய சிராத்தம் முதலிய வேறு சில சிராத்தங்களுமுள.

---

## சிராத்தம் பெரும்பாலும் செய்யவேண்டிய முறை.

சிராத்தத்தில் திருப்தி செய்விக்கவேண்டியவர்களான பிதா (தகப்பன்) பிதாமஹர் (பாட்டன்) ப்ரபிதாமஹர் (பாட்டனது தகப்பன்) இவர்களையும், மாதா (தாய்) பிதாமஹி (பாட்டி) ப்ரபிதாமஹி (அவளது மாமியார்) இவர்களையும் முறையே வஸு, ருத்ரர், ஆதித்யர் என்று பெயர்கொண்ட மூன்று தேவதைகளாகப் பாவித்து அவர்களை வரிக்கப்பட்ட பிராமணர்களிடம் ஆவஹனம் செய்ய வேண்டும். அம்மூவரும் பித்ரு தேவதைகளுள் அடங்கினவர். உடனே பித்ரு தேவதைகள் அவர்களிடம் ஸாந்நித்யமாகி அவர்களை உபசரித்து உண்பிப்பதால் திருப்தியடைந்து அவ்வுணவை பித்ருக்களிடம் சேர்ப்பிப்பார். சிராத்த விஷயத்தில் ஒருவன் மூன்று தலைமுறை வரைதான் பித்ருக்களுக்கு அன்னமிட்டு பிண்ட தானத்தினால் திருப்தி செய்விக்கவேண்டிய ஸம்பந்தத்தைக்கடமையாகக் கொண்டவன் என்று சாஸ்திர மியற்றியவர்கள் விஸ்தாரப்படுத்தி யிருக்கின்றனர். அதன் பிறகு மூன்று தலைமுறை வரையுள்ள பித்ருக்கள் பிண்டத்தின் லேப (பசை)த்தை மாத்திரம் அடைகிறார்கள் எனப்படுகிறது. மூன்று பித்ருக்களையும் தனித்தனியே மூன்று பேர்களிடமும்

மூவர் கிடைக்காவிடில் சேர்த்து ஒருவரிடமும் ஆவாகனம் செய்ய வேண்டும். இது பிதிருஸ்தான மெனப்படும். பிதிருக்களை உத்தேசித்து கொடுக்கப்படும் ஆகாரத்தை அஸுரர், ராக்ஷஸர் பிடுங்கிக்கொள்ளாமல் அந்த பிதிரு தேவதைகளுக்குக் காவலாயிருந்து காப்பாற்ற புரூரவர், ஆர்த்திரவர் என்ற இரண்டு விசுவ தேவர்களை தனித்தனி இருவர்களிடமும் கிடைக்காவிடில் சேர்த்து ஒருவரிடமும் பிதிரு ஸ்தானத்துக்கு முன்னமே ஆவாகனம் செய்ய வேண்டும். இது விசுவதேவ ஸ்தான மெனப்படும். சிராத்தம் ஸரியாய் நடைபெறும்படி அதனைக் காப்பாற்ற விஷ்ணு ஸ்தானத்தை அவரவர் வழக்கம்போல் பிராமணரிடமாவது கூர்ச்சத்தினிடமாவது ஸாளக்கிராம சிலையினிடமாவது ஆவாஹிக்க வேண்டும். இவ்விதமாக சிராத்தத்திற்கு ஆறு அல்லது மூன்று பிராமணர்கள் அவசியம் வேண்டும். கிடைக்காவிடில் இருவர்கள் அவசியம். ஒருவர் கிடைத்தால் அவரை பிதிருஸ்தானமாக வைத்துக் கொண்டு மற்றதை கூர்ச்சத்தினிடம் ஆவாகித்துக்கொள்ள வேண்டும். ஒருவர் கூட இல்லாமல் மூன்று ஸ்தானமும் கூர்ச்சத்தில் ஆவாகனம் செய்வது கூடாதாகையால் ஒருவரையாவது தேடிப்பிடித்து சிராத்தத்தில் அவரை வரிக்க வேண்டும். ஏனெனில் பகவான் எங்கும் வியாபித்திருந்த போதிலும் ஸாளக்கிராமம், பாணலிங்கம் முதலிய சிலைகளில் சுட்டிக்காட்டும் நிலைமையாய் வஸிப்பதாக சாஸ்திரம் கூறுவதுபோன்று சிராத்தத்தில் பிதிரு தேவதைகள் பிராமணர் மூலமாய் வரிக்கப்பட்டால்தான் அங்கு ஸான்னித்யமாகின்றார்கள் என்று கூறப்படுகிறது. அவ்விதமா

கச் செய்யும்போது "அக்னியும் பிதிரு தேவதைகளும் சிராத்தத்தில் கொடுக்கப்படுவதை சிராத்த உத்தேசியர்களுக்குச் சேர்ப்பிக்கிறார்கள்" என்ற சாஸ்திர விதியை நாம் உல்லங்கனம் செய்யாமல் அங்கீகரிக்க வேண்டும். அக்னியில் பிதிருக்களை உத்தேசித்து அன்னத்தை ஹோமம் செய்வதும், பிராமணர்களை புஜிப்பிப்பதும், அதன்பிறகு அவர்கள் முன்னிலையில் விகிரம் என்ற உதிர்ந்த அன்னத்தை நிவேதனம் செய்வதும், அதன் பிறகு பிண்டதானம் செய்வதுமாகிய நான்கு கிருத்யங்களும் பிதிருக்களை திருப்திசெய்ய முக்ய கார்யங்களாம். அக்னியில் ஹோமம்செய்வதால் தேவலோகத்திலிருப்பவர்களும், பிராமணர்களை புசிப்பிப்பதால் மற்ற புண்யலோகத்திலிருப்பவர்களும், பிண்ட தானத்தினால் யமலோகத்திலிருப்பவர்களும் விகிர அன்னத்தினால் நரகத்தில் இருப்பவர்களுமான பிதிருக்கள் திருப்தியடைகிறார்கள். பிதிருக்களின் முந்தின பெயர்களைச்சொல்லி நாம் கொடுப்பதை பிதிருதேவதைகள் யோக வித்தியால் அறிந்து அவர்களிடம் சேர்ப்பிக்கின்றார்கள்.

நாந்தீ சிராத்தத்தில் ஸத்ய, வஸு என்ற விசுவ தேவஸ்தானத்தில் இரண்டு, மாதிருவர்க்கத்தில் இரண்டு, பிதிருவர்க்கத்தில் இரண்டு, பத்னியுடன் கூடின மாதாமஹ (தாயின் தகப்பன்) வர்க்கத்தில் இரண்டு, விஷ்ணு ஸ்தானத்தில் ஒன்று ஆக ஒன்பது ஸ்தானங்களை ஒன்பது பேர்களிடம் ஆவாகிக்கவேண்டும். சிரத்தையும் சக்தியுமுள்ளவர் மூன்று வர்க்கங்களுக்கும் தனித்தனியாய் விசுவதேவஸ்தானத்தில் இருவர் வீதம் பதிமூன்று பேர்க

ளிடம் அந்த ஸ்தானங்களை ஆவாஹிப்பார்கள். சிரத்தை சக்திகளில் மிகச்சிறந்தவர் மாதிரு பிதிரு மாதாமஹ வர்க்கங்கள் ஆகிய மூன்றிலுமுள்ள ஒன்பது ஸ்தானங்களுக்குத் தனித்தனியாய் இருவர் வீதம் பதினெட்டு பேர்களாக்கி பாக்கி ஏழுபேர்களுடன் சேர்த்து இருபத்தைந்து பேர்களிடம் முற்கூறிய ஸ்தானங்களை ஆவாஹிப்பார்கள். நாந்தீ (மங்கள) சிராத்தம் சிலர் அன்ன ரூபமாகவும் சிலர் ஆம ரூபமாகவும் சிலர் ஹிரண்ய ரூபமாகவும் செய்வார்கள். முறையே பிந்தியதைவிட முந்தியது சிறந்தது.

---

## சிராத்தத்தில் வரிக்கத்தக்கவர்.

சிராத்தத்தில் புஜிக்க வேத சாஸ்திர அத்யயனம் செய்தவர்களையே வரிக்கவேண்டும். கிடைக்காவிடில் படிப்படியாய் ஸந்த்யாவந்தனத்தையாவது விடாமற் செய்கின்றவர்கள் வரை வரிக்கலாம். அதுவும் செய்யாத பதிதர்களை வரிக்கக் கூடாது. சிராத்தத்தில் புஜிப்பதற்கு அங்கவீனர்கள், அங்கம் மிகுந்தவர்கள், குருடர், ஒற்றைக்கண்ணர், செவிடர், ஊமையர், பித்தம், குஷ்டம், க்ஷயம், காசம், மேகம், குன்மம் முதலிய மகாரோகமுள்ளவர்கள், பர்த்தா இருக்கும்போதும் பர்த்தா மரித்தபிறகும் முறையே சோரபுருஷனுக்குப் பிறந்த குண்டர்கள், கோளகர்கள், முதலியவர்களை வரிக்கக்கூடாது. ஸ்நாநம் செய்யாதவர், போஜனம் செய்தவர், வேறு இடத்தில் சிராத்த வஸ்துவை கிரகித்தவர், சிராத்தத்தில் கொடுத்த வஸ்துக்களை விக்கிரயம் செய்யக்கூடியவர், சிராத்தத்தில் ஒப்புக்

கொண்டு வராமல் மோசம் செய்யக்கூடிய ஸ்வபாவமுள்ளவர் ஆகிய இவர்களையும், சிராத்தத்தில் புரோஹிதர் என்ற ஆசார்ய ஸ்தானத்தில் வரிக்கப்பட்டவரையும் சிராத்தப் பிராமணராக வரித்து புசிப்பித்தல் கூடாது. புரோஹிதனை சிராத்தப் பிராமணராக வரிக்க உத்தேசமிருந்தால் அவரது ஸ்தானத்தை வேறொருவரிடமாவது கூர்ச்சத்தினிடமாவது ஆவாகனம் செய்யவேண்டும். சிராத்தத்தில் பிராமணர்களை முதல் தினத்திலேயே வரிக்கவேண்டும். "அப்படி வரிக்கப்பட்டவர்கள் அன்றும் சிராத்த தினத்திலும் அதன் மறுநாளும் ஸ்திரீ ஸங்கம் முதலியவற்றை நீக்கி ஸரியான நியமத்துடன் இருக்கவேண்டும். அப்படி யல்லாதார் மகாபாபமுற்று இம்மையிலும் மறுமையிலும் கடுந்துன்பமடைவார்" என்று கூறப்படுகிறது. சிராத்தத்திற்கு முதலில் ஒரு பிராமணரை வரித்து விட்டு ஸரியான காரணமின்றி அவரை நீக்கி மற்றொருவரை புசிப்பித்தல் மகா பாபகரமான கிருத்யம் என்று அறியவேண்டும். சிராத்தத்தில் புசிப்பவர் "இந்த வஸ்து நன்று, இது நல்லதல்ல" என்று பேசாமல் திருப்தியாய் புஜிக்க வேண்டும். பிராமணர் புஜிக்கும் ஸமயத்தில் வேத புராண இதிஹாஸங்களை புஜிப்பவர்களுக்குக் கேட்கும்படி பாராயணம் செய்தலும் செய்வித்தலும் வேண்டும். அது பிதிரு தேவதைகளுக்கு மிகப் பிரியமாக இருக்கும். புண்ய தீர்த்தக் கரைகளிலும் மகான்களை தரிசனம் செய்தவிடத்து அவர்களை வரித்தும் சிராத்த தின மில்லாவிடினும் சிராத்தம் செய்ய வேண்டும்.

---

## சிராத்த கர்த்தா.

சிராத்த கர்த்தா (செய்கிறவன்) சிராத்த தினம் அதற்குமுன் மூன்று தினம் மறு தினமாகிய ஐந்து தினங்களிலாவது எண்ணெ தேய்த்துக்கொள்ளுதல், தாம்பூலம் தரித்தல், பிறர் அன்னம் புஜித்தல், மருந்துண்ணல், க்ஷௌரம் செய்துகொள்ளல், திரும்ப புஜித்தல், வழி நடந்துபோதல், பாரஞ் சுமத்தல், கோபங்கொள்ளல், காம முறல் முதலியவற்றைத் தவிர்த்து விரத நியமமுடையவனாக இருக்க வேண்டும். சிரார்த்தத்திற்கு முன் ஒருபக்ஷம் அல்லது ஒரு மாஸம் முற்கூறியவிதம் கர்த்தா இருப்பானானால் மிக உத்தமம். அவன் இராத்திரி, இரு ஸந்திகள், விடியற்காலம் இவற்றில் சிராத்தம் செய்யக்கூடாது. கிரஹண சிராத்தம் எப்போதும் செய்யலாம். அவன் அபராண்ஹம் என்ற பிற்பகலில் பதினாறு நாழிகையாகிய குதபகாலத்தில் முறையுடன் சிராத்தம் ஆரம்பித்துச் செய்யவேண்டும். சிராத்த போஜனத்தில் விலக்கப்பட்ட வஸ்துக்களைச் சேராமல் விதித்த வஸ்துக்களையே அவரவர் குலாசாரப்படி சேர்க்கவேண்டும். சிராத்த பிராமணர்களைப் புஜிப்பித்து விகிரான்னதானம், பிண்டதானம் இவற்றைச் செய்து அவர்களை மரியாதையாக தக்ஷிணை கொடுத்து உபசரித்து அனுப்பினபிறகு பிராமணர்களுக்கு ஸமமாய் புரோஹிதருக்கும் தக்ஷிணை கொடுத்து அவரை திருப்தி செய்யவேண்டும். பிதிரு காரியம் முடிந்தபிறகுதான் தேவதாராதனம் முதலிய தேவகாரியங்களை அவன் அன்று சுருக்கமாகச் செய்யவேண்டும். ஏனெனில் சிராத்தம் என்ற பிதிரு யஜ்ஞயத்தையே அன்று அவன் பக்தி சிரத்

ஸ்ரத்தையுடன் மனதில் ஏற்றுக்கொண்டிருப்பதற்கு அதிகுறி யுள்ளவனாக இருக்கவேண்டும். சிராத்தம் முடிந்தபிறகு கர்த்தா பித்ருசேஷமான பதார்த்தங்களை தனது தாயாதர்களுடன் புஜித்துவிட்டு அன்று வெளியிற்போகாமலும் அனாவசியமாய் லௌகிகமான வார்த்தைகளைப் பேசாமலும் நியமத்துடனிருந்து மறுநாள் ஸூர்ய உதயத்திற்கு முன் தந்த சுத்தி செய்துகொள்ளாமல் ஸ்நாநம் செய்து முதல்நாள் செய்த சிராத்தத்தின் அங்கமாகத் தர்ப்பணம் செய்துவிட்டு அதன்பிறகுதான் மறுநாள் செய்யவேண்டிய தந்த சுத்தி, ஸ்நாநம் முதலிய நித்ய கர்மங்களைச் செய்யவேண்டும்.

---

## சிராத்த பலன்.

இவ்விதம் சிராத்தத்தில் நம்பிக்கையுற்று ஒழுங்காய்ச் செய்கின்றவர்கள் ஈசுவரனால் பித்ருக்களின் நன்மையின் பொருட்டு நியமிக்கப்பட்ட பித்ரு தேவதைகளின் அனுக்ரஹம் பெற்று இம்மையில் ஆயுள், புத்ரன், கீர்த்தி, தேக புஷ்டி, இந்த்ரிய வன்மை, தனம், தான்யம், பசுக்கள் முதலிய ஸம்பத்துக்களை யடைந்து ஸுகமாய் ஜீவித்திருப்பதுடன் மறுமையிலும் ஸ்வர்க்கமடைந்து மோக்ஷம் பெறுகின்றனர். அதைச்செய்யாமல் விடுகின்றவர் பதிதர்களாவதுடன் தாழ்ந்த ஜன்மமடைவார் என்று அறியவேண்டும்.



ஆறும் அதிகாரம்.

## ப்ரவிருத்தி தர்மப் பிரயோஜனம்.

இவ்விதம் முற்கூறிய ஸாதாரண தர்மங்கள், விசேஷ தர்மங்கள், உத்தேச தர்மங்கள் ஆகியவற்றை அஜாக்ரதை யின்றி அநுஷ்டிக்கின்ற மனிதர்கள் இவ்வுலகிலும் அவ் வுலகிலுமுள்ள போக போக்யங்களை நன்கு அநுபவித்து வரிசைக்கிரமமாக பரமபதமாகிய பிரும்மஸித்தியை அடை கின்றார்கள். எவ்விதமெனில் விலக்கிய கர்மங்களை நீக்கி விதித்த கர்மங்களையே செய்துவந்தால் நாளடைவில் மனத் தில் ரஜோகுண தமோகுணங்களடங்கி ஸத்வகுணம் மேல் நோக்கி நிற்கும். அதனால் நல்ல எண்ணங்கள் உண்டாகும். மரணகாலத்தில் அவை மனிதனுக்கு நற்பிறவி யளிக்கும். கீதையில் * "ஸத்வகுணம் விருத்தியாகவிருக்கும்போது மரணமடைந்தவன் உத்தம ஜ்ஞானியாகவும் ரஜோகுண விருத்தியில் மரித்தவன் கர்மாநுஷ்டானத்தில் பற்றுள்ளவ னாகவும் தமோகுண விருத்தியில் மரித்தவன் திர்யக் ஜந்து வாகவும் மறுஜன்மத்தில் உற்பவிக்கிறான்" என்று கூறப் படுகிறது. ஆதலால் ப்ராணிகளுக்கு அதிக புண்யத்தால் தேவஜன்மமும் அதிக பாபத்தால் ஸ்தாவர, திர்யக் ஜன்ம மும் புண்யபாபங்களின் ஸாம்ய (ஸமமாய்க் கலந்திருத்தல்) த்தினால் மனுஷ்ய ஜன்மமும் கிடைத்திருக்கிறது. இவ் விதமாக சக்கரம் போன்று மேலும் கீழுமாகச் சுற்றிக் கொண்டு வருகிற பிறப்பு இறப்பு ஆகிய ஸம்ஸார மென்ற

* அத். 14. சுலோ. 14, 15.

ஸமுத்ரத்தின் சுழிகளில் விழுந்து முழுகுவதும் கிளம்புவதுமான சிரமத்தை அனுபவிக்கின்ற மனிதர்கள் அந்தந்த பிரவிருத்தி தர்மங்களை உள்ளபடி அனுஷ்டிப்பதால் அந்தக் கரணத்திலுள்ள மலங்களைப் போக்கிக் கொள்ளுகிறார்கள். அப்போது அவர்கள் மனத்தில் மோக்ஷமடைய வேண்டுமென்ற விருப்பமுண்டாகிறது. அதன் பின் அதை அடைவதற்கு ஸாதனமான நிவிர்த்தி மார்க்கத்தைத் தழுவின தர்மங்கள் இன்னவை என்றும் அவற்றை ஒழுகும் வழி இன்ன விதம் என்றும் அறிய வேண்டியதற்கு அவர்கள் முயற்சிக்கின்றார்கள். அவ்விதம் படிப்படியாக மேல் நோக்கமுற்று மனிதர்களுள் உயர்ந்தவர்களாக ஆகின்றனர். நிவிர்த்தி தர்மங்களும் அதைப் பற்றின விஷயங்களும் இதன் இரண்டாம் தொகுதியில் விரிவாகக் கூறப்பட்டிருப்பன. ஆதலால் மனிதர் யாவரும் நிவிர்த்தி மார்க்கத்திற்குரிய தர்மங்களையும் உணர்ந்து அவரது கடமையாகிய அவற்றையும் முறையுடன் அனுஷ்டித்து அவரது ஜன்மம் பயன்பெறத்தக்கதாக மென்மேலும் முயற்சிக்கவேண்டும். அவ்விதமே கடவுள் அருள் புரிவாராக.

முதல் தோகுதி முற்றிற்று.





உ

கடவுள் துணை.

# வேதாகம தர்ம வித்யா

அல்லது

# ஹிந்துமத தர்ம விளக்கம்.

## இரண்டாம் தொகுதி.

## முதற்பாகம்.

### முதல் அதிகாரம்.

### ஈசுவரன் பிரபஞ்சகாரணன்.

ஈசுவரன் என்பான் எல்லாமறிந்தவன். யாவருக்கும் தலைமையானவன். எவரையும் அடக்கி ஆளுகிறவன். எண்ணுதற்கரிய சக்திகளமைந்தவன், எல்லாவற்றிற்கும் சொந்தமாயுள்ளவன். மனதிற்கெட்டாத மகிமை பொருந்தியவன். ஸகல ஐசுவர்யங்களும் நிறையப்பெற்றவன். எங்கும் யாவரிடத்தும் எப்போதும் இடையறாது நிறைந்திருப்பவன். ஆதியந்தமில்லாதவன். எல்லா உயிர்களிடத்தும் ஏற்றத்தாழ்வின்றி ஒப்புயர்வில்லாத ஒரேவிதமான கருணையைக் காட்டுகின்றவன். ஈசுவரன் என்ற ஓரே பதத்திற்கு முற்கூறிய பொருள்கள்யாவும் பொருந்துவன. ஈசுவரனைப்பற்றி இப்புஸ்தகத்தின் முதல் தொகுதியினது முதல் பாகத்தில் விரிவாக நிரூபித்துள்ளோம். அவன் பிரபஞ்சகாரணன் என்பதை இப்போது நிரூபிக்க வேண்டும்.

நம்மால் பார்க்கப்படுகின்றதும் கேட்கப்படுகின்றதுமான அதலம், விதலம், ஸுதலம், தலாதலம், ரஸாதலம், மகாதலம், பாதாளம் என்ற கீழுள்ள ஏழு உலகங்களும் பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜனோலோகம், தபோலோகம், ஸத்திய லோகம் என்ற மேலுள்ள ஏழு உலகங்களும் அடங்கின முட்டைவடிவமாயிருக்கின்ற மிகப்பெரிதான பிரம்மாண்டம், (பிரம்ம-அண்டம்) பிரபஞ்சம் எனப்படும். அதற்கு மிகப் பெரிதாய் விரிந்திருப்பது என்று பொருள். காரணன் என்பதற்கு உற்பத்தியாக்குவோன் என்று பொருள். ஈசுவரன் பிரபஞ்ச காரணன் என்பதற்கு ஈசுவரன் பிரபஞ்ச உற்பத்தியைச் செய்கிறவன் என்ற பொருள் ஏற்பட்டது. ஈசுவரன் பிரபஞ்சத்தைச் செய்கிறவனாக இருப்பதை எவ்வாறு அறிய முடியும்? என்பதை இங்கு நிரூபிப்போம்.

---

## மூன்றுவித காரணங்கள்.

உலகத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துவிற்கும் மூன்று காரணங்கள் உள. அவை உபாதானம், நிமித்தம், ஸஹகாரி என்பன. குடத்திற்கு மண்ணும், பூஷணத்திற்குப் பொன்னும், நூலிற்குப் பருத்தியும் உபாதான காரணமாகவும், அவற்றிற்கு முறையே குயவன், கருமான், நூற்போன் ஆகிய இவர்கள் நிமித்தகாரணமாகவும் அவர்களின் கருவிகளும், முயற்சிகளும் ஸஹகாரி காரணமாகவும் இருக்கின்றன.

எந்தக் காரணமானது, நிமித்த ஸஹகாரி காரணங்களின் ஸம்பந்தத்தால் கார்ய வஸ்துவாக பரிண

மத்தை (வேற்றுருவத்தை) அடைகின்றதோ, அது உபாதான காரணமாகும். மண்ணானது குயவன், அவனது கருவிகள், முயற்சிகள் இவற்றின் சம்பந்தத்தால் குடம் என்ற காரிய வஸ்துவாகப் பரிணமிக்கின்றது. ஆதலால் குடத்திற்கு மண் உபாதான காரணமாகின்றது. உபாதானம் என்பதற்கு (காரியத்தின் உருவத்தை) தனக்குள் ஸூக்ஷ்மமாக ஒடுக்கிவைத்துக்கொண்டிருக்கின்றது என்று பொருள். உபாதான காரணமிருந்தும் எது இன்றி கார்யம் தோன்றி நிற்கமாட்டாதோ, அது நிமித்தகாரணமாகும். மண் இருந்தும் குயவனின்றி குடம் தோன்றிநிற்க மாட்டாதாகையால் அதற்கு அவன் நிமித்த காரணமாகிறான். நிமித்தம் என்பதற்கு (உபாதான காரணத்தில் மறைந்திருந்த கார்ய உருவத்தை) வ்யக்தமாய் வெளிப்படுத்துகிறது என்றுபொருள். நிமித்த காரணத்திற்கு உதவியாக விருப்பது, ஸஹகாரிகாரணமாகும். குயவன் குடத்தைச் செய்வதற்கு அவனது கருவிகளும், முயற்சிகளும் உதவியாக இருப்பதால் அவை அதற்கு ஸஹகாரி காரணங்களாம். ஸஹகாரி என்பதற்கு உதவிசெய்கின்றது என்று பொருள். இவ்விதமே உலகத்திலுள்ள ஒவ்வொரு காரிய வஸ்துக்களுக்கும் மூன்று விதமான காரணவஸ்துக்கள் அமைந்திருக்கின்றன.

அவ்விதமாகப் பிராணிகளுக்கு வேண்டிய ஸகலமான வஸ்துக்களும் நிறைந்து நமது முன்னே தோன்றிக்கொண்டிருக்கிற இப் பிரபஞ்சமாகிய கார்ய வஸ்துவிற்கும் உபாதானம், நிமித்தம், ஸஹகாரி என்ற காரணங்கள்

எவை? எந்தவஸ்து இந்தப் பிரபஞ்சவடிவமாகத் தோன்றி நிற்கிறது? அதை அவ்விதம் நமக்கு தோற்றுவிக்கிறது எது? நமக்கு அத்தோற்ற முண்டாக அதற்கு உதவியாக விருப்பது எது? என்பதாக இம்மூன்றையும் ஆராய்ந்து அறியவேண்டும்.

---

## ஆத்மா.

உலகத்தில் ஐந்து வஸ்துக்கள் நமக்குப் புலப்படுகின்றன. அவை பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பன. பிருதிவி என்பது பூமி. அப்பு என்பது ஜலம். தேயு என்பது அக்னி, ஸூர்யன் முதலிய ஒளியுற்ற வஸ்துக்கள். வாயுவென்பது காற்று. ஆகாசம் என்பது ஒன்றுமில்லாது இடைவெளியுள்ள சூன்யமான இடம். இவற்றைத் தவிர நமக்குப் புலப்படாததும் முற்கூறிய வஸ்துக்களின் தோற்றத்திற்குக் காரணமாகவும் நித்தியமாகவும் எங்கும் விரிந்துமிருக்கின்ற ஒரு வஸ்து உண்டு. அதுவே ஆத்மா எனப்படும். அது அறிவிற்கு ஆதாரமா யிருப்பது. ஆத்மா என்பதற்கு எங்கும் பரவின விசாலமான அறிவுற்றிருக்குந் தன்மையுள்ளது என்று பொருள். அது ஜீவாத்மா, பரமாத்மா என்று இருவகைப்படும்.

ஜீவாத்மா என்பது அஞ்ஞானம், கர்ம ஸம்பந்தம் முதலிய சில காரணங்களால் பல வகைப்பட்டதாகவும், பற்பலசரீரங்களின் உள்ளடங்கினதாகவும், அச்சரீரப் பற்றுள்ளதாகவு மிருக்கும். பிழைத்திருக்கின்ற ஆத்மா ஜீவாத்மா (ஜீவ-ஆத்மா) என்றும் ஜீவன் என்றும் சொல்லப்படுவான்.

பிழைத்திருக்கின்றது என்ற சொல் பிறப்பு, இறப்பு என்பனவற்றைக் குறிக்கின்றது. உண்மையில் ஆத்மாவிற்குப் பிறப்பிறப்பில்லாவிடினும் அவனுக்கு சில காரணங்களாலமைந்த சரீரத்தின் தர்மமாகிய பிறப்பிறப்பை அஞ்ஞானத்தினால் தன்னுடையதாக அவன் பாவித்து அதிற் கட்டுண்டு பந்தப்படுத்தப்பட்டிருக்கின்றான். பரமாத்மா என்பவன் முற்கூறிய அஞ்ஞானம், கர்ம ஸம்பந்தம் முதலிய யாதொரு காரணங்களில்லாதவனாகவும், எக்காரணத்தாலும் மாற்றப் படாதவனாகவும், ஒருவனாகவும், வேண்டும்போது சரீரமெடுத்துக் கொள்ளக்கூடியவனாகவும் அப்படி யிருந்தாலும் அச்சரீரப் பற்றில்லாதவனுமாக விருப்பான். தனக்குமேல் உயர்ந்தவன் இல்லாமலிருக்கின்ற ஆத்மா பரமாத்மா (பரம-ஆத்மா) என்றும் பரமன் என்றும் சொல்லப்படுவான்.

அந்த பரமாத்மாவினிடம் சித் என்றும், அசித் என்றும் இரண்டு விதமான சக்தி இருப்பதாக நம்மால் அறியப்படுகிறது.

---

## சித் சக்தி.

அவற்றுள் சித் என்பது சேதன (அறிவுள்ள) ஸ்வரூபம். அசித் என்பது அசேதன (அறிவில்லாத) ஜட ஸ்வரூபம். இரும்பை ஆகர்ஷிக்கின்ற காந்தத்தினிடமுள்ள ஆகர்ஷண சக்தி, காந்தத்தைவிட்டு வேறாகாததும் காந்த ஸ்வரூபமாகவு மிருப்பது போன்று பரமாத்மாவினிடமுள்ள சேதன சக்தி பரமாத்ம ஸ்வரூபமே யல்லது

வேறல்ல. அதுவே பராசக்தி, அம்பிகை, தேவி, ஸ்ரீ வித்யை, ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி முதலிய பல நாமங்களால் அழைக்கப்படுகிறது. மூன்று ஸந்தி காலங்களிலும் அதுதான் உபாஸிக்கப்படுகிறது.

## அசித் (ஜட) சக்தி.

இரண்டாவதான ஜடசக்தி, உண்மையாக பரமாத்மாவினிடம் இல்லாவிடினும் கயிற்றில் பாம்பு போன்றும், ஸ்தாணுவி (மொட்டைமரத்தி) னிடம் மனிதன் போன்றும், சிப்பியில் வெள்ளி போன்றும் அது பரமாத்மாவினிடம் இருப்பதாகவே நமக்குப் பிரமத்தினால் தோன்றிக் கொண்டிருக்கிறது.

அதுவே ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களுடன் கூடி வெளுப்பு, சிவப்பு, கருப்பு என்ற தனித் தனி நிறமுள்ள மூன்று கயிறுகளைச் சேர்த்து முறுக்கினதுபோலிருந்துகொண்டு பரமாத்மாவினிடமிருந்து ஸகலமான பிரபஞ்சம் உண்டாயிருப்பதாக நமக்குத் தோன்றக் காரணமாயிருக்கிறது. அதனால் அது மூலப் பிரகிருதி, பிரகிருதி, பிரதானம், அவ்யக்தம் என்றும், அது பரமாத்மாவினிடம் பொய்யாகத் தோன்றிக்கொண்டிருப்பதால் மாயை, அவித்யை, தாமஸி என்றும், அசேதனமாக இருப்பதால் ஜடம், அஞ்ஞானம், தமஸ் என்றும் பற்பல பதங்களால் வழங்கப்படுகிறது.

அது ஸத் (என்றும் இருக்கிறது) என்ற பரமாத்ம ஸ்வரூபமுமல்ல. அஸத் (என்றும் இல்லாதது) என்ற ஆகா

யப்பூ, மலடிமகன், முயற்கொம்பு இவை போன்றதுமல்ல. ஆனால், ஸத் அஸத் என்ற இரண்டிற்கும் விலக்ஷணமாக (மாறுதலாக) உள்ளது. ஏனெனில் பரமாத்மா என்று மிருப்பவன். அது பரமார்த்த தசை (உண்மையறியும் நிலைமை) யில் இல்லாதது. பரமாத்மா நிர்க்குணன். அது ஸகுணம். பரமாத்மா ஞான ஸ்வரூபமாக இருப்பவன். அது ஜட ஸ்வரூபமாக இருப்பது. பரமாத்மா மாறுத லில்லாதவன். அது முக்குணங்களினால் மூன்றுவிதமாக மாறித்தோன்றக்கூடியது. உண்மை யறிவுற்றவர்களுக்கு பரமாத்மா அறியக்கூடியவன். அது அவர்களுக்கு மறை யக்கூடியது. இம்மாதிரியான காரணங்களால் அது உண் மையிற் பரமாத்ம ஸ்வரூபமில்லாமல் ஸத் ஆகிய பரமாத் மாவைவிட வேறானதாகவு மிருக்கிறது. முயற்கொம்பு போன்று எங்கும் எப்போதும் காணப்படாத வஸ்துபோல் இல்லாமல் அது உண்மை யறிவில்லாத நமக்கு பரமாத் மாவை உலக வடிவமாகத் தோற்றுவிக்கின்றது. ஆகை யால் அஸத் ஆகிய முயற்கொம்பைக் காட்டிலும் வேறு பட்ட தாகவே இருந்துகொண்டு பரமாத்ம ஸ்வரூபமல்ல வென்றும் சொல்லமுடியாதது. ஆதலால் அது ஸத்து மில்லாமல் அஸத்துமில்லாமல் இரண்டிற்கும் மாறுதலான உபய விலக்ஷணமாக வுள்ளது. இன்னவிதம் என்று சொல்ல முடியாதது.

பரமாத்மாவும், அவனிடம் தோன்றும் ஜடசக்தியும் முறையே ஆத்மா, அநாத்மா என்றும் சேதனன், அசேத னம் என்றும் திருக், திருசியம் என்றும் போக்தா, போக்

யம் என்றும் தத்வம், அதத்வம் என்றும் சித், அசித் என்றும் ஸ்வதந்த்ரன், அஸ்வதந்த்ரம் என்றும் புருஷன், ப்ரகிருதி என்றும் ஈசுவரன், மாயை என்றும் சாஸ்திரங்களில் அழைக்கப்படும்.

பிரபஞ்ச ஸ்ருஷ்டிக்கு முன் முற்கூறிய மூலப்பிரகிருதியில் அநேககோடி ஜீவர்கள் தத்தம் கர்ம வாசனைகளுடன் மெழுகில் தங்கப் பொடிகள் போன்றும் தேனடையில் ஈக்கள் போன்றும் லயித்து ஒடுங்கி யிருக்கின்றார்கள். அப்போது மூலப்பிரகிருதியின் ஸத்வம் முதலிய மூன்று குணங்களும் ஏற்றத்தாழ்வில்லாமல் ஸம நிலைமையிலிருக்கின்றன. பிறகு ஒரு ஸமயம் ஜீவர்களின் கர்மங்கள் பரிபக்வமாகும்போது ஸ்ருஷ்டிக்கு ஆரம்பகாலம் உண்டாகிறது. அப்போது அம் மூலப் பிரகிருதியினதுகுணங்கள் தாரதம்ய (பேத) ப்பட்டு அது மாயை, அவித்யை, தாமஸி என்று முப்பான்மையாகப் பிரிவுபடுகிறது.

ரஜோகுணம், தமோகுணம் அடங்கி ஸத்வகுணம் ப்ரதானமாக மேலிட்டிருக்கும்போது அது மாயை எனப்படும். எது இல்லையோ அது யாமா என்றும், அதுவே மாறி மாயா (மாயை) என்றும் கூறப்படும். ஸத்வகுணம், தமோகுணம் அடங்கி ரஜோகுணம் ப்ரதானமாக மேலிட்டிருக்கும்போது அது அவித்யை யெனப்படும். ஸத்வகுணம், ரஜோகுணம் அடங்கி தமோகுணம் ப்ரதானமாக மேலிட்டிருக்கும்போது அது தாமஸி எனப்படும். அம்மூன்றும் முறையே வெளுப்பு, சிவப்பு, கருப்பு நிறமான கண்ணாடிகள் போன்றன.

மாயையில் ப்ரதிபலித்த பரமாத்மா ஈசுவரன் எனப் படுகிறான். அவித்யையில் ப்ரதிபலித்த பரமாத்மா ஜீவன் எனப்படுகிறான். ஜீவர்களின் கர்ம வசத்தால் அவித்யை பலகோடி உருவங்களாக மாறி பரமாத்மாவின் பிரதிபிம் பத்தை ஏற்றுப் பல பிரதிபிம்ப வடிவமான ஜீவர்களுக்குக் காரண சரீரங்களாக அமைகிறது. அதுவே அஞ்ஞான மெனப்படும். அவித்யை என்பதற்கு எது உண்மை யில் இல்லையோ அது அவித்யை என்ற பொருளும் உண்டு. ஜீவர்கள் அதன் வசமாக இருந்து அதன் வழியைப் பின் பற்றுகிறார்கள்.

கண்ணாடியின் சக்தியினால் அதனுள் தோன்றிக் கொண்டிருந்த பிரதிபிம்பம் கண்ணாடி உடைந்தவுடன் பிம்பத்துடன் சேர்ந்துவிடுகிறது. அதுபோன்று அவித் யையில் பிரதிபலித்துத் தோன்றிக்கொண்டிருந்த பர மாத்மாவின் பிரதிபிம்பமாகிய ஜீவன் அவித்யை நசித்த வுடன் பிம்பமாகிய பரமாத்மாவுடன் சேர்ந்துவிடுகிறான்.

மாயையில் பிரதிபலித்த ஈசுவரனுக்கும் அவித்யையில் பிரதிபலித்த ஜீவனுக்கும் யாது பேதமுளது? என்றால், ஈசுவரன் கர்மஸம்பந்தமில்லாதவன். ஒருவனாயிருப்பவன். அவன் இச்சைப்படி மாயை நடந்துகொண்டு அவனுக்கு அது ஸ்வாதீனமாக இருக்கிறது. அவன் தனக்கு வேண்டும் போது பல உருவங்களையும் அவதாரங்களையும் எடுத்துக் கொள்ளுவதும் அவற்றை ஒடுக்கிக்கொள்ளுவதுமான ஸ்வதந்திரமாயுள்ள சக்தியுள்ளவன். பிறருக்கு உட்படாத வன். எங்கும் வியாபித்துள்ளவன். எல்லாஜீவர்களிடத் தும் வஸிப்பவன். எல்லாமறிந்த பேரறிவுள்ளவன்.

ஜீவனோ அப்படிப்பட்டவனல்லன். அவன் கர்ம சம் பந்தமுள்ளவன். பலவகைப்பட்டவன். அவன் இச்சைப் படி அவித்யை நடக்கிறதில்லை. அவன்தான் அதற்கு ஸ்வா தீனமாக இருக்கிறான். அவன் தனக்கு வேண்டிய ஜன்மங் களை எடுக்கமுடியாதவன். அவனது கர்மங்களின் அதீன மாக அவித்யை உண்டுபண்ணுகிற ஜன்மங்களைப் பெற வேண்டியவன். அவன் அஸ்வதந்தரன். அவித்யைக்கு உட்பட்டவன். ஓரிடத்தில் அடங்கி யிருப்பவன். தன் சரீரத்தில் மாத்திரம் வஸிப்பவன். முற்றுமறியாத சிற் றறிவுள்ளவன். இவ்விதம் யோசிக்க யோசிக்க ஈவரனுக் கும் ஜீவனுக்கும் அனந்தமான பேதங்கள் தோன்றும். அவற்றை ஒழிப்பதற்கே ஜீவன் முயற்சி செய்யவேண்டிய வன்.

முன் சொன்ன மூலப் பிரகிருதியின் தமோகுணப் பிரதானமான தாமஸி யென்ற பிரிவாகிய கருப்புக் கண் ணுடியில் பிரதிபலித்த பரமாத்மா இவ்வளவு பெரிய பிரம்மாண்டமாகவும் அதிலுள்ள உலகங்களாகவும் தோன்றிக்கொண்டிருக்கின்றான். மாயையில் ப்ரதிபலித்த ஈசுவரன் அவித்யையில் பிரதிபலித்த ஜீவர்களைக் காப் பாற்றுவதன் பொருட்டு தாமஸியில் பிரதிபலித்த ஜகத்துகளைப் பலவிதமான தேவ, மனுஷ்ய, திர்யக் (குனிந்து நடமாடுகின்ற) ஸ்தாவர சரீரங்களாகவும் பல வித போக போக்ய வஸ்துக்களாகவும் உண்டுபண்ணி உலகத்தை ஜீவர்களின் போக ஸாதனமாக ஏற்படுத்தி

முதலில் ஸூக்ஷ்ம ப்ரபஞ்ச ஸ்ருஷ்டியையும், பிறகு ஸ்தூலப் பிரபஞ்ச ஸ்ருஷ்டியையும் செய்துகொண்டிருக்கிறான்.

---

## ஈசுவரன் மூவிதக் காரணன்.

இவ் விதமாக உலகம் தோன்றி, இருந்து, ஒடுங்கும் நிலைமைகளாகிய ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் என்ற கார்யங்களுக்கு ஈசுவரன் ஒருவனே காரணமாக இருக்கின்றான். அவனையே சைவர்கள் சிவன் என்றும், வைஷ்ணவர்கள் விஷ்ணுவென்றும், அத்வைதிகள் பரமாத்ம வஸ்துவென்றும் இப்படியாக உலகிலுள்ள ஒவ்வொரு மதத்தினரும் தத்தம் மதத்திற்கூறிய பெயர்களால் வழங்கி வருகின்றனர்.

ஆதலால் அவனே பிரபஞ்சத்திற்கு உபாதான காரணமாகவும், நிமித்தகாரணமாகவும் இருக்கிறான். எப்படியெனில், அவன் மூலப் பிரகிருதியின் மூலமாகப் பிரபஞ்ச வடிவமாய்ப் பரிணமித் துத்தோன்றி நிற்பதால் உபாதான காரணமாகிறான். அவனின்றி மூலப் பிரகிருதியினால் தனித்து ஒரு கார்யமும் செய்யமுடியாதாகையால் அவனிடமிருந்து பிரபஞ்சம் உண்டாவதாகத் தோற்றுவிக்கின்ற மூலப் பிரகிருதியின் கார்யத்திற்கும் தானே நிமித்த காரணமாக இருக்கிறான். மூலப் பிரகிருதியின்றி ஈசுவரன் உலக வடிவமாய்த் தோன்றமுடியாததலால் மூலப்பிரகிருதியையே நிமித்த காரணமாகச் சொல்லவேண்டிய

தானாலும் அது ஈசுவரனது ஸங்கல்பத்தினாலேயே ஸகல கார்யங்களையும் செய்துகொண்டு அவனுக்குள் அடங்கி இருப்பதால் அவனைவிட வேறாகச் சொல்லமுடியாதது பற்றி அவனே பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமும் எனப் படுகிறான். அவனது ஸங்கல்பம் (இச்சை) முதலியன பிரபஞ்சோற்பத்திக்கு ஸஹகாரி காரணங்களாம்.

இவ் விதமாக ஈசுவரன் பிரபஞ்சத்திற்கு உபாதான நிமித்த ஸஹகாரி காரணங்களாக விருப்பதால் "ஈசுவரன் பிரபஞ்ச காரணன்" எனப்படுகிறான். அவன் பிரபஞ்சத்தை உற்பத்தி செய்யும் முறை இதன்பின் கூறப்படும்.

---

## இரண்டாம் அதிகாரம்.

---

### பிரபஞ்ச ஸ்ருஷ்டி.

பிரபஞ்ச மென்பது பிரம்மாண்டமென்று முதலதிகாரத்திற் கூறப்பட்டது. மண்ணைக் குடமாகவும், பொன்னை ஆபரணமாகவும், பருத்தியை நூலாகவும் தோன்றச் செய்வதுபோல் முன்னமேயுள்ள ஒருபொருளை வேறுவிதமாய்த் தோன்றும்படி செய்து காண்பித்தல், ஸ்ருஷ்டி யெனப்படும். ஆதலால் ஏற்கெனவேயுள்ள ஒரு வஸ்துவை இப் பிரபஞ்சவடிவமாகத் தோற்றுவித்தல், பிரபஞ்ச ஸ்ருஷ்டி என்று ஏற்படுகிறது.

---

## ஸூக்ஷ்ம ஸ்ருஷ்டி.

மூலப் பிரகிருதியின் மூன்றாவது பிரிவாகிய தமோ குணப் பிரதானமான தாமஸியிடம் ஈசுவரனுடைய பார்வையினால் விக்ஷேப (பரப்புகின்ற) சக்தி, ஆவரண (மறைக்கின்ற) சக்தி என்ற இரண்டு சக்திகள் தோன்றுகின்றன. அவற்றுள் விக்ஷேப சக்தியினால் பிரபஞ்ச ஸ்ருஷ்டி யுண்டாகிறது. ஆவரண சக்தி அதன் உண்மையை மறைக்கின்றது.

விக்ஷேப சக்தியினால் பிரபஞ்சம் உண்டாகும் விதம் எப்படியெனில் :— * "வேதத்தில் ஆத்மாவினிடம் (அவனிடம் தோன்றும் விக்ஷேப சக்தியினிடம்) இருந்து ஆகாசமும் அதனிடமிருந்து வாயுவும் அதனிடமிருந்து அக்னியும் அதனிடமிருந்து ஜலமும் அதனிடமிருந்து பூமியும் உண்டாயின" எனப்படுகிறது. இவ்விதம் பஞ்ச பூதங்களின் ஸூக்ஷ்மமான பரமாணுக்கள்தான் முதலில் உண்டாயின. அவை நமக்குப் புலப்படா. ஆகாசத்தினிடம் சப்த மாத்திரம் உண்டாயிற்று. வாயுவினிடம் சப்தம், ஸ்பர்சம் இவ்விரண்டும், அக்னியினிடம் சப்தம், ஸ்பர்சம், ரூபம் இவை மூன்றும், ஜலத்தினிடம் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம் இவை நான்கும், பூமியினிடம் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்ற ஐந்து குணங்களும் உண்டாயின. அவை தன்மாத்திரைகள் (பூத அம்சங்கள்) எனப்படும். அவற்றுடன் பரமாணுக்களாகிய ஸூக்ஷ்ம பூதங்களிடம் மூலப் பிரகிருதியின் ஸத்

* தைத்தரீயம், ஆனந்தவல்லி அநுவாகம் 1.

வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களும் பற்றியிருக்கின்றன. காரணகுணம் கார்யத்தில் பற்றும். விதையின் குணம் முளையிற் பற்றுமன்றோ?

ஆகாசம், வாயு, தேயு, ஜலம், பூமி என்ற பரமாணுக்களின் ஸத்வ பாகத்தைக்கொண்டு முறையே காது, தொக்கு, (தோல்) கண், நாக்கு, மூக்கு என்ற ஞானேந்த்ரியங்கள் ஐந்தும் உண்டாயின. அவற்றின் ஸத்வ பாகம் எல்லாம் சேர்ந்து உள் இந்த்ரியமாகிய அந்தக்கரணம் உண்டாயிற்று. அது மனம், புத்தி என்று இரண்டு விதமாக மாறிற்று. பிறகு அவ் விரண்டும் மனம், சித்தம் என்றும் புத்தி, அகங்காரம் என்றும், தனித்தனி மாறிற்று. மனம் என்பது ஒரு விஷயத்தைப் பற்றி ஸந்தேகப்பட்டுக்கொண்டிருக்கும். சித்தம் என்பது ஒரு விஷயத்தைப் பற்றி நன்றாய் அறிந்துகொள்ளும். புத்தி என்பது ஸந்தேகமாயுள்ள விஷயத்தை இன்ன விதம் என்று நிச்சயித்துத் தீர்மானிக்கும். அகங்காரம் என்பது நான் அறிகிறேன் என்ற அபிமானத்தை யடைந்திருக்கும்.

முற்கூறிய பரமாணுக்களின் ரஜோகுண பாகத்தைக் கொண்டு முறையே வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்ற ஐந்து கர்மேந்த்ரியங்களும் அவற்றின் ரஜோ குண பாகங்களின் ஸமஷ்டி (சேர்க்கை) யினால் ப்ராணனும் உண்டாயின. ப்ராணன், அபானன், ஸமானன், உதானன், வ்யானன் என்று ஐந்து விதமான பெயரை ஒரே பிராணவாயு, இடம், தொழில் இவற்றின் மாறுத

லால் அடைந்திருக்கிறது. அது ஹ்ருதயத்தில் இருந்து கொண்டு சுவாஸம் வாங்கவும் விடவும் காரணமாயிருப்பதால் ப்ராணன், பாயுவிலிருந்துகொண்டு மலங்களைக் கழிக்கச்செய்வதனால் அபானன், தொப்புளிலிருந்துகொண்டு ஆகாரங்களை ஜீர்ணப்படுத்துவதால் ஸமானன், தொண்டையிலிருந்து சப்தங்களை வெளியிடச் செய்வதால் உதானன், சரீரமெங்கும் வ்யாபித்துக்கொண்டு இரத்த ஓட்டத்தை உண்டுபண்ணுவதால் வ்யானன் என்ற காரணப் பெயர்களை அடைந்திருக்கிறது.

முற்கூறிய ப்ராணவாயு சரீரத்தில் பின்னும் ஐந்து வாயுக்களாக விசாலப்பட்டிருக்கின்றது. அவை நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்ஜயன் என்பன. அவை முறையே வாயைத்திறப்பதற்கும், வாயை மூடுவதற்கும், தும்மல் உண்டாவதற்கும், கொட்டாவி விடுவதற்கும், மரித்த சரீரத்திலும் சில நிமிஷங்கள் வரை வாயு ஸஞ்சாரமிருப்பதற்கும் காரணமாக இருக்கின்றன. அவை முறையே ஸர்ப்பம், ஆமை, கவுதாரி, ஒருவித சங்கு, அக்னி என்ற பொருளுள்ளனவாதலால் முற்கூறிய ஐந்து செயல்களையும் அறியத்தக்கவாறு பொருத்தமான பெயர்களாக அவை அமைக்கப்பட்டன.

தேவி பாகவதத்தில் * "பஞ்சபூத பரமாணுக்களின் ஸத்வாம்சங்களால் தனித்தனியே சுரோத்ரம் (காது) முதலிய ஞானேந்த்ரியங்களும் அவற்றின் ஸத்வாம்சங்கள் சேர்ந்து அந்தக்கரணமும் ரஜோகுணத்தின் அம்சங்க

* ஸ்கந்தம் 7. அத்யாயம் 32.

ளாற் பிரத்யேகம் வாக்கு முதலிய கர்மேந்த்ரியங்களும் ரஜோகுண அம்சங்கள் எல்லாம் சேர்ந்துப் பிராணனும் உண்டாயின " எனப்படுகிறது.

பஞ்ச ஞானேந்த்ரியங்கள் பஞ்ச கர்மேந்த்ரியங்கள் பஞ்சப் பிராணன்கள் மனம், புத்தி இப் பதினேழும் சேர்ந்தது ஸூக்ஷ்ம சரீரமென்றும், லிங்க சரீரமென்றும் கூறப்படும். அதுதான் போகங்களை அனுபவிக்க ஸாதன மாகவும் கூடுவிட்டுக் கூடு பாய்தல் என்ற பரகாயப் பிர வேசம் (பிறர் சரீரத்திற் புகுதல்) லோகாந்திரம் போதல் முதலியவைகட்கு அனுகூலமாகவும் மரித்த பின் வேறு ஜன்மமெடுக்க ஸாதகமாகவும் ஸ்ருஷ்டிக்கப்பட்டிருக் கிறது. இதுவே ஸூக்ஷ்ம ஸ்ருஷ்டி என்றும் ஸூக்ஷ்மப் பிரபஞ்ச ஸ்ருஷ்டி என்றும் கூறப்படும்.

---

## ஸ்தூல ஸ்ருஷ்டி.

தமோகுணத்துடன் கூடின முற்கூறிய பரமாணுக் கள் ஈசுவரனின் ஸங்கல்ப வசத்தினால் பஞ்சீகரணம் செய்யப்பட்டு மகா பூதங்களாக ஆகின்றன. பஞ்சீகர ணம் என்பது என்ன? எனில், ஐந்து பூதங்களின் பர மாணுக்களை தனித்தனியே இரண்டு பாகமாகப் பிரித்து அவற்றுள் ஒவ்வொரு பாதியையும் நான்காகப் பிரித்து வைத்துக் கொள்ளவேண்டும். பிருதிவி பரமாணுக்களின் ஸரிபாதி பாகத்தில் நான்காகப்பிரிக்கப்பட்ட அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்ற மற்ற பூதங்களின் ஸரிபாதி பாகத்

தின் நான்கில் ஒரு பங்கு (மொத்தத்தில் எட்டில் ஒரு பங்கு) சேர்க்க மகாப் பிருதிவி உண்டாகிறது. இவ்விதமே மற்ற பூதங்களின் பரமாணுக்களைச் சேர்க்க வேண்டும். ஒவ்வொரு பூதத்திற்கும் ஒரு பாதி தன் பாக மாகவும் மறுபாதி மற்ற பூதங்களின் எட்டில் ஒன்றாகிய (அரைக்கால்) பங்கு சேர்ந்த பாகமாகவும் ஏற்படு கிறது. இதுவே பஞ்சீகரணமாகும். அதற்கு முன் ஐந்தாக இல்லாததில் பின் ஐந்து அம்சங்கள் சேர்ந்த தாகச் செய்தல் என்று பொருள். ஒவ்வொரு பூதத்தி லும் தனது அம்சம் அதிகமாகவும் மற்றவைகளின அம் சம் சிறிதாகவு மிருப்பதால் அதனது அம்சத்தைக் கொண்டே பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற பெயர்கள் ஏற்பட்டிருக்கின்றன.

அந்த ஐந்து மகா பூதங்களிடமிருந்தே பதினான்கு உலகங்களடங்கின பிரம்மாண்டமும் அவற்றிலுள்ள ஸகல சராசரப் பிராணிகளின் ஸ்தூல சரீரங்களும் உண்டா யிருக்கின்றன. ‡ "பரமாய சக்தியுட் பஞ்சமாபூதந் தா மாறிற்றோன்றும் பிறப்பு" என்பது ஔவை குறள். இதுதான் ஸ்தூலப் பிரபஞ்ச ஸ்ருஷ்டி எனப்படும்.

## முன்னேரும்—பின்னேரும்

விஷ்ணு புராணத்தில் கூறுவதாவது :— † "ஸ்ருஷ்டி யாரம்பத்தில் உலகத்திலுள்ளப் பிராணிகள் ஸுகமாய்

‡ அதிகாரம் 1. குறள் 2. மிகப் பெரிதான ஈசுவரனது சக்தியினிடமாகத் தோன்றிய மகா பூதங்கள் ஐந்தும் பஞ்சீகரணம் என்ற தரம் மாறி நிற்கும்போது உலகப் பிறப்பு தோன்றும் என்று பொருள்.

† ஸ்ரீதரீய வியாக்கியானம், அம்சகம் 1, அத்யாயம் 6. சுலோ கம் 14-41.

பிழைத்திருப்பதற்காக அஷ்ட (எட்டு) ஸித்திகள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன. மனிதர் பசி தாகமின்றி காமஸுகத்தை அபேக்ஷிக்காமலிருத்தல் முதல் ஸித்தி. ஒரு விஷயத்திலும் ஆசையின்றி எப்போதும் திருப்தியுடனிருத்தல் இரண்டாம் ஸித்தி. இது மேலானது இது தாழ்ந்தது என்ற பேதமற்றிருத்தல் மூன்றும் ஸித்தி. எல்லாவற்றையும் ஸமமாக பாவித்திருத்தல் நான்காம் ஸித்தி. மனத்திலும் சரீரத்திலும் அதிக பலத்துடன் கூடியிருத்தல் ஐந்தாம் ஸித்தி. பரமாத்மாவினிடம் தியான நிஷ்டை பெற்றிருத்தல் ஆறும் ஸித்தி. இஷ்டப்படி ஸஞ்சரித்துக் கொண்டிருத்தல் ஏழாம் ஸித்தி. இஷ்டமான இடத்தில் வீற்றிருத்தல் எட்டாம் ஸித்தி.

ஸ்ருஷ்டி யாரம்பத்திலுள்ள ஜனங்கள் முற்கூறிய எட்டு ஸித்திகளுடன் கூடினவர்களாய் ஸுகமாக ஜீவித்துக்கொண்டு மோக்ஷ மார்க்கத்தையே தேடிக் கொண்டிருந்தனர். பிறகு காலக் கிரமத்தில் அஞ்ஞானம் மேலிட்டு அதனால் அதர்மத்திற்கு பீஜ (விதை) மாகிய காமம், கோபம் முதலியன அதிகப்பட்டு பாதகங்கள் அளவற்றதாக ஏற்படும்போது அந்த ஸித்திகள் க்ஷீணதசையடைய அவர்கள் சீதோஷ்ணம் முதலிய கஷ்டங்களைத் தாங்க சக்தியற்றவர்களாய் விட்டனர். பிறகு ஜனங்கள் பனி, மழை, வெயில், காற்று இவற்றின் துன்பங்களை நீக்கிக்கொள்ள வீடு கட்டிக்கொண்டார்கள். பிறகு கிராமங்களும், நகரங்களும் ஏற்பட்டன. அதன் பிறகு அவர்கள் பசி பொறுக்கமாட்டாமல் விவஸாயத்தை

யும், கைத்தொழில்களையும் விருத்தி செய்ய ஆரம்பித்தனர். முதலில் நெல், யவம், (வாற்கோதுமை) கோதுமை, அணு, (சிறு நெல்) எள், ப்ரியங்கு; உதாரம், வரகு, ஸதீனகம், (பயறு) உளுந்து, பாசிப்பயறு, மஸுரம், மொச்சை, கொள், துவரை, கடலை, சணம் என்ற பதினேழு தான்யங்களை உற்பத்தி செய்யத் தெரிந்துகொண்டார்கள்" எனப்படுகிறது.

இவ் விதம் ப்ரவிருத்தி மார்க்கத்தைப்பற்றின வ்யவஹாரங்கள் நாளுக்கு நாள் அதிகப்படவே நிவிருத்தி மார்க்கத்தை நினைப்பதற்குங்கூட ஜனங்கள் அவகாசமில்லாதவர்களாக ஆய்விட்டனர்.

இப்பவும் யோகாப்யாஸத்தால் மனத்திலுள்ள மலங்களைப் போக்கினவர்களான யோகீசுவரர்கள் முன் சொன்ன ஸித்திகளைப் பெற்றவர்களாக இருக்கின்றார்கள். இனியும் அவ்விதமாக இருக்கக்கூடும்.

---

## சக்திகளது இயற்கை.

வேதத்தில் § "பகவான் பெரிதான இப்பிரபஞ்சத்தையுண்டுபண்ணுகிறேன் என்று நினைத்தான்" ¶ "பட்டுப் பூச்சியினிடமிருந்து பட்டு உண்டாவதுபோல் உலகம் பகவானிடமிருந்து உண்டாயிற்று" எனப்படுகிறது. ஸமுத்திரத்தில் ஒரு பெரிய அலையும், அது மோதுண்டு

§ தைத்தரீயம், ஆனந்தவல்லி, அனுவாகம் 6.

¶ முண்டகோபநிஷத்து, கண்டம் 1.

பல சிறிய அலைகளும் நுரைகளும் தோன்றுவனபோல் பரமாத்மாவினிடம் ஈசுவரனும் ஜீவர்களும் ஜகத்தும் தோன்றிக் கொண்டிருக்கின்றன. அலைகளும், நுரையும் சமுத்திரத்தைவிட அன்யமாகாதனபோன்று ஈசுவரன், ஜீவர்கள், ஜகத்து இம் மூன்றும் பரமாத்மாவைவிட அன்யமாகமாட்டா.

இந்த உண்மையை நமக்குத் தோன்றச் செய்யாமல் மறைத்துக்கொண்டிருப்பது முற்கூறிய ஆவரணசக்தி. அது ஆத்ம ஞானிகளையும் ஈசுவரனையும் தவிர மற்ற ஜீவர்களுக்கு உண்மையை அறிய முடியாமல் இருள் போன்று மறைத்துக்கொண்டிருக்கிறது. அது "பரமாத்ம வஸ்து ஒன்று இல்லவே யில்லை" என்று நினைக்கும்படியாய்ச் சிலரை மறைத்துக்கொண்டிருக்கும். அப்போது அது அஸத்வாவரணம் (இல்லாமற் செய்கிற ஆவரணம்) என்று பெயர் பெறும். "பரமாத்மவஸ்து ஒன்று இருக்கிறது. ஆனால் அது நமக்குத் தோன்றவில்லை" என்று நினைக்கும்படியாய்ச் சிலரை அது மறைத்துக்கொண்டிருக்கும். அப்போது அதற்கு அப் பிரகாகாசாவரணம் (தோன்றாமற் செய்கிற ஆவரணம்) என்று பெயர். ஆவரண சக்திதான் மனிதர்களின் பிறப்பிறப்பாகிய ஸம்ஸாரமென்ற விருக்ஷத்திற்கு ஆணி வேராக இருக்கிறது. விக்ஷேப சக்தியோ! அப்படியல்ல. அது மோக்ஷம் வித்திப்பதற்கும் காரணமாக இருக்கிறது. எப்படி எனில்? விக்ஷேப சக்தியின் கார்யமாகிய பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் பெருமையை மனிதர் மனத்தினால் உன்னி

ஆலோசிக்கும்போது அவர்கட்கு தத்வஞ் ஞானம் பெற வேண்டுமென்ற முயற்சி உண்டாகிறது.

தூங்குகிறவன் காலையில் எழுந்திருந்து பூர்வ ஞாபகத்தின் வாஸனா பலத்தால் முதல் நாள் செய்த கார்யங்களிலேயே மறுநாளும் பிரவிருத்தி செய்கிறான்; அது போன்று ஈசுவரன் பிரளயமாகிய தனது ஸுஷுப்தி (நித்திரை) நிலைமையிலிருந்துப் பிரளயத்தில் தன்னிடம் ஒடுங்கினப் பிராணிகளின் கர்மங்கள் பக்வமாகி அனுபவிக்கவேண்டிய ஸமயம் வந்தபோது எழுந்து முன்போல அவர்களை ஸ்ருஷ்டி செய்துகொண்டு வருகிறான்.

இவ்விதம் ஸ்ருஷ்டியின் உண்மையை அறிந்த பிறகு உலகம் ஈசுவரனிடம் ஒடுங்குவதாகியப் பிரளயத்தின் உண்மையையும் அறிந்துகொள்ளவேண்டியது அவசியமாகையால் அது இதன் பின் நிரூபிக்கப்படும்.



## மூன்றும் அதிகாரம்.



## பிரளயம்.

பிரளயம் என்பது ஜகத்தின் கார்யங்கள் யாவும் அடங்கி ஓரிடத்தில் ஒடுங்கி யிருத்தல் எனப்படும். அதற்கு ஒடுங்கல் என்று பொருள். அது நித்யம், நைமித்திகம், பிராகிருதம், ஆத்யந்திகம் என நான்கு வகைப்படும்.



## நித்யப் பிரளயம்.

மனுஷ்யர், பசு, பக்ஷி, கீடம், (புழு) முதலிய ஸகலப் பிராணிகளுக்கும் ஜாகரம், ஸ்வப்னம், ஸுஷுப்தி என மூன்று நிலைமைகள் உள. அவை நினைவு, கனவு, நித்திரை என முறையே பொருள்படும். ஞானேந்த்ரியங்கள், கர்மேந்த்ரியங்கள், மனம் இவை எல்லாம் தத்தம் தொழில்களைச் செய்துகொண்டிருக்கும் விழிப்பு நிலைமை, ஜாகரம் எனப்படும். இந்திரிய வியாபாரங்கள் அடங்கி முன் கேட்டதும் பார்த்ததும் நினைத்ததுமாகிய தான் அநுபவித்த விஷயங்களை ஸ்மரித்தல் (ஞாபகப் படுத்திக்கொள்ளுதல்) என்பதாகிய மனம் மாத்திரம் தொழில் செய்துகொண்டிருக்கும் நிலைமை, ஸ்வப்னம் எனப்படும். இந்த்ரியங்களும், மனமும் அவற்றின் வியாபாரங்களும் ஒடுங்கி ஆனந்தமாய்த் தூங்கும் நிலைமை, ஸுஷுப்தி எனப்படும். அந்த ஸுஷுப்தி நிலைமை தான் பிராணிகளால் தினந்தோறும் அனுபவிக்கப்படும் நித்யப் பிரளயம் எனப்படுகிறது.

---

## நைமித்திகப் பிரளயம்

ஈசுவரன் பிரம்ம ரூபியாக விருந்து உலகங்களைப் படைக்கும்போது அவனது பகலில் பதினான்கு மனுக்கள் பதினான்கு இந்திரர்கள் முதலியவர்கள் எல்லோரும் தத்தமக்குரிய ஸ்தானங்களிலிருந்துகொண்டு அவரவர் அதிகாரங்களைச் செலுத்துவார்கள்.

மனுக்களின் பெயர்கள் :—1. ஸ்வாயம்புவர், 2 ஸ்வாரோசிஷர், 3. உத்தமர், 4. தாமஸர், 5. ரைவதர், 6. சாக்ஷுஷர், 7. வைவஸ்தர், 8. ஸூர்ய ஸாவர்ணி, 9. தக்ஷஸாவர்ணி, 10. பிரம்ம ஸாவர்ணி, 11. தர்ம ஸாவர்ணி, 12 ருத்திர ஸாவர்ணி, 13. ரோச்சியர், 14. பாவியர் என்பவைகளாம்.

பகலின் முடிவில் ஸமுத்திரங்கள் எல்லாம் ஒன்று சேர்ந்து உலகங்கள் எல்லாவற்றையும் மூடிவிடும்போது அந்த மகா ஜலமத்தியில் பிரம்ம ரூபியான ஈசுவரன் மாத்திரம் ஆதிசேஷ சயனத்தில் படுத்து யோக நித்திரை செய்துகொண்டு ஸத்ய லோகத்தில் இருப்பவர்களால் ஸ்துதிக்கப்படுகிறான். அப்போது ஸுரர்கள், அஸுரர்கள், மனுஷ்யர்கள் முதலிய எல்லாப் பிராணிகளுடைய ஸ்தூல சரீரங்கள் அழிந்து அவர்கள் ஸூக்ஷ்ம சரீரங்களுடன் கூடினவர்களாய் தத்தம் கர்ம வாசனைகளுடன் ஈசுவரனது வயிற்றில் பிரவேசித்திருக்கின்றனர்.

ஒரு மனிதன் தினந்தோறும் காலையில் எழுந்திருந்து அந்தந்தக் கார்யங்களைச் செய்துவிட்டு இராத்திரி ஸுகமாய் நித்திரை செய்யும்போது அவனது ஞானம், இச்சை, கிரியை முதலிய ஸகல வியாபாரங்களும் அவனிடம் அடங்கி லயித்திருப்பனபோன்று பகலில் உலகங்களை எல்லாம் ஸ்ருஷ்டித்து இராத்திரியில் அடங்கின வியாபாரங்களையுடைய ஈசுவரனிடம் சேதனங்கள், அசேதனங்கள் என்ற ஸகலப் பிரபஞ்சங்களும் லயித்திருப்பன.

பிரம்மாவின் பகலாவது:— பதினெட்டு இமைக் கொட்டுகள் கொண்ட காலம் ஒரு காஷ்டை. காஷ்டைகள் பதினெட்டு கொண்டது ஒரு கலை. கலைகள் முப்பது கொண்டது ஒரு முகூர்த்தம். (இரண்டு நாழிகை) முகூர்த்தங்கள் முப்பது கொண்டது ஒரு (பகலும்-இராத்திரியுமான) நாள். நாட்கள் பதினைந்து கொண்டது ஒரு பக்ஷம். பக்ஷங்கள் இரண்டு கொண்டது மனுஷ்ய அளவில் ஒரு மாஸம். அது பிதுருக்களுக்கு ஒரு நாள். அமாவாஸ்யை அவர்களுக்கு நடுப்பகல். பூர்ணிமை நடுராத்திரி. மாஸங்கள் பன்னிரண்டு கொண்டது மனுஷ்யர்களுக்கு ஒரு வருஷம். அது தேவர்களுக்கு ஒரு நாள். உத்தராயணம் அவர்களுக்குப் பகல். தக்ஷிணாயனம் இராத்திரி. இவ்விதம் மனுஷ்ய அளவினால் பதினேழுலக்ஷத்து இருபத்தெண்ணாயிரம் வருஷங்கள் கொண்டது கிருதயுகம். பன்னிரண்டு லக்ஷத்துத் தொண்ணூற்றாறாயிரம் வருஷங்கள் கொண்டது திரேதாயுகம். எட்டு லக்ஷத்து அறுபத்து நாலாயிரம் வருஷங்கள் கொண்டது துவாபர யுகம். நான்கு லக்ஷத்து முப்பத்திரண்டாயிரம் வருஷங்கள் கொண்டது கலியுகம். இந்த நான்கு யுகங்கள் கொண்ட காலம் சதுர்யுகம் எனப்படும். இதுவே தேவர்களுக்கு ஒரு யுகமாகும். இது மனுஷ்யமானத்தால் மூன்று லக்ஷத்து இருபதினாயிரம் வருஷங்களும் தேவமானத்தால் பன்னீராயிரம் வருஷங்களும் கொண்டது.

இம் மாதிரி ஆயிரம் சதுர் யுகங்கள் கொண்டது பிரம்மாவின் ஒரு பகல். அது மனுஷ்யமானத்தால் நானூற்று முப்பத்திரண்டு கோடி வருஷங்களும் தேவ மானத்தால் ஒருகோடியே இருபதுலக்ஷம் வருஷங்களும் ஆகின்றன.

அவ்வளவு காலம் அவருக்கு ஒரு இராத்திரி. பிரம்மாவின் பகல் ஸ்ருஷ்டி கல்ப மென்றும், இராத்திரி க்ஷயகல்பமென்றும் கூறப்படும். இது தான் பிராணி களுக்கு நைமித்திப் பிரளயமென்றும், அவாந்தரப் பிர ளயம் என்றும் சொல்லப்படுகிறது. நிமித்த (காரண) த்தினுல் உண்டாவது நைமித்திகம் என்றும், நடுவில் உண் டாவது அவாந்திரம் என்றும் முறையே பொருள் படு கின்றன. இதற்கு தினப் பிரளயம் என்றும் பெயர்.

---

## பிராகிருதப் பிரளயம்.

இந்தக் கிரமமாகவே பிரம்மாவிற்கு மாஸமும் வருஷ மும் அறிந்துகொள்ளவேண்டும். அவருடைய நூறு வய துள்ள ஆயுள் பரமென்றும், அதன் முன்பாதி முதல் பரார்த்தமென்றும், பின்பாதி இரண்டாம் பரார்த்தமென் றும் கூறப்படும். அவருக்கு ஆயுள் முடியும்போது மஹாப் பிரளயம் உண்டாகிறது. அப்போது ஸகலப் பிராணி களும் தத்தம் கர்மவாஸனைகளுடன் மூலப்பிரகிருதியில் ஒடுங்க அவற்றுடன் கூடின மூலப்பிரகிருதி ஈசுவரனிடம் ஒடுங்கிவிடுகிறது. பிறகு பிரம்ம மானத்திஞல் நூறு வருஷங்

கள் ஸ்ருஷ்டியில்லாமலே இருக்கிறது. அந்த பிரம்மாவின் ஸ்ருஷ்டிகல்பமும் பிரளயகல்பமும் சேர்ந்து மனுஷ்ய மானத்தால் மூன்று பத்மங்கள் ஒரு மகா கர்வம் ஒரு கர்வம் நான்கு அர்புதங்கள் என்ற எண்ணிக்கை கொண்ட (311040000000000) வருஷங்களாகின்றன. இது பிராகிருதப் பிரளயம் என்றும் மஹாப்பிரளயம் என்றும் கூறப்படும். பிரகிருதியுள்பட ஸகலப் பிரபஞ்சமும் ஒடுங்குவதுப் பிராகிருதம் என்றும் அவாந்திரப் பிரளயத்தைவிட பெரிதாக இருப்பதுபற்றி மகாப் பிரளயம் என்றும் பொருள்படுகிறது.

இது ஒரு மகாகல்பம் என்று பெயர். அதில் பிரம்மா தனது உலகத்திலுள்ள பக்தர்களான பரிவாரங்களுடன் பரமபதமென்ற தனது சொந்தமான ஸ்வரூபத்தை அடைகிறார். எந்த ஸாதுக்கள் தாங்கள் செய்த புண்ய விசேஷத்தால் மென்மேலும் உத்தம ஸ்தானத்தை யடைந்து கடைசியாக பிரம்ம லோகத்திற்குச் சென்று அங்கும் பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்குரிய ஈசுவரத் தியான நிஷ்டையிலிருக்கின்றார்களோ; அவர்களும் தமக்கதிபதியான பிரம்மாவுடன் மஹாப் பிரளயத்தில் முக்தி பெறுகின்றனர். இதுவே கிரம முக்தி எனப்படும். அந்தப் பிரளய கல்பம் முடிந்து அடுத்த ஸ்ருஷ்டி கல்பம் வரும்போது பிரம்ம லோகத்தில் வேறொரு பிரம்மா நியமிக்கப்படுகிறார். இவ்விதம் அநேக பிரம்ம கல்பங்களாய் ஈசுவரனால் ஸ்ருஷ்டி யதிகாரம் பெற்ற அநேக பிரம்மாக்கள் முக்தி யடைந்திருக்கின்றனர்.

பிரம்ம ஸூத்திரத்தில் "* அந்தந்த உலகங்களில் அந்தந்த அதிகாரிகள் அதிகாரம் இருக்கும் வரை தான் இருக்கின்றார்கள்" என்றும் பிரம்ம ஸூத்திர சங்கர பாஷ்யத்தில் "‡ பக்தர்கள் எல்லோரும் பகவானிடம் மனதைச் செலுத்தினவர்களாய் ஒவ்வொரு பிரம்ம கல்பத்திலும் பரமபத மடைகின்றார்கள்" என்றும் கூறப்படுகிறது. அப்போது "பூமி ஜலத்திலும், ஜலம் தேயுவிலும், தேயு வாயுவிலும், வாயு ஆகாசத்திலும், ஆகாசம் அவ்யக்தத்திலும், அவ்யக்தம் ஈசுவரனிடத்திலும், ஸ்ருஷ்டிக் கிரமப்படி லயத்தை அடைகின்றன" என்று புராணங்களிற் கூறப்படுகிறது.

கீதையில் "† ஓ அர்ஜுனா கல்பக்ஷயத்தில் ஸர்வப் பிராணிகளும் எனதுப் பிரகிருதியிற் பிரவேசிக்கின்றன. கல்பாதியில் அவற்றை நான் திருப்ப வெளியிடுகிறேன்" எனப்படுகிறது.

இவ்விதம் பகவான் தனது சக்தியை அடிக்கடி பரவச் செய்துகொண்டும் சுருக்கிக்கொண்டும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், என்ற கார்யங்களைச் செய்துகொண்டிருக்கிறார். உபநிஷத்தில் "§ ஸ்ருஷ்டி முதலியன ஈசுவரனது போகத்தின் பொருட்டு என்று சிலரும், விளை

* அத்யாயம் 3. பாதம் 3. ஸூத்ரம் 32.

‡ ,, ,, ,,

† அத்யாயம் 9, சுலோகம் 7.

§ கௌடபாதாசார்யர் அருளிய மாண்டூக்ய உபநிஷத் காரிகை.

யாட்டின் பொருட்டு என்று சிலரும் சொல்லுகிறார்கள். ஸமஸ்த இஷ்டங்களையு மடைந்த பகவானுக்கு இது ஒரு ஸ்வபாவமே யல்லது அவனுக்கு யாதொரு விதமான ஆசையும் கிடையாது" எனப்படுகிறது.

---

## ஆத்யந்திகப் பிரளயம்.

தத்வஞ் ஞானத்தினால் அஞ்ஞானம் விலகி ஆத்மாவை ப்ரத்யக்ஷமாய்ப் பார்க்கின்ற யோகீசுவரர்களின் ஆத்மா, பரமாத்மாவினிடம் சேர்ந்து லயித்திருப்பது ஆத்யந்திகப் பிரளய மெனப்படும். திரும்பப் பிறப்பில்லாத முடிவானப் பிரளயம் என்று அதன் பொருள். முதல் மூன்றுப் பிரளயங்களில் ஒடுங்கின ஆத்மா திரும்பத் திரும்ப எழுந்து உலக வியாபாரங்களைப் பற்றி நிற்பதற்கு ஜன்மங்களை எடுத்து ஈசுவரனை விட வேறாகத் தோன்றிக் கொண்டிருக்கிறான். கடைசியானப் பிரளயத்தில் ஒடுங்கின ஆத்மா திரும்ப ஜன்மம் எடுக்கிறானில்லை. "* சிவனுருவந்தானாய்ச் செறிந்தடங்கி நிற்கிற் பவநாசமாகும் பரிந்து" என்பது ஔவை குறள்.

தற்காலத்திலிருக்கின்ற பிரம்மாவிற்கு முதற் பரார்த்தமாகிய ஐம்பது வயதுகள் சென்றன. இப்போது நடப்

---

* அதிகாரம் 18. குறள் 3. சிவன் எனப்படும் பரமாத்மாவினிடம் தனது உருவம் கலந்து ஒன்றாய்ச் செறிந்து அதனிடமே அடங்கி நின்றுவிடின் பிறகு பிறப்பிறப்பாகிய பவம் தானே பரிந்து நாசமாகும் என்று பொருள்.

பது இரண்டாம் பரார்த்தத்தில் முதல் வருஷத்து முதன் மாஸத்து முதல் தினம். இது சுவேத வராஹ கல்ப மெனப்படும். பிரளய ஜலத்தில் முழுகியிருந்த பூமியை விஷ்ணு, வெள்ளைப் பன்றி யுருவங் கொண்டு மேலே எடுத்த கல்பமானதால் இதற்கு அப் பெயர் வந்தது. இந்த தினத்திலே ஸ்வாயம்புவர் முதல் ஆறு மனுக்கள் இறந்து போனார்கள். இப்போது ஏழாவதாகிய வைவஸ்வத மனுவின் காலம் நடக்கின்றது. இவரது ஆயுளாகிய எழுபத்தொரு சதுர் யுகங்களில் இருபத்தேழு சதுர்யுகங்கள் சென்று இருபத்தெட்டாவது சதுர்யுகத்தின் கலியுகம் தற்காலம் நடைபெற்று வருகின்றது.

இவ்விதம் ஸ்ருஷ்டி, பிரளயம், இவற்றின் யதார்த்தத்தை யறிந்து அவற்றிற்குக் காரணமான ஈசுவரனை யறியவேண்டிய உபாயத்தைத் தேடவேண்டும். "உலகத்தில் சாஸ்திரங்கள் பல. அவற்றால் அறியவேண்டியனவும் பல. நமக் கேற்பட்ட ஆயுளின் காலமோ அற்பம். அதிலும் பல விக்கினங்கள் உண்டாகின்றன. ஆதலால் ஹம்ஸம் ஜலத்துடன் கலந்த பாலில் ஜலாம்சத்தை நீக்கி க்ஷீரத்தை மாத்திரம் கிரஹிப்பது போன்று மனிதர் எது ஸாரமானதோ அதை உபாஸிக்க வேண்டும்" என்று ஆன்றோர் கூறினபடி நமக்கேற்பட்ட அற்ப ஆயுளிலும் பல சாஸ்திரங்களைக் கற்க அவகாச மில்லாததாலும் அதிலும் பல இடையூறுகள் நேரிடுகின்றன வாதலாலும் ஒவ்வொரு நாளும் கொஞ்சம் கொஞ்சமாவது ஈசுவரனை அறியும் வழியை எல்லோரும் தேட வேண்டியது அவ

சியம். ஆதலால் ஈசுவரனை எப்படி அறிகிறது? என்பதைப் பற்றி இதன் பின் கூறப்படும்.

———:❖:———

## நான்காம் அதிகாரம்.

### ஈசுவரனை எப்படி அறிகிறது?

உலகத்திலுள்ள ஜனங்கள் தமது பெரியார் வெளியிட்டிய எந்தெந்த சாஸ்திரங்களைப் பிரமாணமாக கைக்கொண்டிருக்கிறார்களோ; அந்தந்தப் பிரமாண சாஸ்திரங்களிற் கூறிய வண்ணம் அந்தந்த மதஸ்தர்கள் தினந்தோறும் திடமான போகாப்யாஸம் செய்து வர வேண்டும். அதனால், நெடு நாளாக கெட்ட எண்ணங்கள் எழும்பி அழுக்குண்ட மனத்தைச் சுத்தமாகச் செய்து கொண்டு நிர்மலமான அம் மனத்தினில் ஈசுவரனை இடைவிடாது தியானம் செய்ய வேண்டும். அதனாற்றான் அவன் அறியப்படுகிறானே யல்லது மற்ற வெளியிலுள்ளப் பிரயத்தினங்களால் ஒரு பொழுதும் அவன் அறியப்பட மாட்டான்.

வேதத்தில் "* கண்களாலும் வாக்கினாலும் மற்றவைகளாலும் அவன் அறியப்படுகிறானில்லை. நற் கர்மங்களினாலும், தபஸினாலும், சுத்தமான ஸத்வகுணம் பொருந்திய மனதுடையவனும், இடையறாது தியானம் செய்கிற

* முண்டகோபநிஷத், கண்டம் 1.

வனுமான புருஷன் ஞானத்தினால் அவனைப் பார்க்கிறான்" எனப்படுகிறது.

ஒரு க்ஷணப் பொழுதில் மனதிலிருந்து கணக்கில்லாமல் எழும்பும் பற்பல சிந்தைகளை யடக்கி கடியாரத்தி லுள்ள பெண்டுலம் போன்று ஸதா ஆடிக்கொண்டிருக் கும் மனத்தின் சலனத்தை நிறுத்தினால் பிறகு அது ஓரே இடத்தில் நிலையுற்று நிற்கும். அவ்விதமான மனத்தி னிடம் பகவானை இடையறாது சிந்தனை செய்தல் தியானம் எனப்படும். யோகம் என்பது மனத்தின் ஆட்டத்தை நிறுத்துவதற்கு வேண்டிய உபாயம். அதைப்பற்றி பின் பக்தி, யோகம் என்ற அதிகாரங்களில் விரிவாய்க் கூறப்படும்.

"†ஆணிலே பெண்ணிலே யென்போல ஒருபேதைய கிலத்தின் மிசையுள்ளதோ, ஆடிய குரங்குபோல் ஓடியுழல் சிந்தையை யடக்கி யொருகணமேனும் யான், காணிலேன் திருவருளை" என்ற தாயுமானவர் கூற்றிலும் சிந்தையை யடக்கினாலொழிய கடவுளைக் காணமுடியா தென்பது வெளியாகிறது.

சங்கர பகவத்பாதாசார்யர் சிவானந்தலகரியில் "‡எனது மனம் என்ற குரங்கு, மோகம் என்ற காட்டில் எப்போதும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கின்றது. சில ஸமயம் யுவதிஸ்திரீகளின் கொங்கைகள் என்னும் மலைகளின் மீதேறி கூத்தாடுகிறது. சிலவேளை ஆசைகள் என்னும் மரக்கிளைகளின்பேரில் தாவிக்கொண்டிருக்கிறது. கபாலத்

† சித்தர்கணம் பாசுரம் 7.

‡ சுலோகம் 20.

தைக் கையிலேந்தி பிக்ஷை எடுக்கின்ற ஓ பரமசிவனே! உனது தொழிலுக்கு ஒரு குரங்கு, உன்னுடன் கூட இருக்கவேண்டியது அவசிய மாகையால் இங்குமங்கும் ஓடிக்கொண்டிருக்கிற முற்கூறிய எனது மனமாகிய குரங்கைப் பிடித்து உன்னிடம் பக்தி யென்ற கயிற்றினால் திடமாகக் கட்டி உன் வசப்படுத்திக்கொள்'' என்று கூறுகிறார். ''* கருத்துறப் பார்த்து கலங்காமலுள்ளத் திருத்திச் சிவனை நினை'' ''மிக்கமனத்தான் மிகநினைந்து சிந்திக்கில் ஒக்கச் சிவனுருவமாம்'' என்ற ஔவை குறள்களும் கலங்காதமனத்தினிடமாக ஈசுவரனை நினைத்து தியானஞ்செய்து வந்தால் பிறகு அவனை அறிந்து அவனுருவோடு சேரலாம் என்று கூறுகின்றன. ஈசுவரனை அறியும் வழியைப் பின்பற்ற அந்தந்த மதஸ்தர்கள் பிரமாணமாகக் கொண்டிருக்கும் சாஸ்திரங்கள் இனி கூறப்படுகின்றன.

---

ஐந்தாம் அதிகாரம்.

---

## பிரமாணம்.

பரமாத்மாவாகிய பகவானை யுள்ளபடி யுணர்ந்து நமது ஜீவாத்மா அவனுடன் போய்ச் சேருவதற்கு அனு

* அதிகாரம் 12, குறள் 1. 9. சிவன் என்று சொல்லப்படும் ஸர்வேசுவரனை உள்ளத்தினில் கருத்து ஊன்றும்படி பார்த்துக் கொண்டபிறகு திரும்ப வேறு எண்ணத்தால் கலக்கமுறாது அழுக்கற்ற அம்மனத்திலேயே அவனை இருத்தி நினைந்துகொண்டிரு என்றும், அவ்விதம் பெருமை பெற்ற மனத்தினால் ஈசுவரனையே இடைவிடாது வெகுகாலம் நினைத்து நினைத்து சிந்தனை செய்யச் செய்ய அவனுருவமாய் விடலாம் என்றும் பொருள்.

கூலமான வழியை உண்மையாய் உணர்த்தும் கருவிகள் பிரமாண சாஸ்திரங்கள் என்று கூறியிருப்பதால், பிரமாணமாவது யாது? என்பதை இங்கு ஆராய்வோம். யதார்த்தமான அறிவிற்கு ஸாதனம் எதுவோ, அதுதான் ப்ரமாணம் எனப்படும். வடமொழியில் ப்ரமா என்ற பகுதிக்கு யதார்த்த ஞானமென்றும், அந என்ற விகுதிக்கு ஸாதனம் என்றும் பொருள். ப்ரமா—அநம் இரண்டும் சேரும் போது நகரத்திற்கு ணகரம் வந்து ப்ரமாணம் என்றாகிறது. ஆகையால் உண்மையான அறிவை யுண்டாக்க ஸாதனமா யிருப்பது ப்ரமாணம் என்று பொருள் படுகிறது. அது பிரத்யக்ஷப் பிரமாணம், அநுமானப் பிரமாணம், உபமானப் பிரமாணம், சப்தப் பிரமாணம் என்று நால்வகைப் படுகின்றது.

---

## பிரத்யக்ஷப் பிரமாணம்.

பிரத்யக்ஷமான ஞானத்தை யுண்டுபண்ண ஸாதனமாயிருப்பது பிரத்யக்ஷப் பிரமாணம் எனப்படும். பிரத்யக்ஷ ஞானமாவது, கண் காது மூக்கு நாக்கு தோல் என்ற வெளி இந்திரியங்கள் ஐந்து, மனம் என்ற உள் இந்திரியம் ஒன்று ஆக அறுவகை இந்திரியங்களால் உண்டாகும் ஞானம். அந்த ஞானம் சாக்ஷுஷம், சிராவணம், கிராணஜம், ராஸனம், ஸ்பார்சனம் மானஸம் என்று அறுவகைப் படும். தென்மொழியில் அவற்றிற்கு முறையே கண்ணறிவு, காதறிவு, மூக்கறிவு, நாக்கறிவு, தோலறிவு, மனதறிவு என்ற பெயர்கள் சொல்லலாகும்.

சாக்ஷுஷ மென்பது, இது வெளுப்பு, இது நீலம், இது மஞ்சள், இது சிவப்பு, இது பச்சை, இது கபிசம், (தாம்ரம்) இது சித்ரம் (பலவர்ணங்கலந்தது) என்று சக்ஷு ரிந்திரியமாகிய கண்களால் உண்டாகும் ஞானம். சிராவண மென்பது, இது தெளிவாய்த் தெரிகின்ற வ்யக்தமான சப்தம், இது அவ்யக்தமாய்த் தெள்ளெனத் தெரியாத சப்தம் என்று சிரவணேந்த்ரியமாகிய காதுகளால் உண்டாகும் ஞானம். கிராணஜமென்பது, இது நல்வாசனை, இது கெட்டவாஸனை என்று கிராணேந்திரியம் என்ற மூக்கினால் உண்டாகும் ஞானம். ராஸனமென்பது, இது தித்திப்பு, இது புளிப்பு, இது உப்பு, இது உறைப்பு, இது துவர்ப்பு, இது கசப்பு என்று ரஸனேந்திரியம் என்ற நாவினால் உண்டாகும் ஞானம். ஸ்பார்சனமென்பது, இது சீதம், இது உஷ்ணம், இது அதிக உஷ்ணமும் தணிப்புங் கலவாத அநுஷ்ணசீதம் என்று ஸ்பர்சேந்திரியமாகிய தோலால் உண்டாகும் ஞானம். மானஸ மென்பது, இது ஸுகம், இது துக்கம் என்று மனதினால் மாத்திரம் உண்டாகும் ஞானம். இவ்விதம் அறுவகையானப் பிரத்யக்ஷ ஞானம் உண்டாகிறது.

ஒவ்வொரு விதமான ஞானம் உண்டாவதற்கு முன் ஆத்மா மனதுடன் சேருகிறது. மனம் அந்தந்த இந்திரியங்களுடன் சேருகிறது. இந்திரியங்களிலிருந்து நம்மாலறியமுடியாத ஒருவித சக்தி கிளம்பி அதிவேகத்திற் போய் அவ்விந்திரியங்களால் கிரஹிக்கக்கூடிய ரூபம், சப்தம், கந்தம், ரஸம், ஸ்பர்சம் என்ற அந்தந்த விஷயங்களின் பேரில் படுகிறது. உடனே பிரத்யக்ஷ ஞானம் உண்டா

கிறது. முதல் ஐந்து ஞானங்களும் வெளி இந்திரியங்களின் உதவியினால் மனத்தில் உண்டாகின்றன. ஆனாலும் ஆறாவது ஞானம் மாத்திரம் அவ்வெளியிந்திரியங்களின் உதவியில்லாமலே மனத்திலுண்டாவதால் அதற்கு மாத்திரம் மானஸம் என்று சுட்டிக் காட்டும் பெயரிடப்பட்டிருக்கிறது.

முற்கூறிய ஆறுவிதமான பிரத்யக்ஷ ஞானங்களுக்கு கண், காது, மூக்கு, நாக்கு, தோல் என்ற ஆறு விதமான அந்தந்த இந்திரியங்களே முக்கிய ஸாதனங்களாக விருப்பதால், அவ் விந்திரியங்கள் தான் பிரத்யக்ஷப் பிரமாணம் என்று சாஸ்திரத்தில் கூறப்படுகிறது. அக்ஷமென்றால் இந்திரியம். அவ் விந்திரியத்தை முன்னிட்டு உண்டாகும் ஞானம் பிரத்யக்ஷ ஞானம். அதற்கு ஸாதனமா யிருக்கின்ற இந்திரியம் பிரத்யக்ஷப் பிரமாணம் என்று வடமொழியில் கூறப்படுகிறது. இதற்கு காட்சி யளவு எனத் தென்மொழியில் பெயரிடப்பட்டிருக்கிறது.

---

## அநுமானப் பிரமாணம்.

ஊகித்து அறிதல் என்ற அநுமிதி ஞானத்திற்கு ஸாதனமாக இருப்பது எதுவோ; அது அநுமானம் எனப்படும். அநுமா என்ற பகுதிக்கு ஊகித்தறிதல் என்றும், அன என்ற விகுதிக்கு ஸாதனமென்றும் பொருள். அதனால் ஊகித்தறிதலுக்கு ஸாதகமாயிருப்பது அநுமானம் என்று ஏற்பட்டது. தனக்காயது, பிறர்க்காயது என்று அது இருவகைப்படும்.

---

## தனக்காய அநுமானம்.

ஒரு மனிதன் சமயல் செய்யுமிடத்தில் அடிக்கடி பழக்கத்தால் புகை, நெருப்புடன் கூடி யிருப்பதையும், நெருப்பை விட்டு தனித்திராமலிருப்பதையும் பிரத்யக்ஷமாய்ப் பார்த்துக்கொண்டு அவன் நிச்சயமாய்த் தெரிந்து கொள்ளுவதாவது :— சமயலறையிற் போன்று எந்த இடத்தில் புகை இருக்கிறதோ ; அந்த யிடத்தில் நெருப்பு மிருக்கிறது. மடுவிற் போன்று எந்த இடத்தில் நெருப்பு இல்லையோ ; அந்த இடத்தில் புகையுமிராது என்ற விஷயம், அது வியாப்தி ஞான மெனப்படும்.

வ்யாப்தி ஞானமென்பது கார்யம் காரணத்தைப் பற்றியே உண்டாகக்கூடியது. காரணத்தைப் பற்றாது கார்யம் ஒருபோது முண்டாகாது என்ற கார்யத்திற்குக் காரணத்துடன் பற்றுதலறிவு. (வ்யாப்தி—பற்றுதல், ஞானம்—அறிவு) வ்யாப்தி இருவகைப்படும். அவை அன்வய வ்யாப்தி, வ்யதிரேக வ்யாப்தி என்பன. அவை முறையே பற்றின் தொடர்பு, பற்றின் தொடராமை என்று பொருள் படும்.

அம் மனிதனே ஒரு ஸமயத்தில் ஒரு பர்வதத்தை நோக்கிச் செல்லும்போது அதினின்றும் ஆகாய மார்க்கத்தில் உயரக் கிளம்புகிற புகையை மாத்திரம் தூரத்திலிருந்து பார்க்கிறான். அப்பொழுது அவன் பர்வதத்தில் நெருப்பு இருக்கிறதா ? இல்லையா ? என்று ஸந்தேகித்து பிறகு "புகையுள்ள விடத்தில் நெருப்பு உளது" என்ற

அன்வய வ்யாப்தியையும், "புகை நெருப்பை விட்டுத் தனித் திராது" என்ற வ்யாப்திரேக வியாப்தியையும் பிரித்து முன் தெரிந்து கொண்ட இருவித வியாப்தி ஞானத்தை நினைத்துக்கொள்ளுகிறான்.

அதன் பிறகு பர்வதத்தில் நெருப்பை விட்டு தனித் திராத புகை யிருப்பதால் அப் பர்வதத்தில் நெருப்பு மிருக்கிறது என்ற அநுமிதி ஞானத்தை யுண்டுபண்ணிக் கொள்ளுகிறான். ஆகையால் அநுமிதி ஞானத்திற்கு ஸாதனமாயிருப்பது வியாப்தி ஞானம். வியாப்தி ஞானமே அநுமானம் என்று சொல்லப்படுகிறது. இந்த அநுமானம் தனக்குபயோகமுள்ள தாகையால் தனக் காயது (ஸ்வார்த்தம்) எனப் பெயர் பெறும்.

---

## பிறர்க்காய அநுமானம்.

பிரதிஞ்ஞை, ஹேது, உதாகரணம், உபநயம், நிக மனம் என்ற ஐந்து வாக்கியங்களைச் சொல்லி நிரூபிப்ப தால் பிறர்க்காயதான அநுமானம் உண்டாகிறது. எப் படி யெனில்? முற்கூறிய ஸ்வார்த்தாநுமானத்தில் தேர்ந்த ஒருவன் தன் தோழனோடு பர்வதத்தைக் குறித்துச் சென்று கொஞ்ச தூரத்திலிருந்து அம் மலையிலிருந்து கிளம்பும் புகையைப் பார்த்து "புகை யுள்ளவிடம் நெருப் புளது; நெருப்பில்லாத விடத்து புகை யிராது" என்ற தனது இருவித வ்யாப்தி ஞானமாகிய அநுமானத்தால் மலையில் நெருப்பு இருப்பதாகத் தீர்மானித்துக்கொள்ளு

கிறான். பிறகு அநுமானத்தில் தேர்ச்சி பெறாத நேசனுக்கும் அவ்விதமே நம்பிக்கை யுண்டாகும்படி ஐந்து வாக்கியங்களைப் பிரயோகம் செய்கிறான்.

தோழனே! பர்வதத்தில் நெருப்பிருக்கிறது; எதனால்? புகை யிருப்பதால்; புகை யிருந்தால் நெருப்பிருக்க வேண்டுமோ? ஆம்; எந்த இடத்தில் புகை யிருக்கின்றதோ, அந்த இடத்தில் நெருப்பு மிருக்கும்; புகை யிருந்து நெருப்பு மிருக்குமிடமொன்றைச் சுட்டிக் காட்டுக; சமையல் செய்யுமிடத்தை ஞாபகப்படுத்திக் கொள்; நல்லது, ஞாபகப்படுத்திக் கொண்டேன்; அவ்விடத்தில் புகை நெருப்புடன் கூடி யிருப்பதையும், நெருப்பை விட்டுத் தனித்திராம லிருப்பதையும் பார்த்திருக்கிறேன். நெருப்பில்லாததால் புகையில்லாம லிருக்கும் இடத்தையும் சுட்டிக் காட்டுக; மடுவை நினைக்குக; ஆம்; மடுவில் நெருப்பில்லாததால் புகையுமில்லை என்று தெரிந்தேன்; தோழனே! இப் பர்வதத்திலும் நெருப்பை விட்டு தனித்திராத புகை யிருக்கின்றதல்லவா? ஆம்; ஆம்; இருக்கிறது; ஆகையால் தான் பர்வதத்தில் நெருப்பிருக்கிறது என்று சொன்னேன்; என்ற இவ்விதமான ஒருவர்க்கொருவர் ஸம்பாஷணையினால் தோழனுக்கும் "புகையுள்ள விடத்தில் நெருப்பிருக்கும்" "புகை நெருப்பை விட்டுத் தனித்திராது" என்ற இருவித வியாப்தி ஞானம் ஏற்பட்டு விடுகிறது. அதனால் பர்வதத்தில் நெருப்பு இருக்கிறது என்ற அநுமிதி ஞானம் உண்டாகிறது.

பர்வதத்தில் நெருப்பு இருக்கிறது என்பது ப்ரதிஜ்ஞை. புகை யிருப்பதால் என்பது ஹேது. எந்த

இடத்தில் புகை யிருக்கிறதோ அந்த விடத்தில் நெருப்பு மிருக்கும், சமையலறையிற் போன்று என்பது உதாரணம். எப்போதும் நெருப்புடன் கூடி யிருப்பதும் ஒரு போதாவது நெருப்பை விட்டு தனித்திராததுமான புகை, பர்வதத்தில் இருக்கிறது என்பது உபநயம். பர்வதம் நெருப்பை விட்டு தனித்திராத புகையுடன் கூடி யிருப்பதால் அதில் நெருப்பு இருக்கிறது என்பது நிகமனம்.

ப்ரதிஞ்ஞை என்பது நிச்சயமாய்ச் சொல்லுதல். ஹேது வென்பது காரணம். உதாகரணம் என்பது திருஷ்டாந்தப்படுத்திக் காட்டுதல். உபநயம் என்பது பிரதிக்கினையை ஸித்தாந்தத்தின் ஸமீபத்திற்குக் கொண்டு வருதல். நிகமனம் என்பது காரணத்துடன் பிரதிக்கினையை ஸித்தாந்தப்படுத்திக் கூறுதல்.

இவ்விதம் ஐந்து வாக்கியங்களினால் ஸ்வார்த்தாநுமானத்தில் தேர்ச்சி பெற்றவன் பிறனுக்கும் அநுமானத்தை மனத்தினிடம் தோன்றும்படி செய்கிறான். இதுதான் பிறர்க்காய அநுமானம் (பரார்த்தாநுமானம்) எனப்படும்.

இதனால் என்ன ஏற்படுகிறதென்றால்? புகை நெருப்பை விட்டு தனிமையாக விருக்கமுடியாதுபோன்று எந்தப் பொருள் இன்னொரு பொருளை விட்டு தனிமையாக இருக்கமுடியாதென்று நாம் தீர்மானிக்கின்றோமோ; அந்தப் பொருளை நாம் பிரத்யக்ஷப் பிரமாணத்தால் தெரிந்துகொள்ள இடமில்லாம லிருக்கும்போது, அதனால்

தெரிந்துகொண்ட மற்றொரு பொருளைக்கொண்டு இந்த அநுமானப் பிரமாணத்தால் அப் பொருளும் மற்றொரு பொருளுடன் அங்கு இருப்பதாகவே தீர்மானம் செய்து கொள்ள வேண்டும் என்று ஏற்படுகிறது.

---

தப்பிதமான அனுமானம்.

புகை எப்போதும் நெருப்பை விட்டு தனித்திராதது போன்று நெருப்பு எப்போதும் புகையை விட்டு தனித்திராததன்று. சில ஸமயம் அது புகையை விட்டு தனித்திருக்கக்கூடியதே. எப்படி யெனில்? கொல்லன் உலையில் காய்ச்சின இரும்புப் பாளத்தில் நெருப்பு இருக்கிறது. ஆனால், அங்கு புகை யில்லை. இவ்விதமாக புகையிருந்து நெருப்பில்லாத யிடமே கிடையாது. ஆகையால் நெருப்பிருந்தால் புகை யிருக்கவேண்டு மென்ற அவசிய மில்லை. புகை யிருந்தால் நெருப்பிருக்கவேண்டு மென்ற கட்டாயமுண்டு.

நெருப்பினாலேயே புகை யுண்டாக்கப்படுவதினால் நெருப்பு காரணமென்றும், புகை அதன் கார்யமென்றும் ஏற்படுகிறது. உண்டாக்குவது காரணம் என்றும், உண்டாவது கார்யம் என்றும் உலக வழக்கு. கார்யமிருந்தால் காரணம் ஒன்று அவசியமாக இருக்க வேண்டுமே யல்லாது காரண மிருந்தால் கார்யம் உண்டாகவேண்டு மென்ற அவசியமில்லை. பிள்ளை யிருந்தால் தகப்பன் ஒருவன் இருக்க வேண்டியது அவசியம். தகப்பனிருந்தால்

பிள்ளை உண்டாயிருக்கலாம்; உண்டாகாமலு மிருக்க லாம். ஆகையால் பிள்ளை இருந்து தீரவேண்டுமென்ற கட்டாய மில்லை. ஆனதுபற்றி கார்யம் காரணத்தை விட்டு தனித்திராததே யல்லது காரணம் கார்யத்தை விட்டு தனித்திராததல்ல.

இவ்விதம் கார்யத்திற்குக் காரணத்துடன் வியாப்தி ஞானம் உண்டானால் தான் அது சரியான அநுமான மாகும். காரணத்திற்குக் கார்யத்துடன் வியாப்தி ஞானம் உண்டானால் அந்த அநுமானம் தப்பிதமாய்விடும். "பர்வ தத்தில் புகையுளது. நெருப்பிருப்பதால்" என்ற அநுமா னம் தப்பிதம். ஏனெனில் காரணத்தால் கார்யத்தை ஊகித்தறியப்படுகிறது. இங்கு நெருப்பு காரணம்; புகை கார்யம். காரணத்தால் கார்யத்தை ஊகிப்பது காய்ச்சின பாளத்திற் போன்று பல விடங்களில் தப்பிதமாய்விடும். அதனால் கார்ய காரணங்கள் இவை யெனச் சரியாய்க் கண்டுபிடிக்கத் தெரியாதவர்களுக்குண்டாகும் அநுமான மும் அதனால் உண்டாகும் ஊகித்து அறியும் அநுமிதி ஞானமும் தப்பிதமாகவே இருக்கும். அது விஷயத்தில் ஆராய்ச்சி அதிகம் வேண்டும்.

சில சமயம் பனி பெய்யும்போது அது புகை மாதிரி யாகவே இருப்பதால் அங்கு புகை யிருந்தும் நெருப் பில்லையே என்ற ஸந்தேகம் உண்டாகலாம். நெருப்பி லிருந்துண்டாகும் புகைக்குத்தான் புகை என்ற பெயரே யல்லது புகை போன்ற உருவமுள்ள மற்ற வஸ்துக்களுக் கும் அப் பெயர் கிடையாது. பாம்பு போல் தோன்றும்

பழுதையைப் பார்த்து பாம்பென்று பிரமிப்பது போல், புகை மாதிரியாக விருப்பதைப் பார்த்து புகை யென்று பிரமித்தலே தவிர, அது வாஸ்தவ ஞானமல்ல. ஸந்தேகம் (ஐயம்) பிரமம் (திரிபு) இவை யில்லாத வாஸ்தவமான அநுமானத்தால் ஊகிக்கப்படும் அநுமிதி ஞானந்தான் உண்மையாக நிலை நிற்கு மென்பதை நிச்சயமா யறிய வேண்டும். தப்பிதமான அநுமானம் என்பது இதுதான்.

---

## ஈசுவர அநுமானம்.

ஈசுவரனை நாம் பிரத்யக்ஷமாகப் பாக்க முடியாவிடினும் அவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட இவ் வுலகத்தைப் பார்ப்பது பற்றி முற்கூறிய அநுமானத்தால் ஈசுவரன் ஒருவன் இருப்பதாக ஸாதிக்கலாம். உலகம் கார்யமாக விருப்பதால் ஈசுவரனை அதன் காரணனாக அமைக்க வேண்டும். எப்படி யெனில்?

உலகம் ஒரு கர்த்தாவையுடையது என்பது பிரதிக்ஞை; கார்யமாக விருப்பதால் என்பது ஹேது; குடம் போன்று என்பது உதாகரணம். குடம், குயவன் என்ற கர்த்தாவால் உண்டாக்கப்படுவதும், அவனின்றி தானே உண்டாகாததுமான நடபடி யாவருமறிந்த விஷயமாதலால் குடம் ஒரு கார்யமாக விருப்பது போன்று, உலகமும் ஒரு கார்யமாக விருக்கிறது என்பது உபநயம். கார்யமான உலகம் கர்த்தாவை உடையது என்பது நிகமனம். அந்த கர்த்தா நம்போன்று ஸாதாரணனாக இருக்க முடியாதாகை

யால், அவனே அஸாதாரண புருஷனாகிய ஈசுவரன் எனப் படுவான். இது ஈசுவரனைப் பற்றின அநுமானமாகும். தென்மொழியில் அநுமானப் பிரமாணமென்பதை "ஊக வளவு" என்று கூறலாம். பிரத்யக்ஷத்தை முன்னிட் டிருப்பது பற்றி அநுமானம் அதன்பின் கூறப்பட்டது.

---

உபமானப் பிரமாணம்.

உவமையினால் அறிதல் என்ற உபமிதி ஞானத்திற்கு ஸாதனமா யுள்ளது உபமானம் எனப்படும். உபமா என் பதற்கு உவமையைக்கொண்டு அறிதல் என்றும், அன என்பதற்கு அதன் ஸாதனமென்றும் பொருள்படும்.

இதற்கு உதாரணமாவது:—காட்டில் கவயம் என்ற ஒருவகை மிருகம் இருக்கிறது. அது பசுவிற்கொப்பான தாக விருக்குமாகையால் பசுவின் உவமை (ஸமான தர்மம்) உடையது. அதை யறிந்த ஒருவன் அதை யறியாத தனது நண்பனிடம் "கவயம் பசுவிற் கொப்பானது" என்று சொல்லி யிருந்தான். கவயத்தை யறியாதவன் ஒரு ஸமயம் காட்டின் வழியே செல்லும்போது கவய மிருகத்தைப் பார்த்தான். அப்போது அதனிடம் பசுவை யொத்திருக்கும் தன்மையாகிய பசுவின் உவமை யிருப்ப தாக அறிந்தான். "உடன் கவயம் பசுவிற் கொப்பா னது" என்ற தனது நண்பனின் வாக்யம் ஞாபகத்திற்கு வந்தது. அதன் பிறகு "இதுதான் கவயம் என்ற மிரு கம்" என்று தீர்மானித்துக் கொள்ளுகிறான். இந்த

விடத்தில் பசுவிற்கும், கவயத்திற்குமுள்ள உவமை
வினால் " இது கவயம் " என்ற அறிவு உண்டாயிருக்கி
அதுதான் உபமிதி ஞானம் எனப்படும். " கவயம் ப
கொப்பானது " என்ற அறிவுதான் உபமிதி ஞான
யுண்டுபண்ணியதால் அவ் வறிவிற்கு ஸாதனமாக யி
கொண்டு அது உபமானம் எனப்படுகிறது. இது
உபமானப் பிரமாண மெனப்படுகிறது.

---

## வேறு பிரமாணங்கள்.

அர்த்தாபத்தி, அபாவம், ஸம்பவம், ஐதிஹ்யப்
வேறு நான்குப் பிரமாணங்களும் உள. அவ
அர்த்தாபத்தி (அர்த்த—ஆபத்தி) என்பது பெ
ளருவித்தல் என்ற பொருள்படும். " தேவதத்தன்
பான் பகலுண்ணான் பருத்திருப்பான் " என்ற விட
உண்ணுதலின்றி பருத்திருத்தல் பொருந்தாதாகை
தேவதத்தன் பகலில் உண்ணாவிடினும் இரவில் எ
கும் தெரியாமல் உண்ணுகிறான் என்ற பொருளை
வித்துக் கொடுப்பதால் அது அர்த்தாபத்திக்கு உத
மாம்.

அபாவம் என்பதற்கு இன்மை என்று பெ
" இங்கு குடமில்லை " என்ற விடத்தில் குடமிருக்கு
அது நமக்குப் புலப்படும். புலப்படாததால் குட
இன்மை அறிவுண்டாகிறது. இது அபாவப் பிரம
திற்கு உதாரணம்.

ஸம்பவம் என்பதற்கு ஒவ்வுதல் என்று பொருள். "நூறில் ஐம்பது உள்ளன" என்ற விடத்தில் நூறுக்கு மேலுள்ள எண்கள் நூறில் அடங்கியுள்ளன வென்பது ஒவ்வாதாகையால் நூறுக்குக் கீழுள்ள எண்கள் யாவும் அதில், அடங்கியுள்ளன என்பது ஒவ்வக்கூடியது. இது ஸம்பவத்திற்கு உதாரணம்.

ஐதிஹ்யம் என்பதற்கு உலக வழக்கு என்று பொருள். "இந்த ஆலமரத்தில் பிசாசு இருக்கிறது" என்ற வெகு கால முதல் பெரியோர் வாயிலாக கர்ண பரம்பரையாய் வந்த உலக வழக்க வார்த்தையினால் ஜனங்களுக்கு ஆலில் பிசாசு இருப்பதாக அறிவுண்டாகிறது. இது ஐதிஹ்ய மெனப்படும். உபமானம் முதல் ஐதிஹ்யம் ஈராகவுள்ள ஐந்தும் அனுமானத்தில் அடங்குவன என்று புதிய நூலார் அவற்றைத் தனிப் பிரமாணங்களாகக் கொள்ளாது புறக்கணித்தனர்.

---

## சப்தப் பிரமாணம்

ஆப்தனாயிருக்கின்ற புருஷனுடைய வாக்யம் சப்த மெனப்படும். உள்ளதை யுள்ளபடி யதார்த்தமா யறியக் கூடிய சக்தி யுள்ளவனும், தானறிந்த வுண்மையை ஒளிக்காமல் அப்படியே யதார்த்தமாகச் சொல்லுகிறவனுமான புருஷன் ஆப்தன் எனப்படுவான். ஆப்தனுடைய வாக்ய மாகிய சப்தமே பிரமாண சப்த மெனப்படும். ஏனெனில் அது உண்மையான விஷயத்தைத் தெரிவிக்கிறது.

ஆப்தனல்லாதவனின் வாக்யம் பிரமாண சப்த மாகமாட்டாது. ஏனெனில் அது, பொய்யான விஷயத்தைத் தெரிவிக்கின்றது. உண்மையான வாக்யத்திற்குத்தான் சப்தப் பிரமாணம் என்ற பெயரேயல்லது உண்மையல்லாத வாக்யத்திற்கு அப் பெயர் கிடையாது.

ஒரு விஷயத்தை உண்மையாக அறிவ தென்றால் அதில், தோன்றாமை, ஐயம், திரிபு இம் மூன்று குற்றங்களும் இல்லாம லிருக்கவேண்டும். ஒரு விஷயத்தைத் தெரிந்துகொள்ளும்போது அதில் ஒன்றுமே தெரியாம லிருப்பது தோன்றாமை; ஒரு விஷயத்தைத் தெரிந்து கொண்டு அது அப்படியோ! இப்படியோ! என்று தியங்குவது ஐயம்; ஒரு விஷயத்தை மற்றொரு விஷயமாக மாறி நினைத்து மயங்குவது திரிபு எனப்படுகின்றன. இம் மூன்றிற்கும் வடமொழியில் முறையே அப்ரதிபத்தி, விப்ரதிபத்தி, அன்யதாப்ரதிபத்தி எனப் பெயர்கள் வழங்குகின்றன.

நமக்கு ஒரு விஷயத்தை உபதேசிக்கிற குரு அவர் தெரிந்துகொண்ட அவ் விஷயத்தில் முற்கூறிய மூன்று குற்றங்களற்றவராக இருக்கவேண்டும். அவரிடமிருந்து ஒரு விஷயத்தை நாம் கற்கும்போது அம் மூன்று குற்றங்களறக் கற்கவேண்டும். * "கற்கக் கசடறக் கற்பவை கற்றபின் நிற்க அதற்குத் தக" என்ற திருக்குறளில்

* அதிகாரம் 40. திருக்குறள் 1. கற்கவேண்டியனவற்றை குற்றமற கற்கவேண்டும். அப்படி கற்ற பின்னர் கற்றதற் குற்ற வாறு நடக்கவேண்டுமென்று பொருள்.

கசடற வென்பதற்கு முற்கூறின மூன்று குற்றங்களற வென்பது கருத்து. அம்மாதிரியான குரு, ஆப்தன் எனப் படுவான்.

ஒரு குரு சில விஷயங்களை மாத்திரம் கசடறத் தெரிந்திருப்பார். மற்றொரு குரு அவரைவிட கொஞ்சம் அதிக விஷயங்களை அவ்விதம் உணர்ந்திருப்பார். அவ் விதம் உலகத்திலுள்ள ஸகல விஷயங்களையும் குற்றமற முற்றும் உண்மையா யுணர்ந்து ஸகலமான குருக்களுக் கும் குருவாகவும், தனக்கு மேல் குருவில்லாதவனுகவும் விளங்குகிறவன் ஈசுவரன் ஒருவனே. அவன்தான் ஆப்தர் களுக்கெல்லாம் தலைமையான ஆப்தன். கு—என்பது அஞ்ஞான மென்றும், ரு—என்பது நீக்குகிறவன் என் றும் அஞ்ஞானத்தை நீக்குகிறவன் குரு வென்றும் குரு வென்பதற்குப் பொருள் ஏற்பட்டிருக்கிறது. அம் மாதிரி உலகத்தார்களது அஞ்ஞானமென்ற இருளை நீக்க கோடி ஸூர்யன்கள் ஒருமித்தாற் போன்று விளங்கும் பரம குரு என்பான் ஈசுவரனே.

அவனிடமிருந்து வெளியான சப்தம், பிரமாண சப்தங்களுக்கெல்லாம் தலைமையானது. அது வேதம், ஆகமம் என இருவகைப்படும். வேதம் என்பதற்கு அறிவிக்கின்றது என்று பொருள். ஆகமம் என்பதற்கு வேதப் பொருளை வருவித்துக் கொடுப்பது என்று பொருள். ப்ரத்யக்ஷத்தாலும், அநுமானத்தாலும் அறிய முடியாத விஷயங்களைக்கூட வேதம், ஆகமம் இவ் விரண் டும் அறிவிக்கின்றன. இவ் விரண்டும் பகவானுடைய

ஆஞ்ஞைரூபாக விருக்கின்றன. இங்கு முதலில் வேதத்தைப் பற்றி ஆராய்வோம்.

---

## வேதம்.

வேதம் என்பதற்கு அறிவிக்கின்றது என்று பொருள். பிரத்யக்ஷ அநுமானங்களால் அறிய முடியாதனவற்றை யும் வேதம் அறிவிப்பது. அது ஈசுவரனிடமிருந்து தோன்றி, பிறகு மஹர்ஷிகளின் ஞான திருஷ்டியிற் புலப் பட்டு உலகத்திலுள்ள ஜனங்களின் பிரயோஜனத்திற்காக மகரிஷிகளால் வாக்கிய ரூபமாய் அமைக்கப்பட்டது. "யுகங்களின் முடிவில் வேதங்கள், ஆகமங்கள், இதிஹாஸங்கள் முதலியன ஈசுவரனிடம் மறைந்துவிட்டன. பிறகு பிரம்மாவின் ஸ்ருஷ்டி யாரம்பத்தில் அவரது அநுக் ரஹம் பெற்ற மஹர்ஷிகள் அவருத்தரவின் பேரில் தவஞ் செய்து அத் தவத்தின் மூலமாய் அவற்றைத் திரும்பப் பெற்றார்கள்" என்று வ்யாஸ முனிவரால் கூறப்படு கிறது.

வேதமும் வேதம் போன்றப் பிரமாண கிரந்தங்களும் ஸ்ருஷ்டி யாரம்பத்தில் ஈசுவரனிடமிருந்து தோன்றுவன வாகவும், யுகம் முடிகின்றப் பிரளய காலத்தில் அவை அவனிடம் மறைகின்றனவாகவும் இருக்கின்றன. ஆகை யால் அவற்றை ஒருவனால் உண்டுபண்ணப்பட்டதாகச் சொல்லக்கூடாது. ஈசுவரன் போன்று வேதமும் நித்ய மானது. அது ஈசுவரன் வடிவமாயுள்ளது. அதற்கு சப்தப் பிரம்மம் என்ற பெயருமுண்டு.

முற்காலத்திய மகர்ஷிகள் தங்கள் சிஷ்யர்களுக்கு வேதத்தை வாயாற் சொல்லிக்கொடுப்பதும், சிஷ்யர்கள் தங்களுக்கு அது மனப்பாடமாகும் வரைக் கேட்டுக் கேட்டுத் தாங்களும் அதை அடிக்கடி சொல்லி வாக்கிற்கு வசமாகும்படிச் செய்துகொண்டு அவர்களும் தங்கள் சிஷ்யர்களுக்கு அத்யயனம் செய்துவைக்க இம் மாதிரி குரு சிஷ்ய பரம்பரையாக வேதம் உலகத்தில் பரவி யிருக்கிறது. அதனாலேயே அதற்கு சுருதி என்றும் பெயர். சுருதி என்பதற்கு கேட்கப்படுகிறது என்று பொருள். காதுகளால் கேட்டே அது அப்யாஸம் செய்யப்படுவதால் அதற்கு அப் பெயர் வந்தது. நாம் ஒலிக்கும் அக்ஷரங்களுக்கு அறி குறி அடையாளங்களான எழுத்துக்களை உலகத்தார் ஏற்படுத்திக்கொள்ளுவதற்கு முன்னர் கற்பிக்கும் முறை முற் கூறிய விதமே. எழுத்துகள் ஏற்பட்ட இக் காலத்திலும் வேதத்தை மாத்திரம் பழைய முறைப் படிதான் கற்க வேண்டும்.

வேதத்திற்கு எழுத்துக்களுடன் ஸ்வரமும் ஏற்பட்டிருப்பதால் புஸ்தகத்தைப் பார்த்துத் தாங்களே கற்றுக் கொள்வதில் ஸ்வரம் தப்பிதமாய்விடும். வேதத்தில் ஸ்வரம் தப்பிதமாகச் சொல்லுவதனால் மிகுந்தகுற்றம் என்று, வேதமே முறையிடுகிறது. ஏனெனில்? ஸ்வரம் தப்பிதமானால் அதிலுள்ள கருத்தும் தப்பிதமாய்விடுகிறது. நாம் ஒரு நன்மையைக் கருதி வேதவாக்யத்தைச் சொல்லும் போது அக் கருத்துக் கிசைந்த ஸ்வரத்துடன் அக்ஷரங்களை தப்பித மில்லாமற் சொல்ல வேண்டும். நன்மை பயக்கத்தக்க ஒரு வாக்யத்தின் ஸ்வரம் மாறி வேறு ஸ்வ

ரத்துடன் அதை உச்சரித்துவிட்டால் ஒரு ஸமயம் நமக்குத் தீமையைப் பயக்கும்படியான கருத்து அவ் வாக்யத்தால் வெளியாகும். அது ஸ்நாநம் செய்யப்போனவிடத்தில் சேற்றைப் பூசிக்கொண்டது போலாய்விடும். ஸ்வரபேதத்தால் கருத்தின் மாறுதல்கள் உண்டாகும்படி வேதத்தில் பல விடங்களில் இருக்கின்றன. ஆகையால் வேதத்தைக் கற்கின்றவன் ஸ்வர விஷயத்தில் மிக்க கவனமுள்ளவனாக விருக்கவேண்டும்.

வேதத்தின் ஸ்வரங்கள் மூன்று. அவை உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம் என்பன. உயர்த்தி உச்சரிப்பது உதாத்தம்; தணிந்து உச்சரிப்பது அநுதாத்தம்; உயர்த்தாமலும் தணிக்காமலும் ஸமமாய் உச்சரிப்பது ஸ்வரிதம் எனப்படும். இவை மூன்றும் வேதத்தில் பல விடங்களில் ஒவ்வொரு எழுத்துக்கும் வெவ்வேறு ஸ்வரமாக மாறி மாறி வந்துகொண்டிருக்கும். ஆனதால் வேதத்தை குரு முகமாகவே கற்கவேண்டும். "வேதம் பகவானுடைய பெருமூச்சு" என வேதத்தில் கூறப்படுகிறது. * "நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறை மொழி காட்டிவிடும்" என்ற திருக்குறளும் வேதத்தின் பெருமையை உணர்த்துகிறது.

---

* அதிகாரம் 3. திருக்குறள் 8. மறைந்த மந்திரங்களுள்ள வேதமொழியானது இந்நிலவுலகத்துள்ள பயனிறைந்த சொல்லையுடைய மாந்தராகிய முனிவரது பெருமையைக் காட்டிவிடும் என்று பொருள்.

## வேதத்தின் பிரிவுகள்.

† "வேதம் ஒன்றே. ஆனால், கலியுகத்தில் வேத மோதுகிறவர்கள் அற்பாயுளுள்ளவர்களாகவும், அற்ப புத்தி யுள்ளவர்களாகவும் இருக்கப்போவதாக பிரம்மா, விஷ்ணு, சிவன் என்ற மும்மூர்த்திகளின் அம்சம்பெற்ற வியாஸ மகர்ஷியானவர் முன்னமே அறிந்து வேதத்தை முற்றிலும் கற்க அவர்கள் அசக்தர்கள் என்று நினைத்து ஜனானுகூலத்தின் பொருட்டு வேதத்தைப் பல வகுப்பாகப் பிரித்தனர்" என்று தேவி பாகவதத்தில் கூறப்படுகிறது.

வ்யாஸர் வேதத்தை ரிக்வேதம், யஜுர்வேதம், ஸாம வேதம், அதர்வணவேதம் என்று நான்கு வகையாகப் பிரித்து முறையே அவற்றை பைலன், வைசம்பாயனன், ஜைமினி, ஸுமந்து என்ற நான்கு சிஷ்யர்களுக்கு போதித்து அவரவர்கள் அந்தந்த வேதங்களை தத்தம் சிஷ்ய பரம்பரை மூலமாய்க் காப்பாற்றவேண்டுமென்று உத்தரவளித்தார். அப்படியே இப்பவும் நடந்து வருகிறது; அதனாற்றான் சிலர் ரிக்வேதிகளாகவும், சிலர் யஜுர்வேதிகளாகவும், சிலர் ஸாமவேதிகளாகவும், சிலர் அதர்வணவேதிகளாகவு மிருக்கிறார்கள்.

யாகத்தில் ஹோதா, அத்வர்யு, உத்காதா, பிரம்மா என்று நான்கு பேர்கள் முக்யமானவர்கள். அவர்கள் முறையே முற்கூறிய நான்கு வேதங்களையும் தனித்தனியாக நன்றாய்க் கற்றவர்களாக விருக்கவேண்டும். தேவர்

† ஸ்கந்தம் 1, அத்யாயம் 3, சுலோகம் 19.

ஸந்தோஷிக்கும்படியாகச் செய்யும் கிரியை யாகம் எனப்படும்.

ரிக் (புகழ்த்தும்) வேதம், யாகத்தின் அக்னியில் ஹோமஞ் செய்யவேண்டியக் கிரியைகளைப்பற்றிச் சொல்லுகிறது. அவற்றை யறிந்து ஹோமம் செய்கிறவன் ஹோதா எனப்படுவான்.

யஜுர் (ஸந்தோஷப்படுத்தும்) வேதம் யாகத்தில் தேவதைகளை அழைத்தல், தேவதைகளை ஸ்துதித்தல், வேதிகை, அதன் செங்கல்கள், யூபஸ்தம்பம் முதலியவற்றின் விவரணங்களையும் ராஜஸூயம், அசுவமேதம் முதலிய யாகங்களின் விவரணங்களையும், கிரகஸ்தன் தினந்தோறும் செய்யவேண்டிய ஔபாஸனம், அக்னிஹோத்ரம் முதலிய விஷயங்களையும் கூறுகிறது. அவற்றை யறிந்து யாகத்தை நடத்துகிறவன் அத்வர்யு எனப்படுவான். அத்வர்யு என்பவன் யாகம் செய்கின்ற யஜமானன்.

ஸாம (துக்கத்தைப் போக்கும்) வேதம் யாகத்தின் அதிஷ்டான தேவதையாகிய பகவானை ஸ்துதிக்கவேண்டியக் கிரியைகளைப்பற்றிக் கூறுகிறது. அது கான ரூபமாயுள்ளது. ஸாமகானம் செய்கிறவன் உத்காதா எனப்படுவான்.

அதர்வண (நன்மைபயக்கும்) வேதம் யாகத்தில் ஹோதா, அத்வர்யு, உத்காதா இவர்களால் நேரிடும் பிசகுகளை நிவிருத்திக்கின்ற கிரியைகளைப்பற்றிக் கூறுகிறது

ஆம் மூவர்களின் கிரியைகள் தப்பிதமில்லாமல் நடக்கும்படி அவற்றை மேல்பார்த்துக்கொண்டு பிரம்ம வரணத்திலிருப்பவன் பிரம்மா எனப்படுவான். பின்னும் அதர்வணவேதத்தில் அரசர்களுக்கு நேரிடும் ஆபத்துகளை நிவிருத்தி செய்யவும், உலகத்திற்கு துர்பிக்ஷத்தைப் போக்கி ஸுபிக்ஷத்தை யுண்டுபண்ணவும், சத்துருக்களை ஓட்டுவதற்கு பூதங்களை யுண்டுபண்ணவும், ஸாதனமான பற்பலவிதமான கிரியைகள் கூறப்படுகின்றன.

ரிக்வேதத்திற்கு பிருகஸ்பதியும், யஜுர்வேதத்திற்கு சுக்ரனும், ஸாமவேதத்திற்கு அங்காரகனும், அதர்வண வேதத்திற்கு புதனும் அதிபதிகளாவார்கள். அந்தந்த வேதத்தைச் சார்ந்தவர்கள் தந்தம் வேதத்தின் அதிபதி அஸ்தமனமாயிருக்கும்போது வேதாரம்பம் செய்யக் கூடாது. நான்கு வேதங்களும் முறையே இருபத்தொன்று, நூறு, ஆயிரம், ஒன்பது என்ற எண்ணிக்கையுற்ற சாகை(பிரிவு)களுள்ளன. முற்கூறிய வேதங்களில் சில பாகம் மந்த்ரங்களாகவும், சில பாகம் விதிகளாகவும், சில பாகம் நிஷேதங்களாகவும், சில பாகம் அர்த்த வாதங்களாகவு மிருக்கின்றன.

ஜபம், ஹோமம், ஸ்துதி, தானம், ஆராதனம், யாகம் முதலியவற்றைச் செய்யுங்காலங்களில் பிறர்கட்குத் தெரியாமல் மெள்ள உச்சரிக்கக் கூடியவைகள் மந்திரங்கள் எனப்படும். மந்த்ரம் என்பதற்கு மனனம் செய்கிறவனைக் காப்பாற்றுகிறது என்று பொருள். ஸத்யத்தைச் சொல். தர்மமதைச் செய். தினந்தோறும் ஸந்தியா

தேவியை உபாஸனை செய். ஜீவனிருக்கும் வரை அக்னி ஹோத்ரம் செய். வேதத்தை அத்யயனம் செய், என்ற இவைபோன்ற ஸத் கார்யங்களில் நியமனம் செய்கின்ற வைகள் விதிகள் எனப்படும். விதி என்பதற்கு ஏவுதல் என்று பொருள். பொய்யைச் சொல்லாதே. மயக்க வஸ்துக்களைச் சாப்பிடாதே. கள் குடியாதே. பிறர் பத்னி களிடம் செல்லாதே, என்ற இவைபோன்ற கெட்டகார்யங் களினின்று விலக்குகின்றவைகள் நிஷேதங்கள் எனப் படும். நிஷேதம் என்பதற்கு தடுத்தல் என்று பொருள். விதித்த கர்மங்களை ஸ்துதி செய்வதால் அவை மேலானவை என்றும் நிஷேதித்த கர்மங்களை நிந்திப்பதால் அவை தாழ்ந்தவை என்றும் ஜனங்களுக்கு போதிக் கின்றவைகள் அர்த்த வாதங்கள் எனப்படும். சிரத்தை யுடன் தானம் செய்யவேண்டும் என்பது விதி. தானம் செய்வதினின்றும் எல்லாக் கார்யமும் ஸித்தியாகிறது என்பது விதியின் ஸ்துதி. பொய்யை சொல்லக்கூடாது என்பது நிஷேதம். பொய் சொல்லுகிறவன் அடியோடு நசித்துவிடுகிறான் என்பது நிஷேதத்தின் நிந்தை. இத ஞல் விதித்த கர்மங்கள் செய்யத்தகுந்தனவென்றும், நிஷேதித்த கர்மங்கள் தள்ளத்தகுந்தனவென்றும் நாம் தெரிந்துகொள்ளுகிறோம். அர்த்தவாதம் என்பதற்கு விஷயத்தை விளக்கிச் சொல்லுதல் என்று பொருள்.

பின்னும் வேதங்களில் கர்மகாண்டம், உபாஸனு காண்டம், ஞானகாண்டம் என்ற மூன்று பிரிவுகளும் உள. கர்மகாண்டம் கர்மங்களின் ஸ்வரூபத்தையும், உபாஸனுகாண்டம் யோகத்தின் ஸ்வரூபத்தையும், ஞான

காண்டம் பிரம்மத்தின் ஸ்வரூபத்தையும் விளக்குகின்றன. ஞானகாண்டம் வேதாந்தங்கள் என்றும், உபநிஷத்துகள் என்றும் கூறப்படும். உபநிஷத் என்பதற்கு பிரம்மத்தின் ஸமீபத்தில் சேர்ப்பிவிக்கிறது என்று பொருள், முற் கூறிய வேதமென்ற ஒரு பெரிய விருக்ஷம் கடர், கௌது மர், திரித்திரி முதலியவர்களால் காடகம், கௌதுமம், தைத்தரீயம் முதலிய அநேக கிளைகளுடன் பிரிக்கப்பட்டு இப்பொழுதும் உலகில் விளங்கிக்கொண்டிருக்கிறது.

---

## உப வேதங்கள்.

முற்கூறிய நான்கு வேதங்களைத் தவிர உப வேதங் களும் நான்கு இருக்கின்றன. அவை ஆயுர்வேதம், அர்த்தவேதம், தநுர்வேதம், காந்தர்வவேதம் எனப்படும். வேதங்களிற் சொல்லிய விஷயங்களைத் தவிர, மற்றும் சில விஷயங்கள் ஜனங்களின் அநுகூலத்திற்கு அவசிய மானவைகளாக யிருப்பதை ஆலோசித்து உலகத்திற்கு அருள்புரிந்த சில மகர்ஷிகளின் வாக்கிலிருந்துண்டான வாக்யங்களின் தொகுதி உப வேத மெனப்படும். உப வேதம் என்பதற்கு வேதத்தின் பக்கத்திலிருப்பது என்று பொருள்.

அவற்றுள் ஆயுர்வேதம் என்பது, ப்ராணிகளுக் குண்டாகும் வியாதிகளைப் போக்கவேண்டியதற்குரிய சிகிச்சைகளைச் சொல்லுகிறது. அது ஆயுள் விருத்தியைப் பற்றி கூறுவதால் ஆயுர்வேத மெனப்படுகிறது. அர்த்த வேதம் என்பது, யாகத்திற்கு வேண்டிய தக்ஷிணை, ஹோம

திரவியங்கள் முதலிய ஸாதனப் பொருள்களைப் பற்றிக் கூறுகிறது. அது அரிய பொருள்களைக் கூறுவதால் அர்த்தவேத மெனப்படுகிறது. தநுர்வேத மென்பது, அரசர்கள் எதிரிகளுடன் யுத்தம் செய்யும் சமயத்தில் வில்லில் அம்புகளைத் தொடுத்து அந்தந்த ஸமயத்திற்குத் தக்கபடி சரமாரிகளைப் பொழிவதற் கநுகூலமான வழிகளைச் சொல்லுகிறது. அது வில்வித்தையைப் பற்றிக் கூறுவதால் தநுர்வேத மெனப்படுகிறது. காந்தர்வ வேத மென்பது, ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற ஏழு ஸ்வரங்களின் பேதத்தால் குரலின் ஆரோகண (ஏறுதல்) அவரோகண (இறங்குதல்) ங்களை ஏற்படுத்தி அக் குரலின் மாறுதலால் பற்பல விதமான கீதங்களைப் பாடுவதற்கு வேண்டிய மார்க்கங்களைக் கூறுகிறது. மயில், எருது, ஆடு, வீணை, குயில், குதிரை, யானை இவற்றின் ஒலிகள் முறையே முன் சொன்ன ஏழு ஸ்வரங்களை ஒத்திருக்கும். அந்த வேதம் தேவர்களில் ஒரு பிரிவினரும், ஸங்கீத சாஸ்திரத்தில் தேர்ச்சியுள்ளவருமான கந்தர்வர்களுக்கு ப்ரியமானதால் காந்தர்வவேத மெனப்படுகிறது.

வேதத்திலுள்ள உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம் என்ற மூன்று ஸ்வரங்கள்தான் காந்தர்வ வேதத்தில் ஏழு ஸ்வரங்களாக மாற்றப்பட்டு அவை கீர்த்தனங்களைப் பாடும்போது அநந்தமான ஸ்வரங்களாக மாறிச் சொல்லுகிறவர்கட்கும், கேட்பவர்கட்கும் ஆனந்தத்தை விளைவிக்கின்றன. அப்போது ஜனங்களின் மனம் நாதப் பிரம்மத்தில் லயிக்கிறது. ஆதலால் பகவானின் ஸ்தோத்திரங்

களைச் சொல்லும்போது இசையுடன் சொல்லுதல் ஈச னிடம் மனம் லயிக்கக் காரணமாகும்.

---

வேதத்தின் அங்கங்கள்

அல்லது

சாஸ்திரம் (திருத்துவது).

அவ்விதமான வேதத்தின் அர்த்தத்தை யறிவதின் பொருட்டு அதன் அங்கங்களாக ஆறு சாஸ்திரங்கள் அந்தந்த மகர்ஷிகளால் வெளியிடப்பட்டிருக்கின்றன. அவை சிக்ஷை, வ்யாகரணம், சந்தஸ், நிருக்தம், ஜ்யோதிஷம், கல்பம் என்பன. சிக்ஷை, வ்யாகரணம் இவற்றிற்கு பாணிநியும், சந்தஸிற்கு பிங்கலநாதரும், நிருக்தத்திற்கு யாஸ்கரும், ஜ்யோதிஷத்திற்கு ஆர்யபட்டரும், கல்பத்திற்கு காத்யாயனர் முதலியவரும் வேதத்திலிருந்து பிரித்துப் பிரகாசப்படுத்தினவராவர். அவை வேத புருஷனுக்கு முறையே மூக்கு, முகம், பாதங்கள், காதுகள், கண்கள், கைகள் என்ற அவயவங்களாகும்.

1. சிக்ஷை (கற்பிப்பது) என்பது, வேதத்தை அத்யயனம் செய்யவேண்டிய முறையைத் தெரிவிக்கிறது. அது அந்தந்த அக்ஷரங்கள் உண்டாகும் கண்டம் (கழுத்து), தந்தம், கதுப்பு, உதடு முதலிய ஸ்தானங்களையும் அவற்றை யுச்சரிக்கும்போதுண்டாகும் விவாரம், ஸம்வாரம் முதலிய பிரயத்னங்களையும் வேதவாக்யங்கள் மாறுதலடையாமலிருக்கும் வண்ணம் பதபாடம், கிரமபாடம்

என்பனவற்றையும் தெளிவாய்க்கூறுகிறது. எழுத்துகளை ஒலிக்கும்போது அவற்றின் ஸ்தானங்கள் விரிந்தால் அது விவாரம் என்றும், சுருங்கினல் அது ஸம்வாரம் என்றும் சொல்லப்படும். பதபாடம் என்பது, வேதத்தின் ஒவ்வொரு வாக்கியத்தின் பதங்களை தனித்தனிப் பிரித்து ஸ்வரத்துடன் உச்சரித்தலாகும். கிரமபாட மென்பது, வேதத்தின் இரண்டு பதங்களை வரிசையாகச் சொல்லிய பின் முன் பதத்தை அடிக்கடி விட்டு பின்னுள்ள ஈரிரண்டு பதங்களை வரிசையாகச் சேர்த்து தொடர்ந்து ஸ்வரத்துடன் உச்சரித்தலாம். அதை யநுசரித்து வேதத்தின் இரண்டு, மூன்று பதங்களைச் சேர்த்துச் சொல்லி அவற்றுள் முன்னும் பின்னுமாக சடைப்பின்னல்போன்று ஒரு வித கணக்குடன் சில பதங்களை அடிக்கடி விட்டும் மேலும் தொடர்ச்சியாய்த் திரும்பத்திரும்ப சேர்த்தும் ஸ்வரத்துடன் உச்சரித்தலாகிய ஜடை, கனம் என்பனவற்றையும் வேதவாக்யங்கள் எந்த தேசத்திலும் எந்த இடத்திலும் மாறுமல் இருப்பதற்காகப் பிந்திய அறிஞர்கள் பலமாய் ஏற்படுத்தி யிருக்கின்றனர்.

2. வியாகரணம் (நன்ருக்குவது) என்பது ஸம்ஸ்கிருத பாஷையின் இலக்கணம். இது ப்ரகிருதி (பகுதி) இது விக்ருதி (விகுதி) என்ற விவேகத்தை முன்னிட்டுத் தப்பிதமில்லாத பதங்களைப் பிரயோகிப்பதற்கு வேண்டிய அறிவை உண்டுபண்ணுகிறது.

3. சந்தஸ் (ஸந்தோஷப்படுத்துவது) என்பது யாப்பிலக்கணம். அது விருத்தங்களை (சுலோகங்களை) இயற்று

வதற்கு வேண்டிய மாத்திரைகள், எழுத்துகள், பாதங்கள் (அடிகள்) முதலிய நியமங்களையும், அவற்றின் இலக்ஷணங்களையும் ஸ்பஷ்டமாய் விளக்குகின்ற சாஸ்திரம். ஒரு உயிரெழுத்தை யுச்சரிப்பதற் கேற்பட்ட காலம் ஒருமாத்திரையாம். ஒரு மெய்யெழுத்தின் காலம் அரைமாத்திரையாம்.

4. நிருக்தம் (நன்முய்க்கூறுவது) என்பது, வேதத்தின் அர்த்தங்களுடைய தாத்பர்யத்தை நிச்சயம் செய்வதற்கு பதம், வாக்யம் முதலியவற்றைப் பிரித்துக் காட்டுகிற சாஸ்திரம்.

5. ஜ்யோதிஷம் (கிரகங்களைப்பற்றினது) என்பது, ககோளசாஸ்திரமும் பல சாஸ்திரமும் அடங்கியது. ககோள சாஸ்திரம், வானத்திலுள்ள கிரகம் முதலியவற்றின் ஸஞ்சாரத்தைப்பற்றிக் கூறுகிறது. க—என்பது ஆகாசம். கோளம்—என்பது உருண்டை. பல சாஸ்திரம், மனிதர் முதலிய பிராணிகளுக்கு கிரகாதிகளின் ஸஞ்சாரத்தாலுண்டாகும் பலன்களைப் பற்றிச் சொல்லுகின்றது.

6 கல்பம் (ஏற்படுத்துவது) என்பது வேதத்திற் கூறிய அக்னி சம்பந்தமான கிரியைகளில் மந்த்ரங்களைச் சொல்லும்போது செய்யவேண்டிய தந்த்ரங்களைக் காட்டுகிற சாஸ்திரம். கிரியை செய்கிறவனைக் காப்பாற்றுகிறது தந்த்ரம். எனப்படும். கிரகஸ்தர்கள் அந்தந்த காலங்களில் செய்யவேண்டிய கிரியைகளுக்கு ஸம்பந்தமான கிருஹ்ய ஸூத்ராங்களும், ஜனங்களின் வழக்கங்கள் விவகா

ரங்கள் முதலியவற்றின் ஸம்பந்தமான தர்ம ஸூத்ரங்களும், யாகஸம்பந்தமான ச்ரௌத ஸூத்ரங்களும், யாக சாலையை நிர்மிக்க வேண்டியதற்கான க்ஷேத்ர கணித முறைகளை விஸ்தாரமாய்க் கூறுகின்ற சுல்வஸூத்ரங்களும் கல்பத்தி லடங்கி யிருக்கின்றன. ஸூத்ரம் என்பதற்கு நூல், என்று பொருள்.

முன்சொன்ன சுல்வஸூத்ரங்களின் தாத்பர்யத்தை யறிவதற்கு ஜ்யாமிதி (க்ஷேத்திரகணிதம்) யில் நல்ல அறிவு இருக்கவேண்டியது அவசியம். ஜ்யா—என்றால் பூமி யென்றும், மிதி—என்றால் அளவு என்றும் பொருள்படுவதால் ஜ்யாமிதி என்பதற்கு பூமியின் அளவைப் பற்றிய நூல் என்ற பொருள் ஏற்படுகிறது. ஆனதுபற்றி சுல்வ ஸூத்ரங்களில் க்ஷேத்ரகணிதம் கற்பிக்கப்படுகிறது. மேனாட்டார் இக் காலத்தில் "யூக்லிட்" என்று வழங்குகிற க்ஷேத்ரகணிதம் என்னும் நூலின் 1-வது பாகத்திற் கூறிய விதிகள் சுல்வஸூத்ரங்களின் ஆரம்பத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. மேனாட்டார்களால் தற்காலம் கொஞ்சம் கொஞ்சமாய்ப் புதிதாய்க் கண்டுபிடிக்கப்படுவதாகச் சொல்லப்படும் விஷயங்களில் அநேகங்களை நமது முன்னோர் முன்னமே யுணர்ந்து உலகத்தார்களுக்கு உபயோகப்படுமாறு வெளியிட்டிருக்கின்றனர். அவைகளை அடிக்கடி பழக்க வழக்கங்களில் கொண்டுவராததாலும், அவற்றை ஆதரிக்க மனிதர்கள் அருமையாய்விட்டதனாலும் நம் முன்னோர்களின் அநேக நூல்கள் இப்போது மறைந்து வருகின்றன. நிற்க;

---

## உபாங்கங்கள்.

பின்னும் வேதத்திற்கு நான்கு உபாங்கங்கள் இருக்கின்றன. அவை: மீமாம்ஸா சாஸ்த்ரம், நியாய சாஸ்த்ரம், தர்ம சாஸ்த்ரம், புராணம் எனப்படும்.

மீமாம்ஸா என்பது, வேதவாக்யங்களுடைய அர்த்தங்களில் பரஸ்பரம் விரோதத்தினால் ஸந்தேகம் ஏற்படும் போது அந்தந்த வைதிகலௌகிக நியாயங்களைக் காண்பித்து அதன் மூலமாய் அந்த ஸந்தேகங்களைப் போக்குவதின் பொருட்டு ஏற்பட்ட சாஸ்திரம். வேதத்தில் ஓரிடத்தில் ஒரே ருத்திரன் தான் உண்டு. இரண்டாவது ருத்ரன் இல்லை என்றும், மற்றோரிடத்தில் ஆயிரமாயிரம் ருத்ரர்கள் பூமியில் இருக்கிறார்கள் என்றும் சொல்லப்படுகிறது. இதனால் பரஸ்பரம் விரோதமேற்பட்டு ஸந்தேகமுண்டாகிறது. இவ்விதமே பிரும்மமானது கண், காது, கை, கால்களற்றது என்று ஓரிடத்திலும், மற்றொரு பக்கத்தில் அந்த பிரம்மரூபமான புருஷன் ஆயிரம் தலைகள் கண்கள் கால்கள் உடையவன் என்றும் சொல்லப்படுகிறது. இதனாலும் ஸந்தேகம் உண்டாகிறது. மீமாம்ஸையிலுள்ள நியாயத்தினாலே அதைப் போக்கிக்கொள்ள வேண்டும். எப்படியெனில்? ருத்ரன் ஒருவனாக இருந்தபோதிலும் அவன் ஆயிரக்கணக்கான அனேகவித சரீரங்களை எடுத்துக்கொள்ள சக்தியுள்ளவன் என்று தெரிவிப்பதன் பொருட்டு ஆயிரம் ருத்திரர்கள் இருக்கிறார்கள் என்று கூறப்பட்டிருக்கிறது. கண், காது, கை, கால்கள் இல்லாத ஜகதீசனுக்கு நமக்குப்போன்று கர்மவசத்தாலுண்டாகாத

தும் பஞ்சபூத விகாரமற்றதும் தன்னிச்சையினலேயே உண்டாகிறதும் காரணமற்றதுமான ஆயிரம் தலை கை கால்களை உலக அநுக்ரஹத்தின்பொருட்டு உண்டாக்கிக் கொள்ள சக்தி இருக்கிறதாகத் தெரிந்துகொள்ள வேண்டும். இவ்விதம் அந்தந்த ஸந்தேகங்களை அந்தந்த நியாயங்களைக்கொண்டு நிவிர்த்தி செய்துகொள்ள வேண்டும்.

நியாயமென்பது தர்க்க சாஸ்திரம். அது உலகத்திலுள்ள பதார்த்தங்கள் இத்துணையுள்ளன என்பதைப் பிரித்துக்காட்டி அவற்றின் இலக்ஷணங்களையும் தன்மைகளையும் உட்பிரிவுகளையும் விரிவாய்க் கூறுகிறது. தர்ம சாஸ்திர மென்பது ஸ்மிருதிகளாகும். புராண மென்பது பழமையான சரித்திரங்களைக் கூறுகிறது. முற்கூறிய வேதத்தின் அங்கங்களை அறிந்தாற்றான் வேதார்த்தத்தை யறியலாமாகையால் வேதங்களைக் கற்கின்றவர்கள் அவற்றின் அங்கங்களையும் கற்கவேண்டும். விரிவுள்ளனவாய ஸ்மிருதிகள், புராணங்கள் இங்கு வேருகப் பிரித்துக் கூறப்படுவன.

---

## ஸ்மிருதிகள்.

வேதம் உலகத்தில் தோன்றிய காலத்திற்குப் பிற்காலத்திய மகர்ஷிகள் அக் காலத்தியவர்களால் வேதத்தின் அர்த்தத்தை யறிவது மிகவும் கஷ்டஸாத்யமாக இருப்பதை யுணர்ந்து வேதார்த்தத்தின் தாத்பர்யத்தை எடுத்து அதிக விரிவும் சுருக்கமுமில்லாமல் ஸ்மிருதிகளாகவும் புராணங்களாகவும் செய்திருக்கின்றனர். ஸ்மிருதி (நினைக்கப்

படுவது) என்பதற்கு வேதார்த்தத்தை நினைத்துச் செய்யப்பட்ட நூல் எனப்படும். அது வேதத்திற் கூறிய ஆசாரம், விவஹாரம், பிராயச்சித்தம் முதலியவற்றைக் கூறுவதும், பிரவிர்த்தி மார்க்கத்திற்குரிய கர்மங்களின் ஸ்வரூபத்தைக் காண்பிக்கின்றதும், நிவிர்த்தி மார்க்கத்திற்குரிய பிரம்ம ஞானத்தின் ஸ்வரூபத்தை நிரூபிக்கின்றதுமான சாஸ்திரம். அதற்கு தர்ம சாஸ்திரமென்றும் பெயர்.

அந்த ஸ்மிருதிகள் பதினெட்டு. அவை :—மநு ஸ்மிருதி, பராசரஸ்மிருதி, யாஞ்யவல்கியஸ்மிருதி முதலியன. அவற்றை இயற்றினவர்களும் பதினெண் மகர்ஷிகள். அவர்களின் பெயர்கள் :—1. மநு, 2. பிரகஸ்பதி, 3. தக்ஷர், 4. கௌதமர், 5. யமர், 6. ஆங்கிரன், 7. யோகீச்வரர், 8. ப்ரசேதஸ், 9. சாதாதபர், 10. பராசரர், 11. ஸம்வர்த்தர், 12. உசநஸ், 13. சங்கர், 14. லிகிதர், 15. அத்ரி, 16. விஷ்ணு, 17. ஆபஸ்தம்பர், 18. ஹாரீதர் என்பன. இவற்றில் மநுதர்ம சாஸ்திரந்தான் அநுஷ்டானத்திற்கு முக்யமாக இருக்கிறது. வேதத்தில் * "மநு யாதொன்றைச் சொன்னரோ அது (உலகத்திற்கு) மருந்து" எனப்படுகிறது. வேதம் பின்வரும் ஸங்கதிகளில் சிலவற்றை நமக்கு முதலிலேயே எடுத்துக் கூறுகிறது. "மநுஸ்மிருதியில் வேதங்களின் கருத்து கொஞ்சமும் தவருதலின்றி எடுத்துக் கூறப்படுவதால் அதுவே ப்ரதானமானது. அதற்கு விபரீதமான விஷயங்கள் மற்ற ஸ்மிருதிகளில் சொல்லப்படுமானல் அவை

* யஜுர்வேதம், காண்டம் 2. ப்ரச்னம் 1. அநுவாகம் 11.

ஆதரிக்கப்படமாட்டா.” என்று பிரகஸ்பதி ஸ்மிருதி வியாக்யானத்தில் கூறப்படுகிறது.

முற்கூறியவைகளைத் தவிர வேறு பதினெட்டு உப ஸ்மிருதிகளும் உள. அந்த ஸ்மிருதி கர்த்தர்கள் :— 1. ஜாபாலி, 2. நாசிகேதர், 3. ஸ்கந்தர், 4. லௌகாக்ஷி, 5. கச்யபர், 6. வ்யாஸர், 7. ஸநத்குமாரர், 8. சந்தநு, 9. ஜநகர், 10. வ்யாக்ரர், 11. காத்யாயனர், 12. ஜாதூகர்ணி, 13. கபிஞ்சலர், 14. கணுதர், 15. போதாயனர், 16. விச்வாமித்ரர், 17. பைடீநஸி, 18. கோபிலர் என்பவர்கள்.

முன்சொன்ன ஸ்மிருதிகளுள் நான்கு யுகங்களுக்கும் தனித்தனி ஸம்பந்தப்பட்ட நான்கு ஸ்மிருதிகள் முக்யமானவை. கலியுகத்தில் பராசரஸ்மிருதிதான் முக்யமானது. அவ்விதமே பராசரஸ்மிருதி முதல் அத்யாயத்தில் “ஜனங்கள் கிருதயுகத்தில் மநுஸ்மிருதியையும், திரேதாயுகத்தில் கௌதமஸ்மிருதியையும், த்வாபரயுகத்தில்சங்கஸ்மிருதி, லிகிதஸ்மிருதி இவ்விரண்டும், கலியுகத்தில் பராசரஸ்மிருதியையும் அநுஷ்டிக்கின்றவர்களாக இருக்கவேண்டும் என கூறப்படுகிறது. இங்குஸ்மிருதிகளுக்கு அடுத்தபடியாகவும், புராணங்களுக்கு மேல்படியாகவும், முன்னோரால் பிரமாண க்ரந்தங்களாக எடுத்துக்கொள்ளப்பட்டனவும், புராணம் போன்று புராதன சரித்ரங்களைக் கூறுகின்றனவுமான இதிஹாஸங்களைப்பற்றியும் தெரிந்துகொள்ளவேண்டியது அவசியமாகையால் அவைகளைப்பற்றி புராணங்களுக்கு முன் கூறப்படுகிறது.

---

## இதிஹாஸங்கள்.

தர்மம் முதலிய நான்குவிதமான புருஷார்த்தங்களைப் பற்றி பற்பல கதைகளின் மூலமாய் ஜனங்களுக்கு உபதேசம் செய்கின்ற பூர்வ காலத்திய சரித்திரங்களடங்கினது, "இதிஹாஸம்" என்று அதன் இலக்ஷணம் கூறப்படுகிறது. இதிஹாஸ என்ற பதத்திற்கு "இப்படி முன் இருந்தது" என்பது பொருள். இராமாயணம், பாரதம் என்ற இரண்டு மகாகாவ்யங்களும் இதிஹாஸம் எனப்படுகின்றன.

இராமாயணம் என்பது, மகாவிஷ்ணுவின் அவதாரமாகிய ஸ்ரீராமனின் சரிதத்தைத் தொடர்ச்சியாய்க் கூறுகிறது. அதை முற்றும் தெரிந்துகொள்ளுகிறவர்களுடைய மனத்தில் மாதா, பிதா, அரசன், குரு, தெய்வம் இவர்களிடம் பக்தி, ஸகோதரவாத்ஸல்யம், ஏக பத்தினி விரதம், எஜமான விச்வாஸம், சொன்னசொற் பிறளாமை, பெரியோரிடம் வணக்கம், பதிவிரதையின் ஒழுக்கம், நன்றி மறவாமை, சரணமடைந்தவனைக் கைவிடாமற் காப்பாற்றுதல் முதலிய அநேக தர்மங்கள் நன்றாய்ப் பதியும்படியாக அது அமைந்திருக்கிறது. அது ஆதிகாவ்யம் என்றும் கூறப்படும். அதை இயற்றினவர் வால்மீகி மகர்ஷி. அதில் இருபத்துநாலாயிரம் சுலோகங்கள் அடங்கியிருக்கின்றன.

பாரதம் என்பது, சந்திரவம்சத்திற்பிறந்த ஒரு குடும்பத்தினர் பொறுமையினாலும், பகையினாலும் தங்களுக்

குள் சண்டையிட்டுக்கொண்டார்கள். ஒரு வகுப்பினர்களாகிய பாண்டவர்கள் மஹாவிஷ்ணுவின் அவதாரமாகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானின் உதவியின்பேரில் மற்றொரு வகுப்பினராகிய கௌரவர்களை ஜயித்தார்கள் என்ற கதையை விரிவாய்க் கூறுகிறது. பாண்டவர்கள் நியாயமான கக்ஷியில் பிரவிர்த்தித்தவர்களாகையால் அவர்கள் பக்கத்தில் கிருஷ்ண பகவான் ஸகாயமாக விருந்தார். அவர்களுக்கு வெற்றி கிடைத்தது. அவர்களுள் மூத்தவராகிய தர்மர் வெகுகாலம் அரசாண்டு வந்தார். கௌரவர்கள் அநீதியாக பாண்டவர்கள் இராஜ்யத்தைப் பிடிங்கிக்கொண்டு திருப்பிக் கொடுக்காமல் இருந்ததால் தங்களுக்கு உதவியாகவிருந்த பீஷ்மர், துரோணர், கிருபர், கர்ணன் முதலியவர்களோடு அழிந்தார்கள் என்பதனால் நியாயஸ்தனுக்கு தெய்வ ஸஹாயம் ஏற்படும்; அக்கிரமம் செய்கிறவன் அழிந்துவிடுவான் என்ற நீதியை அது கற்பிக்கிறது.

பின்னும் அதில் கூறப்படும் உபகதைகளாகிய உபாக்யானங்கள் அளவிறந்தனவாகவும், அவற்றால் போதிக்கப்படும் நீதிமுறைகளும் கணக்கில்லாதனவாகவும், கதை கேட்பவர்களுடைய மனதிற்கு மிக்க இன்பமாகவும், மென்மேலும் கேட்க ஆவலைக்கொடுக்கக்கூடிய ருசியுள்ளதாகவும் சங்கிலிப்பின்னல் போன்று சுற்றிச் சுழற்றித் தொடுக்கப்பட்டதாகவுமிருக்கிறது. இக்கதைக்கு கிருஷ்ண பகவானே நாயகனாக விளங்குகிறார். தத்வ ஆராய்ச்சியைப் பற்றி அநேக இடங்களில் பீஷ்மாசார்யருடைய உபந்யாஸங்கள் காணப்படுகின்றன. உலகத்தில் வேதாந்த கிரந்தங்

களுள் சிரோரத்னமாய் விளங்கும் "பகவத்கீதை" இதன் மத்தியில் கிருஷ்ணபகவானால் வெளியிடப்பட்டிருக்கிறது. அதில் உலகநடைக்குரிய தத்வ முறைகளும் பிரம்ம ஞானிகளுக்குரிய தத்வ முறைகளும் கூறப்படுகின்றன. இம்மாதிரியான இந்த பாரதத்தின் பெருமையை அநுபவத்தால் அறியவேண்டுமே யல்லது வாயாற் சொல்ல முடியாது. ஆதலால் பாரதம் முழுதும் சரித்திரம், தர்மம், நீதி, மதம் இவைகளைப்பற்றிய வசனங்கள் நிறைந்த கலா நிதியாகக் கூறலாம். அதற்கு மேலான கிரந்தம் உலகத்தில் இல்லை என்பது மாத்திரமன்று; அதற்கு ஸமானமானது மில்லை. அதனால் அதற்கு மஹாபாரதம் என்றும் பெயர்.

சந்த்ர வம்சத்தில் துஷ்யந்தன் பிள்ளையாகிய பரதன் என்று ப்ரஸித்தி பெற்ற ஒரு வேந்தன் இந்த பரதகண்டம் முழுமையும் ஆண்டு வந்தான். அவனுடைய ஸந்ததியில் பாண்டவர்களும் கௌரவர்களும் ஜனித்தவர்கள். அவர்கள் சரித்திரத்தைப் பற்றிக் கூறுவதால் பாரதம் என்றும், அது மிகவும் பெருமை பெற்றிருப்பதால் மஹாபாரதம் என்றும் பெயரிடப்பட்டிருக்கிறது. அதன் கதை இராமாயண கதையை விட நவீனமாகவே இருக்கும். இராமாயண கதை த்ரேதா யுகத்திலும் பாரத கதை த்வாபர யுகத்தின் முடிவிலும் நடந்தன. பாரத காவ்யத்தை இயற்றினவர் வ்யாஸமகர்ஷி. அதில் இலக்ஷம் சுலோகங்கள் அடங்கியிருக்கின்றன. சிலர் புராணங்களும் இதிஹாஸங்களும் சேர்ந்து ஐந்தாவது வேதம் என்றும் சிலர் இதிஹாஸங்கள் மாத்திரம் ஐந்தாவது வேதம்

என்றும் சிலர் இந்த மகாபாரதம் ஒன்று மாத்திரம் ஐந்தாவது வேதமென்றும் கூறுகின்றனர்.

---

## புராணங்கள்.

புராணம் என்பது முக்ய ஸ்ருஷ்டி, உபஸ்ருஷ்டி, வம்சாவளி, மன்வந்தரங்கள், வம்ச சரித்திரங்கள் இவைகளைப்பற்றிக் கூறும் கிரந்தம். அது பதினெட்டு விதம். அவை 1. பிராம்மம் (10 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 2. பாத்மம் (55 ஆயிரம் சுலோகக்களுள்ளது) 3. வைஷ்ணவம் (8 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 4. வாயவ்யம் அல்லது சைவம் (24 ஆயிரம் சுலோகங்க ளுள்ளது) 5. பாகவதம் (18 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 6. நாரதீயம் (25 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 7. மார்க்கண்டேயம் (32 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 8. ஆக்னேயம் (8 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 9. பவிஷ்யத் (31 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 10. பிரம்மகைவர்த்தம் (12 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 11. லிங்கம் (11 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 12. வாராகம் (24 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 13. ஸ்காந்தம் (100 ஆயிரம் சுலோகங்கள் உள்ளது) 14. வாமனம் (24 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 15. கௌர்மம் (6 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 16. மாத்ஸ்யம் (14 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 17. காருடம் (16 ஆயிரம் சுலோகங்களுள்ளது) 18. பிரம்மாண்டம் (12 ஆயிரம் சுலோகங்களுள்ளது) என்பன. அவற்றை அருளிச்செய்தவர் வேதவ்யாஸ முனிவராவர்.

முற்கூறிய பதினெண் புராணங்களில் பிராம்மம், பாத்மம் இவ்விரண்டும் பிரம்மாவின் மகிமையைப்பற்றியும், நாரதீயம், பாகவதம், காருடம், வைஷ்ணவம் இன்ஞன்கும் விஷ்ணுவின் மகிமையைப் பற்றியும், ஸ்காந்தம், வாயவ்யம், லைங்கம், கௌர்மம், வாமனம், வாராகம், பவிஷ்யத், மாத்ஸ்யம், மார்க்கண்டேயம், பிரம்மாண்டம் இந்த பத்து புராணங்களும் சிவனது மகிமையைப்பற்றியும் பிரம்ம கைவர்த்தம், ஸூர்யன் மகிமையைப் பற்றியும் ஆக்னேயம் அக்னி மகிமையைப் பற்றியும் சொல்லுகின்றன.

மற்றும் சில மகர்ஷிகளால் உபபுராணங்கள் பதினெட்டு செய்யப்பட்டிருக்கின்றன. அவை 1. ஸநத்குமாரீயம், 2. நாரஸிம்மம், 3. நந்தீயம், 4. சிவரகஸ்யம், 5. தௌர்வாஸம், 6. நாரதீயம், 7. காபிலம், 8. மானவம், 9. வாருணம், 10. தேவீபாகவதம், 11. வாஸிஷ்டம், 12. கல்கி, 13. காணபதம், 14. ஹம்ஸம், 15. ஸாம்பம், 16. ஸௌரம், 17. பராசரம், 18. பார்க்கவம் என்பன.

புராணமென்பதற்கு வெகு காலத்திற்கு முந்தியது என்று பொருள். பிரம்மாவின் நான்கு முகங்களின் வழியாக உலகில் ப்ரஸித்தி யடைந்த வேதத்தை வ்யாஸர் நான்கு விதமாய்ப் பிரிப்பதற்கு முன்னமே அப் புராணங்களைச் செய்துவிட்டபடியால் அவற்றிற்குப் புராணம் என்ற பெயர் வந்திருக்கின்றது. பதினெண் புராணங்களைச் செய்த வ்யாஸர் தான் ஒன்றாய்க் கலந்திருந்த வேதத்தை நான்காகப் பிரித்தவர். வ்யாஸர் என்பதற்கு

பிரிக்கின்றவர் என்று பெயர். வேதங்களைப் பிரித்ததால் அவர் வேதவ்யாஸர் என்றும் அழைக்கப்படுகிறார்.

பிரம்மாவானவர் ஒரு உலக ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் ஸகல வேதங்களையும் வெளிப்படுத்துவதற்கு முன் அவற்றின் அர்த்தத்தைத் திரட்டி ஜனங்கள் எளிதில் அறியக்கூடிய விதமாய் நூறு கோடி கிரந்தங்களடங்கியதும் பிரம்மபுராணம் என்று பெயர் கொண்டதுமான ஒரு பெரிய புராணத்தை யுண்டுபண்ணி அதையும் வேதத்தையும் வெளிப்படுத்தினர். பிறகு ஒரு யுகாந்தரத்தில் உலகத்தார்களின் ஸௌகர்யத்தின் பொருட்டு அந்த வேதத்தை நான்கு விதமாகவும், பிரம்மபுராணத்தை பதினெண்புராணங்களாகவும் ஒரு வ்யாஸர் பிரித்தார். பிறகு மற்றொரு ஸ்ருஷ்டி யாரம்பத்திலும் வெளியான வேதம், புராணம் இவற்றை அவ்விதமாகவே இன்னொரு வ்யாஸர் பிரித்தார். இப்படி இருபத்தெட்டு வ்யாஸர்கள் பிரளயம் முடிந்து அந்தந்த ஸ்ருஷ்டி யாரம்பமாகிய கல்பங்கள் தோறும் அந்தந்த யுகங்களில், அந்தந்த ஜனங்களின் புத்தி சக்திக்குத் தக்கவாறு அந்த வேதங்களையும், அந்தப் புராணங்களையும் சுருக்கிச் சுருக்கிக் காண்டம், வர்க்கம், அத்யாயம் என்ற பிரிவுகளையும் ஏற்படுத்தி உலகத்தில் பரவச்செய்தார்கள்.

அந்தந்த யுகாந்தரங்களில் அந்தந்த வ்யாஸர்களால் கொஞ்சம் கொஞ்சமாய் சுருக்கிவிடப்பட்ட புராணம், கடைசி வ்யாஸரால் சுருக்கப்படும்போது முதலில் இரு நூறுகோடி கிரந்தங்களாக இருந்த புராணம் இப்போது

4,30,000 கிரந்தங்களாக சுருங்கியிருக்கின்றது. ஒரு கிரந்தம் என்பது, முப்பத்திரண்டு எழுத்துகளடங்கிய ஒரு சுலோகம். வேதங்களிலும் அநேக பாகங்கள் வர வர சுருங்கியிருக்கின்றன.

இவ்விதம் இருபத்தெட்டு வ்யாஸர்கள் புராணங்களில் கூறப்படுகின்றனர். அவர்களின் பெயர்கள் :— 1. பிரம்மன், 2. மனு, 3. சுக்ரன், 4. பிரகஸ்பதி, 5. ஸூர்யன், 6. யமன், 7. இந்த்ரன், 8. வஸிஷ்டன், 9. ஸாரஸ்வதன், 10. திருதாமன், 11. திருசிகன், 12. பாரத்வாஜன், 13. அந்தரிக்ஷன், 14. வர்ணி, 15. த்ரய்யாருணி, 16. தனஞ்ஜயன், 17. க்ரதுஞ்ஜயன், 18. ஜயன், 19. கௌதமன், 20. உத்தரன், 21. வாஜச்ரவஸ், 22. சுஷ்காயணன், 23. த்ருணபிந்து, 24. ரிக்ஷன், 25. வால்மீகி, 26. சக்தி, 27. பராசரன், 28. பாராசர்யன், என்பன. இதனால் கல்பங்களும் இருபத்தெட்டுதான் ஆயின என்பதாக நினைக்கக்கூடாது. அதற்கு முன் சென்றிருக்கும் பிரளயங்களும், ஸ்ருஷ்டிகளும் எண்ணிறந்தன. ஸ்ருஷ்டிகல்பம், பிரளயகல்பம் என்பவை முறையே ஸ்ருஷ்டி யாரம்பம், ஸ்ருஷ்டியின் முடிவு எனப்படும். விதை முந்தியா? முளை முந்தியா? என்ற பீஜாங்குர நியாயம்போன்று ஸ்ருஷ்டிப் பிரளயங்களுக்கு ஆரம்பம் கண்டுபிடிக்க முடியாதாகையால் அவை கணக்கற்றன. அப்படித்தான் சாஸ்திர ஸித்தாந்தம். ஆகையால், இருபத்தெட்டு கல்பங்களில்தான் வேதம், புராணம் இவற்றைப் பிரிக்கவும் சுருக்கவும் வேண்டிய அவசியம் நேரிட்டிருக்கிறது என்று அறியவேண்டும்.

சென்ற துவாபர யுகத்தின் முடிவில் பாராசார்யர் என்ற இருபத்தெட்டாவது வ்யாஸர்தான் வேதத்தையும், புராணத்தையும் சுருக்கிப் பிரித்தவர். அவரை இருபத்தேழாவது வ்யாஸராகிய பராசரருக்குப் பிறந்ததால், பாராசர்யர் என்றும், ஸத்யவதிதேவிக்கு கங்கையின் தீவில் கிருஷ்ணன் அம்சமாகப் பிறந்ததால் ஸத்யவதி குமாரர், கிருஷ்ணத்வைபாயனர் என்றும் பெரியோர் அழைக்கின்றனர். தீவில் பிறந்தவர் த்வைபாயனர் எனப்படுவார். அவர் பிறப்பு முதலிய மகிமை பாரதத்தில் நன்ருய்ச் சொல்லப் பட்டிருக்கிறது.

அவர் வேதத்திற் சொல்லிய தர்மங்களை ஜனங்கள் ஸுலபமாய் அறியவேண்டியதற்காக 4,30,000 கிரந்தங்களடங்கிய ஒரு புராணத்தைப் பதினெண் புராணங்களாகப் பிரித்து அவற்றைத் தனது சிஷ்யர்கள் மனது தளராமல் கேட்பதின் பொருட்டு அவற்றில் தான் ஞானதிருஷ்டியால் பார்த்ததும் பெரியோரால் கேட்டதும் வேதத்திற்கு விரோதமில்லாததுமான ராஜர்ஷிகள், பிரம்மர்ஷிகள், தேவர்ஷிகள் இவர்களின் சரித்ரங்களைச் சேர்த்து ஸூதர் என்ற முக்ய சிஷ்யருக்கு அவற்றைப் படிப்பிவித்தார். பிறகு ஸூதர் மூலமாய் அப் புராணங்கள் உலகத்தில் பரவின.

பின்னும் அவர் ஸம்ஸாரமாகிய சேற்றுக் கிடங்கில் விழுந்து அமிழ்ந்துகிடக்கின்ற ஜனங்களிடம் பேரன்பு பாராட்டி அவர்களை கரையேற்றுவதின் பொருட்டு உபநிஷத்துகள் என்ற வேதாந்தத்தின் கருத்துகளை ஸாரமாக

எடுத்து ஸூத்ரங்களாகச் செய்து அவற்றிற்கு "சாரீரக மீமாம்ஸா" என்ற பெயரிட்டு சிஷ்யர்கள் மூலமாய் உலகத்தில் அதனை பரவச்செய்திருக்கிறார். இக்கலியுகத்தில் ஜனங்கள் உய்யும் பொருட்டு அவர் செய்திருக்கும் பேருதவிகளை கவனிக்கும்போது அவரிடம் நாம் நன்றி பாராட்ட என்றும் கடமைப்பட்டிருக்கிறோம். இதன்பின் உபநிஷத்துகளைப் பற்றிக் கூறப்படும்.

---

## உபநிஷத்துகள்.

உபநிஷத்துகள், சரீர தத்வம், மனஸ்தத்வம், ஆத்ம தத்வம் என்ற மூன்று தத்வங்களைப் பற்றிய ஸூக்ஷ்மமான உபதேசங்களைச் செய்கின்றன. அவை வேதங்களின் கடைசி பாகங்களாக விருப்பதால் வேதாந்தங்களெனப்படும். உபநிஷத் என்பதற்கு ஜீவாத்மாவை பரமாத்மாவினிடம்சேர்ப்பிவிக்கிறது என்று பொருள். உபநிஷத்துகள் பலவுள. அவற்றுள் 108 முக்யமானவை. அவற்றுள்ளும் 10 அல்லது 12 பிரதானமானவை. மற்றவை ஸாமான்யமானவை. பிரஸித்தமான பன்னிரண்டு உபநிஷத்துக்களாவன:— 1. ஈசம், 2. கேனம், 3. கடம், 4. ப்ரச்னம், 5. முண்டகம், 6. மாண்டூக்யம், 7. ஐதரேயம், 8. கௌஷீதகி, 9. தைத்தரீயம், 10. சுவேதாச்வதரம், 11. பிரகதாரண்யம், 12. சாந்தோக்யம் என்பனவாம். மேற்கண்ட பிரதானமான 12 உபநிஷத்துகளுக்கும், வேதாந்ததர்சனஸ்தாபகர்களான சங்கரர், நீலகண்டர், ராமாநுஜர், மத்வர் என்ற ஆசார்யர்களாலும் அவர்களின் ஆதி சிஷ்யர்களாலும் பாஷ்யங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. முற்கூறிய சாரீரக

ஶ்ரீமாம்ஸா ஸூத்திரத்திற்கும் மேற்கண்ட ஆசார்யர்கள் பாஷ்யங்கள் இயற்றியிருக்கின்றனர். அவர்களின் தர்சனங்கள், சரித்திரங்கள் இவைகளைப்பற்றி பின் கூறுவோம். இதன்பின் சாரீரக மீமாம்ஸையைப் பற்றிக் கூறப்படும்.

---

சாரீரக மீமாம்ஸா ஸூத்ரம்.

அதிகமான கருத்துகளை அடக்கிக்கொண்டிருக்கிற சுருங்கின வாக்யம், ஸூத்ரம் எனப்படும். ஸூத்ரம் நூல்போன்று ஸூக்ஷ்மமாயுள்ளது. சரீரத்திற் கட்டுண்ட ஜீவாத்மாவைப் பற்றி நன்கு ஆராயுதல், சாரீரக மீமாம்ஸா (சாரீரக-மீமாம்ஸா) எனப்படும். ஜீவன் பிரம்ம மாவதற்கு வேண்டிய விஷயங்களைச் சொல்லுவதால் அது பிரம்ம ஸூத்ர மென்றும் கூறப்படும். அதில் ஒவ்வொன்றிலும் நான்கு பாதங்கள் கொண்ட நான்கு அத்யாயங்கள் உள. அதற்குப் பல மகா மேதாவிகளான ஆசார்யர்களும் அவர்கள் சிஷ்யர்களும் பாஷ்யங்களியற்றி யிருப்பதினாலேயே அது தத்வங்களின் ஆராய்ச்சியைப் பற்றின சாஸ்திரங்களுள் ஒப்பும் உயர்வு மற்ற உத்தமமான நூல் என்பதை யுணர்த்துகிறது. அப்படியே அதனைக் கற்றுணர்ந்தவர்கள் கொண்டாடுவார்கள்.

ஸ்மிருதிகள், இதிஹாஸங்கள், புராணங்கள் முதலியவைகளில் வேதார்த்தத்தை அனுஸரித் திருக்கின்ற பாகங்கள் தான் ப்ரமாணமானவை. வேதார்த்தத்திற்கு விரோதமாயிருக்கின்ற பாகங்கள் சாஸ்திர முணர்ந்தவர்களால் ஒப்புக்கொள்ளப் படமாட்டாதன.

---

## ஆகமம்.

ஆகமம் என்பதற்கு சாஸ்திரம் என்ற பொருள் பொதுவாக யிருப்பதுடன் ஆகம சாஸ்திரம் என்பதற்கே அது சிறப்புப் பெயராக வாய்ந்திருக்கிறது. உருவத்துடன் கூடின பரம்பொருளாகிய பகவானை வெளியிலும் மனத்திலும் ஆராதித்து அவனிடம் போய்ச் சேருவதற்கான நெறி முறைகளை நன்கு அறிவிப்பது ஆகமம் என்றும் ஆகம சாஸ்திரம் என்றும் கூறப்படும். வேதத்திற் கூறிய பொருள் இலகுவாக அறிய முடியாத காலத்தில் ஜீவாத்மாக்களின் நன்மையைக் கருதின பகவான் கருணையுற்று சில முனிவர் வாயிலாக வேத தாத்பர்யங்கள் தெள்ளெனத் தெரியும் வண்ணம் அதனை வெளியாக்கினர். வேதத்திலுள்ள கர்ம, உபாஸனை, ஞான காண்டங்களின் கருத்துகள் அதனில் நிரம்பியுள்ளன. ஆகமம் என்பதற்கு (வேதத்தில் மறைந்திருந்த விஷயங்களை) வருவித்துக் கொடுப்பது என்று பொருள். அது சைவம், வைஷ்ணவம் என இருவகைப்படும் அவைமுறையே சிவபெருமான், மகாவிஷ்ணு இவர்களிடமிருந்து வெளியாயின. சிவனைப் பற்றியது சைவம் என்றும், விஷ்ணுவைப் பற்றியது வைஷ்ணவ மென்றும் பொருளுள்ளன.

ஆகமத்திற் கூறப்படும் பொதுவான விஷயங்களாவன:—1. ஆலயங்களை நிர்மாணித்தல், 2. அவற்றில் உள்ள பரிவார தேவதைகள், முக்கிய தேவதைகள் இன்னவையெனல், 3. அவற்றின் உயரம், அகலம், பருமன் முதலியனவும், அங்கங்களின் அமைப்பும், சின்னங்களின் இருப்

பும், அந்தந்த தேவதைகளை பிரதிஷ்டை செய்யவேண்டிய இடங்களும், 4. பிம்பங்களின் பிரதிஷ்டை விதிகள், நித்ய பூஜா விதிகள், உத்ஸவ பூஜா விதிகள், அறிந்தும் அறியா மலும் நேர்ந்த தப்பிதங்கட்குப் பிராயச் சித்த விதிகள், இவற்றை நடத்த வேண்டிய ஒழுங்கு முறைகளும் அவற்றிற்குரிய தந்த்ரங்களும் மந்த்ரங்களும், 5. பிம் பங்களைத் தொட்டு பூஜை செய்யும் ஆராதகர்களுக்கு இருக்கவேண்டிய கல்வித் திறம், நல்லொழுக்கம், நேர்மை, பக்தி, சிரத்தை, சுறுசுறுப்பு, இன்சொல் முதலிய யோக்யதையும், அவர்களிடம் மற்றவர்கள் கௌரவமாய் நடந்துகொள்ள வேண்டிய விதங்களும் ஒழுங்குகளும், 6. பக்தர்கள் ஆலயத்திற்குப் போய் பிம்பங்களைத் தொழ வேண்டிய நெறி முறைகள், 7. முற்கூறிய விஷயங்கள் செவ்வனே நடைபெறும்போது ஆலயங்கட்ட பொரு ளீந்தவர்கள், ஆலயங்கட்டிவைத்த சில்பிகள், பிரதிஷ்டை செய்தவர்கள், நித்ய உத்ஸவ பூஜை செய்கிறவர்கள், கோயிலதிகாரிகள், வேலைக்காரர்கள், கோயிலைச் சுற்றிக் குடியிருப்பவர்கள், தர்சனம் செய்யும் பக்தர்கள், அவர் களையெல்லாம் பரிபாலிக்கின்ற அரசர்கள் ஆகிய யாவ ரும் க்ஷேமமா யிருப்பதுடன் அவர்கள் வசிக்கும் அந்த நாடு செழிப்புற்று ஸுபிக்ஷமா யிருக்கும் என்பதும், அவற்றில் நேரிடும் குற்றங்களை கவனியாது பரிகாரம் செய்யாமலே அவரவரிஷ்டப் படிக்கான கார்யங்கள் நடை பெறுவதானால் முன் சொன்னவர்கள் கடுந்துன்ப மடை வதுடன் அந்நாடு துர்ப்பிக்ஷமாய் விடும் என்பதுமான சங்கதிகள், இம்மாதிரியான மற்றும் பல விஷயங்களும்

கூறப்படுவன. இதன் பின் ஆகமத்தின் பிரிவைப் பற்றி கூறப்படும்.

---

சைவம்.

சைவ ஆகமம் இருபத்தெட்டு பிரிவுள்ளது. அவை 1. காமிகம், 2. யோகஜம், 3. சிந்த்யம், 4. காரணம், 5. அஜிதம், 6. தீப்தம், 7. ஸூக்ஷ்மம், 8. ஸஹஸ்ரம், 9. அம்சுமான், 10. ஸுப்ர பேதம், 11. விஜயம், 12. நிச்வாஸம், 13. ஸ்வாயம்புவம், 14. அனலம், 15. வீரம், 16. ரௌரவம், 17. மகுடம், 18. விமலம், 19. சந்திரஜ்ஞானம், 20. பிம்பம், 21. ப்ரோத் கீதம், 22. லலிதம், 23. ஸித்தம், 24. ஸந்தானம், 25. ஸர்வோத்தரம், 26. பாரமேசுவரம். 27. கிரணம், 28 வாதுலம், என்பன.

அவை சிவபெருமானுக்கு முறையே 1. திருவடிகள், 2. கணைக்கால்கள், 3. திருவடி விரல்கள், 4. கெண்டைக் கால்கள், 5. முழந்தாள்கள், 6. தொடைகள், 7. குய்யம், 8. கடிஸ்தானம், 9. முதுகு, 10. தொப்புள், 11. வயிறு 12. நாசி, 13. ஸ்தனங்கள், 14. கண்கள், 15. கழுத்து, 16. செவிகள், 17. திருமுடி, 18. கைகள், 19. மார்பு, 20. முகம், 21. நாக்கு, 22. கன்னங்கள், 23. நெற்றி, 24. குண்டலங்கள், 25. உபவீதம், 26. ஹாரம், 27. இரத்தினுபரணங்கள், 28. வஸ்திரம் என்ற அங்கங்களாகக் கூறப்பட்டுள்ளன. அபிஷேகம் செய்யப்பெற்ற ஆசார்யனிடமிருந்து விதிப்படி சிவதீக்ஷை யென்ற ஸம்ஸ்காரம் பெற்றவர்கள்தான் முற்கூறிய ஆகமங்களை ஓதுவதற்குரி

யவராவர். தீக்ஷை என்பதற்கு மனத்திலுள்ள அழுக்கைப் போக்குவதால் அறிவை விளக்குவது என்று பொருள். சிவ பெருமானது திருமந்திர மாகிய பஞ்சாக்ஷரி ஜபத்தின் உபதேசமே சிவ தீக்ஷையின் அந்தரங்கமாம். 1. சமயம், 2. விசேஷம், 3. நிர்வாணம், 4. ஆசார்யாபிஷேகம் என்ற தீக்ஷையினது நான்கு பிரிவுகளுள் முறையே முந்தியதை விடப் பிந்தியது சிறந்தது. ஏனெனில் முதல் தீக்ஷை பெற்றவர் காலை மாத்திரமும், இரண்டாவதவர் காலை மாலைகளிலும், மூன்றாவதவர் அவற்றோடு மத்தியானத்திலும், நான்காவதவர் அவற்றோடு அர்த்த யாமமும் சேர்த்த நான்கு ஸந்திகளிலும் ஸந்தி வந்தனம் செய்து மந்திரம் ஜபிக்க வேண்டியவராவர்.

சிவாகமங்களில், சிவன் சிவனது பரிவாரங்கள் அவர்களது ஆலய ஸம்பந்தமான விதிகள் முதலியனவும் பஞ்சாக்ஷரி, ஷடக்ஷரி முதலிய மந்திரங்களின் பெருமையும் சிவ தீக்ஷாவிதிகள் முதலியனவும் விரிவாய்க் கூறப் படுவன. சிற்சில விஷயங்களில் முக்யமாயில்லாத சிறிது மாறு பாடல்கள் தான் அவற்றுள் பரஸ்பரம் பேதமாகத் தெரியும்; மற்றபடி யாவும் முற்கூறிய விஷயங்களையே ஒத்துக் கூறுவன.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என நான்கு வகைகளாக அவை பிரிக்கப் பட்டுள்ளன. மெழுகுதல் தூர்த்தல் முதலியவற்றால் சிவாலயங்களை சுத்தமாக வைத்தல், நந்தவன மேற்படுத்தல் முதலிய பணிகள் சரியை யாகும். சிவபெருமானை வழிபடுதல் கிரியையாகும்.

சிவனை தியானித்தல் யோகமாகும். இடைவிடாத சிவ தியானத்தால் உண்டாகும் சிவானந்தானுபவ உணர்ச்சி ஞானமாகும். சரியையில் சரியை, கிரியை, யோகம், ஞானம் நான்கும், கிரியை, யோகம், ஞானம் இவற்றிலும் முற்கூறிய நான்கும் பிரிக்கப்பட்டு பதினாறு பேதங்கள் கூறப்படுவன. அவையெல்லாம் சிறிது சிறிதாக சிவ பெருமானிடமுள்ள பக்தி யென்ற கற்பகத்தரு வேறான்றி அதனால் அவனை அடைய வேண்டிய உபாயங்களாம்.

---

## வைஷ்ணவம்.

வைகானஸம், பாஞ்சராத்ரம் என வைஷ்ணவாகமம் இருவகைப்படும். திருமாலிடமிருந்து விகனஸ் என்ற முனிவர்வழியாகவந்தது வைகானஸம் என்றும் ஐந்துநாட்களில் உபதேசிக்கப்பெற்றது பாஞ்சராத்ரம் என்றும் பொருள் படும். ஸமாசிரயணம் என்ற ஸம்ஸ்காரம் பெற்றவர் தான் வைஷ்ணவாகமத்தை ஓதுவதற் குரியவராவர். பரம்பரையாக ஆசார்ய ஸ்தானம் பெற்றவரால் அஷ்டாக்ஷரியாகிய திருமாலின் திருமந்திரம் உபதேசிக்கப்பெறுவதே ஸமாசிரயணத்தின் அந்தரங்கமாகும். அவ்வாகமங்கள் ஸமாசிரயணத்தினது அவசியம், அதன் விதிகள் திருமாலினது பெருமை, அவரது பரிவாரங்கள் பக்தர்களது மகிமை முதலியனவற்றை வெகுவாய் விளக்குவன. மற்ற பூஜை முதலிய விஷயங்கள் சிவாகமங்களிற் கூறுவனபோன்றன. ஆனால் சிற்சில விஷயங்களில் சிறிது பேதம் காணும். வைகானஸமும் பாஞ்சராத்ரமும் அவ்வாறே சிறிது மாறுதலுள்ளன.

முற்கூறிய சப்தப் பிரமாணத்தின் பிரிவுகளாகிய வேத ஆகமங்களிலும் அவற்றின் உட்பிரிவுகளிலும் மனிதர்கள் இவ்வுலகத்தில் நடக்கவேண்டிய பிரவிர்த்தி மார்க்கங்களும் பரமபத மடையவேண்டிய நிவிர்த்தி மார்க்கங்களும் படிப்படியாய் கூறப்பட்டிருக்கின்றன. ஹிந்து மதத்தினர் யாவரும் அவற்றில் நம்பிக்கையுற்று தத்தம் குலாசார்யர் காட்டியிருக்கும் முறையைத்தழுவி ஈசுவரனை அறிந்து அவனை அடைய வேண்டிய முயற்சி எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியம். பிரமாண கிரந்தங்களிடம் திடமான நம்பிக்கையும் அதன்படியுள்ள நற்காரியங்களில் முயற்சியும் புண்யம் பலன் கொடுக்கும்போது தான் உண்டாகும். பாப பலனை அனுபவிக்கிறவன் அவற்றில் நம்பிக்கை கொள்ளாதிருப்பதுடன் அவற்றில் சொல்லும் விஷயங்களில் ஆராயாமலே குற்றங்கூறி மேலும் பாபத்தைத் தேடிக்கொள்வான். நற்காரிய முயற்சி நல்வினையின் பயனாகவும் தீயதில் முயற்சி தீவினையின் பலனாகவுமிருக்கின்றன. ஆதலால் யாவரும் தீவினை யகற்றி நல்வினையே நாட வேண்டியதற்காக நல்வினை தீவினைகட்கு பொதுப் பெயராகிய கர்மம் என்பதைப் பற்றின ஆராய்ச்சி இதன்பின் எடுத்துக்கூறப்படும்.

---

## ஆறும் அதிகாரம்.

## கர்மம்.

கர்மம் என்பதற்கு செய்கை என்று பொருள். அதனை நிகழ்த்த மூன்று கருவிகள் உள. அவை மனம்,

வாக்கு, காயம் என்பன. ஆதலால் கர்மம் மானஸிகம், வாசிகம், காயிகம் என மூவகைப்படும். தென் மொழியில் கர்மம் என்பது வினை யென்று கூறப்படும். அது நல் வினை, தீவினை என இரு வகைப்பட்டு முறையே நன்மை தீமை என்ற பலன்களை யளித்துக் கொண்டிருக்கிறது. அப்படியிருக்க உலகத்தில் தற்காலம் நல் வினைகளையே செய்கிறவர்களுள் சிலர் தீமைகளையும் தீவினைகளையே செய்கிறவர்களுள் சிலர் நன்மைகளையும் மாறி அடைந்து கொண்டிருப்பதை நாம் பார்க்கிறோம். அவ்விதம் வினை கட்குப் பலன்கள் மாறி யுண்டாகக் காரணம் யாது? என்பதை இங்கு ஆராய வேண்டும்.

பகலில் வேலை செய்தவனுக்கு மாலையில் சம்பளம் கிடைப்பது போன்று பொதுவாக நாம் அன்றாடம் செய்யும் பல வினைகளுக்குப்பலன் உடனேகிடைப்பதில்லை. நாம் முன் ஜன்மங்களிற் செய்த நல் வினைத் தீ வினைத் தொகுதியில் பலன் அநுபவித்தது போக எஞ்சின வினை கள் எண்ணிறந்தனவாக இருக்கின்றன. அவற்றை யெல்லாம் அநுபவித்த பிறகுதான் நாம் இந்த ஜன்மத்திற் செய்யும் வினைகளின் பயனை அநுபவிக்க வேண்டி வரும். ஆகையால் தற்காலம் நன்மை தீமைகளை அநுபவிப்பதின் காரணம் முந்திய பழ வினைகளின் பயனாகும். வினைகள் அவ்வப்போது செய்யப்பட்டு தீர்ந்து விடுவன வாயிருக்க அவை பொறுத்திருந்து வெகு காலத்திற்குப் பிறகு எவ்வாறு பலனளிக்கக் கூடியன என்றால்?

நல்வினைகளும் தீவினைகளும் நம்மால் செய்யப்படும் போதே முறையே புண்யம், பாபம் என்ற இரண்டு

தன்மைகளை நமது ஆத்மாவுடனிருக்கும் ஸூக்ஷ்ம காரண சரீரங்களிடம் சேர்ப்பித்து விடுகின்றன. அவ் விதம் நம்மால் செய்யப்படும் கர்மங்களின் அவ்விரண்டு தன்மைகளும் அதிருஷ்டம் என்று பெயர் பெற்று நமது அச்சரீரங்களைப் பற்றிச் சுற்றிக் கொண்டு கணக்கற்றன வாக இருந்து வரிசையாக அவ்வவற்றின் பலன்களை யளித்துக் கொண்டு வருகின்றன. அதனால் நல்வினைக்குப் புண்யம் என்றதும், தீவினைக்குப் பாபம் என்றதுமான பெயரும் உண்டு. கர்மங்களைச் செய்வது சீக்ரமாகவும் அவற்றை அனுபவிக்க காலதாமதமும் ஆகிறபடியால் கர்மக் கூட்டங்களின் தொகுதி, ஸஞ்சித (குவிக்கப்பட்ட) கர்மப் பையில் அடங்கி இருந்து வரிசைக் கிரமப்படி ஜன்மங்களைக் கொடுத்து பலன்களை யளிப்பதால் பழைய வினைகளை யனுபவித்துத் தீர்க்க பல ஜன்மங்கள் எடுக்க வேண்டிவரும். ஆதலால் எந்த ஜன்மத்தில் எந்த வினைகள் பக்வமாய் பலனளிக்கின்றன வென்பது நமக்குத் தெரி யாது. "வினையினால் உடலனந்தம்" என்று தாயுமானவர் கர்ம பலனாகிய ஜன்மங்களை அனந்தமாகக் கூறுகிறார்.

---

## கர்மத்தின் பிரிவுகள்.

முற்கூறிய அக் கர்மங்களில் விதிகள், நிஷேதங்கள் என்ற இரண்டு பிரிவுகள் உள. நமக்குப் பிரமாண சாஸ்திரங்களாகிய வேதங்கள் முதலியவற்றால் செய்ய வேண்டுமென்று விதிக்கப் பட்டிருப்பன விதிகள் எனப் படும், செய்யக் கூடாது என்று விலக்கப் பட்டிருப்பன

நிஷேதங்கள் எனப்படும். உதாரணமாக "ஸத்யத்தைச் சொல், தர்மத்தைச் செய்" என்பவை போன்றன விதித்த கர்மங்களாம். "பொய் சொல்லக்கூடாது, பொறுமையுறக் கூடாது" என்பவை போன்றன விலக்கிய கர்மங்களாம். நமது முயற்சியால் தான்யங்களில் உமிகளை விலக்கி தண்டு லங்களை ஏற்பதுபோல் கர்மங்களில் நிஷேதங்களை விலக்கி விதிகளை மாத்திரம் ஏற்றுக்கொண்டு அவற்றிற் கிணங்க நடக்க வேண்டும். விதித்த கர்மங்களில் நித்யம், நைமித்திகம், காம்யம், ப்ராயச்சித்தம் என நான்கு பிரிவுகள் உள.

நித்யம் என்பது நாள்தோறும் ஒழுங்காய் செய்யப் படும் கர்மம். அதாவது தினந்தோறும் தவராமல் காலை, நடுப்பகல், மாலை என்ற மூன்று ஸந்திகளிலும் பகவானது சக்தியாகிய ஸந்தியா தேவியை அவரவர் ஜாதி குலாசாரத் திற் கேற்ப வேதாகமங்களிற் கூறிய வண்ணம் உபாஸிக்க வேண்டும். அக் காலங்களில் பகவானின் ஒருவித சக்தி உலகங்களைக் காப்பாற்ற உன்மீலன (விகாஸ) த்தை யடைவதால் அந்த தேவியை உபாஸிக்க அதுவே தருண மாகும். காலையில் ஸூர்யன் உதய மாவதற்கு முன்னும் நடுப் பகலில் ஸூர்யன் உச்சி யிலிருக்கும் போதும் மாலை யில் ஸூர்யன் அஸ்தமன மாவதற்கு முன்னும் ஸந்தியா தேவியை உபாஸித்தல் வேண்டும். அதனாலேயே ஸூர்யனை "காணாமல் கோணாமல் கண்டு கொடு" என்ற பழமொழி விளங்குகிறது. அக்காலங்களில் சில மந்த் ரங்களை ஜபித்து பகவானை ஸந்தோஷப் படுத்த வேண்டும். இது போன்றவை நித்ய கர்மங்களாம்.

நைமித்திக மென்பது நிமித்தம் ஏற்படும் போது செய்யப்படும் கர்மம். ஸூர்ய சந்த்ர கிரகணங்கள் முதலிய நிமித்த காலங்களில் பிதிருக்கள் முதலிய அந்தந்த தேவதைகளைப் பற்றிச் செய்யப்படும் தில தர்ப்பணம், சிராத்தம், ஸமாராதனம் முதலியன நைமித்திக கர்மங்களாம். நித்ய கர்மங்களும் நைமித்திக கர்மங்களும் ஒவ்வொருவருக்கும் கடன் எனப்படும். கடன் கொடாமல் தீராது குற்றம் பயப்பது போன்று அவ்விரண்டு விதமான கர்மங்களையும் அந்தந்த காலங்களில் செய்யாதவர்களுக்கு பாபம் ஸம்பவிக்கின்றது. கடனைக் கொடுத்தால் விசேஷ லாபம் இல்லாதது போன்று அக்கர்மங்களைச் செய்ததால் விசேஷ புண்யமும் கிடையாது. இவ்விதம் ஒவ்வொரு மனிதர்களும் ஜனித்து அவர்களின் பகுத்தறிவு உன்மீலன மாகும் ஸமயம் முதல் அவரவர்கட்கு ஏற்பட்ட உபநயனம் முதலிய ஸம்ஸ்காரங்களைச் செய்து கொண்டு மரண மடையும் வரை யாவரும் நித்ய நைமித்திகமான கர்மக் கடன்களைச் செய்தே தீர்க்க வேண்டும் என்ற விதி ஏற்பட்டிருக்கிறது.

காம்யம் என்பது ஒரு விருப்பத்தை முன்னிட்டு செய்யப்படும் கர்மம். "புத்திரர்களை விரும்புகிறவன் புத்ரகாமேஷ்டி யென்ற யாகம் செய்ய வேண்டும்." "நீண்ட ஆயுளை விரும்பு கிறவன் ஆயுர் தேவதையை ஆராதிக்க வேண்டும்" என்பவை போன்றன. இவற்றைச் செய்வதனுல் ஒருவித புண்யம் உண்டாகி அது பக்வமாகும்போது அந்தந்த விருப்பங்கள் ஸித்தி பெறுகின்றன.

அவற்றைச் செய்யாததால் விசேஷமான பாபம் ஒன்றும் ஸம்பவிக்க மாட்டாது.

ப்ராயச்சித்தம் என்பது பாபத்தை நீக்கு கிறதற்காக செய்யப்படும் கர்மம்; ப்ராய—என்பதற்கு பாபம் என்றும் சித்த—என்பதற்கு நீக்குதல் என்றும் பொருள் இருப்பதால் பாபத்தை நீக்குகிறது ப்ராயச் சித்தம் எனப்படும். நித்ய நைமித்திக கர்மங்கள் அஸந்தர்ப்பத்தினாலும், அசக்தியினாலும், அறியாமையினாலும் அந்தந்த காலங்களில் செய்யப்படாதபோதும் நிஷேதிக்கப் பட்ட கர்மங்கள் முற்கூறிய காரணங்களால் செய்யப்படும்போதும் உண்டாகும் பாபத்தை அந்தந்தப் பிராயச்சித்த கர்மங்கள் நீக்கி விடுகின்றன. நித்ய நைமித்திக கர்மங்களைச் செய்யாமல் விட்டதும், நிஷேதித்த கர்மங்களைச் செய்ததும் தப்பிதம் என்று தெரிந்தவுடன் அந்தந்த கர்மங்களுக் குற்றவாறு உபவாஸம் (பட்டினி) இருந்து காயக் கிலேசம் செய்து சில மந்த்ரங்களை ஜபித்து தப்மாலியன்ற தான தர்மங்களியற்றுதல் என்பதான அவை, தர்ம சாஸ்திரங்களில் ப்ராயச்சித்த காண்டத்திற் கூறிய வண்ணம் செய்ய வேண்டுவன. அவற்றிலும் தப்பிதம் நேர்ந்து விடாமல் ஜாக்கிரதையாயிருக்கவேண்டும் அவை "ஸர்ப்பத்தைக் கொன்றவன் ஸர்ப்ப சாந்தி, நாகப்பிரதிஷ்டை செய்ய வேண்டும்" என்பது போன்றன.

---

## பாதகங்கள்.

நிஷேதங்கள் என்பது சாஸ்திரங்களில் விலக்கிய கர்மங்களாதலால், அவை பாதகங்கள் என்று கூறப்படும்.

பாதக மென்பதற்கு கீழே தள்ளிவிடுவது என்று பொருள். அது மாந்தர்களைத் தாழ்மைப் படுத்தக் கூடிய செயல். அது தாழ்ந்த ஜன்மம், அங்கயீனம், அறிவீனம், அபகிர்த்தி, ஏழமை, முதலியவற்றை உண்டுபண்ணக் கூடியது. அது மகா பாதகம், ஸமபாதகம், உபபாதகம் என்று மூன்று விதம். ஹத்தி செய்தல் (மனிதர்களைக் கொல்லுதல்) கள் குடித்தல், தங்கத்தைத் திருடல், குரு பத்னியிடம் கூடல், முற்கூறிய நால்வர்களுடன் நேசித்திருத்தல் இவ்வைந்தும் மகாபாதகங்களாம்.

ஸம பாதகங்களாவன: — குருக்களை அவமதித்தல், வேத சாஸ்திரங்களை நிந்தித்தல், ஸ்நேகிதர்களை கொல்லுதல், கற்றுக்கொண்ட சாஸ்திரங்களை மறந்து விடுதல் ஆகிய இவை ஹத்தி தோஷத்திற்கு ஸமமாகும். உண்ணக் கூடாததை உண்ணுதல், கபடமாகப் பேசுதல், பொய் ஸாக்ஷ்யம் கூறல், பொய் பேசுதல், தீண்டலான மாதர்களின் முகத்தை முத்தமிடுதல் ஆகிய இவைகள் கள் குடித்தலுக்கு ஸமமாகும். குதிரை, ரத்னம், மனிதன், ஸ்த்ரீ, பூமி, பசு, அடைக்கலம் வைத்த வஸ்து இவற்றை அபகரித்தல் தங்கம் திருடல் என்ற ஸ்வர்ணஸ்தேயத்திற்கு ஸமமாகும். ஸ்நேகிதன் பார்யை, குமாரி, பந்துஸ்த்ரீ, ஸமகோத்திரத்தில் ஜனித்த ஸ்திரீ, மாற்றுப்பெண் இவர்களிடம் கூடுதல் குரு பத்னியிடம் கூடலாகிய குரு தாரகமனத்திற்கு ஸமமாகும். இவை முற்கூறிய மகா பாதங்களுக்கு ஸமமாக இருப்பதால் ஸமபாதகங்கள் எனப்படும்.

பசுக்களை வதம் செய்தல், விதித்தகர்மங்களை செய்யா தொழிதல், கடனைத்தீர்க்காமல் மோசஞ்செய்தல், திருடல், ப்ராணிகளை வதஞ் செய்தல், நிந்திக்கப்பட்ட விஷயத்தால் ஜீவனம் செய்தல், நாஸ்திகனுக இருத்தல், விரதங்களை ஆரம்பித்து முற்றும் அனுஷ்டியாமல் நடுவில் விட்டுவிடல், புத்ரர்கள், புத்ரிகள், பார்யை இவர்களை விற்றுவிடல், பொது நன்மைக்காக தான் உண்டாக்கிய தடாகம், நந்த வனம் முதலியவற்றை பிறகு விற்பனைசெய்தல், பிறர் அன்னத்தை நன்ருய் புஜித்து பருத்திருத்தல், கெட்ட கார்யங் களைக் கற்றுக்கொள்ளல், பொக்கிஷ அதிகாரியாகவிருந்து களவாண்டல், அவரவர் கடமைப்படி ஒழுகாதிருத்தல் இவை போன்றவை முற்கூறிய பாதகங்களுக்கு, சற்றேரக் குறைய ஸமீபமாக இருப்பதால் உப பாதகங்களாம்.

விதித்த தர்மங்களை அறிந்து செய்யப்படும் கர்மங்கள் நல்வினைகள் என்றும் விலக்கிய அதர்மங்களை கவனியாமல் செய்யப்படும் கர்மங்கள் தீவினைகள் என்றும் கூறப்படும். நல்வினைகளைச் செய்வது புண்யமாகவும் தீவினைகளைச்செய் வது பாபமாகவும் அமையும். புண்யத்தினுல் ஸுகமும், பாபத்தினுல் துக்கமும் அனுபவிக்கப்படும். பாரதம் சாந்தி பர்வத்தில் "*ஒருவன் கர்மபலனை அபேக்ஷித்தவனுய் எந்த எந்த விதமான கர்மத்தைச் செய்கிருனே; அவன் அந்தந்த கர்மபலனை சுபமாயும், அசுபமாயும் அனுபவிக் கிருன்." எனப்படுகிறது. ஒருவனது மரணகாலத்தில் அவனுக்கு துணையாகவிருப்பது அவன் செய்த கர்மமே.

* அத்-201. சுலோகம் 23.

"மரித்தபிறகு ஒருவனது பொருள்கள் வீட்டிலேயே அவனைவிட்டுப் பிரிந்து விடுகின்றன. பந்துக்கள் மயானத்தில் விட்டுப் பிரிகின்றனர். அவனது புண்யமும் பாபமும் அவன் போகுமிடமெல்லாம் அவனை விடாமல் தொடர்ந்து செல்லுகின்றன" என்று நீதிஸாரம் கூறுகிறது.

பாரதம் சாந்திபர்வத்தில் "§ விதையின்றி என்றும் முளையில்லாவாம். அதுபோன்று மூன் ஸத்கர்மமின்றி பின் இன்பமின்றாம். அவ்விதமே இப்போதும் ஒருவன் பிறர்கட்கு ஸந்தோஷத்தை யுண்டுபண்ணினால் மரணத்திற்குப் பின் தானும் ஸந்தோஷமடைவான், துன்பம் விளைவித்தால் துன்பமனுபவிப்பான்," எனப்படுகிறது. அன்று நாம் விரும்பிய விஷயங்களையடைய இன்று ஸமயம் ஏற்பட்டிருக்கிறது. அன்று நம்மால் செய்யப்பட்ட கர்மங்களின் பலன்களை இன்று நாம் கைக்கொள்ளுகிறோம். இன்று நாம் செய்கின்ற கர்மங்களை எப்போதாவது ஒரு ஸமயம் அநுபவிப்போம். ஆதலால் நாம் விலக்கின கர்மங்களில் நுழையாது விதித்த கர்மங்களையே செய்துவந்தால் இன்பம் பெறலாமென்பதை யுணரவேண்டும்.

---

### கர்மத்தைத் தூண்டும் விருத்திகள்.

முற்கூறிய புண்ய பாப கர்மங்களை நமது முக்கரணங்கள் செய்யும்படி நம் மனத்தில் ஜன்மங்கள்தோறும் பதிந்து அமர்ந்துள்ள பதினாறு அந்தக்கரண விருத்திகள்

§ அத்யாயம் 291. சுலோகம் 12.

அந்தந்த காலத்தில் எழும்பித் தூண்டுகின்றன. அவை: 1. ராகம், 2. த்வேஷம், 3. காமம், 4. க்ரோதம், 5. லோபம், 6. மோகம், 7. மதம், 8. மாத்ஸர்யம், 9. ஈர்ஷியை, 10. அஸூயை, 11. தம்பம், 12. தர்ப்பம், 13. அகங்காரம், 14. இச்சை, 15. சிரத்தை, 16. பக்தி, என்பன.

1. ஆடவர்களுக்கு மாதர்களையும் மாதர்களுக்கு ஆடவர்களையும் பற்றின ஆசை ராகமெனப்படும். 2. நமக்கு ஒரு தீங்கு விளைவித்தவனுக்குத் திரும்ப நாமும் அவ்விதமான தீங்கை விளைவிக்க வேண்டுமென்ற எண்ணம் த்வேஷமெனப்படும். 3. வீடு, வயல், பணம், பெண்டு முதலியவற்றை ஸம்பாதிக்க வேண்டுமென்ற எண்ணம் காமமெனப்படும். 4. அதற்குத் தடை செய்கிறவனிடமுண்டாகும் கோபம் க்ரோதம் எனப்படும். 5. தான் தேடியபொருளில் பிறர்கள் நிமித்தம தர்மத்திற்குக் கொஞ்சமும் கொடுக்கக் கூடாதென்ற எண்ணம் லோபமெனப்படும். 6. உலகத்தாரிடம் தான் ஒழுகவேண்டிய ஒழுக்கத்தைப் பொருள் மதத்தினால் கவனியாமலிருத்தல் மோகமெனப் படும். 7. தனது பொருளினால் செய்யக்கூடாதது ஒன்றுமில்லை என்று இறுமாந்திருத்தல் மத மெனப்படும் 8. தனக்கு ஸமமான பணக்காரனைப் பார்த்துப் பொறுக்காமை மாத்ஸர்ய மெனப்படும். 9. பிறர்கட்கில்லாத இந்தத் துன்பம் எனக்குமாத்திரம் வந்ததேயென்ற எண்ணம் ஈர்ஷியை யெனப்படும். 10. இந்தத் துன்பம் எனக்கு வந்ததுபோல் பிறர்கட்கு ஏன்வரவில்லை என்ற சிந்தை அஸூயை எனப்படும், 11. இந்த தர்மகார்யத்தைச் செய்வதால் உலகத்தில் எனக்குப் புகழ்உண்டாக வேண்டு

மென்ற எண்ணம் தம்பம் எனப்படும். 12. எனக்கொப்பானவனில்லையென்ற எண்ணம் தர்ப்பம் எனப்படும். 13. எல்லாவற்றையும் நான் செய்கிறேன் என்ற எண்ணம் அகங்காரம் எனப்படும். 14. சரீரத்தில் தள்ளமுடியாத பசி, தாகம் முதறியவற்றை ஆகாரம் முதலியவற்றால் நீக்க வேண்டுமென்ற எண்ணம் இச்சை எனப்படும். 15. வேத வேதாந்த வாக்யங்களிலும் குருவின் உபதேசத்திலும் நம்பிக்கை சிரத்தை யெனப்படும். 16. மாதா, பிதா, பெரியோர், நல்லவர், குரு, தெய்வம் இவர்களிடம் அன்பு, பக்தி எனப்படும்.

ராகமுதல் அகங்கார மீறாகவுள்ள பதிமூன்று விருத்திகள் நிர்மலமான மனத்தை அசுத்தப்படுத்தி அதனால் எல்லோரையும் அவை தீவினைகளில் தூண்டுகின்றன. ஆதலால் சீக்கிரம் அவற்றைக் களைய முயற்சிக்க வேண்டும். இச்சை என்பது சரீரதாரணைக்கு வேண்டியிருப்பதால் அதனை ஸ்தூலசரீரமுள்ளவரைக் களையமுடியாது. கடைசி விருத்திகளாகிய சிரத்தை, பக்தி இவற்றை மாத்திரம் பிரியமாய் ஏற்று அவற்றினால் தூண்டப்படும் புண்யங்களியற்றி மனத்தை சுத்தப்படுத்திக் கொள்ளவேண்டும். இதிற் கூறிய கர்மஸ்வரூபத்தையறிந்த பின்னர் அதனால் உண்டாகும் ஜன்மங்களையும் அறிந்தாற்றான் மானிட ஜன்மத்தின் பெருமை தெரியவருமாதலால் அந்தந்த கர்மத்திற்குரிய ஜன்மத்தைப்பற்றி இதன் பின் கூறப்படும்.

———○———

## ஏழாம் அதிகாரம்.

### கர்மமும் ஜன்மமும்.

உலகத்தில் கர்மங்களும் ஜன்மங்களும் பலவகைப் பட்டிருப்பதால் அவற்றின் பாகுபாடுகளைப் பிரித்து அறிய வேண்டிய ஸௌகர்யத்தின் பொருட்டு முதலில் ஜன்மங் களை தேவர்கள், மனிதர்கள், திர்யக்ஸ்தாவர ஜந்துக்கள் என மூவகையாகப் பிரித்து எடுத்துக்கொள்ள வேண்டும். கீதையில் * "ஸத்வகுண முள்ளவர்கள் தேவர்களாகவும் ரஜோகுண முள்ளவர்கள் மனிதர்களாகவும் தமோகுண முள்ளவர்கள் பசு, பக்ஷி, மரம், செடி, கொடி முதலியனவா கவும் ஜனிக்கின்றார்கள்" எனப்படுகிறது. அதற்கிணங்க வாஸுதேவ மனனத்தில் ‡ "புண்யத்தினால் அடையப்படு வது தேவசரீரம். பாபத்தினால் அடையப்படுவது திர்யக் ஸ்தாவர சரீரம். இரண்டும் கலந்த மிச்ரகர்மத்தினால் அடை யப்படுவது மனுஷ்யசரீரம்" எனப்படுகிறது. இதனால் கர் மம் புண்யம், பாபம், மிச்ரம் என்று மூவகைப்படும். ஒவ் வொன்றிலும் உத்தமம் மத்யமம் அதமம் என்ற பேதங் களும் உள. ஆனதால் புண்யோத்தமம், புண்யமத்யமம், புண்யாதமம், பாபோத்தமம், பாபமத்யமம், பாபாதமம், மிச்ரோத்தமம், மிச்ரமத்யமம், மிச்ராதமம் என்று கர்மம் ஒன்பது வகைப்படுகின்றது. இம்மாதிரியான கர்மங்க ளின் பிரிவுகளினால் ஜன்மங்களும் பலவகைப்படுகின்றன.

---

* அத்யாயம் 14. சுலோகம் 18.

‡ வர்ணகம் 5.

உலகத்தைப் படைப்பதில் பிரம்மாவிற்கு உதவியா யிருக்கின்ற ஹிரண்யகர்ப்பன் முதலிய ஸ்ருஷ்டி கர்த்தர்களின் சரீரம் புண்யோத்தம கர்மத்தினுலும், இந்த்ரன் முதலிய தேவர்களின் சரீரம் புண்யமத்யமத்தாலும் யக்ஷர் கின்னரர் ஸித்தர் முதலியவர்களின் சரீரம் புண்யாதமத்தினுலும் அடையப்படுகின்றன. பிறர்களைத் துன்புறுத்துகின்ற விஷ விருக்ஷங்கள், முள்மரங்கள், புலி, கரடி, சிங்கம் முதலிய துஷ்டமிருகங்கள், பாம்பு, தேள் முதலிய துஷ்ட ஜந்துக்கள் ஆகிய இவற்றின் சரீரம் பாபோத்தமத்தினுலும், மா, பிலா, தென்னை முதலிய விருக்ஷங்கள், பழம், பூ, இலைகளினுல் பிறர்கட்கு உபயோகமாக விருக்கின்ற செடி கொடிகள், ஊர்ப்பன்றி, எருமை, கழுதை முதலிய மிருகங்கள் ஆகிய இவற்றின் சரீரம் பாபமத்யமத்தினுலும், ஆல், அரசு, புரசு, வில்வம் முதலிய விருக்ஷங்கள், துளசி, அருகு முதலிய செடிகள், பசு, குதிரை முதலிய மிருகங்கள் ஆகிய இவற்றின் சரீரம் பாபாதமத்தினுலும் அடையப்படுகின்றன. ஒன்றுக்கு மேலுள்ள எண்களை பரஸ்பரம் பெருக்கும்போது பெருக்கின தொகைப் பெரிதாகவும் ஒன்றுக்குக் கீழுள்ள பின்ன எண்களை பரஸ்பரம் பெருக்கும்போது பெருக்கினதொகை அவற்றைவிட சிறிதாகவும் ஏற்படுவது போன்று புண்யங்களைப் பெருக்க அதன்பலன் பெரிதாகவும் பாபங்களைப் பெருக்கப் பெருக்க அவற்றின் பலன் சிறிதாகவும் ஏற்படுகின்றன.

கர்மங்களின் பலனை ஈச்வரனுக்கு அர்ப்பணம் செய்து நிஷ்காம கர்மங்களை யனுஷ்டித்துக்கொண்டு வைராக்யம் பெற்று ஸத்குருவை யடைந்து ஜீவன் முக்திக்கும் விதேக

முக்திக்கும் காரணமான பரமாத்ம ஜீவாத்ம ஸ்வரூபத்தைப்பற்றின வேதாந்த விஷயங்களை அவரிடமிருந்து சிரவணம் செய்து மனனநிதித்யாஸனங்களால் அவற்றை அனுபவத்திற்குக் கொண்டுவந்து மோக்ஷம்பெற முயற்சிக்கின்றவர்களின் சரீரம் மிச்ரகர்மத்தின் உத்தமத்தினால் அடையப்படும் சரீரம். ப்ரவிர்த்தி மார்க்கத்திற்குள்ள தர்மங்களை நிவிர்த்தி மார்க்கத்திற்கு அங்குரங்களாக இருக்கும்படி முறையுடன் ஒழுங்காய்ச் செய்துகொண்டு தம்மாலியன்றளவு உயிர்களுக்கு உதவி செய்கின்றவர்களின்சரீரம் மிச்ரகர்மத்தின் மத்யமத்தினுல் அடையப்படும்சரீரம். பக்ஷிகள், மிருகங்கள் முதலியவற்றை வதைத்து அவற்றின் மாம்ஸங்களையுண்டும், "தேகமே ஆத்மா, போகமே மோக்ஷம்" என்ற எண்ணத்துடன் சரீரபோஷணைக்குள்ள கார்யங்களிலேயே மனம் ரமித்துக் கொண்டிருந்து காலத்தை வீணுக்கு கழிக்கின்றவர்களின் சரீரம் மிச்ரகர்மத்தின் அதமத்தினுல் அடையப்படும் சரீரம்.

ஆகாரமின்றி நம்மால் உயிருடன் இருக்க முடியாதாகையால் கூடியமட்டில் ஜீவ ஹிம்ஸையில் குறைவு பெற்ற ஆகாரங்களை ஏற்றுக்கொள்ள ஒவ்வொருவரும் பழகவேண்டும். பயிர்கள் பக்வமான பிறகு அவற்றினின்று உதிர்ந்த தான்யங்களையும், மரங்களிலிருந்து பழுத்து விழுந்த பழங்களையும் ஆகாரமாகக்கொள்வதில் ஹிம்ஸை குறைவுபடுகிறது. தான்யங்களிலும் பழங்களின் விதைகளிலும் உயிர் விகாஸம் பெருமல் அடங்கியிருப்பதால் அவற்றை வருத்துவதும் ஒருவித ஹிம்ஸையென்றே கூறலாகும். அவை பரிசம் என்ற ஓரறிவுள்ளப்

பிராணிகளாகையால் அவற்றை வருத்தும் ஹிம்ஸை, ரூபம், ரஸம், கந்தம், சப்தம், பரிசம் என்ற ஐந்து விஷயங்களை மனத்தினால் அறியக்கூடிய ஐய்யறிவுள்ளப் பிராணிகளை வருத்தும் ஹிம்ஸையைவிட எவ்வளவோ குறைந்தது. முன் சொன்ன ஐய்யறிவுடனும், புத்தியறிவுடனும் சேர்ந்து ஆரறிவுபெற்ற மனிதர்களையும் வதைத்து புஜிக்கின்றவர்கள் இன்னமும் வேறு தீவுகளில் இருப்பதாகக் கேள்வி. மரத்திலிருந்து உதிரும் சருகுகளை பக்ஷிப்பதால் யாதொரு தீங்குமில்லை என்று முனிவர்கள் கண்டுபிடித்து அதிலிருந்து படிப்படியாய் ஜீவஹிம்ஸை யில்லாமலே உயிருடன் பிழைத்துக் கொண்டிருக்கும் வழியைத் தேடி அதனாலேயே சரீரத்தில் ஜீவனுடனிருந்து ஆத்ம தத்வத்தை உணர்ந்து அனுபவத்திற்குக் கொண்டுவரப் பழகிக் கொண்டிருக்கிறார்கள். இம் மானிட சரீரத்தைத் தவிர வேறு எவ்வித சரீரத்திலிருந்தும் முக்தி பெறும் வழியைத் தேடவொண்ணாது. அதனாற்றான் இம்மானிட சரீரம் பெருமை பெற்றிருக்கிறது. இந்த சரீரத்தில் உள்ள திரிகரணங்களாலும் புண்யம், பாபம், மிச்ரம் என்ற மூன்று கர்மங்கள் செய்யப்படுகின்றன. ஆதலால் கர்மம் வேறு விதமாய்த் திரும்பவும் ஒன்பது வகைப்படுகிறது. அவை :—மானஸ புண்யம், மானஸபாபம், மானஸமிச்ரம், வாசிகபுண்யம், வாசிகபாபம், வாசிகமிச்ரம், காயிகபுண்யம், காயிகபாபம், காயிகமிச்ரம் என்பன.

முக்தி பெறும் ஸாதனமாகிய நிஷ்காம கர்மங்கள், வைராக்யம், பக்தி, யோகம், ஞானம் இவற்றைப் பெற வேண்டுமென்றும், இவற்றின் உபாயங்களைத் தேட

வேண்டு மென்றும், பரோபகாரம் செய்யவேண்டு மென்றும் மனத்தில் நினைத்தல் மானஸபுண்யமாகும். பூமாலை, சந்தனம், ஸ்திரீ, ஸ்திரீகளுக்குப் புருஷன் ஆகிய விஷயங்களால் உண்டாகும் இன்பங்களைப் பெற பிறர்கட்கு அபகாரம் செய்யவும், வேதாகம சாஸ்திரங்கள் பிரமாணங்களாகா வென்றும், மனத்தில் நினைத்தல் மானஸபாபமாகும். முற்கூறிய புண்யமான எண்ணங்களைப் பிற்கூறின பாபமான எண்ணங்களுடன் கலந்து நினைத்தல் மானஸ மிச்ர கர்மமாகும்.

வேதாகம சாஸ்திரங்களைப் படித்தல், காயத்திரி, பஞ்சாக்ஷரி, அஷ்டாக்ஷரி முதலிய மகா மந்த்ரங்களை ஜபித்தல், பரோபகாரமான வார்த்தை, உண்மை யுரைத்தல், எளியவரிடத்திலும் அதட்டாமல் மெதுவாய் இன்புறும்படி பேசுதல், பகவானின் நாம ஸங்கீர்த்தனம் இவை வாசிகபுண்யமாகும். மகான்களையும், பெரியோர்களையும், வேத வேதாந்த ஸித்தாந்த சாஸ்திரங்களையும் நிந்தித்தல், பொய், கோள், பிறர் துன்புறும் கடுமையான பேச்சு, பரிகாச வார்த்தை இவை வாசிகபாபமாகும். வாசிக புண்யச் செயல்களைச் செய்யும்போது நடுவில் வாசிகபாபங்களையும் சேர்த்து அநுஷ்டித்தல் வாசிகமிச்ர கர்மமாகும்.

புண்ய தீர்த்தங்களில் ஸ்நாநம் செய்தல், மாதா, பிதா, குரு முதலிய பெரியோர்களை வணங்குதல், சிவன், விஷ்ணு முதலிய தேவதைகளின் விக்ரகங்களைப் பூஜித்தல், நல்லோர்களைப் பார்க்கத் தேடிச்செல்லுதல், அவரோடிணங்கி அவர் சொற்படி நடத்தல் உலகத்தாரின் நன்மைக்காக

ஊர் ஊராய்ச் சுற்றுதல், ஸத்பாத்திரத்தில் தானம் செய்தல், பரோபகாரம் செய்தல் முதலியன காயிகபுண்யமாம். பிறர்களை ஹிம்ஸித்தல், பிறர் மனைவியினிடம் சேருதல், தீயாரைக் கண்டு அவருடன் சேர்ந்து அவர் சொற்படி நடத்தல், பிறர்கட்கு அபகாரம் செய்தல், பிறர் பொருள்களை ஏமாற்றத்தினாலாவது, களவினாலாவது கவர்தல் முதலியன காயிகபாபமாகும். "நல்லாரைக் காண்பதுவும் நன்றே, நலமிக்க நல்லார் சொற் கேட்பதுவும் நன்றே, நல்லார்குணங்க ளுரைப்பதுவும் நன்றே, அவரோடிணங்கியிருப்பதுவும் நன்று" "தீயாரைக் காண்பதுவும் தீதே, திருவற்ற தீயார் சொற்கேட்பதுவும் தீதே, தீயார் குணங்க ளுரைப்பதுவும் தீதே, அவரோடிணங்கியிருப்பதுவும் தீது." என்ற ஔவைபிராட்டியாரின் முதுமொழிகள் முன் சொன்ன விஷயத்தை மிக்க எளிதாக அறியுமாறு நல்லோரின்சேர்க்கை ஒருவனுடைய கெட்டகுணங்களையும் தீயாரின் சேர்க்கை ஒருவனுடைய நல்லகுணங்களையும் மாற்ற வல்லன வென்று வற்புறுத்திக் கூறுகின்றன. காயிகமான புண்யச் செயல்களைச் செய்யும்போதே மத்தியில் காயிக பாபத்தொழில்களையும் சேர்த்து நடத்துதல் காயிக மிச்ரகர்மமாம். அதாவது ஏழைபாகவிருக்கின்ற ஜனங்களின் பொருள்களை ஏமாற்றும், களவு முதலியவற்றால் கவர்ந்து அவற்றால்தண்ணீர்ப்பந்தல், ஸத்திரம், பாடசாலை, கோயில்முதலியவற்றைஏற்படுத்தல், அவற்றிலுள்ள வேலைக்காரர்களின் சம்பளத்தை சரிவரக் கொடுக்காமல் எடுத்துக்கொள்ளுதல் போன்றது.

முற்கூறியவைகளில் ஒவ்வொருவரும் தத்தம் கர்மங்களுக்குக் கருவிகளான மனம் வாக்கு, காயம் என்ற

மூன்று கரணங்களும் புண்ய கர்மத்திலே செல்லும்படி முயற்சிக்க வேண்டுவது அவசியம். தனி பாப கர்மங்களையும், மிச்ரகர்மங்களிற் கலக்கும் பாப கர்மங்களையும் நமது பகுத்தறிவால் ஆராய்ந்து படிப்படியாய் விலக்க முயற்சித்தால் புண்யகர்மங்களின் முயற்சி தானேகைகூடும்.

---

## கர்மத்தின் ஒழிவு.

கர்மத்தினால் ஜன்மமும், ஜன்மத்தினால்கர்மமும் உண்டாய்க் கொண்டு வருகின்றன வென்றும், கர்மம் ஒழிந்தால் ஜன்மமும், ஜன்மம் ஒழிந்தால் கர்மமும் ஒழிந்து போய்விடுவன என்றும் ஏற்படுகிறது. அவ் விரண்டும் ஒன்றுக்கொன்று காரண கார்யங்களாகத் தொடர்ந்து கொண்டே வருவதால் அவற்றுள் முதலில் எதனை யொழிக்க முயற்சிக்க வேண்டும்; எதனை யொழித்தால் மற்றொன்று தானே நசித்துப் போய்விடும் என்ற ஸந்தேகத்தைப் போக்கிக் கொள்ளவேண்டியது முக்யம். அதைப் பற்றி இங்கு ஆராய்வோம். ப்ராணிகளை ஜன்மத்திற் கட்டுப்படுத்துகிற கர்மம் ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமி என முப்பான்மையது.

ஸஞ்சிதம் என்பது—முன் பலஜன்மங்களிற் செய்யப் பட்டனவும், ப்ராணிகளின் உற்பத்திக்குக் காரணமுமான கர்மங்களின் தொகுதிகள் சேர்க்கப்பட்டுள்ள ஒரு பொக்கிஷம். ஸஞ்சிதம் என்பதற்கு சேர்த்துவைக்கப் பட்டது என்று பொருள். ப்ராரப்தம் என்பது—அக் கர்மத் தொகுதிகளில் அநுபவித்தன போக மீதமான கர்மத்

தொகுதிகளினின்றும் தெரிந்தெடுக்கப்பட்ட ஒரு பாகம். அது தற்காலம் நமது அனுபவத்தி லிருக்கும் ஜன்மத்தையும், அதில் நாம் அனுபவிக்க வேண்டிய நன்மை தீமைகளையும் கொடுத்துக் கொண்டு வருகிறது. ப்ராரப்தம் என்பதற்கு பலன் கொடுக்க ஆரம்பித்து நடந்துவருகிறது என்று பொருள். ஆகாமி என்பது—தற்காலமுள்ள நமது ஜன்மத்தால்செய்யப்படுகின்றனவாகவும்,இனி வருங்கால ஜன்மங்களுக்கு வித்துகளாகவும் இருக்கின்ற கர்மங்களின் தொகுதி. ஆகாமி என்பதற்கு இனி பலனைக் கொடுக்க வரப்போகின்றது என்று பொருள். நமக்கு இந்த ஜன்மம் முடிந்து வேறு ஒரு ப்ராரப்த கர்மத்தினால் அடுத்த ஜன்மம் உண்டாகும்போது இந்த ஜன்மத்திற் செய்யப்பட்ட ஆகாமிகர்மங்களின் தொகுதி, முன் அனுபவிக்கப்படாமல் மீந்திருக்கின்ற ஸஞ்சிதகர்மத் தொகுதிகளுடன் சேர்ந்து ஸஞ்சிதம் என்ற பெயரைப் பெறும். ஏனெனில் அடுத்த ஜன்மத்தில் வேறு ஆகாமிகர்மங்கள் விளையப்போகின்றனவன்றோ? இப்படி ஒவ்வொரு ஜன்மத்திலுமுள்ள ஆகாமிகர்மங்களின் தொகுதிகள் ஸஞ்சிதகர்மங்களின் தொகுதிகளுடன் சேர்ந்து கொள்ளுவதால் ஸஞ்சித கர்மங்கள் எண்ணற்று * ஸஞ்சிதம் பொக்கிஷமாகும். ஒரு ஜன்மத்திற் பல கர்மங்களைச் செய்வது சீக்கிரமாகவும் அவற்றைப் பற்பல பாகமாகப் பிரித்து அனுபவித்து முடிக்கப் பலஜன்மங்களும் வேண்டிவருவதால் ஸஞ்சித கர்மக்கூட்டங்களை ஒரு பெரிய கிட்டங்கியில் கணக்கில்லாமல் அடுக்கிவைக்கப்பட்ட நவதான்ய மூட்டைகளுக்கு

*100 ஸஞ்சிதங்களில் 20 ப்ராரப்தங்களாக எடுக்கப்படின் மீந்த 80 ஸஞ்சிதங்களுடன் 40 ஆகாமிகள் ஏற்படின் அவையும் சேர்ந்து 120 ம் ஸஞ்சிதமாய் இவ்விதமே பெருகுமெனத் தெரிக.

ஒப்பிடலாம். இவ்வளவு ஸஞ்சிதகர்மங்களையும் அனுப வித்த பிறகாவது மோக்ஷம் பெறலாம் என்றால் ஆகாமி கர்மங்கள் ஸஞ்சிதகர்மங்களிற் சேரச்சேர வளர்ந்துகொண் டே இருப்பதால் ஸஞ்சிதம் ஒருபோதும் அனுபவித்து முடிவுபெறவே மாட்டாது. ஆனால் கர்மம் தொலையா விடில் ஜன்மமும் தொலையாது; ஜன்மம் தொலையாவிடில் மோக்ஷம் பெறுவது எப்படியெனில்?

வேதாந்த விசாரணையினால் பிரம்மத்தைப் பற்றின பரோக்ஷ (அப்ரத்யக்ஷமான) ஞானம் பெற்றவர்கள் நாள டைவில் அதை அனுபவத்திற்குக் கொண்டுவந்து பிரம்மத் தைப்பற்றின அபரோக்ஷ (ப்ரத்யக்ஷமான) ஞானம்பெற்ற வர்களாக ஆய்விடுகிறார்கள். அப்போது அவர்களின் அந்த ஞானமாகிய அக்னி, பஞ்சுப்பொதிகளை எரிப்பதுபோன்று ஸஞ்சித கர்மங்களையும் ஆகாமி கர்மங்களையும் எரித்து சாம்பலாய் நீற்றிவிடுகிறது. பிறகு அவர்கள் ஜீவன்முக் தர்களாய்விடுவார்கள். அவர்களும் ப்ராரப்த கர்மத்தை மாத்திரம் அனுபவித்தே தீரவேண்டும். வில்லினின்று வெளிப்பட்ட ஒரு அம்பு அதன் வேகம் தணியும்வரை போய்க் கொண்டிருப்பதுபோன்றுப்ராரப்தகர்மமும் அதன் முடிவுகாலம் வரை யாவராலும் நடுவில் தடுக்கமுடியாமல் போய்க்கொண்டிருந்து கடைசியாக முடிவுபெறும். ஞானி கள் அதுவரை ப்ராரப்த சரீரத்திலிருந்து கொண்டு கர்மங் களைச் செய்தபோதிலும் அவை விருப்பும் வெறுப்புமின்றி செய்யப்படுவதால் அவர்களுக்கு ஜன்மத்தைக் கொடுக்க மாட்டா. காய்ச்சின சட்டியில்போட்டு வறுத்த தான்ய விதைகள்போன்று ஞானிகளின் கர்மங்கள் ஜன்மங்கள்

என்ற மூன்களையுண்டுபண்ண யோக்யதை யற்றனவாக ஆய்விடுகின்றன. தேவீபாகவதத்தில் *"ப்ராரப்தம் அனுப வித்தால் மாத்திரம் ஒழியும்" எனப்படுகிறது. கீதையில்‡"ஓ அர்ஜுனு! ஜொலிக்கின்ற நெருப்பு விரகுகளைப்போன்று ஞானம் என்ற அக்னி(ப்ராரப்தம் நீங்கலாக)ஆகாமி ஸஞ்சி தங்கள் என்ற எல்லாக் கர்மங்களையும் பஸ்மமாகச் செய்து விடுகிறது" எனப்படுகிறது.

எந்த ஸத்கர்மங்களைச் செய்த போதிலும் அதன் எதிர்காலப் பலன்களில் கருத்துவையாது அவை நமது கடமையெனச் செய்து அவற்றை ஈசுவரனுக்கு அர்ப்ப ணம் செய்துவிட்டால் அந்தக் கர்மங்கள் திரும்பவும் நம்மை ஜன்மத்திற் கட்டுப்படுத்தமாட்டா. தீவினைகள் போன்று நல்வினைகளும் மனிதர்களுக்கு ஜன்ம பந்தத் தைக் கொடுக்கக்கூடியனவே. மனிதர்களை பந்தப்படுத்து வதில் தீவினைகள் இரும்புச் சங்கிலி போன்றனவும், நல் வினைகள் பொன் சங்கிலி போன்றனவுமாக இருக்கின்றன. கீதையில் § "ஓ குந்தி புத்ரா! நீ எதைச் செய்கின்றாயோ; எதை புஜிக்கின்றாயோ; எதை அக்னியில் ஓமம் செய்கின் றாயோ; எதைக் கொடுக்கின்றாயோ; எந்த தவத்தைச் செய்கின்றாயோ; அதை யெல்லாம் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு. இப்படிச் செய்வதால் சுபாசுப பலன்களைக் கொடுக்கின்ற கர்மங்கள் உன்னைக் கட்டுப்படுத்தாம லிருப் பன. அதனால் அவற்றினின்றும் நீ விடுபடுவாய்".

---

* கண்டம் 4. அத்யாயம் 2. சுலோகம் 8. ‡ அத்யாயம் 4. சுலோகம் 37. § அத்யாயங்கள் 9, 2, 3, 4. சுலோகங்கள் முறையே 27-28, 47-48, 25, 20.

" ஓ தனஞ்ஜயா ! கர்மம் செய்வதிற்றான் உனக்கு அதிகாரம். கர்ம பலன்களில் ஒருபோதும் இச்சை வைக்காதே. கர்மபலனை யடையப் பாத்திரனாகாதே. கர்மம் செய்யாமலிருக்க வேண்டு மென்றும் நினைக்காதே. பகவானின் நிஷ்டையிலிருந்து கொண்டு பலன்களில் அபிமானத்தை விட்டு கர்மம் செய்". "மூடர்களால் பலன்களை விரும்பிச் செய்யப்படும் கர்மங்களை வித்வான்கள் பலன்களில் விருப்பமில்லாமலே உலக நன்மைக்காக செய்கின்றார்கள்". "விஷயங்களில் பற்றில்லாது எப்போதும் திருப்தி யடைந்திருக்கிற மனிதன் கர்ம பலனைக் கருதாது கர்மங்கள் செய்தபோதிலும் அவன் அவற்றைச்செய்யாதவனாகிறான்" எனப்படுகிறது.

ஆதலால், பலாபேக்ஷை யில்லாமற் செய்யப்படும் கர்மங்கள் ஞானிகளை ஜன்மத்திற்குட்படுத்தாம விருப்பதுடன் ஸஞ்சித ஆகாமிகர்மங்களையும், ஞானமென்ற அக்னியால் அவர்கள் எரித்துவிடுகின்றனர். இவ் விதமாக கர்மங்களை ஒழிக்கும்படியான நிர்மலஞானம் உதயமாய் ப்ரகாசிக்கும்படியாக ஒவ்வொருவரும் முயற்சிக்க வேண்டும்.

அந்த ஞானத்தை ஸாமான்யமாக ப்ரகாசிக்கும்படிச் செய்ய முடியாது. ஏனெனில் ஸூர்யனை மேகம்போன்றும் கண்ணாடியை அழுக்குப்போன்றும் அக்னியை புகைபோன்றும் ஜலத்தைப் பாசிபோன்றும் ஞானத்தை அஞ்ஞானம் மறைத்துக் கொண்டிருக்கிறது. நாம் கடமையான சில கர்மங்களைச் செய்துகொண்டு வந்தாற்றான் அதை விலக்க முடியும். நிரம்பத் துருப்பற்றி யிருக்கும் செப்புப் பாத்

திரத்தை நாள்தோறும் புளிப்புள்ளவஸ்துக்களினால் விளக்க விளக்க அதிலுள்ள துருக்கள் முற்றிலும் நீங்கி அப்பாத்திரத்திற்கு ஸ்வயமாயுள்ள ப்ரகாசம் தோன்றும். அதன் பிறகும் அன்றாடம் அதை விளக்காவிடில் அதில் திரும்பத் துருப்பற்றிக் கொள்ளும். நமது மனமும் அத்தன்மையானது. அதிற்பற்றின ராகம், த்வேஷம், காமம், க்ரோதம் முதலிய அந்தக்கரண விருத்திகள் என்ற அஞ்ஞானத்தின் படர்க்கையாகிய துருக்களை நிஷ்காமமாய் செய்யப்படும் பலாபேக்ஷை யில்லாத நல்வினைகளைக் கொண்டு விளக்க விளக்க அஞ்ஞானத்தில் மறைந்திருந்த ஞானம் இயற்கையாகவே பிரகாசிக்கும்.

கீதையில் * "அக்னிபோன்று எவ்வளவு கிடைத்தாலும் திருப்தி யடையாததும், தீய மனோவிருத்திகளுள் தலைமையானதுமான "காமம்" என்ற நித்ய சத்ருவினால் ஞானம் மறைக்கப்பட்டிருக்கிறது. அது இந்திரியங்கள், மனம், புத்தி இவற்றை ஆதாரமாகப் பற்றிக்கொண்டு ஞானத்தை மறைத்து மனிதர்களை மோகிக்கும்படி செய்கிறது. ஆதலால் ஓ அர்ஜுனா! முதலில் இந்திரியங்களை அடக்கி அவற்றில் குடியிருக்கும் மகா பாபியான இந்தக் காமத்தை வதம் செய்" எனப்படுகிறது. காமத்தை ஜயித்தால் மற்ற கெட்டவிருத்திகளும் ஒடுங்கும் என்பது கருத்து. ஆதலால் நாம் முன் அதிகாரத்திற் கூறிய கெட்ட மனோபாவங்களை ஒடுக்கி எப்போதும் மனத்திலுள்ள சிரத்தை, பக்தி முதலிய நல்லவிருத்திகளால் தூண்டப்பட்டு

---

* அத்யாயம் 3. சுலோகம் 39-41.

செய்யப்படும் கர்மமே தர்மமெனப்படும். அதுவே மனிதர்களின் கடமையாகும். அதுதான் ஜீவனை பரமனிடம் சேர்ப்பிக்கின்றது. பரமனிடம் சேர ஜீவனால் முடியுமா? என்ற வினாவிற்கு விடையாக ஜீவாத்ம பரமாத்ம ஸம்பந்தத்தைப்பற்றி இதன்பின் கூறப்படும்.



## எட்டாம் அதிகாரம்.

### பரமாத்மாவினிடம் ஜீவனுக்குள்ள ஸம்பந்தம்.

உலகத்திலுள்ள ஜீவாத்மாக்கள் ஒவ்வொன்றுக்கும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்து பூதங்களாலமைந்த சரீரம் இருப்பதை நாம் ப்ரத்யக்ஷமாய்ப் பார்க்கின்றோம். அது ஸ்தூல சரீரமெனப்படும். அச்சரீரத்தில் வாக்கு, பாணி, பாதம், பாயு, உபத்தம் என்ற ஐந்து கர்மேந்திரியங்களும் தொக்கு, நாக்கு, மூக்கு, கண், காது என்ற ஐந்து ஞானேந்திரியங்களும் இருப்பதாக அவ்வவற்றின் தொழில்களால் அநுமானித்து அறிகின்றோம். அவ்விந்திரியங்கள் ஒவ்வொருவர் சரீரத்திலும் ப்ரத்யக்ஷமாய்க் காணப்படுகின்றனவாயிருக்க அவற்றை ஏன் அநுமானித்தறிய வேண்டுமெனில்? நம்மால் காணப்படும் அவை இந்திரியங்களல்ல. அவ்விந்திரியங்களைத் தாங்கிக்கொண்டிருக்கும் ஆதாரஸ்தானங்கள். அவை இந்திரியகோளங்கள் எனப்படும்.

அவற்றில் அந்தந்த இந்திரியங்கள் அணுவளவாக அமைக்கப்பட்டிருக்கின்றன. அணு நமக்குப் புலப்படாது.

ஆறு அணுக்கள் சேர்ந்து திரண்டிருந்தால் அதை மிகுந்த வெளிச்சத்தில் ஸூக்ஷ்மதிருஷ்டியுள்ளவர்கள் பார்க்கலாம். சிலர் கண்களை விழித்தவர்களாக இருக்கும்போதே பார்வை யற்றிருக்கின்றனர். சிலருக்குக் காதுகள் இருக்கும் போதும் அவர்கள் செவிடர்களாக இருக்கிறார்கள். ஏன்? அவர்களுக்கு அவ்விந்திரிய கோளங்கள் இருக்கின்றனவே யன்றி அணுவளவாயுள்ள இந்திரியங்கள் மறைக்கப்பட்டு அவற்றின் சக்தியும் மறைந்து போயிருக்கிறது. இதனாலேயே இந்திரியங்களும் அவற்றின் கோளங்களும் வேறு என்று தெரிந்துகொள்ள வேண்டும்.

முற்கூறிய பத்து இந்திரியங்களையும் பத்துக் குதிரைகளாகவும் ஸ்தூலசரீரத்தை அக்குதிரைகள் பூட்டின தேராகவும் வைத்துக் கொண்டால் அக்குதிரைகளைக் கட்டுப்படுத்தி நடத்தக் கடிவாளமும் அதைப் பிடித்துக்கொண்டு குதிரைகளை நடத்துகின்ற ஒரு தேர்ப்பாகனும் அவசியம் வேண்டும். ஆகையால் மனம் என்பது இந்திரியங்கள் என்ற பத்துக் குதிரைகளிடமும் ஸம்பந்தித்த ஒரு கடிவாளமாகவும் புத்தி என்பது அவற்றை நடத்துகிற தேர்ப்பாகனாகவும் இருக்கின்றன. ஒரு விஷயத்தை பகுத்தறியக்கூடிய சக்தி யில்லாதபோது மனம் என்றும், அதுவே அவ்வித சக்தியுற்றபோது புத்தி என்றும் கூறப்படுவதால் மனம், புத்தி, என்ற இரண்டும் ஒரேவஸ்து. அது செய்கைகளின் பேதத்தால் இரண்டாகக் கூறப்படுகிறது. நமது நாசியின் வழியாக சரீரத்தினுள்ளே யிருக்கும் காற்று வெளியிற் போவதும் வெளியிலுள்ள காற்று உள்ளே வருவதும் நமக்குத் தெரிகின்றது. அது சரீரத்திலிருக்கும்

பிராணவாயுவின் தொழில். இவ்விதம் அந்த பத்து இந்திரியங்களும் மனமும் பிராணனும் சேர்ந்தது ஸூக்ஷ்ம சரீரம் எனப்படும். இந்திரியக் குதிரைகள் ஸஞ்சரிக்கக் கூடிய ப்ரதேசங்கள் உலகத்திலுள்ள விஷயங்களாம். நாம் தூங்கும்போது மனம் 'புரீதத்' என்ற நாடியில் அடங்கிவிடுவதால் இந்திரியங்கள் யாவும் ஓட்டமில்லாமலும், விழித்தவுடன் மனம் எழுந்து விடுவதால் இந்திரியங்கள் ஓட்டத்துடனுமிருக்கின்றன. இதனால் மனம் ஒன்று இருப்பதாக அவசியம் ஒப்புக்கொள்ள வேண்டும். அதுவும் அணுவாக இருப்பதால் நம்மால் பார்க்க முடியாது. அம்மனம் நமது சரீரத்துள் மார்புக்கு நேரான ஸ்தானத்தில் இருப்பதாக ஞானதிருஷ்டியால் அணுக்களையும் பார்க்க வல்லவரான யோகத்திற்சிறந்த ஞானிகள் கண்டுபிடித் திருக்கின்றனர்.

தேரும், குதிரைகளும், தேர்ப்பாகனு மிருந்தால் தேரினுள் உட்கார்ந்திருக்கின்ற ஒரு பிரபு அவசியம் வேண்டும். அவன்தான் ஜீவாத்மா எனப்படுவான். அவன் அணுவிற்கும் அணுவாக இருந்துகொண்டு மனத்துள் வஸிப்பவனாக இருந்தபோதிலும் தேரிலுள்ள பிரபுவிற்கு தேர்முழுதும் சொந்தமா யிருப்பது போன்று சரீரமெங்கும் வியாபித்துக் கொண்டிருக்கும் தன்மை யுள்ளவனாகவும் அதன் சொந்தக்காரனாகவு மிருக்கிறான். அவன் எப்படியோ, காரணம் அறியமுடியாத கர்மவசத்தால் ஜன்மம் எடுப்பதற்காக பரமாத்மாவினிட மிருந்து பிரிந்துவிட்டான். உலகத்தில் ஜீவாத்மா, பரமாத்மாவினிடம் திரும்பவும் சேர்ந்து ஸச்சிதானந்த ரூபமாகவும் நித்யமாகவு மிருப்பதால் இரண்டு வஸ்துக்களும் ஓரே தன்மையுள்ளன வென்

றும், நெருப்பிலிருந்து அதன் பொறிகள் சிதறுவனபோன்று பரமாத்மா விணிடமிருந்தே ஜீவாத்மாக்கள் எப்படியோ சிதறித் தனித்து வந்திருக்கின்றன வென்றும், ஜீவர்கள் முயற்சித்தால் பழுக்கக் காய்ச்சின இரண்டு இரும்புப்பட்டைகள் சேர்ந்து ஒட்டிக் கொள்வனபோலன்று ஜீவாத்மாவும் பரமாத்மாவும் பரஸ்பரம் சேர்ந்துகொள்ளும் ஸ்வபாவமுள்ளன வென்றும் ஜீவன் முக்தர்களான ஞானிகள் தாம் அனுபவித்துக் கண்டுபிடித்த விஷயங்களை சாஸ்திரங்கள் மூலமாய் வெளியிட்டிருக்கின்றனர்.

சரீரமிருக்கும்போதே மோக்ஷானந்தம் பெற்றவர்கள் ஜீவன் முக்தர்கள் எனப்படுவார்கள். அவர்கள் ஞானத்தினால் ஸகலமான வினைகளையும் நசிக்கச்செய்து பிறகு ஜன்மமில்லாதவர்களாய் ப்ராரப்தகர்ம வசத்தால் ஏற்பட்ட தற்சமயத்திலுள்ள சரீரத்தின் முடிவுகாலத்தை எதிர்பார்த்திருப்பார்கள். எது பலனைக்கொடுக்க ஆரம்பித்திருக்கிறதோ அது ப்ராரப்தகர்மம் எனப்படும். அது மாத்திரம் ஞானத்தினால் நாசமடையாது. பூராவாக அனுபவித்த பிறகுதான் நாசமடையும். அதனால் ஞானிகளாலும் மத்தியில் ப்ராரப்த கர்மசரீரத்தை விலக்கமுடியாது. அந்த சரீரம் போனபிறகு அவர்கள் விதேகமுக்தர்கள் எனப்படுவார்கள். அவர்கள் பிழைத்திருக்கும் போது அவர்களின் ஆத்மா, ஸமாதிகாலத்தில் பரமாத்மாவினிடம் போய்ச் சேர்ந்திருக்கும். அப்போது மௌனமாக இருப்பார்கள். ஸமாதி கலைந்தவுடன் தங்கள் அனுபவத்தை சிஷ்யர்களுக்கு உபதேசிப்பார்கள். அது பிறகு சாஸ்திரமாய்விடும். அவ்விதம் ஜீவாத்மா, பரமாத்மா விணிட

மிருந்து பிரிந்திருப்பதும் திரும்பச்சேர்ந்து கொள்வதுமான விஷயத்தை அனுபவத்தில் தெரிந்து கொண்டவர்களான ஜீவன் முக்தர்களால் முதன் முதலில் பரமாத்மாவினிட மிருந்து பிரிந்த ஒரு ஜீவாத்மா தான் தனித்து ஜன்ம மெடுத்தற்குக் காரணம் ஒன்று கட்டாயம் சொல்லப்பட வேண்டும். அக்காரணம் அகாரணமாய் ஜீவனுக்கு எப் படியோவந்த அநாதியான ஒரு கர்ம வாஸனையாகவே இருக்க வேண்டுமென்று அவர்கள் தீர்மானித்திருக்கின்ற னர். ஏனெனில் பீஜாங்குர நியாயம் போன்று கர்மமும் ஜன்மமும் சுற்றிச் சுற்றிப் போய்க்கொண்டு முடிவிற்கு வராதாகையால் ஒரு கர்மத்தை மாத்திரம் அநாதியாக ஒப் புக்கொள்ள வேண்டிய அக்கொள்கை, யாவராலும் மறுக்க வொண்ணது.

பரமாத்மா என்றும் அழிவற்றவன். ஞான ஸ்வரூப மாகவும் ஆனந்த ஸ்வரூபமாகவுமிருப்பவன். அதனுல் ஸத் சித் ஆனந்த ரூபமாகவுள்ளவன் எனப்படுகிறுன். ஜீவாத் மாவும் அவ்வித தன்மையுற்றவனே. ஆனுலும் அவன் ஆதி யில் அநாதியான ஏதோ ஒரு கர்மவசத்தால் ஒரு சரீர மெடுத்து அந்த சரீரத்தில் சில கர்மங்களைச் சேகரித்து அவற்றின் பலனுக மறு சரீரமெடுத்து இவ்விதம் ஜீவாத்மா விற்கு அனந்தகோடி கர்மங்களும் அனந்தகோடி ஜன்மங் களும் ஒன்றன் பின் ஒன்ருய் காரணகார்ய ரூபமாய் தொடுத்துத்தொடுத்துத் தொடர்ந்து வந்திருப்பன. ஜீவாத்மா இவ்விதம் ஜன்மமெடுப்பதால் பிறப்பிறப்பினுள் அடிக்கடி உழன்றுகொண்டு படும்துன்பங்கள் கொஞ்சம் யோசித்துப் பார்க்கின்றவர்களுக்கு நாம் சொல்லாமலே விளங்கும்,

ஜீவாத்மா முயற்சி செய்தால் அடிக்கடி ஜன்மமெடுப்பதைத் தொலைத்து பரமாத்மாவினிடம்சேர்ந்து அழிவற்றதும் துக்கங்களின் கலப்பில்லாததும் ஒப்புயர்வற்றதுமான நித்ய நிர்மல நிரதிசய ஆனந்த ரூபமாக இருக்கலாம் என்று ஞானிகள் சாஸ்திரங்கள் வாயிலாக வெளியிட்டிருக்கின்றனர். அதை நம்புகின்றவர்களில் அப்பேரானந்தம் பெற விருப்ப மில்லாதவர்களும் உலகத்தில் உளரோ? இல்லவே இல்லை. ஆதலால் நாம் இனி நமது ஜீவாத்மாவிற்கு ஜன்ம மில்லாத வழி யாது? என்பதை ஆராய வேண்டும்.

---

## ஜீவத்வத்தின் ஒழிவு.

ஜன்மத்திற்குக் காரணம் கர்மங்களே. அக் கர்மங்கள் திரும்ப நம்மைத்தொடராமலிருக்கும்படி அவற்றைச்சாம்பற் போன்று நீற்ற வேண்டும். அக் கர்மங்கள் வளருவதற்கு ஸ்தூல ஸூக்ஷ்ம காரண சரீரங்களே விதைகளாக இருப்பதால் அவற்றையும் அக்னியினால் நீற்றவேண்டும். அப்படியானால் ஜீவாத்மா தனது இயற்கையான நித்ய ஸுகம் பெறலாம்.நமது ஸ்தூல சரீரங்கள் நாம் மரணமடையும்போதெல்லாம் அடிக்கடி சுலபமாகவே அழிந்து நீறப்படுவதால் அதைப்பற்றி நாம் முயற்சிக்க வேண்டியதில்லை. ஆனால் மரணகாலத்தில் ஸூக்ஷ்ம காரண சரீரங்கள் அழியாதனை. அவை ஜீவனுடன் சேர்ந்து ஸ்தூல சரீரத்திலிருந்து வெளியேபோய் மற்றொரு ஸ்தூலத்தைப்பற்றிக்கொள்ளும். ஜீவாத்மா ஸ்தூலத்திலிருந்து பிரிவது மரண மெனப்படும்.

ஜீவாத்மாவிற்கு பற்பல ஸ்தூலங்கள் அடிக்கடி தொலைந்து வந்து கொண்டிருந்தாலும் ஸூக்ஷ்ம காரண

சரீரங்கள் ஒவ்வொரு ஜீவனுக்கும் ஜன்மம் தொடங்கினது முதல் இதுவரை விடாமல் தொடர்ந்து வந்திருக்கின்றன. ஸூக்ஷ்மசரீரத்தில் மனம் முக்கியமானதால் அது ஒழிந்து போகும்போது மற்ற இந்திரியங்களும் பிராணனும் தாமே ஒழிந்துவிடும். அம்மனம் ஒழியாமற்போனால் நமது கர்மங்களும் அழியமாட்டா. அவை அழியாவிடில் ஒருபோதும் ஜீவனுக்கு பிறப் பிறப்பில்லாத முக்தியுண்டாக மாட்டாது. ஆதலால் மனம் ஒழிந்துபோகும் வழி என்ன? என்பதை ஆராயவேண்டும். ஒவ்வொருவர்களின் மனத்திலும் அஞ்ஞானம் என்ற இருள்சூழ்ந்துகொண்டிருக்கிறது. அதுவே ஜீவனுக்குக் காரணசரீரமெனப்படும். அநாதியான அந்த அஞ்ஞானத்தினாலேயே கர்மங்கள் வளருவதால் கர்மங்கள் அஞ்ஞான உருவமாக இருக்கின்றன. அந்த அஞ்ஞானம் தொலைந்து ஞானரூபமாய்ப் பிரகாசிக்கின்ற மகா ஞானிகளாகிய ஜீவன் முக்தர்களுக்கு கர்மபந்தம் கிடையாது. கர்மங்கள் தொலைந்து விடுகின்றன. * "துள்ளு மறியாமனது பலிகொடுத்தேன் கர்மதுஷ்ட தேவதைகளில்லை" என்று தாயுமானவர் கூறுகின்றார்.

நமது மனமென்ற ஸூக்ஷ்ம சரீரமோ அஞ்ஞானமென்ற காரணசரீரத்தின் வலுவைப் பெற்றிருப்பதால் எளிதில் நாசமடையக் கூடியதல்ல. அஞ்ஞானத்தினால் கனமாயிருக்கிற அம் மனத்தினில் அஞ்ஞானம் நசித்து விட்டால் அது தெளிந்து இலவம்பஞ்சுபோன்று மெல்லியதாய்விடும். அப்போது அது கூடிய சீக்கிரத்தில் தானே ஒடுங்கி எளிதில் நசித்துப்போய்விடும். அதன் பிறகு ஜீவாத்

* கருணாகரக்கடவுள். பாசுரம் 8.

மா பரமாத்மாவினிடம் சேர்ந்துவிடுகிறான். ஏனெனில் அப்போது அதற்குத் தடையாயிருந்த ஸூக்ஷ்மசரீரமாகிய மனமும் காரணசரீரமாகிய அஞ்ஞானமும் நாசமாய்விட்டனவன்றோ? அயத்திற்கும் காந்தத்திற்கும் மத்தியில் ஏதாவது மறைவு இருந்தால் அயம் காந்தத்திற்போய் ஒட்டாது. அம் மறைவை நீக்கிவிட்டால் இயற்கையாகவே அயம் (இரும்பு) காந்தத்திற்போய் ஒட்டிக் கொள்வது போன்றே ஜீவன் பரமனிடம் சேர்ந்து கொள்ளுகிறான் என்று அறியவேண்டும்.

உலகத்தில் ஸமான ஜாதியமான ப்ராணிகள் மத்தியில் தடையில்லாவிடில் ஒன்றுக்கொன்று சேர்ந்து ஒத்திருக்கும் தன்மை யுள்ளனவாகவே காணப்படுகின்றன. இதற்கு ஆட்டினங்கள் தக்க உதாரணமாகும். ஒரு ஆற்றிலுள்ள ஜலத்தில் பல உறைகளிருந்தால் அவ்வுறைக் கிணறுகளிலுள்ள ஜலம் வெவ்வேறாகக் காணப்படுகிறது. அவ்வுறைகளை எடுத்துவிட்டால் கிணற்று ஜலம் ஆற்று ஜலத்துடன் இயற்கையாகவே கலந்து கொள்ளுகிறது. அதுபோன்று ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஓரே ஸ்வபாவமுள்ளனவாகையால் ஜீவர்களின் முயற்சியினால் ஜீவனிடமுள்ள ஜீவத்தன்மை விலகும்போது அது தனி ஆத்மாவாகி பரமாத்மாவினிடம் லயித்து விடுகிறது. இதுதான் பரமாத்மாவினிடம் ஜீவாத்மாவிற்குள்ள ஸம்பந்தம். அது ஜீவனுக்கு படிப்படியாகத்தான் கிடைக்கும். அதற்கு முதற்படியாயுள்ளது விக்ரஹாராதனமாகையால் அதைப் பற்றி முக்யமாய் நாம் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். அது இதன்பின் கூறப்படும்.

## ஒன்பதாம் அதிகாரம்.

### விக்ரஹாராதனம்.

விக்ரஹம் என்பது பக்தர்களின் பிரார்த்தனைக் கிணங்கிய பகவான் குறிப்பிட்ட யிடத்தில் வலுவில் வந்து தோன்றி நின்று வஸிப்பதற் கேற்றதாயுள்ள ஒரு உருவம். அதில் பகவான் இருப்பதாக நிச்சயித்துப் பூஜித்தல் விக்ரஹாராதன மெனப்படும். "எங்கும் பரவி நிறைந்திருக்கின்ற ஈசுவர ஸ்வரூபம் குறிப்பிட்ட ஒருசிறிய உருவத்தில் அடங்கியிருப்பதாக பாவித்தல் இறைவனைக் குறைவு படுத்தினதாக ஏற்படுவதால் அது ஒரு பாபகிருத்யம்; அறிவு நிறைந்த கடவுள் அறிவில்லாத ஜடப்பொருளாகிய சிலை, சாந்து, மரக்கட்டை, உலோகம் இவற்றில் இருப்பதாக பாவித்தல் அதினும் பாபமான கிருத்யம்; எவற்றாலும் நிறையப்பெற்று எதனிடமும் அபேக்ஷையில்லாத ஈசனிடம் மனிதர் விரும்பும் பொருட்களைக் காட்டி அவர்க்குரிய உபசாரங்களால் மகாதேவனை மனிதனாக்கிக்கொள்ளுதல் அதனைவிட இழிவான தொழில்; அக் கார்யத்திற்காக பல பூர்வீகமான அரசர்களும் ஜனங்களும் பெரிய ஆலயங்களைக் கட்டி அவற்றில் விக்ரஹங்களை வைத்து அவற்றிற்கு நித்யாராதனம் உற்சவம் முதலியவைகளை அமைத்து அவை நடைபெறுவதற்காக மானியங்களைச் சொத்துகளாக ஏற்படுத்தி வீண் செலவுகள் செய்து கொண்டும், காலங்களை வீணாகப் போக்கிக்கொண்டும் இருந்தனர்; அது போதாததுபோல் முன்னவர் செய்து

வைத்திருக்கின்ற அப் பழைய ஏற்பாடுகளை தற்காலம் நவீன நாகரீகமமைந்த இந்த பாரத பூமியில் உள்ளப் பின்னவர் இன்னமும் அனுசரித்துவருவது மிகப்பேதைமை; ஆனதால் அதைப்போன்ற புத்தியீனமான காரியம் வேறொன்றுமில்லை" என்ற புறச்சமயக் கூற்றுகள் புராதனமான நமது தேசத்திற் புதிதாகப் புகுந்து பொங்கிப் பொங்கி எழுந்துகொண்டிருப்பன. நமது சிறுவர்களும் ஸாமான்ய ஜனங்களும் அக் கூற்றுகளைப் பெருமைப்படுத்தியும் நமது விக்ரஹாராதனைப் பழக்கத்தைச் சிறுமைப்படுத்தியும்பேசிக்கொண்டு அநேகர் ஆலயங்களுக்கே செல்லுகிறதில்லை. அதிலும் சிலர் வேடிக்கையாக சிநேகிதர்களுடன் போனபோதிலும் ஆலய தெய்வ வழிபாட்டு முறைகள் இன்னவை என்பதை யறியாமல் விநோதமாய்ப் பேசிக்கொண்டு போய்வருகிறார்கள். அது ஒரு உபயோகமற்ற வேலையென்றும் நினைக்கிறார்கள். அவற்றிற்கெல்லாம் காரணம் என்ன? விக்ரஹாராதனத்தின் உண்மை யறியாமையே. ஆதலால் அதைப்பற்றி நமது சாஸ்திரங்களில் விரிவாக ஆங்காங்கு கூறப்பட்டிருப்பதை ஆராய்ந்து அதனைச் சுருக்கி நாம் இங்கு விவரிப்போம்.

ஜீவாத்மா பரமாத்மாவினிடம் போய் ஸம்பந்தித்து துன்பங்கலவாத இன்பம் பெறவேண்டுமானால் அதற்குத் தடையாக ஜீவனுக்கு ஏற்பட்டுள்ள ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரண சரீரங்கள் அழியவேண்டுமென்று முன் அதிகாரத்திற் சொன்னோம். அவற்றுள் ஸ்தூலசரீரத்தின் அழிவைப்பற்றிப் பிரயாசை இல்லை. அது இயற்கையாகவே அடிக்கடி அழியக்கூடியது. ஸூக்ஷ்ம, காரண சரீரங்களை

அழிப்பதற்குத்தான் ஜீவன் முயற்சிக்கவேண்டும். ஸூக்ஷ்ம சரீரமென்பது முக்யமாய் மனம், காரணசரீரமென்பது அதிலுள்ள அஞ்ஞானம். காரணசரீரம் நசித்து விட்டால் ஸூக்ஷ்ம சரீரம் தானே நசித்துவிடும். அஞ்ஞானம் நசித்தால் அதனால் மறைக்கப்பட்டிருந்த ஞானம், பாசிவிலகின சுத்தஜலம் போன்று ப்ரகாசிக்கும். அதுதான் ஜீவாத்மாவின் வாஸ்தவ ரூபம். அந்த நிலைமையில் துன்பமில்லாத இன்பவடிவமாக ஆத்மாயிருக்கிறான். இங்கே காரணசரீரமாகிய அஞ்ஞானமென்பது மனத்திலுள்ள வஜ்ரப் பசை போன்ற ஒருவித அழுக்கு. அதனை மனத்திலிருந்து தோண்டிஎடுக்க வேண்டுமானால் அம்மனம் தனது ஸ்தானத்தில் அசையாமலிருந்தாற்றான் அது முடியக்கூடியது. நமது மனமோ அப்படியல்ல. காற்றினால் அலையும் விளக்குச் சுடர்போன்று எப்போதும் ஆடிக் கொண்டிருக்குந் தன்மையுள்ளதென யாவருக்கும் அநுபவத்தில் தெரிந்த விஷயம். அப்படியானால் அதிலுள்ள அழுக்கைத் துடைப்பது எப்படி? ஆதலால் மனதின் சலனத்தை முதலில தடுக்கவேண்டும். அதனாற்றான் தாயுமானவரும் "பாழானவென்மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவதுனக் கருமையோ" என்று ஸ்வாமியை நோக்கிக் கூறுகிறார். இதனாலேயே அம்மனத்தின் ஆட்டத்தைத் தடுப்பது லேசான கார்யமன்று என்பது நன்கு விளங்கும். அது எப்படி ஸாதக மாகுமென்றால்?

---

## மனத்தைக் குவித்தல்.

ரூபம், ரஸம், கந்தம், சப்தம், ஸ்பர்சம் என்ற ஐந்து விஷயங்களில் தாவித்தாவி ஓடிக் கொண்டிருக்கிற ஞானேந்

திரியங்களை மனத்தின் வலிமையால் முதலில் அடக்கி அவற்றை மனத்தோடு சேர்த்து அம்மனம் இடையறாது பரமாத்ம வஸ்துவினிடம் பற்றியிருக்கும் படியாகச் செய்வதனால் நாளடைவில் மனத்தின் சலனம் பூராவாக நின்று விடும். அதுவே தியான மெனப்படும். அதனால் மனத்திலுள்ள அஞ்ஞானம் கொஞ்சம் கொஞ்சமாக விலகி விடும்.

அம்மனம் உலகத்திலுள்ள மற்ற ஸாமான்ய வஸ்துக்களை தியானிக்காமல் பரமாத்ம வஸ்துவையே தியானிக்க வேண்டுவது அவசியம். ஏனெனில் புழு, தன்னை அடிக்கடிக் கொடுக்கால் கொட்டிவிட்டு வெளியிற்போய்க் கொண்டிருக்கும் குளவியைத்தன் துன்பம் பொறுக்க மாட்டாமல் "குளவி எப்போது திரும்ப வருமோ" என்று ஸதா தியானித்துக் கொண்டிருப்பதால் அப் புழுவும் குளவி உருவமாய் மாறி விடுகிறது. இந்த ப்ரமர—கீட (குளவிப் புழு) நியாயம் அனுபவஸித்தம். அது போன்று ஜீவனின் மனமும் பரமாத்ம வஸ்துவை எப்போதும் தியானிப்பதால் ஜீவன் பரமனாய் விடலாம். அதற்குத் தியானம் மாத்திரம் வலுமையுற்றதாக இருக்கவேண்டும். நமது மனமோ குறுகினதாக இருப்பதால ஆகாசம் போன்று எங்கும் பரவினதும் மூர்த்தமாயில்லாததுமான பரமாத்ம வஸ்துவை அகண்டாகாரமாகத் தியானிக்க சக்தியற்றிருக்கிறது. ஆகையால் முதலில் மனம் தியானித்துக் கொண்டு ஓரிடத்தில் நிலைத்திருப்பதற்கு ஒரு மூர்த்தியுடன் கூடின மூர்த்தமான சிறிய உருவத்தில் பகவானை அமைத்துக் கொள்ள வேண்டியது அவசியம். அதில் பரமாத்ம ஸ்வரூபமாகிய ஈச்வரன் இருப்பதாக திடமாய் நினைத்துக்கொண்டு

அவரவர் சக்திக்குற்றவாறு தினந்தோறும் தவ்ராமல் அதை தியானித்து வரவேண்டும். அவ்விதம் இடைவிடாமல் செய்யப்படும் தியானம் நாளுக்குநாள் வலுத்துவிடும். அப்போது கொஞ்சம் கொஞ்சமாய் அம்மனம் விகஸித்து அகண்டாகாரமாயும் அமூர்த்தமாயு மிருக்கிற பரமாத்ம வஸ்துவை தியானிக்க சக்தியுள்ளதாய்விடும். அது யோகிகளுக்குத் தான் அமையும். அதைப்பற்றி யோகஸம்பந்தமான அதிகாரத்தில் விரிவாய்க் கூறப்படும்.

பரமாத்மாவின் மூர்த்தமான சிவன், விஷ்ணு, ராமன், கிருஷ்ணன் முதலிய ஸ்வரூபத்தைத் தியானிப்பது ஸகுணோபாஸனையென்றும், அமூர்த்தமான ஸ்வரூபத்தைத்தியானிப்பது நிர்குணோபாஸனை என்றும் சாஸ்திரம் கூறுகிறது. ஸகுணோபாஸனை இல்லாமல் நிர்குணோபாஸனை ஸித்திக்கவே மாட்டாது. அரிசியில்லாமல் அன்னம் ஸித்திக்க மாட்டாதன்றோ? அந்த நிர்குணோபாஸனைக்கு ஆரம்பத்தில் ஸாதகமாக இருப்பது விக்ரஹாராதனமே. அதனைக் கைக்கொள்ளாவிடில் உலக விஷயங்களை அடிக்கடிப் பற்றுகிற நமது மனம் ஒருபோதும் அடங்கியில்லாது. முதலில் விக்ரஹ ரூபத்தில் இறைவனைத் தியானித்துப் பிறகு நமது ஆத்மாவினிடம் அவன் இருப்பதாகத் தியானித்து அதன் பிறகு நாமும் அவனும் ஒன்று எனத்தியானித்து கடைசியாகவுள்ள அந்த தியானம் வலுக்கும்போது படிப்படியாய் மோக்ஷம் ஸித்திக்கிறது.

ஒரு தோப்பிலுள்ள மரங்களைச் சேர்த்துப் பார்க்கும்போது அவற்றைப்பற்றி நமது மனத்திற்கு ஒன்றுமே

தோன்றுகிறதில்லை. ஒவ்வொரு மரமாய்த் தனித்தனிப் பார்க்கும்போது அம்மரங்களின் உருவம் மனதிற் பதிந்து விடுகிறது. அதுபோன்று நமது மனதின் ஸௌகர்யத்திற்காக அகண்டமான பரமாத்ம ஸ்வரூபத்தை ஒரு விக்ரஹத்தினிடமாக வருவித்து உபாஸித்துக்கொள்ளுகிறோம். அது தப்பிதமல்ல. எங்கும் நிறைந்த பரமாத்ம ஸ்வரூபம் அந்த விக்ரஹத்திலும் இருக்கிறதல்லவா. பால் பசுவின் உடப்பு முழுதும் பரவி நிற்பினும் முலைக்காம்பின் வழியாகத் தோன்றுவது போன்று இறைவன் எங்கும் வியாபித்தவனாக இருந்த போதினும் அன்பர்களுக்கு விக்ரஹத்தின் வழியாகத் தோன்றுகிறார். கடவுள், விக்கிரஹங்களில் தயிரில் நெய் போல பக்தர்களுக்கு விளங்கி நிற்பர். மற்ற விடங்களெல்லா வற்றிலும் பாலில் நெய் போல விளங்காது நிற்பர். பூமியின் மணம் புஷ்பத்தில் விளங்கியும் மற்றவிடங்களில் விளங்காமலும் நிற்கிறதல்லவா?

ஆதலால் மனத்திற்கு விக்ரஹாராதனப் பழக்கமில்லாவிடின் ஸகுண நிர்குண பிரம்மோபாஸனை ஸித்திக்கவே மாட்டாது. அதனால் மோக்ஷமும் கிடையாது. அக்ஷரங்களைக் கற்காதவன் புஸ்தகங்களை எடுத்து எப்படி வாசிப்பான்? புஸ்தகம் படிக்கிறவன் எழுத்துக்களைப் பயின்று கொள்ளாமலே படிகிறான் என்றால் யாராவது ஒப்புக்கொள்வார்களா? அவ்விதம் மோக்ஷமடைந்தவர்கள் யாவரும் விக்கிரஹாராதனம் என்ற முதல் ஸாதனத்திற் பழகியுள்ளவர்கள் என்றே தீர்மானிக்க வேண்டும். சில தேசங்களில் ஜனங்கள் மனம் ஒரு மூர்த்த ஸ்வரூபத்தில் நிலைபெறுவதின் பொருட்டு கண்ணாடியை எதிரில் வைத்

துக்கொண்டு அதில் பிரதிபலித்த தனது பிரதி பிம்பம் தன் மனதிற்கு இன்பமாக யிருப்பதால் அதையே ஈச்வர ஸ்வரூபமாகப்பாவித்துத் தியானிக்கும் பழக்கத்தைபத் திரிகையின் வாயிலாகக் கேட்டிருக்கிறோம். விக்ரஹாராதனத்தை நம் தேசத்திலுள்ள முறைப்படி ஏற்படுத்திக் கொள்ளாத தேசங்களில் அத்தேசத்திலுள்ளவர்களுக்கும் மனம் அடங்கி ஒடுங்க வேண்டுமென்ற விருப்பமுண்டானால் அவர்கள் ஆரம்பத்தில் எந்த முறையிலாவது மூர்த்தஸ்வரூபத்தை தியானித்தல் என்ற விக்ரஹாராதனத்தை முதலில் கைக்கொள்ளாமல் அவரது விருப்பம் ஸித்தி பெறமாட்டாது என்பதாகத் தீர்மானிக்கவேண்டும். ஏனெனில் ஒரு வாக்யத்தின் பொருளையறிவதற்கு அதிலுள்ள பதங்களின் பொருளறிவு காரணமாயிருப்பது போன்று அகண்டத்தை அறியவேண்டியதற்காக முதலில் கண்டமான அம்சங்களைப்பற்றின அறிவிற் பயிலுவதுதான் மனிதர் மனத்தின் இயற்கையான பழக்கமாயிருக்கிறது.

சிலருடைய மனத்திற்கு முந்தின ஜன்மங்களில் விக்ரஹாராதனப் பழக்கம் பலப்பட்டிருந்தால் ஒரு ஸமயம் அதற்கு மேற்படியில் அதில்லாமலேயே அவர்கட்கு பழகக்கூடிய முயற்சி ஏற்படும். ஜனங்களுடைய மனமோ பற்பலவிதமான பக்வநிலையில் இருந்து கொண்டிருக்கிறது. எப்படியாகிலும் முதற்படியாக விக்ரஹ தியானம் பலப்பட்டவனுக்கு மற்றதில் முயற்சி எளிதாகவே கைகூடும். ஆதலால் ஒரு தேசத்தில் அநேக அறிவாளிகள் முன் வருகிறதற்கு ப்ரதானமான ப்ரதம ஸாதனமாகிய ஆரம்ப கலாசாலைகளை அதிகமாய் ஏற்படுத்துவது போன்று அநேக

ஜீவர்கள் உய்யுமாறு எண்ணுதற்கரிய ஆலயங்களை நிர்மா ணித்து அவற்றில் விக்ரஹாராதனம் ஏற்படுத்திய முன் ஞேர்களின் செய்கையை நிந்திக்கின்றவர்கள் தான் உலகில் நிந்திக்கப்படுவார்கள்.

---

### விக்ரஹாராதனப் பிரமாணங்கள்.

பகவத்கீதையில் கிருஷ்ணபகவானுல் ‡"ஓ அர்ஜுனு! என்னிடத்தில் மனத்தை நிறுத்தி ஸகல கர்மங்களையும் என் னிமித்தம்செய்து, அவற்றின் பலனை எனக்கர்ப்பணம் செய் தும் அதிகசிரத்தையுடன்கூடியும் எவர்கள் என்னை உபாசிக் கிறுர்களோ; அவர்கள் சிரேஷ்டர்கள்என்று எனது நிச்சய மான கொள்கை. எவர்கள் வாக்கிற்கு எட்டாததும் மனத் திற்கு அகப்படாததும் பிரபஞ்சத்திற்குக் காரணமானதும் விருத்தி க்ஷய மற்றதும் சாசுவதமானதும் ஸகலத்திலும் வியாபித்திருக்கிறதுமான நிர்குண பிரம்மத்தை உபா ஸிக்கின்றுர்களோ; அவர்கள் இந்திரியங்களை அடக்கி ஸகலத்திலும் ஸமபுத்தி யுள்ளவர்களாயும் ஸகலப் பிராணி களுக்கும் நன்மையை கோருகின்றவர்களாயு மிருந்து என் னையே அடைகின்றுர்கள். ஆனுலும் நிர்குணப் பிரம்மத்தின் உபாஸனை மிகவும் பிரயாசமானது. நிர்குண விஷய மான நிஷ்டை தேகாபிமான முடையவர்களால் அடையப் படுவது கஷ்டம். ஸகல கர்மங்களையும் என்னிடம் ஸமர்ப் பித்து என்னை சரணமடைந்த வர்களும் என்னிடத்தில் வைக்கப்பட்ட மனத்தை யுடையவர்களும் ஒரே விதமான பக்தியினுல் என்னையே தியானம் செய்துகொண்டு உபா

---

‡அத்தியாயம் 12 சுலோகம் 2—7.

வலிக்கின்றவர்களுமான பக்தர்களை ஜனன மரணங்கள் என்ற ஸம்ஸார ஸாகரத்தினின்றும் நான் சீக்கிரமாகக் கரையேற்றுகிறேன்". * "எந்தெந்த மனிதன் பக்தியுடனும் சிரத்தையுடனும் எனது எந்தெந்த மூர்த்தியை பூஜிப்பதற்கு இச்சிக்கிறானோ; அந்தந்த மூர்த்தியிலேயே அவனவனுக்கு அசைவற்ற அதிக பக்தி, சிரத்தைகளை உண்டு பண்ணுகிறேன்" என்றும், ஸௌதஸம்ஹிதையில் ‡ "மனிதர் எந்தெந்த மூர்த்தியைப்பற்றி பிரம்ம பாவனையுடன் பூஜிக்கின்றனரோ; அந்தந்த வடிவமான சங்கரனையே அவரனைவரும் வரிசையாய் அறிகின்றனர்". "முனீசுவரரே! இவ்விதம் (பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், அக்கினி, ஸௌர்யன் முதலிய) மூர்த்திகளின் பெயர் வாயிலாகவே அவ்வடிவங்களிடம் மகாதேவன் அந்தர்யாமியாக இருக்கின்றான்" என்றும் கூறப்படுகின்றன.

ரிக் வேதத்தில் † "பெரிதான ஸமுத்திரக்கரையோரத்தில் மனிதனாற் செய்யப்படாது மிதந்துகொண்டிருக்கும் மரத்தைத்தொழ விரவிற் கொண்டுவா" $ "ருத்ரனே! உம்மையடைதற்பொருட்டு தேவர் பூஜிக்கின்றனர்" எனப்படுகிறது. ஈசுவர பிம்பங்களுக்கு சரியான ஆராதனமின்றி உலகத்திற்குத் தீங்கு நேரிடுவதைப் பிற்கூறும் ஸம்பவங்களால் பிம்பங்கள் உணர்த்துகின்றன என்று ஸாமவேதத்தில் ¶ "தேவாலயங்கள் நடுங்குகின்றன; விக்ரஹங்கள் சிரிக்கின்றன; அழுகின்றன; பாடுகின்றன; கூத்

---

* அத்யாயம் 7. சுலோகம் 21. ‡ கண்டம் I. அத்யாயம் 6. சுலோகம் 39, 48. † அஷ்டகம் 7. அத்யாயம் 15. ரிக் 9. $ அஷ்டகம் 3. அத் 8. ரிக்16. ¶ ப்ரபாடகம் 5. கண்டம் 10. வாக்யம் 9.

தாடுகின்றன; வாய் திறக்கின்றன; வியர்வை விடுகின்றன; அடிக்கடி கண்களைத் திறந்து மூடுகின்றன; நடந்து செல்லு கின்றன; தலையில்லாத முண்டங்கள் ஆறுகளில் காணப்படு கின்றன; ஆறுகளில் தண்ணீரிருந்தும் இல்லாததாகத் தோன்றுகிறது" என்பதாகச் சொல்லப்படுகிறது. உபநி ஷத்தில் §"அவனது அவயவங்களால் இவ்வுலகமெலாம் வியாபிக்கப் பட்டுள்ளது" எனப்படுகிறது. புராணங்க ளில்"உலகப்பற்றுள்ள ஸாமான்யபுத்தி யுடையவர்களுக்கு பதுமைகள் என்ற விக்ரஹங்களிலும், ஹோமம் முதலிய கிரியைகளைச் செய்கின்றவர்களுக்கு அக்னியிலும், முனிவர் களுக்கு மனத்திலும், எல்லாவற்றையும் ஸமமா கப் பார்க்கின்ற பேத புத்தியில்லாத ஞானிகளுக்கு எல்லா விடத்திலும் இறைவன் விளங்கிக் கொண்டிருக்கிறான்" என்று கூறப்படுகிறது.

‡"பிறவிப்பெருங்கடல் நீந்துவர், நீந்தார் இறைவனடி சேராதார்" என்ற திருக்குறள் இறைவன் அடிகளைச் சேர்ந் தவர்கள் பிறவி என்னும் பெருங்கடலை நீந்துவர், சேராதவர் நீந்தமாட்டார் என்பதாகக் கூறுவதால் மோக்ஷமடைய ஈசுவரன் பாதங்களைத் தொழுதல் வேண்டுமென்று உணர்த் துகிறது. "ஆலயம் தொழுவது சாலவு நன்று" "கோ யிலில்லா வூரில் குடியிருக்க வேண்டாம்" என்ற ஔவைப் பிராட்டியாரின் முதுமொழிகளும் விக்ரஹாராதனத்தை நன்கு வற்புறுத்திக் கூறுகின்றன. முற்கூறியவைகளால் முதலில் ஈச்வரனை அமூர்த்தமாக வழிபடுதலை விட ஒரு

§ சுவேதாசுவதரம்; அத்யாயம் 4. வாக்யம் 10. ‡ அதிகாரம் 1. திருக்குறள் 10.

பூர்த்தமாக வழிபடுதல் இலகுவானது என்றும் இவ்வித மாக உபாஸிக்காதவர்கள் பிறப் பிறப்பாகிய ஸம்ஸார சக்கரத்தினின்றும் தப்பமுடியாது என்றும் ஏற்படுகிறது.

---

## புறச் சமயக் கூற்று மறுப்பு.

பலதரப்பட்ட வயதுள்ள பிள்ளைகள் தத்தம் தாத்திற் கேற்றவாறு தான் தகப்பனது திறமறிந்து நடப்பார். அதனால் பிள்ளைகள் தன் பெருமை முழுதுமறியாமற் சிறுமைப் படுத்தியதாகப் பெற்றவன் கருதுகின்றானா? பிள்ளைகளின் அறிவு முதிர்ச்சிக்காகவே அரும்பாடுபடும் தகப்பன் தனது திறமையை அவரவர் நிலைமைக்கேற்ப, தானே தாரதம்யப் படுத்திக்கொண்டு அவர்களுடன் பழகுவதைக் கண்ணாரப் பார்க்கின்றோம். அதுபோன்று ஜகத் பிதாவாகிய பகவான் அன்பர் மனத்தின் நிலைமைக்குத் தக்கபடி அவர் வழிபடும் வகைகளுக்கெல்லாம் தனது வடிவத்தை வகுத்துக் காட்டும் கருணையுள்ளவன். ஏனெனில் ப்ரஹ்லாதன் என்ற பால்குடிமாறாத பாலனாகிய பரம பக்தன் கருதியவண்ணமே அவன் தூணில் தோன்றியவனன்றோ? தன் கண்ணைப்பறித்து ஈசன் வடிவிற்கு அர்ப்பணம்செய்த கண்ணப்பனும், யமனிடமிருந்து தன்னைக் காக்கவல்லதெனக் கருதி கடவுள் வடிவத்தைக் கட்டிக் கொண்ட மார்க்கண்டேயனும் பார்த்து மகிழும்படி லிங்க வடிவமான விக்ரஹத்தினின்றும் தோன்றி எழும்பிய தயாநிதியன்றோ அவன்? இவ்வுண்மை யறியாதவர் ஈசனை ஒரு சிறிய உருவத்தில் கட்டுப்படுத்துவதாகப் புறங்கூறுவர்.

நாம் தினமும் தவராது வழிபடவேண்டிய கடவுளது உருவம் சாஸ்திர முறைப்படிக்கான இலக்ஷணங்கள் பொருந்தியதாக விருக்கவேண்டும். அப்படி அடிக்கடி அமைப்பது கஷ்ட ஸாத்தியமான கார்யம். அதனைக்கருதி நீண்ட காலம் நிலைக்கக்கூடிய சிலை முதலிய ஸாதனங்களால் விக்ரஹம் அமைத்துக்கொள்ளப் பெரியார் சாஸ்திர வாயிலாக வழிகாட்டி யிருக்கின்றனர். அது "ஈசன் அசேதனத்திலும் அறிவுமயமாய், என்றும் நிலைத்திருப்பவன்" என்ற தத்வத்தை உணர்த்துகிறது. சேதனனாகிய நமது ஆத்மா, ஜடமாகிய ஸ்தூலசரீரத்தி லிருந்துகொண்டுதான் தனது அறிவை வளர்த்துக்கொள்ள வேண்டியவனாக பகவான் படைத்திருப்பதை பக்தன் உணர்ந்திருப்பதற்கும் அது ஒரு அறிகுறி. ஜடப்பொருளில் சேதனனாகிய பகவானை பாவித்தல் பாபமாகுமென்பார் நம்தத்வங்கள் அறியாதார்.

ஒரு அடிமை "தானும் தனது பொருட்களும் தன்னையாளும் பிரபுவிற்குச் சொந்தமானவை" என்ற கருத்தை யுணர்த்தும்போது அடிமையை அறிவீனனாக நினைக்கும் பிரபு உண்டோ? இல்லை. அதுபோன்று கடவுளது ஆராதனகாலத்தில் அவரீந்த பொருட்களைக்காட்டி உபசரித்தல், "கடவுளுக்கு நான் அடிமை; என்னிடமுள்ளன வெல்லாம் அவரைச் சார்ந்தன" என்பனவற்றைக் குறிப்பிடுவது. இவ்விதமாக நன்றிகாட்டும் நுண்ணிய அறிவுள்ள பக்தனை ஜகத் பிரபுவாகிய கடவுள் தன்னை மனிதனுக்கியதாக நினைத்து வெறுத்துக்கொள்வரோ? மாட்டார். அகத்தில் மகிழ்ந்து அன்பனைக் கடாக்ஷித்து அண்மையில் அழைத்துக் கொள்வார். இந்த நுட்பமறியாதார் இச்

செய்கையினிடம் குறை கூறுவர். மேலும் ஒரு பெரியாரை நேரில் வழிபட இயலாதார் அவரது உருவப்படத்தை வைத்து ஊர்வலம் முதலியவற்ருல் உபசரிப்பது உலகத்திலுள்ள எந்த மதத்தினராலும் ஆதரிக்கப் பெற்றிருக்கிறது. பல புறமதத்தினரும் தத்தம் நன்றியறிகுறியாக விருக்கும் பல் வேறுவகையான சின்னங்களையே அவரவர் ஆலயங்களில் அமைத்துத் தொழுகின்றனர். அதனை ஆராயாது பித்தத்தால் கண்களில் பசுமை கொண்டவனுக்கு வெளுப்பும் மஞ்சளாகவே தோன்றுவது போன்று பிறர் மத அநுஷ்டானங்களிற் பொறுமை யில்லாதார்க்கு குணங்களும் குற்றங்களாகவே காணப்படுவனவன்றே?

நமது விக்ரஹாராதனப் பழக்கத்தைப் பழிக்கும் மதத்தினர்ப் பிரமாணமாய்க்கொண்ட * நூல்களிலும் பல

* கிரிஸ்துவர் பைபிள் ஆதியாகமம், அதிகாரம் 1, வாக்யம் 26, 27-ல் "பின்பு தேவன் நமது நிழற்போலவும் நமது உருவம் போலவும் மனிதனை உண்டாக்குவோமாக" என்று "தனது வடிவமாக (In his own Image) மனிதனைப் படைத்தார்" என்றும், பற்பல விடங்களில் 'தேவன் பார்த்தார்' 'உலாவினர்' 'சொன்னர்' 'விரல்களாலெழுதினர்' 'கற்பித்தார்' 'பரமண்டலத்திலிருக்கின்ருர்' 'தேவதூதர்கள் வணங்கத்தக்க வண்ணம் ஸிம்மாஸனத்தில் வீற்றிருக்கின்ருர்' 'ப்ரத்யக்ஷமானர்' 'மனிதர் சரீரத்தைத் தமது சரீரமாக்குவார்' என்றும் கூறப்படுவன.

மகம்மதிய குரான் அதிகாரம் 12, வாக்யம் 8ல் "கடவுள் ஆறு தினங்களில் வானங்களையும் பூமியையும் படைத்தார். (அதற்கு முன் அவர் ஏழாவது வானத்தில் "அறுசு" என்னும் ஸிம்மாஸனத்திலிருந்து பலர்களுடன் பேசினர்)" என்றும், அதிகாரம் 69, வாக்யம் 17-ல் "அந்த நாளில் (ஆகர்ஜமாவென்னும்

விடங்கள் விக்ரஹாராதனத்தை வெளிப்படையாய்க் கூறு விடினும் அதனையே சிறப்பித்துக் குறிப்பாய் நிரூபிப்பன. இதன் கீழ்க்குறிப்பில் கண்டுள்ள வாக்கிய விஷயங் களையே மனத்தினில்நினைத்து ஈசனைத் தொழவேண்டிய வர்களான புறச் சமயிகள் மானஸவிக்ரஹாராதனத்தின் பழக்கத்தையே பயின்றுவருகின்றனர் என்பது நிச்சயம். ஒரு சிறிய படத்தில் ரேகைவடிவமாய்ச் சுருக்கி வரைந் துள்ள ஒரு தேசத்தையும் அதன் பிரிவுகளையும் பெயர் களையும், ஸங்கதிகளையும் முன்னமே பார்த்துப் பழகின வனும், அப்படிப் பழகாதவனும் ஒருகால் அத்தேசமுழு தும் ஸஞ்சரித்து அதன் விசேஷங்களைத் தெரியவேண்டி வந்தால் எவன் எளிதாகவும் சீக்கிரமாகவும் தெரிந்து கொள்வான்? என்பது இயம்பாமலே விளங்கும். விக்ர ஹத்தையே கடவுளாக நாம் பாவித்திருப்பதாய் நமது சிறுவர் ஸாமான்யர் முன்பாகப் பிதற்றும் புறமதத்தினர் கருதியவாறல்ல நம் மதக்கொள்கை. எப்படியெனில்?

உபாஸனை (ஆராதனம்) நால்வகைப்படும். ரூப உபாஸனை, ரூபாரூப உபாஸனை, அரூப உபாஸனை, அதீத உபாஸனை என்பன. நேரிலுள்ள விக்ரஹ ரூபங்களில் மனத்தைச்செலுத்தி உபாஸித்தல், ரூப உபாஸனை. நேரி

---

நியாயத் தீர்ப்பு நாளில்) உனது கடவுளின் ஸிம்மாஸனத்தை தேவதூதர் எட்டுப்பெயர் தாங்கியிருப்பார்'' என்றும், அதிகாரம் 2, வாக்யம் 260-ல் "எனது ஆண்டவனே! உயிரைக் கொடுப்பவரும் கொள்பவரும் நீர்தானா? என்று ஆபிரகாம் என்பவர் கேட்டபோது நான்தான் உயிரைக் கொடுப்பவனும் கொள்பவனுமாக இருக்கி றேன் என்று ஆண்டவன் மறுமொழி சொன்னார்'' என்றும் கூறப்படுவன.

வில்லாது முன்பார்த்த விக்ரஹ ரூபங்களை மனத்தால் நினைத்து உபாஸித்தல், ரூபத்தை அந்த ரூபமில்லாதவிடத்தில் உபாஸித்தலான ரூபாரூப உபாஸனை. கடவுளை ரூபமில்லாதவராக நினைத்து ஆத்மாவினிடம் உபாஸித்தல், அரூப உபாஸனை. கடவுளும் தானும் ஒன்றுகபாவித்து உபாஸித்தல், அதீத உபாஸனை. இந்நான்கும் படிப்படியாயுள்ளன. பிற்கூறிய மூன்று உபாஸனைகளும் சேர்ந்து ஸூக்ஷ்ம உபாஸனை என்றும், முற்கூறியது ஸ்தூலஉபாசனை என்றும் கூறலாம். ஸ்தூலமின்றி ஸூக்ஷ்மம் நிலைபெறுது. ஆகையால் ஸ்தூல உபாஸனையைவிட்டு ஸூக்ஷ்ம உபாஸனையின் பிரிவுகளில் முதன்மையானதும் ரூபாரூப உபாஸனை யென்றதுமான மானஸ விக்ரஹாராதனப் பழக்கத்தை எடுத்தவுடன் ஏற்றுக்கொள்கின்றவர் முதற் படியேறாமலே இரண்டாம்படியில் ஏறத் தாவித் தாவிக் குதித்துக் கொண்டிருப்பவனுக் கொப்பாவார். முதலில் கைவிரல்களைக் கொண்டு எண்களைக்கூட்டப் பயிலாத சிறுவர் மனத்தைக்கொண்டே எடுத்தவுடன் எண்களை எளிதாகவும் சீக்கிரமாகவும் எப்படிக் கூட்டிமுடிப்பார்?

சாஸ்திரங்களில் வெளிப்படைபோன்று குறிப்பாகவும் கூறியவற்றை அநுஷ்டிப்பது ஹிந்துமதக் கொள்கை. புறமத நூல்களில் தெளிவாயின்றி குறிப்பாகக் கூறியிருக்கும் நம்போன்றதான விக்ரஹாராதனத்தை எளிதில் முன்னேற்ற மடையுமாறு அன்யமதத்தினர் ஏற்காவிடினும் ஏற்றவரிடம் குறை கூறுகின்றனர். அது பிள்ளையார் தொப்புளில் விரல்விட்டு அங்கிருந்த தேள் கொடுக்கால் கொட்டப்பெற்றவன் மற்றவரையும் அவ்வண்ண

மாக்க அவன் பிள்ளையார்தொப்புள் குளிர்ந்திருப்பதாகச் சொல்லிக் கூத்தாடியதுபோலும். நமது அநுஷ்டானங் களது உண்மை சீக்கிரம் புலப்படாவிடில் புறமதத்தினர் தப்பிதமாகப் பிதற்றுவதிற் செவிசாய்க்காது உண்மை தெரிந்தவரைத் தேடி தெரிந்துகொள்ளுவதுதான் அறி வாளியினது இலக்ஷணம். நிற்க. இங்கு கூறிய விக்ரஹா ராதனத்தை நமது சாஸ்த்திரமறிந்த ஆன்றோர் கையாடிய முறைப்படிதான் அநுஷ்டிக்கவேண்டு மாதலால் அது இதன்பின் கூறப்படும்.

---

## பத்தாம் அதிகாரம்.

---

### விக்ரஹாராதன முறை.

அந்தந்த தேவதைகளின் அங்கங்கள், அடையாளங் கள், உயரம், அதற்குத் தகுந்த பருமன் முதலியவற்றைக் கூறும் சில்ப சாஸ்திரங்களை நன்கு கற்றுணர்ந்தும் சிற் பத் தொழிலிற் கைதேர்ந்து மிருக்கின்ற சில்பிகளைக் கொண்டு விக்ரஹங்களைச் செய்விக்கவேண்டும். அவ்விக்ர ஹங்களில் யாதொரு குற்றங்களும் இருக்கக்கூடா. அவை சிலையிலிருப்பது சிலாக்யம். அது நெடுநாளிருக்கக் கூடியது. அதற்கு அடுத்தபடி உலோகம், மரம் முதலி யவற்றிலுமிருக்கலாம். நம்மால் பார்க்கப்படும் ஒரு ஸுந் தர வடிவமான குழந்தையின் உருவம் நமது மனத்தை எவ்வாறு கவரக்கூடியதாகவிருக்குமோ; அவ்வாறே பார்க் கின்றவர்கள் மனத்தைக்கவரத்தக்க ஆகர்ஷண சக்தியுடன்

அவை அமைக்கப் பட்டனவாக விருக்கவேண்டும். பிரம்மா, விஷ்ணு, சிவன், ஸுப்ரஹ்மண்யன், கணபதி, ராமன், கிருஷ்ணன், ஸரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி முதலிய தேவதைகளின் விக்ரஹங்கள் சாஸ்திரத்திற் கூறிய அவரவர் சின்னங்களுடன் இருக்கவேண்டும். முற்கூறிய தேவதைகளுக்குப் பற்பல அவஸரங்கள் இருப்பதால், சின்னங்கள் அந்தந்த அவஸரங்களுக்கேற்றவாறிருக்க வேண்டும். ஆதலால் விக்ரஹங்கள் பல மூர்த்தி பேதங்களுள்ளனவாக இருக்கின்றன. லிங்கத்தில் சிவனும் ஸாலக்ராமத்தில் விஷ்ணுவும் இருப்பதாக சாஸ்திரம் கூறுவதால் அவையும் ஈசன் மூர்த்திகளே. அவற்றுள் எந்த மனிதர்கட்கு பூர்வ ஜன்மவாஸனை யனுசரித்தும், தமது முன்னோர் வழக்கம் குலாசாரம் முதலியவற்றை யனுஸரித்தும், தம் மனத்தின் இன்பத்தை யனுஸரித்தும் யாதொரு விக்ரஹத்தில்ப் பிரியம் உண்டாகிறதோ; அவர்கள் அந்த விக்ரஹத்தை ஆராதிப்பதற்கு எடுத்துக்கொள்ள வேண்டும். ஆராதனமென்பது பூஜை.

ஒவ்வொருவரும் ஸூர்யோதயமாக மூன்றேமுக்கால் நாழிகைகட்கு முன் பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்து கொஞ்சநேரம் ஸ்வாமியை தியானித்து சரீர மலங்களைக் கழித்து சுத்தம் செய்துகொள்ள வேண்டும். பிறகு தந்த சுத்திசெய்து ஆறு, குளம், ஏறி முதலிய ஜலாதாரங்களில் ஸங்கல்பத்துடன் பாபத்தைப் போக்குகிற மந்திரங்களைச் சொல்லி ஸ்நாநம் செய்து பாஹ்ய சரீரசுத்தி செய்து கொள்ளவேண்டும். பிறகு உலர்ந்த வஸ்திரங்கள் தரித்து திருநீறு, திருமண், கோபி, சந்தனம் முதலியவற்றை அவ

ரவர் ஸமயாசார குலாசாரப்படி அந்தந்த ஸ்தானங்களில் அணிந்து நித்ய கர்மாநுஷ்டானங்களை முறையுடன் முடித்துக் கொள்ளவேண்டும்.

ஜீவனுக்குக் கோயில் போன்ற சரீரத்தை அலங்கரிக்க சிரஸ், நெற்றி, மார்பு, வயிறு, விலாப்புறங்கள், தோள்கள், முழங்கைகள், கைமணிக்கட்டுகள், கழுத்து ஆகியவை ஜீவ ஸ்தானங்களாகையால் அவற்றில் திருநீறு முதலியவற்றால் பிரகாசமான புண்ட்ரங்கள் (குறிகள்) அணிந்துகொள்ளாது செய்யும் அநுஷ்டானங்கள் அவல (அபல) மாய்விடுகின்றன என்று எல்லா ஸ்மிருதிகளும் ஒரேவிதமாய் முறையிடுகின்றன. அந்த ஸ்தானங்களில் சிரஸ், நெற்றி, மார்பு இவைகளும், அவற்றுள்ளும் சிரஸும், நெற்றியும் முக்யமானவை. ஆனால் "பிதுரு ஸம்பந்தமான கர்மங்கள் புண்ட்ரங்களில்லாமற் செயயவேண்டுவன" என்று சில ஸ்மிருதிகள் கூறுவதை சில பிரிவினர் முன்னோர் வழக்கப்படி அநுஸரித்து வருகின்றனர். புண்ட்ரத்திற்கு முற்கூறியவற்றைத்தவிர முக்யஸாதனமாயுள்ளது வேறொன்று உண்டு. அது நீர் என்பதாகும். அதனை அணிவதில் ஹிந்து மதத்தினர் யாவரும் ஒற்றுமையுள்ளவர். புத்த மதத்தினர் அரசுபுரிந்தகாலத்தில் "அவர் நூல்கள் ஏற்காத புண்ட்ரங்களை எம்மதத்தினரும் அணியலாகாதன" என்று இடுக்கண்கள் விளைவித்தபோதும் ஹிந்து மதத்தினர் நீரினாலேயே வெளியிற்றோன்றாத குறிகளிட்டு கர்மங்கள் நடத்திவந்தனர். அதனை நினைப்பூட்டவே வெளியிற்றோன்றும் குறிகளை நிர்ப்பயமாயணிந்து கொள்ளக்கூடிய பிந்தியகாலமாகிய இதுவரையிலும் ஹிந்துக்கள் வாரி (ஜல)

புண்ட்ரங்களை முதலிற் பூண்டபிறகே மற்றவைகளைப் பூண்கின்றனர். புண்ட்ரம் திர்யக் (குறுக்கு) ஆகவும் ஊர்த்துவ (மேல்முக) மாகவு மணிவதற்கு வேதங்கள், ஸ்மிருதிகள் முதலியன இருவிதமான ஆதாரங்களையும் அடிப்படையுடன் ஆதரித்துக் கூறுவதால் அக்குறிகளை மாற்றாமல் அவரவர் முன்னவர் வழக்கப்படியே அணியவேண்டியது மிக்க அவசியம். ஏனெனில் "குடுமி, புண்ட்ரம், ஸூத்ரம், ஸமயக்கொள்கை இவற்றை முன்னோர் வழக்கத்திற்கு மாறுதலாக மாற்றியவன் *பதிதன் (நற்கர்மத்தினின்றும் நழுவினவன்) ஆவான்" என ஸ்மிருதிகள் கூறுவன.

* முன்குடுமி பிரம்ம சிகை யென்றும், பின்குடுமி பிரஜாபதி சிகை யென்றும் கூறப்படும். இரண்டு சிகைகளுக்கும் சரியான ஆதாரங்கள் உள்ளன. அவற்றையும் மாற்றக்கூடாது. கர்மங்கள் ஒழுங்குபெற அநுஷ்டிக்க போதாயனர், ஆபஸ்தம்பர், ஆசுவலாயனர், திராஹ்யாயணர், காத்யாயனர், ஜைமினி என்ற ஆறு ரிஷிகள் தனித்தனி ஸூத்திரம் என்ற ஆறு நூல்களியற்றியுள்ளார். அவர்களது சிஷ்ய பரம்பரையிற் சார்ந்தவர் அந்தந்த ஸூத்திரப்படியுள்ள விதிகளை மாற்றக்கூடாது. ஆனாலும் அறுவரில் போதாயனர் தலைமையாகையால் மற்றவாது சிஷ்யர் தம் ஸூத்திரப்படிக்கான விதிகள் நடத்த ஸந்தர்ப்பமில்லாதபோது யாவரும் போதாயன விதிப்படியே நடத்த மற்ற ஐவரும் ஸம்மதித்துள்ளார். இப்பவும் அப்படியே நடந்து வருகிறது. பற்பல ரிஷிகளது வம்சபரம்பரையில் ஜனித்தவர் பலவகைப்பட்ட கோத்திரங்களுள்ளவர்களாயினும் அவர் யாவரும் அறுவகை ஸூத்ரமுள்ளவர்களாகவே வகுக்கப்பட்டிருக்கின்றனர். சைவம், வைஷ்ணவம் முதலிய ஸமயங்கள் (மதங்கள்) ஸம்பந்தமான கொள்கைகள் (அபிப்பிராயங்கள்) சிற்சில விஷயங்களில் மாறுபட்டிருப்பதால் அந்தந்த மதத்தினர் முன்னவர் வழக்கங்களினின்றும் வழுவக்கூடாது என்பது கருத்து.

குறிகளுடன் சிவனுக்குப் பிரியமான ருத்திராக்ஷமாலை முதலியனவும், விஷ்ணுவிற்குப் பிரியமான துளசிமாலை முதலியனவும் அணியப்பெறுவது அதி சிலாக்கியம். ஏனெனில் குறி என்ற கோலமிட்ட பிறகு மாலைகள் என்ற தோரணங்களைத் தொங்கவிடுவதால் சரீரம் என்ற கோயில் அழகிற் சிறந்திருக்குமன்றோ? சுபகர்மங்கள் செய்யும்போது கிரகத்திற்குக் கோலமிடுதலும் அபரக் கிரியைகள் செய்யுங் காலத்தில் கோலமிடாமையுமான வழக்கம் "பிதுர்க்கர்மங் களில் குறி என்ற கோலம் உடம்பினில் கூடாது" என்று கூறிய முனிவர் கருத்தை உணர்த்துவது போலும்.

பிறகு மனத்தில் அடிக்கடி எழும்பும் பற்பல எண்ணங்களில் தீயவற்றைக் களைந்து தூயவற்றை அடக்கிக் கொண்டு வேறு சிந்தை யில்லாதவர்களாய் பூஜை செய்வதற்காகப் புலித்தோல், மான்தோல், தர்ப்பாஸனம், பலகை முதலிய ஆஸனங்களில் உட்காரவேண்டும். ஆஸனம் ஒன்றும் கிடைக்காதபோது வஸ்திரத்தை நாலு மடிப்புகளுக்குக் குறையாமல் சவுக்கமாக மடித்துப் போட்டுக்கொண்டாவது உட்காரவேண்டும். ஆஸனங்களில்லாவிடில் பூஜா காலத்தில் நமது சரீரத்திலுண்டாகும் ஒருவித காந்தசக்தியை பூமி ஆகர்ஷித்துக் கொண்டுபோய்விடும். இவ்விதம் உள்ளும் புறமும் சுத்தனுகவிருந்து பூஜைக்கு ஆரம்பிக்க வேண்டும். விக்ரஹத்தை நமது முன்பாக நம் ஆஸனத்தைவிட உயரமான பீடத்தில் வைத்து கைகளை ஹிருதயத்திற்கூப்பி அஞ்சலி செய்துகொண்டு அதில் "பகவான் வந்து ஸான்னித்யம் செய்யவேண்டும்" என்று சிறிது நேரம் முதலில் தியானம் செய்யவேண்டும். அந்த அஞ்

ஜலி அடையாளம் தனது ஆத்மா, மனம் முதலியவற்றை பகவானுக்கு அர்ப்பணம் செய்கிற அபிப்ராயத்தைக்காட்டு கிறது. பிறகு பகவானை மந்திரங்களால் ஆவாகனம்செய்து ப்ராணப்ரதிஷ்டை செய்யவேண்டும். "எந்த வஸ்துவில் மந்திரங்களினால் எந்த தேவதை ஆவாகனம் செய்யப்படு கிறதோ; அந்த வஸ்து அந்த தேவதையாக ஆய்விடுகிறது. அந்த தேவதையின் மந்திரம் அந்த தேவதையென்றே சொல்லப்படும்" என்கிறார் யாஞ்யவல்கியர். பிறகு கிரகத் தில் அதிதிகளாக வந்த மகான்களுக்குப் போன்று பக வானுக்கு நம்மாலியன்ற பல உபசாரங்களைச் செய்து பூஜிக்க வேண்டும். அவை கீழ்வருவன.

---

## பூஜையினது கிரமம்.

ஆஸனம், பாத்யம், அர்க்யம், ஆசமனம், ஸ்நாநம், வஸ்திரம், சந்தனம், குங்குமம், புஷ்பஆரங்களின் அலங் காரம், ஸுகந்தபுஷ்பங்களால் ஸவாமியின் திருநாமங்களைச் சொல்லி அர்ச்சித்தல், தூபம், தீபம், பலவித நைவேத்யம், தாம்பூலம், கர்ப்பூரம், குடை, சாமரம், விசிறி, மந்திரங்க ளாகிய புஷ்பம்,ஸுவர்ணத்தாலான புஷ்பம், பிரதக்ஷிணம், நமஸ்காரம், முதலியன. இவ்விதமான உபசாரங்களால் கிரமப்படி பூஜிக்கவேண்டும். இந்த சரீர கைங்கர்யம் பகவானுக்கு நான் அடிமைஎன்றும், அடிமையின் வஸ்த் துக்கள் யாவும் யஜமானனுடையதாவன என்றும் கருத் தைக்காட்டுகிறது. வேலைக்காரன் கிங்கரன் எனப்படுவான். அவனது தன்மை கைங்கர்யமெனப்படும். பிறகு பகவான் முன்னிலையிலிருந்து அவரது மகிமையைப்பற்றி மகான்

கள் இயற்றிய பலவித ஸ்தோத்திரங்களை ஆனந்தமாரி பொழியும்படி நல்ல ஸ்வரத்துடன் உரத்துச்சொல்லவேண்டும். அப்போது நமதுமனம் சப்தப் பிரம்மத்தினிடம் போய் லயித்திருக்கும். இது வாசிகமான கைங்கர்யம். அதன்பிறகு தம் முன்னிருக்கும் விக்ரஹத்தை அதன் அங்கங்களுடனும் அவற்றிலுள்ள சங்கம், சக்கிரம், மான். மழு, சூலம் முதலிய அந்தந்த சின்னங்களுடனும் சேர்த்து மனத்தில் பதிய வைத்துக்கொண்டு தம்மாலியன்ற காலம் வரை இடையறாது தியானம் செய்துகொண்டிருக்க வேண்டும். இதுதான் மானஸ கைங்கர்யமெனப்படும். பிறகு பகவானின் அபிஷேகதீர்த்தப் பிரஸாதத்தை உட்கொண்டு நிர்மால்ய புஷ்பங்களை முகர்ந்துபார்த்து நைவேத்திய பிரஸாதத்தை போஜனம் செய்யவேண்டும். இவ்விதம் நமது அங்கங்கள்யாவும் ஈசனது தொண்டுசெய்வதற்கு அடிமையாக விருக்கவேண்டும். * "ஓ பரமசிவனே! எனது மனம் உனது பாதாரவிந்தங்களிலும், வாக்கு ஸ்துதிசெய்வதிலும், கைகள் பூஜையிலும், காதுகள் கதையைக் கேட்பதிலும், புத்தி உன்னைத் தியானிப்பதிலும், கண்கள் உனது மூர்த்தியை தர்சிப்பதிலுமாக இருக்கவேண்டும்" என சிவானந்த லஹரியில் கூறப்படுகிறது.

இப்படி சிலநாட்கள் செய்யும்போது தியானத்தின் தாரணை பலப்பட்டுவிடும். அப்போது ஆராதனை செய்கிறவன், போகும்போதும் நிற்கும்போதும் வேறு காரியங்களைச் செய்துகொண்டிருக்கும் போதும் அவனிடமிருந்து அந்த தாரணை விலகவேமாட்டாது. குழந்தையை தனியே

* சுலோகம் 7.

விட்டு வேறு வேலைகளைச் செய்யும் தாயின் மனம், எக்கார்யத்திற் பற்றியிருந்த போதிலும் சிரசில் குடம்எடுத்து ஆடுகிறவன் மனம் அக்குடத்திலேயே நாடியிருப்பது போன்று தனது குழந்தையின் வடிவத்திலேயே நாடினதாகவிருக்கும். ஏன்? ஈசன் அருளிய அன்பின் மிகுதியினால் தன் குழந்தையின் உருவம் அடிக்கடி தியானிக்கப்பட்டு தாயின் மனத்தில் பதிந்திருக்கின்றதன்றோ? அக் குழந்தையும் தன்னைவைத்துக் கொண்டாடும் தாயினிடம் மிகுந்த அன்புற்றிருக்கும்படி ஈசன் அனுக்ரஹித் திருக்கிறார். அவ்விதம் நமது அன்பினை பகவானிடம் செலுத்தும்போது பகவான் அதற்குத் தக்கவாறு அருள்புரிகின்றார். இதற்கிணங்க "குழந்தையும் தெய்வமும் கொண்டாடுமிடத்தில்" என்ற மூத்தோர் சொல் வார்த்தையை இங்கு உதாரணமாக எடுத்துக் கொள்ளவேண்டும்.

---

## மானஸ பூஜை.

முற்கூறிய தாரணை பலப்பட்டு ஸித்தியான பிறகு விக்ரஹத்திலுள்ள சின்னங்களை விட்டு விக்ரஹ ஸ்வரூபத்தை மாத்திரம் தியானித்து அது திடமானவுடன் விக்ரஹமில்லாமலேயே ஈசுவர ஸ்வரூபத்தை மானஸமாய் தியானிக்கப் பழகவேண்டும். அப்படி அந்தர்முகமாகப் பழகின மகான்கள் முற்கூறிய வெளிமுகமாயுள்ள பூஜைக்கு வேண்டிய உபசார வஸ்துக்களை பாஹ்யமாய்த் தேடி வைத்துக்கொள்ளாமல் மானஸமாகவே பூஜை செய்வார்கள். அது பாஹ்ய (வெளியிலுள்ள) பூஜையைவிடச் சிறந்தது. சங்கரபகவத் பாதாசார்யர் அருளிய பலவித ஸ்தோத்திரங்

களில் சிவன், விஷ்ணு, அம்பிகை முதலிய தேவதைகளின் மானஸபூஜைகள் அன்பர்களின் பக்தி முதிர்ச்சிக்கான முறையுடன் அடிக்கடி காணப்படும்.

---

## பூஜையின் பிரிவுகள்.

விக்ரஹாராதனம் இருவகைப்படும். உலகத்திலுள்ள மனிதர் எல்லோருக்குமே ஆராதனத்திற்குரிய வஸ்துக்கள் கிடைப்பது அரிதாகையால் வேந்தர்கள், அவர்களைப் போன்றப் பிரபுக்கள் பெரிய ஆலயங்களை நிர்மாணம் செய்து அவற்றில் சிவன், விஷ்ணு முதலிய விக்ரஹங்களை ஸ்தாபித்து பூஜையின் விதிகளை நன்கு படித்துணர்ந்த அர்ச்சகர்களைக்கொண்டு நியமத்துடன் பூஜைசெய்விக்கும் போது, மற்றவர்கள் அதைப் பார்த்துக் கொண்டிருந்து அந்த பிம்பத்தின் உருவத்தை மனத்தில் பற்றிக்கொண்டு காசு, பணம் செலவில்லாத வாசிக, மானஸிக கைங்கர்யங்களைச் செய்யவேண்டும். இவ்விதம் பொதுவாக ஏற்பட்ட ஆராதனம் ஒன்று. கிரகத்திலேயே ஒரு சிறு ஆலயம் ஏற்படுத்தி அதில் விக்ரஹங்களை வைத்து ஆராதிக்க சக்தியுள்ளவர்கள் தாமே சொந்தமாக அவற்றை ஆராதிப்பது மற்றொன்று. முற்கூறியது பரார்த்த பூஜை என்றும், பிற்கூறியது ஆத்மார்த்த பூஜை என்றும் பெயர் பெறும்.

சரியானபடி நிர்மாணித்தும் மந்திரத்தால் பிராணப் பிரதிஷ்டை செய்வித்துமிருக்கிற விக்ரஹம், தினந்தோறும் தவறாமல் பக்தியுடன் ஆராதிக்கப்படுமானால் காந்தத்திற் போன்று அதில் ஒரு விதமான ஆகர்ஷண சக்தியுண்டாகி

அது முன்னிலையில் நிற்கின்ற அன்பர்களின் மனத்தை இழுத்து சீராக்கி ஒழுங்குபடுத்துகிறது. அந்த பூஜை பகிர்முகத்தினின்று அந்தர் முகமாய்த் திரும்பினால் ஆராதிக்கப்படும் மூர்த்தி மனதில் ஆவிர்ப்பவித்து ஆராதிக்கிறவனுக்கு ஸூக்ஷ்மமாய்த் தோன்றி நிற்கும். அதன் பிறகு தனது ஆத்மாவினிடமாகவே பகவானை ஆராதிக்கலாம். அப்படி ஆராதிக்கின்றவர்களுக்கு "தேகமே தேவாலயமாகவும் ஸநாதனமான ஜீவன் அதிலுள்ள தெய்வமாகவும் இருக்கிறான்" எனப்படுகிறது.

வைதிகப் பிரதிஷ்டை, ஆகமப் பிரதிஷ்டை என்று விக்ரஹப் பிரதிஷ்டை இரண்டுவிதம். வேதத்திலுள்ள விதிப்படி அதன் மந்திரங்களைக் கொண்டு பிரதிஷ்டை செய்து பூஜித்தல் வைதிகப் பிரதிஷ்டையாம். ஆகம விதிப்படி பிரதிஷ்டை செய்வது ஆகமப் பிரதிஷ்டையாம். முற்கூறிய பிரதிஷ்டைகள் நமது நன்மையை நாடி முன்னோர்களால் பாரத தேசம் முழுதும் செய்யப்பட்டிருப்பன.

---

## ஆலய தத்வம்.

ஆத்மா லயித்திருக்குமிடம் ஆலயமெனப்படும். அதன் உண்மையை உணர்த்துவது ஆலய தத்வமெனப்படும். பகவான் உலகமென்ற அண்டத்தைப் போலவே உடல் என்ற பிண்டத்தையும் படைத்திருக்கின்றார். "அண்டபிண்ட தத்வங்கள் ஒற்றுமையுள்ளன" என்பதை * யோகிகள் கண்டுபிடித்து போகி (போகமுள்ளார்) களா

* ஒரு நாளில் ஒருவேளை உண்பான் யோகி. இருவேளை யுண்பான் போகி. மூவேளையுண்பான் ரோகி. ஆகாரத்தைக் கூடிய

யும் ரோகிகளாயு மிருக்கின்ற நம் போன்ற உயிர்கள் உய்யு மாறு வேதாகமசாஸ்திரங்கள் வாயிலாக விளக்கியிருக்கின்றனர். நம் போன்றவர் வெளியிலுள்ள அண்ட தத்வங்களில் அனைத்து மறியாதார் உடலினுள் இலங்கும் பிண்ட தத்வங்களைப் பற்றி கிஞ்சித்து மறியமாட்டார். யோகிகள் பிண்டதத்வங்களை யோகபலத்தால் உணர்ந்து அண்டத்திலுள்ள வஸ்துக்களில் எதனையும் விரும்பார். ஏனெனில், லம்பிகா யோகத்தால் நாக்கைப் புருவம த்தியிற் செலுத்தி அங்கிருந்து பெருகும் அமிருதபானம் செய்வதால் அவர்கட்குப் பசி தாகங்கள் கிடையா. தொப்புளின் கீழுள்ள காமகூடத்தில் நிறைந்துள்ள வீர்ய பிந்துக்கள் சங்கினி நாடி வழியாக கீழ் முகமாய் வந்து சிற்றின்பம் பெற அவர்கட்கு மற்றவர் வேண்டிய தேவையில்லை. அவர்கள் அந்த பிந்துக்கள் கீழ் நோக்காது மேல்நோக்கிச் சென்று உடலெல்லாம் வியாபிக்கும்படியான பழக்கமுள்ளவர். வீர்யபிந்துக்களை செலவு செய்யாதவர்களுக்கோ பசி தாகங்களும் அதிகமாயிரா. சரீரபலமும், மனோபலமும் மிகுந்தனவாயிருக்கும். உள்ளிருக்கும் ஆத்மா,பரமாத்மாவுடன் கலந்து காலங்கழிவதே தெரியாது அவர் பேரின்பமுற்றிருப்பார். அவருக்குத் தேவையாவன எவை அண்டத்திலுள்ளன? நமது பிண்ட தத்வங்களை ஆலய தத்வங்களாக அமைத்துக் கொடுத்து அவ்விதமாக நம்மை வழிபடச் செய்யின் பிறகு நாமும் பிண்ட தத்வங்களிற் பழக எளிதாகுமென்று கருதி அவர் பின்வருமாறுகூறுவர்.

வரைக் குறைத்தும் உயிருடனிருக்கப் பழகுவதே யோக ஸாதனங்களிற் சிறந்தது. யோகிகள் மற்றவர்களையும் அவ்வண்ணமாக்கவே கருணையுற்றிருப்பார்.

ஆலய மென்பது ஒரு மனித ஆகிருதியாகிய பிண்டம். அதன் கால்கள்—முன்கோபுரம்; கோபுரப் பக்கங்கள்—பாதப்படங்கள்; கோபுரவாயில்—பாதங்களின் இடைவெளி; பலி பீடம்—குதம்; துவஜஸ்தம்பம்—குஹ்யம்; வாகனம்—அண்டகோசம்; மணி மண்டபம்—வயிறு; அதிலுள்ள மணி—தொப்புள்; மஹாமண்டபம்—மார்பு; அர்த்த மண்டபம்—கழுத்து; உள்பிராகாரம்—தோள்கள்; வெளிப்பிராகாரம்—கைகள்; இரு பிரகாரங்களுக்கு முள்ள வெளி—விலாப்புறங்களுக்கும் கைகளுக்குமுள்ள இடைவெளி; பிராகாரப் பலகணிகள்—செவிகள்; அந்தராள மண்டபம்—முகம்; கர்ப்பக்கிரக நிலைத்தூண்கள்—கண்கள்; அந்நிலைமேலுள்ள கல்—நாசி; கர்ப்பக்கிருகம்—சிரசு; விமானம்—ஆயிரம் இதழ்கொண்ட தாமரைப்பூ; அதன் கீழேயுள்ள விக்ரஹம்—ஆத்மா; ஆலயத்தடாகம்—ஹிருதய கமலம்; பின்னும் பக்கங்களிலுமுள்ள கோபுரங்கள்—குடித்தானமும் வலமிடப் பக்கங்களுமாம்; சுவர்க்கல்கள்—என்புகள்; தூண்கள்—நரம்புகள்; சுண்ணச்சாந்து—மாம்சம்; கோயிலில் ஏழுமதில்களிருந்தால் அவற்றை இரஸம், இரத்தம், மாம்ஸம், மேதஸ், என்பு, மஜ்ஜை, சுக்லம் என்ற சரீரத்தின் ஏழு தாதுக்களாகவும், ஐந்து மதில்களை அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்ற ஐந்து கோசங்களாகவும், மூன்று மதில்களை ஸ்தூல, ஸூக்ஷ்ம, காரணசரீரங்களாகவும், ஒரே மதிலிருப்பின் அதனிடமே இத்துணை தத்வங்களும் அடங்கியிருப்பனவாகவும் அறியவேண்டும். கோபுரத்தை ஈசனது நின்ற திருக்கோலமாகவும் ஆலயத்தை சயன திருக்கோலமாகவும் கூறுவாருமுளர். முற்கூறியபடி நாம் பக்தி

யுடன் பகவானுக்குச் செய்யும் பதினாறு வகையான உப சாரங்களில் நைவேத்யம் முதலியனவும், ஸ்நானம் முதலியனவும், தீபம் முதலியனவும், சாமரம் முதலியனவும், மணியோசை முதலியனவும் முறையே ப்ருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்து பூதங்களின் ஸம்பந்த மானவை. பஞ்சபூதங்களும் ஈசன் படைத்தவையென உணர அவ்வுபசாரங்கள் ஏற்பட்டிருப்பன. முற் கூறியன, சரீரத்திலுள்ள ஸ்தூல தத்வங்கள். ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம் முதலிய பலஸூக்ஷ்ம தத்வங்களும் ஆலய வஸ்துக்களிடம் இருப்பதாக வகுத்துக் காட்டியிருப்பதை விரிவிற்கஞ்சி விடுத்தோம். இப்படிப் பழகுவோர் பிறகு பிண்டத்திலுமுள்ள ஸ்தூலஸூக்ஷ்ம தத்வங்களையும் பழக ஆரம்பிப்பார் என்பது பெரியோர் நூலின் துணிபு.

ஈசன் எவ்வடிவமாகவுமிருப்பதால் மனிதன் போன்ற தீன வடிவத்தினிடமே அவனை வழிபடவேண்டுவது ஏன்? எனில், பிராணிகளின் மனம் தன் இனத்தைப்போன்று மற்றொரு இனத்திலும் பற்றுவதாக படைப்பின் இயற்கை அமையவில்லை. மானைக்கொண்டே மான்பிடிப்பதுபோல மனிதனது மனப் பற்றிற்காகவே அவ்வடிவம் ஆதரிக்கலாயிற்று. மனிதர்களை சீர்திருத்தவந்த ராமகிருஷ்ணாதி அவதாரங்களில் பகவான் மனித இனத்தின் வடிவத்தையே ஏற்றுக் கொண்டனரன்றோ? அர்ஜுனனுக்கு திவ்விய திருஷ்டியைக்கொடுத்து கிருஷ்ணபகவான் ஸகலப் பிரபஞ்ச வடிவமான விராட் ஸ்வரூபத்தைக் காட்டும் போது அவன் அதை அதிக நேரம் பார்க்க சக்தியற்றுத் திரும்ப சீக்கிரத்தில் மனித வடிவத்தைக் காட்டும்படி வேண்டினான்.

மாம்ஸ திருஷ்டியுள்ள நமக்கு பகவானது மற்ற வடிவங்க ளெல்லாம் பார்க்க முடியாதன. உலகில் நாம் கண்ணுறாத வேறு சில வடிவங்கள் நமக்குத் தெரியாதன. கண்ணுற்ற வைகளில் மற்றவைவிட மனிதரே அறிவிற் சிறந்தவராகை யால் அவர்வடிவமே இனம்பற்றி இன்பமளிக்கத்தக்கன. நாம் எண்ணியபடியே எங்குமுள்ள ஈசன் அந்த விக்ரஹ வடிவத்திலு மிருப்பதாக நியானிப்பது தப்பிதமன்று. இத ஞல் எப்போதும் விக்ரஹவடிவமாகவே அவனை நினைக்க இடமிராது. ஒருவனைப்பற்றின பல காரியங்களை அறிந்த மற்றொருவன் அவற்றுள் ஒன்றை நினைக்கும்போது அவ னது மற்றைய கார்யங்களோடு சேர்த்து அவனை ஞாபகத் திற்குக் கொண்டுவருவது மனத்தின் இயற்கை. "ஒரு பகு தியின் அறிவு அதனைச் சார்ந்தனவற்றை யெல்லாம் நினைப் பூட்டுவது" என தர்க்க சாஸ்திர முறை. ஆகையால் "கண்ணுறும் வடிவத்திலேயே கடவுள் உளன்" என்று நினைத்து சிறிதுகாலம் வழிபடுகின்றவருடைய மனமும் மேலும் முயற்சிக்க வழிதேடும். ஆதலால் அவர் எவ்வி தத்திலாவது ஈசனது பெருமைகளாகிய வியாபகத் தன் மையை அறிந்துகொள்ளும்போது அவனது மகிமைகளு டன் கூடிய உலகவடிவத்தைச் சேர்த்துதான் அவனை நினைப்பார். இவ்விதம் படிப்படியாக ஈசனது கண்ட வடி வங்களைவிட்டு அகண்டத்திலேயே அன்பர் மனம் பற்றத் தாவிக் கொண்டிருக்கும்.

தற்காலம் திருச்செந்தூர், ஸ்ரீவில்லிப்புத்தூர், ராமே சுவரம், மதுரை, ஸ்ரீரங்கம், திருவானைக்காவல், தஞ்சா வூர், சிதம்பரம், காஞ்சீபுரம், திருப்பதி, முதலிய

க்ஷேத்திரங்களிலுள்ள ஆலயங்கள், பிராகாரங்கள், அவற்றின் கோபுரங்கள், தூண்கள், அவற்றிலுள்ள சித்திர வேலைப்பாடுகள், விக்ரஹங்கள் முதலியன நமது முன்னோரின் சிற்பசாஸ்திரத் திறமைகளையும் விக்ரஹாராதனத்தின் ஸூக்ஷ்மமான கருத்துக்களையும் வேதஆகம சாஸ்திரங்களின் பெருமைகளையும் கண்கூடாகக் காட்டிக்கொண்டு ஸாக்ஷிகளாய் நிற்கின்றன. அவற்றைப் பார்த்து மேல் நாட்டார் மிக்க வியக்கின்றார். ஆதலால் விக்ரஹாராதனம், அதன் முறை இவற்றின் உண்மைக்கருத்தை முற்கூறின விதமாக அறியவேண்டும்.

முன்சொன்ன விக்ரஹாராதனத்திற்கு பக்தி இல்லாவிடில் அது சிறிதும் பயன்படாது. பக்தியில்லாத ஆராதனம் உயிரில்லாத உடம்புபோன்றது. ஆதலால் விக்ரஹாராதன முறையைத் தெரிந்த பின்னர் பக்தியின் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். அது இதன்பின் கூறப்படும்.

—:※:—

## பதினொன்றாம் அதிகாரம்.

## பக்தி.

பக்தி என்பது தன்னால் விரும்பப் பட்டவரிடத்தில் தோன்றும் உள்ளத்தின் ஒருவித நெகிழ்ச்சி. அது தனது விருப்பத்தைப் பூரிக்கின்றவர்களைப் பற்றி ஆழ்ந்து யோசிப்பதால் உண்டாகிறது. பக்தி என்ற பதத்திற்கு பஜித்தல் என்று பொருள். அதற்கு அடிக்கடி ஆழ்ந்து நினைத்தல்

என்பது கருத்து. அதனால் பகவானது மகிமையில் ஆழ்ந்தவர்கள் ஆழ்வார்கள் என்றும், அவர்களே பக்தர்கள் என்றும் கூறப்படுவார்கள். பக்தி என்பது தென்மொழியில் அன்பு எனப்படும். ஒருவனுக்கு மற்றொருவனிடம் அன்புண்டாக வேண்டுமானால் அவன் அதன் காரணத்தை ஊன்றி ஆழ்ந்து யோசித்து அறியவேண்டும். இல்லாவிடில் அது உண்டாகமாட்டாது. நாம் ஈசுவரனிடம் போய்ச் சேருவதற்கு அவனை ஆராதிக்க வேண்டுமென்றும் அவனை ஆராதிப்பதற்கு அவனிடம் அன்புற்றிருக்க வேண்டுமென்றும் முன் சொன்னோம். அதனால் ஆராதனைக்கு அன்பு காரணமாக ஏற்படுகிறது. பகவானிடம் நமக்கு அன்புண்டாகாவிடில் அவனை ஆராதிக்க வேண்டுமென்ற எண்ணமுண்டாகாது. அவ்விதமான அன்பு பகவானிடம் நமக்கு எப்படி உண்டாகிறது? என்பதை ஆராயவேண்டும்.

தாய் வயிற்றினின்று பிறந்தவுடன் ஒரு சிறு குழந்தைக்கு முதலில் தனது தாயின் பாலைத்தவிர மற்ற உலக விஷயங்கள் ஒன்றும் அதன் மனதிற் புலப்படாது. ஏன்? ஈசுவரன் அக்குழந்தைக்கு பசியின் துன்பத்தையறிந்து அதைப் போக்கிக்கொள்ள வேண்டிய அறிவைமாத்திரம் அப்போது கொடுத்திருக்கிறார். அதற்கு அத்துன்பத்தைத் தாயின்பால்தான் அப்போது நீக்குகிறது. அவள் தனது ஸ்தன்யத்தை ஊட்டக் கொடுக்கின்றபோது அக்குழந்தை தனது முன் ஜன்மத்திய வாஸனா பலத்தினால் தாயின் ஸ்தனத்தை வாயில் கௌவி அவள் முகத்தையே பார்த்துக்கொண்டு பாலைக் குடிக்கின்றது. தாயும் அப்போது அதன் முகத்தை அன்போடு பார்த்துக்கொண்டி

ருக்கிருள். இப்படி சிலநாட்கள் கழிந்தபின் அக்குழந்தை தாயைப்பார்க்கும்போது அதன் மனத்தில் "நம்மைக் காப்பாற்றுகிறவள் இவள்தான்; நமக்கு ஒரு ஆபத்து வரும் போது அவளைப் பற்றிக்கொண்டால் பிழைத்திருக்கலாம்" என்பன போன்றதும் நிலைத்திராததும் வரிசையில்லாததும் ஒன்றுக்கொன்று ஸம்பந்தமில்லாததுமான நவதான்யங்கள் கலந்தாற்போல் கலந்து கொண்டுமிருக்கிற எண்ணங்கள் அடிக்கடி தோன்றி மறைகின்றன. அது எப்படித் தெரியுமென்ருல்?

குழந்தை பால் குடிக்கும்போதே திடீரென்று உண்டான ஏதாவது ஒரு சப்தம் அதன் காதிற் பட்டவுடன் பயந்து தாயைக் கட்டிக்கொள்கிறது. தாய் அந்தஸமயத்தில் அதைக் கீழே விட்டுவிட்டால் அது கூக்குரலிட்டு அழுகின்றது. திரும்ப எடுத்து மடியில் அணைத்து வைத்துக்கொண்டால் அழாமலிருக்கிறது. சீராட்டினுல் சிரிக்கின்றது. கோபித்தால் முகத்தைச் சுருக்கிக் கொள்ளுகிறது. இம்மாதிரியான அதன் செய்கைகளினுலும் குறிப்புகளினுலும் அதன் மனத்திலுள்ள கருத்துகள் ஊகிக்கக்கூடியன. இவ்விதம் அடிக்கடி தாயின் அன்பினுல் அடையப்படும் உதவிகளைமாத்திரம் அது அந்த ஸந்தர்ப்பத்தில் உணரும்படியாக ஈசுவரன் அக்குழந்தைக்கு அறிவைக் கொடுத்திருக்கிருன். அந்த அறிவினுல் தாயின் அன்பு அதன் மனத்தில் பிரதிபலித்தது போன்று அக்குழந்தைக்கும் தாயினிடம் அன்பு விகாஸிக்கிறது. அக்குழந்தை, தன் பசியைப்போக்கியும் தனக்குவரும் பயத்தை நீக்கியும் தன்னை ஸந்தோஷப் படுத்தியும் இம்மாதிரி

யான கார்யங்களைச்செய்து நம்மைக் காப்பாற்றுகிறவள் தாய் ஒருவள்தான் என்று அடிக்கடிநினைப்பதால் முதலில் அவளிடம் மாத்திரம் அது அன்புற்றிருக்கிறது.

அக் குழந்தைக்கு கொஞ்ச வயதுகள் சென்றபின் தனக்கும் தனது தாயிற்கும் தகப்பன் செய்கின்ற உதவிகளை உணரும்படியான அறிவுண்டாகும்போது "நமது தகப்பன் நம்முடைய துன்பங்களை நீக்கி இன்பங்களை உண்டு பண்ணுகிறவனும் நமது தாயாரையும் நம்மையும் சேர்த்து காப்பாற்று கிறவனுமாக இருக்கிறான்" என்ற எண்ணம் உண்டாகிறது. அப்போது தகப்பனின் அன்பு மகன் மனதிற் பிரதிபலித்தாற் போன்று மகனுக்கு முன் தாயினிடம் அன்பு விகஸித்ததுபோல தகப்பனிடமும் அது விகாஸத்தை யடைகின்றது. தகப்பனுக்கு மகனிடம் முன்னமே அன்பிருந்த போதிலும் அதனை மகன் அறிவதற்கு சக்தியற்றிருந்ததால் அத்தந்தையின் அன்பு பிள்ளையினிடம் ப்ரதிபலிக்கும்படியான யோக்யதை முன் அவனுக்கு உண்டாகவில்லையன்றோ?

பிறகு அச்சிறுவன் சிறிது அதிக வயதானவுடன் என்ன நினைக்கிறான்? என்றால், "நாம் இவ்வுலகத்தில் உயிருடன் பிழைத்திருப்பதற்கு நமது தாய் தந்தையர் மாத்திரம் காரணமல்ல; அவர்களையும் நம்மையும் பின்னும் மற்ற குடும்பத்தார்களையும் இவ்விதமாக இந்த நாட்டிலுள்ளவர்களான அனைவரையும் ஆபத்துவராமல் பரிபாலிக்கின்றவன் அரசன்; அவனது உதவி, தாய்தந்தையரின் உதவியைவிட மேலானது" என்ற எண்ணம் அவன் மனத்தில்

உற்பவிக்கின்றது. அப்போது ப்ரஜைகளிடம் பொதுவாக அரசனுக்குள்ள அன்பு அவன் மனத்தில் பிரதிபலித்தாற் போன்று அக்குமாரனுக்கு அரசனிடமும் அன்பு மலர்ந்து விடுகிறது.

அதன் பிறகு அவன் கொஞ்சம் பெரியவனும் கல்வி யறிவு பெற்றவுடன் என்ன யோசிக்கிறானென்றால்? "பஞ்ச பூதவிகாரமானதும் கடைசியாக அழியக் கூடியதுமான நமது ஸ்தூல சரீரத்தை தாய் தந்தையர் உண்டுபண்ணிக் காப்பாற்றினர்; அது வளருவதற்கு அரசனின் உதவியும் ஸகாயமாக விருந்தது; ஆதலால் அம்மூவர்கள் அழியும் தன்மையுற்ற சரீர ஸம்பந்தமான உதவிகளைத்தான் செய் கின்றவர்கள். நமது குருவோ 'நமது சரீரத்தினுள் ஒரு ஜீவாத்மா இருக்கிறான், அவன் என்றும் அழிவற்றவன், பிரயத்னம் எடுத்துக்கொண்டால் அவன் பரமாத்மாவினி டம் சேர்ந்து நித்யானந்தத்தைப் பெற்றிருக்கும் தன்மை யுள்ளவனுவான்' என்ற அனேகவிஷயங்களை சாஸ்திரங்கள் மூலமாகவும் தனது அனுபவத்தின் வாயிலாகவும் நமக்கு உபதேசித்து என்றும் நிலையாகவுள்ள ஞானத்தை நமக்குக் கொடுத்து உதவியிருக்கிறார்; அவர் உபதேசித்தபடி நாம் முயற்சிசெய்து பகவானிடம்போய் பிரம்மானந்தம் பெற வேண்டும்; முற்கூறியவர்கள் செய்த உதவியைவிட நம்குரு செய்த உதவி மிகச்சிறந்தது" என்ற எண்ணங்கள் தோன்றுவன. அப்போது சிஷ்யர்களிடம் பொதுவாக குருவிற்குள்ள அன்பு அவனிடம் பிரதிபலித்தாற்போன்று அவனுக்குத் தனது குருவினிடம் அன்பு படர்ந்து விகாஸத்தை யடைகிறது.

அதன் பிறகு அவன் ஒரு ஸமயம் தன் குரு உபதே சித்த விஷயங்களை சிந்தனை செய்ய ஆரம்பிக்கின்றான். அப்போது அவன் மனத்தில் விசாலமான களங்கமற்ற அனேக நல்ல எண்ணங்கள் தோன்றுவன. அவை "பகவானன்றோ! இவ்வளவு பெரிய பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டித்து நமது ஆத்மா வஸிப்பதற்கு வீடாக இருக்கின்ற இவ்வுடம்பினை பெற்றோர்கள் மூலமாய் நமக்கு ஈந்து அதனைக் காப்பாற்ற நம்மிடம் பிரதிபலனை எதிர்பாராத நிஷ்கபடமான அன்பினையும் அவர்களுக்கு அமைத்திருக்கிறார். மேலும் நம்மையும் நம் பெற்றோர்களையும் காப்பாற்ற அரசனை ஏற்படுத்தியது போதாமல் நமது ஆத்மா மோக்ஷமடையும்படியான மார்க்கத்தை உணர்த்துகின்ற சாஸ்திரங்களையும் அவற்றைக் கருணையுடன் உபதேசிக்கின்ற ஆசார்யர்களையும் கொடுத்து உதவி செய்ததுடன் அவரே சிலவேளை தேசிகனுகவும் பூமியில் அவதரிக்கிறார்; அவர் இந்த ஜீவர்களுக்கு செய்திருக்கும் நன்மை எத்தனை? பிரபஞ்ச ஸ்ருஷ்டியின் விசித்திரங்கள்தான் எத்துணை? எவ்வளவு தேவர்கள்? எவ்வளவு மனிதர்கள்? எவ்வளவு மிருகங்கள்? எவ்வளவு பறவைகள்? எவ்வளவு ஊர்வன? எவ்வளவு நீர்வாழ்வன? எவ்வளவு ஸ்தாவரங்கள்? எவ்வளவு மலைகள்? எவ்வளவு ஆறுகள்? எவ்வளவு ஸமுத்ரங்கள்? பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐம்பூதங்களின் விஸ்தாரங்கள்தாம் எவ்வளவு? இவ்வளவு ஜீவாத்மாக்களையும் ஒன்றுக்கொன்று ஹிம்ஸை இல்லாமல் இருக்கும்படியே உதவி செய்துகொண்டு வாழும்படியாக பகவான் அமைத்திருக்கின்றார்; அறிவுள்ள ஒருவன் எந்

தப் பிராணிகளுக்கும் துன்பமில்லாமலே அவற்றிற்கு உபகாரமும் செய்துகொண்டு தனது பசி, தாகம் முதலிய பிறவிப் பிணிகளுக்குப் போக்கு விட்டுக்கொண்டு உயிருடன் பிழைத் திருக்கும்படியான மார்க்கத்தையும் காண்பித்திருக்கிறார்; அதை நாம் நமது பகுத்தறிவால் ஆராய்ந்து அறிந்து எடுத்துப் பழக்கத்திற்குக் கொண்டு வராத குற்றமே தவிர வேறில்லை; ரிஷிகள் ஜீவித்திருக்க எந்த உயிர்களை வருத்துகின்றனர்? அவர்கள் ஆகாரம் எத்தன்மையானது? சிலர் சருகுகளை பக்ஷிக் கின்றனர்; சிலர் ஜலத்தை பக்ஷிக்கின்றனர்; சிலர் காற்றை பக்ஷிக் கின்றனர்; தாயுமானவர் * "சருகு ஜல பக்ஷணிகள் ஒரு கோடியல்லாற் சகோர பக்ஷிகள் போலவே, தவள நிலவொழுகமிர்த தாரையுண்டழியாத தன்மை யரனந்த கோடி" என்கிறார்; சிலர் பசி, தாகம், காமம், கோபம், முதலியவற்றை சரீரத்தில் அடிக்கடிக் கிளப்பிவிடுகின்ற நாடிகளின் சக்தியை யோகப்யாஸத்தால் அடக்கி புருவ மத்தியிலிருந்து பெருகும் அமிருதத்தைப் பருகிக்கொண்டு பிரம்மானந்தம் பெற்று ஜீவன்முக்தர்களாய் உயிருடன் பிழைத்திருக்கிறார்கள்; முற்கூறியவர்களால் மற்ற உயிர்களுக்கு நன்மைகளைத்தவிர தீமை ஏதேனுமுண்டோ? இல்லவே இல்லை; ஆதலால் இவற்றிற்கெல்லாம் ஆதி காரணமாக இருப்பவர் கடவுள் ஒருவரே; அவர் ஜீவர்கள் நிமித்தம் செய்துகொண்டிருக்கிற உபகாரத்திற்கு நம்மால் பிரதியுபகாரம் என்னசெய்ய முடியும்? இத்துணை சௌகர்யங்கள் செய்துவைத்தும் ஜீவர்கள் அவற்றை அறிந்து

---

* மௌனகுரு வணக்கம், பாடல் 8.

உஜ்ஜீவிக்கும்படியான வழியைத் தேடாமல் பாழும் பழ வினைகளினால் பிறவிப் பெருங்கடலிற் புகுந்து பிறந்திறந்து வருந்துகின்றனரே; இவர்கள் எப்போது நம்மிடம் வரப் போகிறார்கள்" என்ற அபாரமான கருணையுடன் நமது வரவை பகவான் எதிர்பார்த்திருக்கிறார். நாமும் அதற்கு வேண்டிய யத்னங்கள் செய்யவேண்டும்" என்பன. அப் போதுதான் ஈசனுக்கு ஸர்வப் பிராணிகளிடமும் பொது வாகவுள்ள அன்பினை அவன் அறிகிறான். உடனே அதுவே அவன் மனத்திற் பிரதி பலித்தாற்போன்று அவ னுக்கு ஈசனிடமும் அன்புண்டாகின்றது.

அதன்பின் அவன் என்னயோசிக்கிறான் என்றால்? "உலகத்திலுள்ள உயிர்கள் யாவும் பரமாத்மாவின் குழந் தைகள்; அவற்றிற்கு நாம் தீங்கு நினைத்தால் அவர் வருந் துவார்; அவர் செய்திருக்கும் உபகாரத்திற்கு கைம்மாறு உதவ நம்மால் முடியாவிடினும் அவர் மனம் நோகாமலி ருக்கும் வண்ணமாவது நமது வாழ்நாளை கடத்திக் கொள் ளக்கூடிய பழக்கத்தை நாம் அப்யஸிக்க வேண்டுவது அவ சியமல்லவா? பெற்றோர்களிடம் பக்தியுள்ளவன் அவர்கள் ஈன்ற மற்ற பிள்ளைகளைத் துன்புறுத்தலாமா? அது போன்று" † "ஈசனெனக் கருதி எல்லா உயிர்களையும் நேசத்தால் நீ நினைந்துகொள்" என்ற ஔவை பிராட்டி யின் முதுமொழிக்கிணங்க ஜீவர்களிடம் அன்பும் ஆதரவும் உற்றிருக்கவேண்டும்" என்று அவனுக்குத் தோன்று கின்றது. அந்த ஸமயத்தில் அவன் மனத்தில் சுற்றிப்படர்ந்

† அதிகாரம் 10. குறள் 8.

திருக்கும் அன்பென்ற கொடியின் விஸ்தாரத்தை அளவிட யாரால் முடியும்?

அவ்விதமே ஒவ்வொருவருக்கும் குழந்தைப் பருவத்தில் மனத்தில் இருக்கும் அன்பு, ஸங்கோசமடைந்து குவிறந்திருக்கின்றது. பிறகு அது முதலில் தாயினிடத்திலும் பிறகு தகப்பனிடத்திலும் அதன் பிறகு அரசனிடத்திலும் அதன் பிறகு குருவினிடத்திலும் அதன் பிறகு ஸர்வேசுவரனிடத்திலும் அதன் பிறகு ஸர்வப் பிராணிகளிடத்திலுமாக கொஞ்சம் கொஞ்சமாய் விரிந்து விகாஸத்தையடைந்து விசாலமாய் எங்கும் தொடர்ந்து அடர்ந்து படர்ந்திருக்கும் தன்மையை யோசிக்கும்போது ஒருசிறு விதையில் மறைந்திருந்த ஆலமரம் மிகப் பெரியதாய் விரிவதான இயற்கை ஞாபகத்திற்கு வரும். இவ்விதம் விதையில் மரம்போல் நமது மனத்திலும் ஏற்கனவே அடங்கி ஒடுங்கியிருக்கும் அன்பை விரிவாகச் செய்ய வேண்டியதுதான் நமது கடமையான வேலை.

---

## பக்தியினது பல உருவங்கள்.

கல்லைப்போன்ற கடினமான மனத்தை நெகிழச் செய்கின்ற முற்கூறிய அவ்வன்பு, ஸ்தானங்களின் பேதத்தால் பல உருவங்களுள்ளது. பெற்றோர்களுக்குக் குழந்தைகளிடமுள்ள அன்பு வாத்ஸல்யமென்றும், தம்பதிகளுக்கு பரஸ்பரம் உண்டாகும் அன்பு அநுராகம் என்றும், பிரபுக்களுக்கு ஏழைகளிடமுண்டாகும் அன்பு கருணை என்றும், நண்பர்களுக்கு பரஸ்பரமுண்டாகும் அன்பு ஸ்நேகம் என்றும், எளியவர்களுக்கு தமக்குதவிசெய்கின்ற பிரபுக்

களிடமுண்டாகும் அன்பு, விசுவாஸம் என்றும் பல வடிவங்களாக அது இருப்பினும் பொருள் ஒன்றே.

அது, தாய், தந்தை, வேந்தன், கணவன், குரு இவர்களிடம் தோன்றும்போது முறையே மாதுர்பக்தி, பிதுர்பக்தி, ராஜபக்தி, பதிபக்தி, குருபக்தி என்ற பதங்களாலழைக்கப்படும். அதுவே ஈசுவரனிடம் தோன்றும்போது ஈசுவரபக்தி, தெய்வபக்தி, பக்தி என்ற பதங்களால் வழங்கப்பெறும். பக்தி என்ற தனிப்பதத்திற்கு ஈசுவரனிடம் நமக்குத் தோன்றும் அன்பே பொருளாகும். இதனாலேயே குழந்தைப் பருவத்திலிருந்த அன்புவடிவமாயுள்ள பக்தியை தாய்முதல் ஈசன்வரை படிப்படியாய் யாவரும் வளர்க்கக் கடவர் என்று ஏற்படுகிறது. உயிர்களிடம் ஈசனுக்குள்ள அன்பு அருள், ப்ரஸாதம், அனுக்ரகம் என்ற பதங்களால் கூறப்படும். ஒரு மனிதனுக்குத் தனது நாட்டிலுள்ளாரனைவரிடம் தோன்றும் அன்பு தேச பக்தி என்றும், உலகத்திலுள்ள ஸகலமான பிராணிகளிடமும் உண்டாகும் அன்பு ஜீவகாருண்யம் என்றும் வழங்கப்படும். அன்பு சிலர்களிடம் நமக்கு சீக்கிரமாகத் தோன்றினபோதிலும் சிலர்களிடம் ஆழ்ந்து யோசித்துப் பார்க்கும்போதுதான் அது தோன்றலுறும். அதிலும் ஈசுவரனிடம் அன்பின் தோற்றத்திற்கு மிக்க ஆழ்ந்த ஆலோசனை வேண்டும். முன் சொன்னபடி ஈசுவரன் மகிமையை மனத்திலுள் உன்னி உன்னி ஆலோசித்து அதில் ஆழ்ந்தவர்களாக இருந்துகொண்டு அவரது ஸ்வரூபத்தை இடையறாது தியானிப்பது, பக்தியினது உருவங்களெல்லாம் திரண்டு சேர்ந்த சிறந்த பக்தியாகும்.

---

## பக்தியினது திருஷ்டாந்தங்கள்.

ஜலப் பிரவாகத்தில் நீந்த முடியாமல் இழுத்துக் கொண்டு போகப்படுகிறவன் மனம் கரையை நாடுவது போன்றும், வழிநடையில் வெயிலினால் சிரமமடைந்தவழிப் பேரக்கன் மனம் மரத்தின் நிழலை நாடுவது போன்றும், பெருமழையி லகப்பட்டவன் மனம் வீட்டை நாடுவது போன்றும், பசியினால் வருந்தும் அயலூர்க்காரனை அதிதி யின் மனம் அன்னமளிக்கின்ற கிரகஸ்தனை நாடுவது போன்றும், எளியவன் மனம் தர்மம் செய்கின்ற பிரபுவை நாடுவதுபோன்றும், இருட்டிலகப்பட்டுக்கொண்டு கஷ்டப் படுகிறவன் மனம் வெளிச்சத்தை நாடுவது போன்றும், குளிர் பொறுக்காதவன் மனம் உஷ்ணத்தை நாடுவது போன்றும், ஹம்ஸத்தின் மனம் தாமரைக்குளத்தை நாடு வதுபோன்றும், சாதகபக்ஷியின் மனம் நீருண்டமேகத்தை நாடுவதுபோன்றும், சக்கரவாகபக்ஷியின் மனம் ஸூர்யனை நாடுவதுபோன்றும், சகோரமென்ற நிலவு விழுங்கும் பக்ஷி யின் மனம் சந்திரனை நாடுவதுபோன்றும், பிறப்பிறப்புகளி னால் துன்புறும் பக்தர்களின் மனம் அவற்றை நீக்குகின்ற பகவானையே ஸதா நாடிச் செல்லவேண்டும். முன்சொன்ன படி பக்தர்கள் மனம் பகவானைநாடிச் சென்ற பிறகு அவ ருடைய பாதாரவிந்தங்களில் ஸ்வயமாகவே பற்றுள்ளதாக விருப்பதற்கு சில திருஷ்டாந்தங்கள் அடியில் வருவன.

அழிஞ்சல் மரத்திலிருந்து கீழே சிதறின விதைகள் திரும்ப ஸ்வயமாகக் கிளம்பி அம்மரத்திற்போய் ஒட்டிக் கொள்வனபோன்றும், இரும்பு, காந்தத்தைப் பற்றுவது

போன்றும், பதிவிரதையின் மனம், தனது கணவனிடம் பற்றியிருப்பது போன்றும், ஒருகொடி, பக்கத்திலுள்ள மரத்தைப் பற்றுவது போன்றும், நதியின் ஜலம், வேக மாய்ப்போய் ஸமுத்ர ஜலத்தைப் பற்றுவது போன்றும், பக்தர்களின் மனமும் உலகத்திலுள்ள மற்ற விஷயங்களை வெறுத்து பகவானின் பாதகமலங்களிற்போய் பற்றினதாக விருக்கவேண்டும். முற்கூறிய திருஷ்டாந்தங்கள் யாவும் * சிவாநந்தலஹரியில் உள்ளன.

---

## பக்தியினது வகுப்புகள்.

1. சிரவணம் 2. கீர்த்தனம் 3. ஸ்மரணம் 4. பாத ஸேவனம் 5. அர்ச்சனம் 6. வந்தனம் 7. தாஸ்யம் 8. ஸக்யம் 9. ஆத்மநிவேதனம் என்று பக்தி ஒன்பது வகைப்படும்.

1. பகவானுடைய ஸ்வரூபத்தையும் அவனது அபாரமான மகிமையையும் விளக்குகின்ற திவ்ய கதைகளைப் பிரியமாய்ச் செவியுறக் கேட்டல், சிரவணமெனப்படும்.

2. அவற்றை வாக்கினல் அடிக்கடிச் சொல்லிக் கொண்டிருத்தல், கீர்த்தனம் எனப்படும்.

3. அவற்றை மறக்காமல் அடிக்கடி மனதிற் சிந்தித்தல், ஸ்மரணமெனப்படும்.

4. பகவானின் பாதங்களைத் தொழுதல், பாதஸேவன மெனப்படும்.

---

* சுலோகம் 59, 60, 61.

5. பகவானது திவ்யமங்கள விக்ரஹத்தைப் பூஜித்தல், அர்ச்சனமெனப்படும்.

6. பகவானது முன்பாக பூமியில் தண்டம்போல் விழுந்து ஸாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தல், வந்தனமெனப்படும். தலை, கையிரண்டு, செவியிரண்டு, முகவாய், புஜங்களிரண்டு, என்னும் எட்டு உறுப்புகளும் நிலத்திற் படும்படி வணங்குதல், ஸாஷ்டாங்க நமஸ்காரமாம். இது புருஷர்களுக்கு உரியது. ஸ்திரீகள் தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்னும் ஐந்து அங்கங்களும் பூமியிற் படும்படி வணங்கவேண்டும். சிரஸிலாவது மார்பிலாவது இரண்டு கைகளையும் குவித்தல், த்ரியங்க நமஸ்காரமென்றும், அஞ்சலி என்றும் கூறப்படும். இது இருவகுப்பினர்கட்கும் பொதுவானது.

7. "பகவான் யாவுமறிந்த பேரறிவுளர் (ஸர்வஞ்ஞர்); அடியேன் அற்ப விஷயங்களறிந்த சிற்றறிவுளன் (கிஞ்சிஞ்ஞன்); பகவான் பிறப்பிறப்பில்லாதவர்; அடியேன் அடிக்கடி பிறந்திறந்து ஸம்ஸார சக்ரத்தில் உழலுகின்றவன்; பகவான் இயற்கையறிவுடையார்; அடியேன் செயற்கையறிவுடையவன்; பகவான் தம்வசமாக யிருப்பவர்; அடியேன் பிறர் வசமுடையவன்; பகவான் ஒப்பும் உயர்வும் இல்லாதவர்; அடியேனுக்கு ஸமமானவரும் மேலானவரும் அனேகர் உளர்; பகவான் எங்கும் நிறைந்தவர்; அடியேன் சரீரத்துள்ளடங்கினவன்; பகவான் துன்பங்கலவாத இன்பமாகிய பேரானந்தம் பெற்றவர்; அடியேன் துன்பங்கள் ஊடுருவியிருக்கின்ற சிற்றின்பங்களிற் பட்டு உழலு

கிறவன் ; பகவான் தமது அநுபவத்தின் பொருட்டு ஒன்றையும் விரும்பாதவர் ; அடியேன் உலகத்திலுள்ள பதார்த்தங்கள் யாவையும் எனது அநுபவத்தின் பொருட்டே விரும்புகிறவன் ; பகவான் உலகங்களுக் கெல்லாம் பிரபுவான ஒரே நாயகர் ; அடியேன் தன்னையும் காப்பாற்ற முடியாத பரம தரித்ரன் ; பகவான் ஜீவர்களிடம் காரணமற்ற கைம்மாறில்லாத அளவுகடந்த அருளாகிய அன்பினையுடைவர் ; அடியேன் காரணம் பற்றினதும் பிரதிபலனை எதிர்பார்த்ததும் அளவுக்குள்ளடங்கினதுமான அன்புடையவன் ; இம்மாதிரியாக பகவானுக்கும் அடியேனுக்குமுள்ள தாரதம்யத்தை கவனிக்கும்போது மலைக்கும் கடுகுக்குமுள்ள பேதத்தை யொத்திருக்கிறது ; ஆதலால் அந்த பிரபுவைத்தான் அடியேன் சரண்புக வேண்டும் ; அவர்தான் அடியேனை ஏற்றுக் காப்பாற்றுகிறவர் " என்று எண்ணங்களை முன்னிட்டுக்கொண்டு பகவானுக்கு அடிமையாகவிருத்தல் தாஸ்யம் எனப்படும். தாஸனாகவிருத்தல் தாஸ்யமாம்.

8. இப்படிச் சிலகாலம் பக்தி செய்துகொண்டிருக்கும்போது பகவான் அந்த பக்தனை தமது மித்திரனாக அங்கீகரிக்கின்றார். ஒரு யஜமானனிடத்தில் உண்மையாகவும் விசுவாஸமாகவும் இருக்கிற ஒருவேலைக்காரனை அவனது நல்ல எண்ணங்களாலும் நற்செய்கைகளினாலும் கொஞ்சகாலத்திற்குப் பிறகு அந்த யஜமானன் தனது உரித்தான ஸகாவாகத் தெரிந்து எடுத்துக்கொள்வது உலக அநுபவஸித்தமான விஷயமன்றோ ? அவ்விதம்

பகவானுக்கு அந்தரங்கத் தோழனாகிய ஸகாவாக இருத்தல் ஸக்யமெனப்படும்.

9. உலகத்தில் அந்தரங்கமான சினேகிதன் தனக்குக் கிடைத்தப் பிரியமான வஸ்துக்களை முதலில் தான் அனுபவிக்காமல் தோழனுக்குக் கொடுத்த பிறகே அனுபவிக்கிறான். அம்மாதிரி முற்கூறிய எட்டுவித பக்திகளிற் சிறந்தவர்கள் தனக்குப் பிரியமான எந்த வஸ்துவையும் பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிடுவார்கள். உதாரணமாக இராமாயணத்தில் சபரி என்ற வேடர்மாதரிசி, தான் கடித்துப் பார்த்து ருசியாயிருந்த கனிகளை ஸ்ரீராமபிரானுக்கு அர்ப்பணம்செய்ய அவரும் அவற்றை ஏற்று அவள் பக்தியை மெச்சி அவளுக்கு முக்தி கொடுத்ததாக சரித்திரம் கூறுகிறதல்லவா? அவ்விதமே வேடுவர் குலத்துதித்த கண்ணப்ப நாயனார் தானுண்டு ருசிபார்த்துத் தெரிந்தெடுத்த மாம்ஸங்களைப் பரமசிவனுக்கு அர்ப்பணம் செய்து அதனால் பரமசிவன் அவனுக்கு முக்தியளித்ததாக சிவபுராணம் கூறுகின்றது.

உலகத்திலுள்ள மனிதர்களுக்குப் பிரியமான வஸ்துக்களிற் சிறந்தது தனது ஆத்மவஸ்துவே. அதன் பிரியத்திற்காகவே பெண்டு பிள்ளைகள் பொருள் வீடு முதலியவற்றை மனிதர் பிரியமாக விரும்புகின்றனர். அதற்குத் துன்பம் வருவதுகண்டு முற்கூறியவற்றை விட்டுவிட்டாவது அதைக் காப்பாற்ற முயலுகின்றனர். ஆதலால் தனக்கு உயிர்க்குயிராய்ப் பிரியமாயிருக்கின்ற ஆத்மவஸ்துவை பகவான் நிமித்தமாக அர்ப்பணம்செய்தல் ஆத்ம

நிவேதனமெனப்படும். மனிதர்கள் படிப்படியாய் ஆத்ம ஸுகம் பெறுவதற்கு முன்சொன்னபடி ஒன்பதுவிதமான பக்தியினது வகுப்புகள் பக்தி நூல்களில் வகுத்திருப்பன.

---

பக்தியினது முதிர்ச்சி.

கீதையில் கிருஷ்ணபகவான் * "எவன் உலகத்திலுள்ளவர்களைப் பார்த்து பயப்படாமலிருக்கிறானோ; எவனைப் பார்த்து உலகத்திலுள்ளவர்கள் பயப்படாமலிருக்கிறார்களோ; எவன் பிரியத்தை யடைந்து ஸந்தோஷிக்காமலும், அப்பிரியத்தையடைந்து துவேஷிக்காமலும், கஷ்டத்தை யடைந்து துக்கிக்காமலும், இஷ்டத்தை யடைந்து விருப்பமில்லாமலுமிருக்கிறானோ; எவன் சத்ருமித்ருக்களிடமும், மான அவமானங்களிலும், சீத உஷ்ணங்களிலும் சுக துக்கங்களிலும், ஸ்துதி நிந்தைகளிலும் ஸமபுத்தியுள்ளவனாக இருக்கிறானோ; எவன் ஸர்வ பிராணிகளையும் துவேஷிக்காமல் அவர்களிடம் அன்பும் கருணையுமுற்றிருக்கிறானோ; எவன் என்னிடம் மனம், புத்தி இவற்றை செலுத்தினவனாக இருக்கிறானோ; அவன்தான் எனக்குப் பிரியமான பக்தன்" என்று பக்தியில் முதிர்ந்தவனது தன்மைகளை எடுத்துக் கூறுகிறார். ‡ "அன்பிலா ரெல்லாம் தமக்குரியர் அன்புடையார் என்புமுரியர் பிறர்க்கு" என்ற திருக்குறளிற்கு அன்பில்லாதவர் தம்மிட முள்ளவற்றை தமக்கே உதவிக் கொள்ளுவார்; அன்புள்ளவரோ பிறர்க்குத் தம் உடம்பினையும் கொடுத்து உதவி செய்வார் என்ற கருத்து.

---

* அத் 12, சுலோ 15—19. ‡ அதி 8. திருக் 2.

## பக்தியினது பலன்.

பக்தியில் தீவிரமுள்ளவர்களுக்கு அதிக ஜன்மங்களெடுத்தபின் முக்தியடைய வேண்டுமென்ற அவசியமில்லை. ஒரேஜன்மத்தில் அற்பகாலத்திலும் முக்தி பெறலாம். சுகாசார்யர், பாண்டவர் வம்சத்திற்பிறந்த பரிக்ஷித் மகாராஜனுக்கு ஏழு நாட்களுக்குள் பாகவதமென்ற பக்தி சாஸ்திரத்தை உபதேசித்தார். அதனை நியமம், சிரத்தை, பக்தி, வணக்கங்களுடன் கேட்டுக்கொண்டிருந்து அப்புராணத்தின் கதாநாயகனாகிய கிருஷ்ண பரமாத்மாவின் குண ஸமூகங்களில் ஈடுபட்ட மனமுடையவனாகவிருந்த அவ்வரசன் ஏழுநாட்களில் தான்செய்த தீவிரமான பக்தியின் முயற்சியினால் முக்தியடைந்ததாகக் கூறப்படுகிறது. அதனாலேதான் பாகவதத்தை ஏழுநாட்களில் படித்து முடிக்கக்கூடிய ஸப்தாஹ மஹோத்ஸவம் இன்றும் உலகத்தில் நடந்துவருகிறது.

பகவானுடைய நாமஸங்கீர்த்தனத்தினாலேயே ஸகலமான பாபங்களும் நசித்து மனம் ஒழுங்குபடுகிறது. "பகவானது நாம ஸங்கீர்த்தனமானது எவ்வளவு பாபங்களை போக்க வல்லமையுள்ளதோ, அவ்வளவு பாபங்கள் மனிதர்களாற் செய்யமுடியாது" என அதன்பெருமை கூறப்படுகிறது. * "பத்தியாலுள்ளே பரிந்தரனைத் தானோக்கின் முத்திக்கு மூலமது" என்ற ஔவை குறள் பக்தியினால் பரிந்து பரமசிவனைப் பார்க்கவேண்டும், அது முக்திக்குக் காரணமாகும் எனக் கூறுகிறது. "கிருதயுகத்தில் தவத்

* அதிகாரம் 10. குறள் 1.

திஞலும் திரேதாயுகத்தில் யாகத்தினுலும் த்வாபரயுகத்தில் தானத்திஞலும் கலியுகத்தில் பக்தியிஞலும் மனிதர்கள் முக்தி யடைகிருர்கள்" எனப்படுகிறது. உண்மையடியார்களான பக்தர்கள் பக்தியுடன் ஈசனை தியானிக்கும் போது அவர்களுக்கு ஆனந்தக்கண்ணீர் பெருகும். வியர்வையுண்டாகும். மயிர்க்கால்கள் சிலுக்கும். இவற்ருல் அவர்கள் பக்தி மற்றவர்களால் அறியப்படும். ‡"மெய்ம் மயிர்கூர விதிர்ப்புற்று வேர்த்தெழுந்து பொய்ம்மையிலீசனைப்போற்று" என்ற ஔவையார் குறளும் அவ்விதமே கூறுகிறது. அவ்விதமான பக்தியிற் சிறந்தவன் இவ்வுலகப் பற்றை வெறுத்து பரமபதம் பெறவேண்டி நிவிர்த்தி மார்க்கத்தில் திரும்புகிருன். அப்போது அவன் ஒழுக வேண்டிய நிவிர்த்தி தர்மங்கள் இதன்பின் கூறப்படும்.



பன்னிரண்டாமதிகாரம்.

## நிவிர்த்தி தர்மம்.

நிவிர்த்தி தர்மமென்பதற்கு நீக்கும் கடமை என்று பொருள். அது அநித்யமாயுள்ள உலகங்களில் மனத்திற்குண்டாகும் பற்றை நீக்குவதற்கான ஒழுக்கமாகும். அதனிடம் நாளடைவில்சிறிதுசிறிதாகப்பழகி அதனையேவழக்கமாய்க்கொண்டவர்க்கு தத்வஞ்ஞானம் பிறக்கும். கீதையில்

‡ அதிகாரம் 10. குறள் 9. உடம்பினிலுள்ள மயிர்கள் கூர்மையாக நிற்க நடுக்கமுற்று வேர்த்து எழுந்து பொய்யில்லாத நிலைமையிலிருந்து ஈசனை துதி செய், என்று பொருள்.

* "பெருமை, டம்பம் இவற்றைப் பாராட்டாது களைதல், பொறுமை, ஸத்குருஸேவை, உள்ளும் புறமும் சுத்தமாயிருத்தல், உறுதி, மனதடக்கம், இந்திரியப் பொருட்களில் வெறுப்பு, அகங்காரமின்மை, ஜனனமரண மூப்பு வியாதி துக்கங்களின் தோஷங்களை உய்த்து உணர்தல், புத்திரன், பார்யை, கிரகம் முதலியவற்றில் ஊன்றி நிற்கும் பற்றைப் புறக்கணித்தல், விரும்புதற்குரியனவும் வெறுப்பதற்குரியனவுமான வஸ்துக்களை எப்போதும் ஸமமாய் நினைத்தல், மற்றதைப் பற்றாது என்னிடம் (பகவானிடம்) மாறாத பக்தி, ஜனக்கூட்டத்தை வெறுத்து ஏகாந்தமான இடத்தில் வஸித்தல் ஆகிய இந்த தர்மங்கள் தத்வஞ்ஞானத்தை விளக்குவது" எனப்படுகிறது.

தத்வஞ்ஞானம் என்பதற்கு உண்மை யுணர்தல் என்று பொருள். அதுவே மோக்ஷஸாதகம். கைவல்ய உபநிஷத்தில் "உண்மைப் பொருளையுணர்ந்து மரண தர்மத்தை புருஷன் அதிக்கிரமிக்கிறான். அது மோக்ஷமாகும். அதற்கு வேறு வழியில்லை. பிரம்ம ஞானியே பரம் பொருளை அடைகிறான்" எனப்படுகிறது. தத்வஞ்ஞானம் பிறக்க முற்கூறிய ஒழுக்கங்களே காரணங்களாயிருப்பினும் வேறு முக்கியமான காரணங்களும் மூன்று உள. அவை சிரவணம், மனனம், நிதித்யாஸனம் என்பன.

சிரவணமென்பது:—குருமுகமாக வேதாந்த வாக்கிய தாத்பர்யங்களைக் கேட்டல் எனப்படும். குருவென்பார் வேதமோதி அதிற் கூறிய தர்மத்தில் ஒழுகி

* அத்யாயம் 13. சுலோகம் 8–12.

வேதாந்தப் பொருளாகிய பிரம்மத்தினிடம் நிஷ்டை பெற்றவராக இருக்கவேண்டும். ‡ "பிரம்மமென்பது ப்ரஞ் ஞானம்; ஆதியில் ஸத்தாகிய இது ஒன்றுதான் இருந்தது; ஸத்யஜ்ஞான ஆனந்த வடிவமாயிருப்பது பிரம்மம்" என்பவை முதலியன வேதாந்த வாக்கியங்களாம். மநன மென்பது:—குருமுகமாயறிந்த தாத்பர்யங்களை அந்தந்த ஸந்தர்ப்பங்களுக்கு ஏற்ப சாஸ்திர யுக்திகளைக்கொண்டு பரிசீலனை செய்து சிந்தித்தல் எனப்படும். நிதித்யாஸன மென்பது:—மற்ற விஷயங்களை மனத்தில் நினைக்காமல் பரமாத்ம ஸ்வரூபத்தையே தைலதாரைபோன்று இடையறாது எப்போதும தியானம் செய்துகொண்டிருத்தல் எனப்படும். வேதத்தில் § "ஆத்மா கேட்கத்தகுந்தவன், நினைக்கத் தகுந்தவன், தியானிக்கத் தகுந்தவன்" எனப் படுகிறது. உலக்கை இடிகள் நெல்லுகளின் மீதுள்ள உமிகளை நீக்கி உள்ளிருக்கும் வெண்மையான அரிசிகளை காண்பிப்பன போன்று முற்கூறிய மூன்றும் தினந்தோறும் விடாமல் பயிற்சிக் கின்றவனுக்கு மனத்தினிடம் உறைந்து பதிந்திருக்கும் அஞ்ஞானத்தை உதிர்த்து உள்ளிருக்கும் தேஜோமய பரமாத்ம ஸ்வரூபத்தைக் காட்டும்.

சுகமடைய விரும்பினவர்கள் நித்ய சுகத்திற் பற்றுண்டு முயற்சிக்காமல் ஸம்ஸாரத்தில் துக்கங்கலந்த சுகத்தையேகருதி தர்ம அதர்மங்களை கவனியாது பிறர் தாரம்,

‡ முண்டக உபநிஷத் கண்டம் 2.

§ பிரஹதாரண்ய உபநிஷத், அத் 6. பிராம்மணம் 5. பாகம் 6.

தனம் முதலியவற்றில் ஆசைவைத்து அவிவேகிகளாக அவற்றைக் கவர யத்தனிக் கின்றவர்களானால் அவர்கள் நிவிர்த்தி தர்மமாகிய சிரவணம் முதலியவற்றில் அதிகாரியாக மாட்டார்கள். "இந்த ஸம்ஸாரவனத்தில் துக்கங்கள் எவ்வளவு? சுகத்தின் மினுமினுப்பு எம்மாத்திரம்? அந்த அற்ப சுகமும் கோபங்கொண்டஸர்ப்பத்தின் படம் போன்று மிகச் சஞ்சலமானது; அது சீக்கிரத்தில் அழியக்கூடியது" என்று நினைத்து அதனை விடக்கருதினவர்கள்தான் நிவிர்த்தி தர்மத்திற் புக அதிகாரியாவர்.

---

## நிவிர்த்தி தர்ம பலன்.

முற்கூறியவற்று லெல்லாம் மனம் சுத்தஸத்வமாய் மாறினபிறகு 1. நித்ய அநித்யவஸ்து விவேகம், 2. இங்குமங்குமுள்ள பலன்களின் போகங்களை வெறுத்தல், 3. சமம், தமம், உபரதி, திதிக்ஷை, சிரத்தை, ஸமாதானம் என்ற ஆறு குணங்களில் அரிய பழக்கமுற்றிருத்தல், 4. மோக்ஷம்பெற தீவிரமான விருப்பம் என்பதான நால்வகை தர்மங்களைவகுத்துக் கைப்பற்றினவன் ஆவான். அவன்தான் வேதாந்தப்பொருளையுணர அதிகாரியாவான்.

1. "பரம்பொருள் தான் நித்யவஸ்து, மற்றவை அநித்யமாவன" என்று பிரித்தறிதல், நித்ய அநித்யவஸ்து விவேகம் எனப்படும்.

2. "பூமியிலும் சுவர்க்கத்திலுமுள்ள அர்ப இன்பங்களின் அனுபவம் இடுக்கணுற்று இடையிற் போவது

பற்றி துன்பத்தை விளைவிப்பது'' என்று அதனைக் களைதல், இங்குமங்குமுள்ள பல போகங்களை வெறுத்தலாகும்.

3. சமம் முதலிய அறுவகையில் சமம் என்பது மனம் புலன்களிற் பற்றுமலிருக்கச் செய்தலாகும். தமமென்பது புறத்திலுள்ள புலன்களில் விழுந்து உழலும் பொறிகளை இழுத்து மனத்தினிடம் சேர்ப்பித்தலாகும். உபரதி என்பது மனத்தினில் ஒடுங்கின பொறிகள் திரும்பப் புலன்களில் தாவி விழாதவண்ணம் அவற்றை மனத்தினிடமே அடக்கி வைத்திருத்தலாகும். திதிக்ஷை என்பது சீதம், உஷ்ணம் நன்மை, தீமை முதலிய சுகதுக்கங்களை ஒன்ருய்ப் பாவித்துப் பொறுத்திறுத்தலாகும். சிரத்தையென்பது குருவினிடமும் வேதாந்த வாக்கியங்களிடமும் மிகுந்த நம்பிக்கையாகும். ஸமாதானம் என்பது மற்ற விஷயங்களில் மனத்தையடக்கி சிரவண மனன நிதித்யாஸனங்களுக்கு அனுகூலமான விஷயங்களிலேயே எப்போதும் முயற்சி செய்துகொண்டிருத்தலாகும். மோக்ஷப்பெற தீவிரமான விருப்ப (முமுக்ஷுத்வ) மாவது எத்துணையோ கல்பகாலங்களாக ஜனனமரணப் பிரவாகத்தின் அலைகளால் மோதுண்டு இக்கரையும் அக்கரையுமில்லாது பிரவாகத்தின் வழியே தடுமாறித் தத்தளித்துப்போய்க்கொண்டிருக்கும் ஜீவன்படும் துன்பத்தை உண்மையாய் உணர்ந்து அதனை எவ்விதத்திலாவது ஒழித்து நித்யமான இன்பம் பெறவேண்டும் என்ற இடைவிடாத எண்ணமாகும். இவ்விதம் நான்குவிதமான தர்மங்களுற்றவன்தான் மோக்ஷம்பெற ஸாதனமாகிய வேதாந்த விசாரம் செய்து உபயோகத்திற்குக் கொண்டுவர அதிகாரியாவான்.

தத்வஞ்ஞானத்தால் பரமபுருஷார்த்தமான மோக்ஷ
ஸித்திக்கிறதென்பது எல்லா மதஸ்தர்களுக்கும் பொ
வான வழி. தத்வ (உண்மை) த்தை நிச்சயிப்பதி
அனேக வாதிகள் வெவ்வேறு அபிப்ராய முடைத்திரு
கின்றனர். அவர் கைம்மாறில்லாத கருணையுற்று உல
திற் காட்டிய பல அற்புதச் செயல்களால் தாம் எடுத்து
தலைக்கட்டி முடித்த ஒரு ஸித்தாந்தமான அபிப்பி
யத்தை பலரும் ஒப்பி ஒழுகும்படி செய்திருக்கின்றன
அவ்விதம் அவர் கொண்ட அபிப்பிராயமே " மதம்
என்பதாகும். பெரியார் வகுத்துக்காட்டிய யாதொமொ
மதத்தையும் பின்பற்றாது மனம்போனவழியே செல்
கின்றவர், கட்டுக்கடங்காத கள்ளமாட்டின் துள்ளுத
யடக்கக் கழுத்திற்கட்டிய தொண்டுமரம்போன்ற பலது
பங்களின் வாயிலகப்பட்ட பிறகே மடங்குவார். அப்போ
தான் அவர்களும் மதம் என்ற ஏதாவது ஒரு நல்வழியை
பின்பற்ற முன்வருவார். ஆதலால் மதம் என்பது ஒ
வொரு மனிதனும் ஒழுங்கானவழியே சென்று உச்சியி
ஏறி விழாது நிலையுற்று நின்றிருப்பதற்கு ஒரு பெரி
ஊன்று கோலாகும். ஆனதுபற்றி மதம், அதன் பிரிவுக
அவற்றின் கொள்கைகள் முதலியன தனித்தனிப் பிரித்
அதிக விரிவும் சுருக்கமுமின்றி இதன் பின்வரும் இர
டாம் பாகத்திற் கூறப்படுவன.

முதற்பாகம் முற்றிற்று.



# இரண்டாம் பாகம்.



## முதல் அதிகாரம்.

### மதம்.

ஜீவாத்மா தன்னிடமுள்ள ஜீவத்தன்மையை விலக்கி பரமாத்மாவினிடம் போய்ச் சேருவதற்கு ஸாதகமாய் மனிதர்களின் கடமையான தர்மங்களைக் காட்டுவது, மதம் எனப்படும். அது ஈசுவர அம்சமாய் அவதரித்த ஆசார்யர்கள் ஆகிய மகான்களின் அபிப்பிராயத்தை ஸித்தாந்தமாய்க் கொண்டு வழங்கிவருவது. மதம் என்பதற்கு சாஸ்திரங்களால் ஸம்மதிக்கப்படுவது என்று பொருள். ஏதாவது ஒரு மதத்தைத்தழுவி அதிற்கூறும் கொள்கைகளை ஏற்று அவ்வழியே சென்று நல்லொழுக்கங்களில் தேர்ச்சி பெறாதவனது பிறப்பு பயனற்றதாகவே முடியும். ஏன்?

### மதம் அவசியம்.

உலகத்திலுள்ள ஸர்வப்ராணிகளுடைய மனத்திலும் "எனக்கு சுகமே உண்டாகுக, துக்கம் எப்போதும் உண்டாகாமலிருக்குக" என்ற ஒரேவிதமான உணர்ச்சி உண்டாய்க் கொண்டிருப்பதை நாம் பிரத்யக்ஷமாய்ப் பார்க்கின்றோம். பகுத்தறிவில்லாத பசு பக்ஷி முதலியப் பிராணிகளும் துக்கத்திற்கு அறிகுறியான நிகழ்ச்சிகளை அறிந்த

வுடன் பயந்து ஓடுகின்றன. ஸுகத்திற்குக் காரணமான வஸ்துக்களைப் பார்த்தவுடன் பரிந்துவந்து அவற்றை ஏற்றுக்கொள்ள முயற்சிக்கின்றன. மரம், செடி, கொடி முதலிய ஸ்தாவர ஜந்துக்களும் தமது ஆகாரமாகிய உரம், தண்ணீர், நல்லகாற்று இவற்றை உட்கொண்டபோது நன்றாய்த் தளிர்த்து செழித்து ஸுகத்தில் விருப்பமிருப்பதை வெளியிடுகின்றன. முற்கூறிய சரியான ஆகாரம் கிடையாதபோது அவை வாடி வதங்கி தாம்விரும்பாத துக்கத்தை விளக்குகின்றன.

அவ்விதமே மனிதர்களும் பசி, தாகம், காமவிகாரம், வியாதி முதலியவற்றிற்குப் பரிகாரமான ஆகாரம், தண்ணீர், சேர்க்கை, மருந்து முதலியன கிட்டியபோது சுகத்தையும், அவை கிட்டாதபோது துக்கத்தையும் அடைந்து வருகின்றனர். இந்த சுகத்தையே உண்மையான இன்பமாகக்கருதின மதத்தினர்கூட அனேக நன்னெறிகளைப் பின்பற்றியே தாம் நாடிய இன்பத்தைப் பெற முயலுகின்றனர். நமது முன்னோர் அத்துடன் நில்லாது அதற்கும் மேலான சுகம் ஒன்று என்றுமழியாமல் இருப்பதாக ஒரு உண்மையை யோகாப்பியாஸத்தின் அநுபவ வாயிலாகக் கண்டுபிடித்து உயிர்கள் உய்யுமாறு அதனை சாஸ்திரங்களில் நிரூபித்திருக்கின்றனர். எப்படியெனில்?

முன்சொன்ன சரீரத்தைப்பற்றின திராப்பிணிகளைப் போக்க வழக்கமாய் யாவரும் செய்துவருகின்ற முயற்சி அவற்றின் வெப்பத்தை அப்போது மாத்திரம் தணித்து வைத்திருப்பதேயல்லாது பிறகு திரும்பவும் அவற்றைத்

தலை தூக்காமல் அடியோடு களைந்து தள்ளுவதற்குரிய சக்தி பொருந்தியதல்ல அது. தீராப்பிணிகளாகிய பசிதாக விகாரங்கட்குத் தற்கால பரிகாரமான கார்யங்களையே பல ஜன்மங்களாக பல வருஷங்களாக பல மாஸங்களாக பல நாட்களாக பலரும் செய்துவருகின்றனர். ஒரு சிலரே அதற்கு மேம்பட்ட முயற்சியில் முன்வந்தவராவர். நாம் நீர்ப்பருகியும், உணவு உண்டும், விகாரத்தைத் தீர்த்துக் கொண்டதுமான பிறகு ஒரு சிறு பொழுதுண்டாகும் ஸுகம் வாஸ்தவ ஸுகமல்ல. அது அப்போதுள்ள துக்க நிவிர்த்தியேயாகும்.

தீராப்பிணிகள் பிறந்ததுமுதலே உடம்பைப் பின்பற்றி தத்தம் ஸமயம் வந்தபோது ஜனங்களை வருத்துவன. உணவு முதலிய பரிகாரத்தால் அவ்வருத்தமாகிய துக்கம் தற்கால சாந்தியாகத் தீர்ந்ததேயல்லாது புதிய சுகம் ஒன்றும் அப்போது வரவில்லை. துக்க நிவிர்த்தியினிடம் சுகத் தன்மையைப் பாராட்டுதல் உலக இயற்கை. கடும் வெயிலில் தலைச்சுமையுடன் நடந்து செல்லும் ஒருவன் வழியிலுள்ள மரத்து நிழலில் வந்துநின்று சுமைதாங்கிக் கல்லில் சுமையையும் இறக்கிவைத்துக் கொள்ளும்போது குளிர்ந்த காற்று வீச "ஆகா! சுகமாயிருக்கிறது" என்கிறான். அப்போது அவன் வெயிலில் சுமைதூக்கிவந்த கஷ்டத்தின் அனுபவம் நிவிர்த்தியானதே யல்லாது புதிய சுகம் ஒன்றும் வந்துவிடவில்லை. ஆனாலும் துக்க நிவிர்த்தியினிடம் சுகத்தின் தோற்றமுண்டாவது உலக இயற்கையாயிருக்கின்றது. அவ்விதம் இயற்கை ஏற்பட காரணமென்னவெனில்?

சரீரத்தினுள்ளிருக்கும் ஆத்மா எப்போதும் ஆனந்த வடிவமானதே. அதன் இயற்கைதான் சுகமென்பது. அந்த சுகத்தை சூரியனை மேகம்போன்று மனத்திலுள்ள அஞ்ஞானம் மறைத்துக் கொண்டிருக்கிறது. சூரியன் மேகத்தில் மறைபட்டிருப்பினும் அவனது வெளிச்சம் அடங்கியிருக்குமேயல்லாது அடியோடு போய்விடாது. அது போன்று ஆத்மாவின் ஸகஜமான ஆனந்தம் அஞ்ஞானத்தால் மறைக்கப் பெற்றிருப்பினும் அதன் திவலைகளின் தோற்றம்போன்ற சிற்றின்பங்களின் அனுபவத்தால் துக்க நிவிர்த்தியை யாவரும் சுகமாகக்கருதக் காரணமாயிருக்கிறது. தோற்றமாயுள்ள இன்பத்தைவிட்டு இயற்கை இன்பமே யாவராலும் தேடத்தக்கது.

இவ்விதமான அரிய பெரிய உண்மைகளை உள்ளவாறு உணர்ந்தனர் பெரியார். பிறகு அறிவிலிகளான ஜனங்கள் உயர்பதவியை உற்றுநோக்க அவகாசமிருந்தும் ஏற்பட்டகாலத்தை ஒழுங்கு படுத்திக்கொள்ள விருப்பமின்றி அதற்கு அவகாசம் இல்லாதவர்களாகவே நினைத்தும் தாய்கொண்ட இல்லறத்தையும் இனிதுபெற நடத்தாமலும் இடுக்கணுற்று ஏக்கம் பிடித்திருக்கின்றனர் என்றும், பிறப்பிறப்புப் பிணிகளுக்கு ஏற்ற மருந்து தேடாது முற்போக்கான வழிகளில் அடிவையாது அழியும் உலகத்திலே ஆடிப்பாடிக் கட்டுக்கடங்காது தம்மிஷ்டப்படித் திரிந்துகொண் டிருக்கின்றனர் என்றும் அநுதாபத்தோடு அவர்களைக் கரையேற்ற மதம் என்பதான சாஸ்திர ஸம்பிரதாயத்தை அப்பெரியார் இங்கு பரவச்செய்திருக்கின்றனர். இதனால் மதம் என்பது இன்னது என்றும்

இத்துணை உபயோகமுள்ளதென்றும் நிரூபிக்கப்பட்டது. பாரததேசம் என்ற இந்தியாவிற்குப் புறம்பே தோன்றி விரிந்தனவும் பிறநாட்டினர்க் கொண்டனவுமான பலபுற மதங்களைப்பற்றிக் கூறயாம் இப்போது முன்வந்தில்லோம். இந்தியாவிற் பிறந்து வளர்ந்த ஹிந்துமதமே இந்தியர் யாவராலும் முன் அநுஷ்டிக்கப் பட்டிருந்தமையால் அதனைப் பற்றிதான் இதன்பின் நாம் எடுத்துக்கூற முன் வந்துள்ளோம். ஆதலால் இதன் பின் புராதனமான நமது ஹிந்து மதம் என்பதைப்பற்றிக் கூறலாகும்.

---

## இரண்டாம் அதிகாரம்.

---

### ஹிந்துமதம்.

"ஹிந்து" என்பதாக ஒரு மதத்தின் பெயரன்று. ஹிந்துக்களது மதம் ஹிந்துமதமெனப்படும். ஹிந்துக்கள் என்பவர் யாவர்? என்பதை யாம் இங்கு ஆராய்வோம். முன் ஒரு காலத்தில் ஆர்யர்கள், இந்தியாவிலுள்ளவர் அனைவருமே வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளவேண்டுமென்று முயன்றனர். அப்படியே அனேகமாய் அக்காலத்தில் இந்தியர் அனைவரும் ஆர்யர்கொண்ட கொள்கைகளையே பின்பற்றுவாராயினர். அப்போது மேல் நாடுகளினின்றும் இங்குவந்த சிலர், பெரும்பாலும் ஸிந்து நதிக்கரைகளிலேயே வஸித்துவந்த ஆர்யர்களை ஸிந்து என்ற பெயரால் அழைக்கலாயினர். அது மேல்நாட்டாரது ஒலிப்பில் "ஹிண்டு" என்று வழூவியது. பிறகு அவர்களே இத்தேசத்தின் ஆளுகை ஏற்றபோது இராஜாங்கத்

தில் இயற்றிய பல சட்டதிட்டங்களிலும் வ்யவகாரங்களி லும் ஆர்யர்களையும் அவர்களைப் பின்பற்றிய மற்றவர்களை யும் ஹிண்டு என்ற பதத்தினாலேயே குறிப்பிட்டு முற்றி லும் வழங்கலாயினர்.

அவ்வாறு பெருப்பான்மையான நெடுங்கால வழக் கத்தால், வேதப் பிரமாணிகள் யாவரும் தாமறியாது முன் னோரிட்ட ஒரு பெயராக அதனையேற்று தாமும் தம்மை ஹிண்டு என்ற பட்டதாரிகளாக பாவித்து அவ்விதமே கூறிக்கொள்ளும்வழக்கத்தை வலுப்படுத்திக்கொண்டனர். ஹிண்டு என்பது, இந்திய பாஷையினர் உச்சரிப்பில் "ஹிந்து" என்று திரிபலாயிற்று. இப்போது நம்மவரும் அப்பெயரின்றி மறு பெயரால் மற்றவரிடம் எளிதில் தம்மை சுட்டிக்காட்ட முடியாதவராக இருக்கின்றனர். ஆனாலும் "ஹிடி" என்ற பகுதியைக்கொண்டு ஹிண்டு என்ற சொல்லை யுண்டாக்க வடமொழி இலக்கணம் இணங்குமாதலால் அப்பதத்திற்கு "அறிவர்ளி" என்ற பொருள் அமைகின்றது. ஆதலால் அறிவுறுத்துவது என்ற பொருள் கொண்ட வேதத்தைப் பிரமாணமாக ஏற்றவர் யாவரும் ஹிந்துக்கள் (அறிவாளிகள்) என்று தாம்நினையாது கிடைத்த பெயராகிய மகுடம் புனையத் தகுதியானவரே.

---

## பழைய இந்தியர்.

முன் ஒரு காலத்தில் இந்தியர் யாவருமே பெரும் பாலும் வேதப் பிரமாணிகளாகவும் ஹிந்துக்கள் என்ப தற்கு உரியவர்களாகவு மிருந்தனர். பிறகு ஒருகால் ஒரு

ஞானியாக இந்தியாவில் அவதரித்த புத்தர் என்பவர், புதிதான ஒரு மதத்தை ஏற்படுத்தி அப்போதிய அரசர் உதவியைக்கொண்டு அதனைப் பரப்பியது, இந்தியாவில் மாத்திரமல்ல. இலங்கை, பர்மா, ஜப்பான், சைனு முதலியவிடங்களிலும் பரவி அது இப்போதும் அங்கு நிலைபெற்று ஜீவித்திருக்கிறது. அதன் முக்கியமான கொள்கைகள் “ஜீவஹிம்ஸை கூடாது; ஜீவகாருண்யம் வேண்டும்” என்பன. வேதவிதியாகிய யாகத்தில் இயற்றுவனவெல்லாம் பரோபகாரமாயிருப்பினும் அதில் நடைபெறும் ஜீவஹிம்ஸைமாத்திரம் புத்தர் மனத்தை மிக்க வருத்தியதால் அவர் ஆங்காங்கு பின் கண்டபடி பிரஸங்கிக்கலானார்.

“வேதம் அப்பிரமாணம்; வேதியர் கூறும் ஜாதிமத வேற்றுமை கூடாதன; அவர் அணியும் புண்ட்ரங்கள் முதலியன புறக்கணிக்க வேண்டுவன” என்றவைபோன்ற வேதவிரோதமான பல விஷயங்களை அவர் பரவச் செய்தனர். அவருக்குப் பிறகும் பல அரசர் அம்மதத்தை அங்கீகரித்து ஹிந்து மதத்தினர்க்குப் பல தீங்குகளை விளைவித்தனர். அதனால் சுமார் இந்தியாவில் முக்கால் பாகத்தினர் புத்தமதத்தினராகவே ஆய்விட்டனர். அதன்பிறகு வேதங்கள் முதலியன பலர் ஓதுவாரின்றி மூலைகளில் ஒதுங்கலாயின. வேததர்மங்கள் தணியலாயின. பிறகு பிரம்மாவும், குமரக்கடவுளும் முறையே மண்டனமிச்ர குமாரில பட்டாசார்யர்களாகவும், ஆதிசேஷஸ்வாமி பதஞ்ஜலி ரிஷியாகவும், சங்கரபகவான் சங்கரபகவத் பாதாசார்யராகவும் அவதரித்து முறையே வேதத்தின் கர்மகாண்டம், உபாஸனகாண்டம், ஞானகாண்டம் என்பனவற்றின்

பிரமாணத்தைப் பிரஸங்க சாஸ்திர அநுபவவாயிலாக இந்தியாவில் ஆங்காங்கு சென்று நிலை நிறுத்துவாராயி னர். அவர்கள்காலத்திய அரசர் ஸபைகளில் பலவித பரீக்ஷைகளும் தெய்வசோதனைகளும் செய்யப்பட்டு கடை சியாக வேதமதமே வெற்றிபெற்ற தாகையால் புத்தமதத்தி னரான வேந்தர்களும் அவர்களைப் பின்பற்றியப் பிரஜை களுமாகிய இந்தியர் யாவரும் வேதத்தைப் பிரமாணமாக ஏற்று திரும்பவும் வேதமதத்தினர் என்ற ஹிந்துக்கள் ஆயினர். பிறகு இந்தியாவில் புத்தமதம் சிற்சில மூலை களிற்போய் பதுங்கலாயிற்று. இப்போதும் புத்தர் சிலர் இந்தியாவிலிருக்கின்றனர். அதன் பிறகு ஹிந்துக்கள் அவர் மதத்தை நாஸ்திக மதங்களுள் ஒன்றாகப் பிரிக்கலாயினர்.

---

## புதிய இந்தியர்.

புத்த மதத்திற்கு வெகுகாலத்திற்கப்பால் ஒரு ஸம யம் புறநாட்டிலுள்ள மகம்மதியர் இந்தியாவிற்புகுந்து அரசாண்டபோது மகமத் மதமும் தற்காலம் கிரிஸ்துவர் ஆளுகையில் அவர் மதமும் இந்தியாவில் சிறிது வளர்ந்து பரவலாயின. ஆதலால் இந்தியாவில் தற்காலம் புத்தர், மகம்மதியர், கிரிஸ்துவர் என்ற பிரிவினர்களைத்தவிர மற்ற வர் யாவரும் ஹிந்துக்கள் என்றே கூறப்படுவார். அவர் கள் இப்போது சைவம், வைஷ்ணவம், த்வைதம், அத்வை தம் என்ற நான்கு மதங்களில் அடங்கியவராவர்.

---

## ஹிந்துமதம் வைதிகமாவது.

முற்கூறிய நான்கு மதங்களுக்கும் பிரமாண நூல் வேதமேயாகையால் அவற்றிற்கு பொதுப்பெயராக ஹிந்து

மதம் என்பதற்குப் பதிலாய் வைதிக (வேதஸம்பந்தமான) மதம் என்று பெயரிட்டு அழைப்பதே சாலப்பொருத்த மாகும். அதுவே ஹிந்துமதத்திற்கு நமது முன்னோர் கருதியளித்த புண்ய புராதனமான திருநாமம் என்ற முடி சூடும் மகுடமாகும். அது ஆஸ்திகமதம், வேதாந்தமதம் என்ற பெயர்களாலும் அழைக்கப்பெறும்.

அது நீங்கலாக வேதப்பிரமாணிகளாகிய ஐவர் ஸ்தாபித்த ஐவகை ஆஸ்திகமதங்களும் மோக்ஷலக்ஷணத்தில் முறண்பட்டவையாயினும் தத்வஞ்ஞான ஸாதனங்களில் மாறுபடாதன. ஆதலால் இங்கு "ஷட்தர்சனங்கள்" என்ற அறுவகை ஆஸ்திகமதங்களும் நிரூபிக்கப்படுவன.

ஆயினும் ஆஸ்திகமதத்திற்கு எதிரியாயுள்ள நாஸ்திக மதங்களும் பலவுள. அவற்றின் பலக்குறைவு தெரிந்து அவற்றை நீக்குவதற்காகவும் படிப்படியாய் ஏற்பதற்குரிய பலமுற்ற ஆஸ்திகமதங்களை அங்கீகரிப்பதற்காகவும் ஸாதகமாக நாஸ்திகமதங்களுள் முக்யமான சிலவற்றை இதன் பின் கூறியபின்னரே ஆஸ்திக மதங்கள் கூறப்பெறும்.

——:※:——

## மூன்றுமதிகாரம்.

---

### நாஸ்திகமதம்.

வேதங்களும் அவற்றைச் சார்ந்த சாஸ்திரங்களும் பிரமாணங்களல்லன வென்றும், ஈசுவரன் ஒருவன் இல்லை என்றும் நினைக்கின்றவர்கள் நாஸ்திகர் எனப்படுவார்.

நாஸ்தி (ந-அஸ்தி=இல்லை) என்பதிலிருந்து நாஸ்திக பதம் உண்டாயது. நாஸ்திகர்களின் ஸமயாசாரக் கொள்கை நாஸ்திகமத மெனப்படும். நாஸ்திகர் சார்வாகர், பௌத்தர், ஆர்ஹதர் என்று மூவகைப்படுவார்கள். பௌத்தர்களுக்கு புத்தன் ஒருவனே தெய்வமாக இருந்த போதிலும் அவரவர் கொள்கையின் பேதத்தால் ஸௌந்ராந்திகர், வைபாஷிகர், மாத்யமிகர், யோகாசாரர் என்று அவர்கள் நான்கு வகைப்படுவார்கள். நாஸ்திகர்களில் மற்றும் அனேக பேதங்களிருந்தபோதிலும் முக்யமாயுள்ள முன்சொன்ன அறுவகையான பிரிவினர்களின் மதங்கள் மாத்திரம் இங்கு நிரூபிக்கப்படுகின்றன.

---

## சார்வாக மதம்.

சார்வாகர் லௌகாயதிகர் எனப்படுவார். லோகாயத (உலகத்தில் இந்திரியங்களால் அறியப்படும்) வஸ்துக்களை மாத்திரம் ஒப்புக்கொண்டவர்கள் என்பது அப்பதத்தின் பொருள். அவர் மதத்தில் "பிருதிவி, அப்பு, தேயு, வாயு என்ற நான்கு பூதங்களே உள; அவை தேகரூபமாய் மாறும்போது அதினின்றும் சைதன்யம் (அறிவு) தானே உண்டாகிறது; தேகம் நசிக்கும்போது சைதன்யமும் நாசமடைகிறது; ஆதலால் சைதன்யத்துடன் கூடின தேகமே ஆத்மா; அவ்விதமான தேகத்தைத்தவிர வேறு விதமான ஆத்மா ஒன்று தனியாக இருக்கவில்லை; பிரத்யக்ஷம் ஒன்று தவிர அநுமானம், சப்தம் என்ற மற்றப் பிரமாணங்கள் கிடையாதன; மனிதர்கள் ஸாமான்ய (பொதுவான) தர்மங்கள், விசேஷ (பிரிவுள்ள) தர்மங்கள் என்ற தர்மங்களை

அநுஷ்டிக்கவேண்டியதில்லை; ஸ்வயநயமான கார்யங்களே முக்யதர்மங்கள்; ஸ்திரீ புருஷர்களின் பரஸ்பர ஆலிங்கனம் முதலியவற்றால் உண்டாகும் சுகமே மோக்ஷம்; அதைத்தவிர பரலோக புருஷார்த்தமாகிய வேறுமோக்ஷம் என்பது கிடையாது; முன்சொன்ன ஸுகம் பலவித துன்பங்களுடன் கலந்திருந்தாலும் தள்ளமுடியாத அத்துன்பங்களைப் பரிகரித்து ஸுகத்தை மாத்திரம் அநுபவிக்க வேண்டும்; எது தனக்கு அநுகூலமென்று தோன்றுகிறதோ, அதுவே ஸுகம்; அதுதான் மோக்ஷம்; தான்யங்களை விரும்புகிறவன் வைக்கோல், கதிர், பதர், உமி, இவற்றுடன்கூடின தான்யங்களைக் கொணர்ந்து அவற்றில் எந்தமட்டில்உள்ள வஸ்துதான் அநுபவிக்கவேண்டியதாக இருக்குமோ, அதைமாத்திரம் எடுத்துக் கொண்டு மற்றதைக் களைந்துவிடுகிறான்; அதுபோன்று துன்பங்களைக் களைந்து ஸுகத்தைமாத்திரம் அநுபவிக்க எடுத்துக் கொள்ளவேண்டும்" என்பதான யுக்திவாதங்கள் கூறப்படுகின்றன.

மாதவாசார்யர் இயற்றிய "ஸர்வதர்சன ஸங்க்ரஹம்" என்ற கிரந்தத்தின் சார்வாக தர்சனத்தில் "விஷய ஸம்பந்தத்தா லுண்டாகும் இன்பம் துன்பங்கலந்திருந்த போதினும் அதை விட்டுவிட வேண்டுமென்று நினைக்கின்றவர்கள் மூடர்கள். தனக்கு ஹிதத்தை விரும்புகின்ற எவன்தான், உத்தமமான வெண்மை அரிசிகள் நிறைந்த நெல்லுகளில் உமிகள் மேலே மூடிக் கொண்டிருக்கின்றனவென்று அவற்றை விட்டுவிட விரும்புகிறான்? ஸ்வர்க்கம், மோக்ஷம், பரலோகத்திற்குச் செல்லும் ஆத்மா, பலனளிக்

கக்கூடிய அவரவர்க்குறிய கர்மங்கள் இவைஎல்லாம் ஒன்றுமே கிடையாது. ஜீவனுள்ளவரை ஸுகமாய்ப் பிழைத்திருக்கவேண்டும். கடன் வாங்கியாவது நெய் முதலிய புஷ்டியான ஆகாரங்களை உண்டு சரீரத்தை போஷிக்க வேண்டும். தேகம் பஸ்மமாய் விட்டால் திரும்ப வருவது ஏது?" என்று கூறப்படுகிறது. "தேகமே ஆத்மா, போகமே மோக்ஷம்" என்பது லோகாயதர்களின் முக்யமான கொள்கை. அவர்களுள் "இந்திரியம் ஆத்மா" என்றும் "பிராணன் ஆத்மா" என்றும், "மனம் ஆத்மா" என்றும் கூறுவாறுமுளர். "தேகமே ஆத்மா" என்பவர்களைவிட முற்கூறிய பிரிவினர் முறையே சிறந்தவராவர். சார்வாகர் என்பதற்கு மேலளாவிய வார்த்தையினர் என்று பொருள்.

---

## ஸௌத்ராந்திக மதம்.

பௌத்த மதத்தின் நான்கு உட்பிரிவுகளுள் முதன்மையான ஸௌத்ராந்திக மதத்தின் கொள்கை கீழ்வருமாறு கூறப்படுகிறது. பதார்த்தம், பாஹ்யம் (வெளியிலிருப்பது) ஆந்தரம் (உள்ளே யிருப்பது) என்று இரண்டு விதம். பாஹ்ய பதார்த்தங்களாவன:— பிருதிவி, அப்பு, தேயு, வாயு, என்ற பதார்த்தங்களின் பரமாணுக்கள் முறையே கடினமாயும், ஈரமாயும், கொடூரமாயும், சஞ்சலமாயுமிருக்கின்ற ஸ்பாவமுள்ளனவாக இருந்துகொண்டு ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் தாங்களே கூட்டமாகச் சேர்ந்து முற் கூறிய நான்கு மகா பூதங்களாகவும், சரீரங்களாகவும், ரூபம், சப்தம், கந்தம், ரஸம், ஸ்பர்சம் என்ற ஐந்து

ாகவும், முறையே அவற்றைக் காஹுககளை ற
, மூக்கு, நாக்கு, தோல் என்ற ஐந்து இந்திரி
ும் மாறுகின்றன. இவற்றைத்தவிர வேறு வஸ்
பளியில் இருப்பனவாக இல்லை.

ள யிருப்பனவாகிய ஆந்தர பதார்த்தங்களாவ
ஸ்கந்தம், விஞ்ஞானஸ்கந்தம், வேதனுஸ்கந்தம்,
கந்தம் ஸம்ஸ்காரஸ்கந்தம் என ஐந்து ஸ்கந்தங்
துள் இருக்கின்றன. விஷயங்களுடன் கூடின
களின் அறிவு ரூபஸ்கந்த மெனப்படும். விஞ்ஞா
மென்பது ஆலய விஞ்ஞானம், பிரவிர்த்திவிஞ்
ன்று இரண்டுவகைப்படும். “நான் ஸுகமுள்ள
துக்கமுள்ளவன், நான் செய்கிறவன், நான்
றவன்” என்று நான் என்பதை ஸம்பந்தித்து
அறிவு, ஆலய விஞ்ஞானம் எனப்படும். இது
து சிவப்பு, இது குடம், இது மடம் என்று
ள வஸ்துக்களைப்பற்றி உண்டாகிற அறிவு,
விஞ்ஞானம் எனப்படும். ஸுகதுக்கங்களை
கல் வேதனு (அநுபவ) ஸ்கந்தம் எனப்படும்
ர, மனிதன் என்பதாக அதனதன் பெயர்களு
்து உண்டாகும் அறிவு ஸம்ஜ்ஞா (பெயர்)
னப்படும். ஆசை, விரோதம் முதலிய சித்த
ஸம்ஸ்கார (நினைப்பூட்டுகிற) ஸ்கந்தம் எனப்
தம் என்பதற்கு அறிவு என்று பொருள்.

றில் ஆலய விஞ்ஞானமே சித்தம் என்றும்
ஆத்மா என்றும் கூறப்படும். மற்ற நான்கு

ஸ்கந்தங்கள் சித்தத்தால் அறியப்படுவன. பிரவிர்த்தி விஞ்ஞானம் வெளியிலுள்ள வஸ்துக்களை எல்லாம் அறியச் செய்கின்றது. அந்த ஐந்து ஸ்கந்தங்களுக்கும் பரிபக்வ நிலைமை கிழத்தனம். ஸ்கந்த நாசம் மரணமாகும்.

முற்கூறிய நான்குபூதங்களின் பரமாணுக்களும் ஸ்கந்தங்களும் சேர்ந்து உலகமாக மாறி அது ஸகலமான பிராணிகளும் பிழைத்திருக்கக் காரணமாகிறது- ஸ்ருஷ்டியின் முடிவில் பிருதிவி முதலிய எல்லாவஸ்துக்களும் பரமாணுக்களாக ஆய்விடுகின்றன. அவை எப்போதும் இருக்கக்கூடியன. ஆதலால் உலகத்திலுள்ள பாஹ்யங்கள் ஆந்தரங்கள் என்ற எல்லாபதார்த்தங்களும் பிரத்யக்ஷமாய் பொறிகளால் அறியக்கூடியனவல்ல. அனுமானத்தினலேயே அறியவேண்டுவன. ஸ்ருஷ்டியின் ஆரம்பமும் முடிவும் இயற்கையாக உண்டாகின்றன. "உலகத்திலுண்டாகும் பதார்த்தங்கள் யாவும் க்ஷணிகங்கள் (கொஞ்சகாலமிருப்பன) ஏன்? உண்டாகும் தன்மையினுல்; எது உண்டாகிறதோ, அது க்ஷணிகம்; எப்படி? மின்னலும் மேகக்கூட்டமும் போன்று" என்ற அனுமான ப்ரமாணத்தினுல் ஸகல பதார்த்தங்களுக்கும் க்ஷணிகத்வம் ஒப்புக்கொள்ளப்படுகிறது. மற்ற கொள்கைகள் சார்வாக மதத்திற்குள்ளன போன்று இவர்களுக்குமுள. சார்வாகர் ப்ரத்யக்ஷத்தை மாத்திரமும் இவர்கள் ப்ரத்யக்ஷம், அனுமானம் இவ்விரண்டையும் ஒப்புக் கொள்ளுகிறுர்கள். இதுவே ஸௌத்ராந்திகர் மதமாகும். ஸௌத்ராந்திகர் முதலிய நான்குபெயர்களும் கடைசியில் விளக்கப்படுவன'

---

## வைபாஷிக மதம்.

பௌத்தமதத்தின் இரண்டாவது பிரிவாகிய வைபாஷிக மதத்தில் "பாஹ்ய பதார்த்தங்கள் மாத்திரம் ப்ரத்யக்ஷமாய் அறியக்கூடியன" எனப்படுகிறது. மற்றசௌத்ராந்திகர்களின் கொள்கைகள் இவர்களுக்குமுள.

---

## மாத்யமிக மதம்.

பௌத்த மதத்தின் மூன்ருவது பிரிவாகிய மாத்யமிக மதத்தில் "பாஹ்யம், ஆந்தரம் என்ற இரண்டுவிதமான வஸ்துக்களும் சூன்யங்களே யல்லாது வாஸ்தவத்தில் இருக்கக்கூடியனவல்ல. எப்படியெனில்? ஒரே ஸ்திரீயைப் பார்த்து காமுகன் அழகுள்ள பெண் என்றும், நாய் தனக்கு பக்ஷிக்கக்கூடிய ஆகாரமென்றும், ஸந்யாஸி இது ஒரு பிணம் என்றும் நினைத்துக் கொள்ளுகிருர்கள். உண்மையில் அந்தந்த வஸ்துக்கள் அங்கே இல்லாவிடினும் ஒரே வஸ்துவினிடம் மூன்றுவிதமான எண்ணங்கள் தான் மூன்று வஸ்துக்களாக மாறி யிருக்கின்றன. அந்த உருவம் மறைந்தவுடன் முற்கூறிய எண்ணங்களும் அவ்வஸ்துக்களும் நாசமடைகின்றன. ஆதலால் அந்தந்த சூன்யவஸ்துக்களைப் பற்றிக்கொண்டு உண்டாகிற மனத்தின் எண்ணங்களே உலகமாகவும் அதிலுள்ள வஸ்துக்களாகவும் மாறித் தோன்றிக் கொண்டிருக்கின்றன. எண்ணங்கள் அற்றுவிடும்போது எல்லாம் சூன்யமாய்விடுகின்றன. அதுவே மோக்ஷமெனப்படும்" என்று கூறப்படுகிறது. மற்றவை வைபாஷிகர்களுக்குப் போன்றன.

---

## யோகாசார மதம்.

பௌத்தமதத்தின் நான்காவது பிரிவாகிய யோகாசார மதத்தில் பாஹ்யம், ஆந்தரம் என்ற ஸகல வஸ்துக்களும் க்ஷணிக விஞ்ஞான ஸ்வரூபமானவை (கொஞ்ச காலம் இருக்கக்கூடிய அறிவுவடிவமாயுள்ளன). ஸ்வப்னத்தில் காணப்படும் வஸ்துக்களின் அறிவும் கானலில் தோன்றும் ஜலப்ரவாகத்தின் அறிவும் உண்மையாக அவ்வஸ்துக்கள் அங்கு இல்லாமலே உண்டாவனபோன்று ஜாகராவஸ்தையில் காணப்படும் வீடு, தூண் முதலிய ஞானங்களும் மாயையின் கார்யங்களாக இருக்கின்றனவேயன்றி வாஸ்தவமல்ல. அறிவு க்ஷணிகமாக இருந்தபோதிலும் முந்திய அறிவின் வாஸனை, பின் உண்டாகும் அறிவிற் சேருவதால் அவ்விதம் ஒவ்வொரு அறிவும் ஒன்றன் பின் ஒன்றாய்த் தொடர்ந்துகொண்டு நமக்கு ஒரு வஸ்துவைப்பற்றி அனேக க்ஷணங்கள்வரை இடையறாத ஒரு அறிவை உண்டு பண்ணுகிறது. விதையின் வாஸனையினால் பருத்தியிலும் சிவப்பு, வெளுப்பு முதலிய குணங்கள் உண்டாவன போன்று, முந்திய அறிவின் வாஸனைக்கிணங்கவே பிந்திய அறிவுகளும் உண்டாகின்றன.

ஒரு விளக்கு தானும் பிரகாசித்துக்கொண்டு தன்னைச் சுற்றியுள்ள வஸ்துக்களையும் பிரகாசிக்கச் செய்வது போன்று, ஒரே புத்தியானது அநாதியான வாஸனாவசத்தால் தானும் பிரகாசித்துக்கொண்டு மற்ற வஸ்துக்களையும் பிரகாசிக்கச் செய்கிறது. புத்தியில் தோன்றும் எண்ணங்களே உலகத்திலுள்ள வஸ்துக்களாக மாறியிருக்கின்

றன. அவற்றைப்பார்த்து "இது க்ஷணிகம்" என்று எப்போதும் இடைவிடாது தியானிப்பதால் எண்ணங்கள் யாவும் நசித்துவிடுகின்றன. அதன்பிறகு உலகத்திலுள்ள விஷயங்கள் மனத்தைவிட்டு விலகி அந்த க்ஷணிக விஞ்ஞானமே சுத்த விஞ்ஞான (நல்ல அறிவு) மாக ஆய்விடுகிறது. அதுவே மகோதயம் என்றும் மோக்ஷம் என்றும் சொல்லப்படுகிறது. மற்றவை எல்லாம் முந்திய மதத்திற்குப் போன்றன.

---

## பௌத்தரது நால்வகைப் பெயர்கள்.

முற்கூறிய நான்கு பௌத்த மதத்தினருள் முதல்வர்களான ஸௌத்ராந்திகர்கள் அவரது ஸ்வாமியாகிய புத்ததேவனைப்பார்த்து தமது ஸூத்ரத்தின் முடிவைச்சொல்ல வேண்டுமென்று கேட்க, அவர் அவர்களுக்கு அடியில் வருமாறு உபதேசித்தார். "மனத்திலுள்ள துக்கங்களெல்லாம் நாசமடைந்திருக்கும்போது நிர்மலவிஞ்ஞானம் உதயமாகிறது; அதுவே மோக்ஷமெனப்படும்; அவ்வித துக்கங்களின் நிவிர்த்தியானது தத்வஞ்ஞானத்தினால் உண்டாகிறது; உலகத்தில் தோன்றுவனவெல்லாம் துக்கங்களாகவும் துக்கத்திற்கு ஆஸ்பதங்களாகவுமிருக்கின்றனவென்று புராதனமான வாஸனையினால் அடிக்கடி நினைத்தலால் தத்வஞ்ஞானம் உண்டாகிறது; இதுதான் ஸூத்ரத்தின் முடிவு" என்றார். ஸூத்திரத்தின் அந்தத்தை (முடிவை) கேட்டபடியால் ஸௌத்ராந்திகர்கள் எனப்படுகிறார்கள்.

ஒரே புத்ததேவர் முதல்வர்களைப்பார்த்து "பாஹ்ய ஆந்தரமான பதார்த்தங்கள் யாவும் அநுமானித்து அறி

யத் தக்கன" என்றும் இரண்டாவதவர்களைப் பார்த்து "பாஹ்ய பதார்த்தங்கள் பிரத்யக்ஷமாய் அறியத்தக்கன, ஆந்தரங்கங்கள்மாத்திரம் அநுமானத்தால் அறியவேண்டுவன" என்றும் மூன்ருவதவர்களைப் பார்த்து "எல்லா பதார்த்தங்களும் சூன்யம்" என்றும் நான்காவதவர்களைப் பார்த்து "க்ஷணிகவிஞ்ஞானம் ஒன்றுதான்நித்யமானது" என்றும் இவ்விதம் பரஸ்பரம் விரோதமான கொள்கைகளை எப்படிச்சொன்ஞர்? என்று கூறியவர்கள் வைபாஷிகர்கள் எனப்படுவார்கள். பரஸ்பரம் இணக்கமில்லாத வார்த்தையைச் சொன்னதாகக் கூறுகிறவர்கள் என்பது அதன்பொருள். அந்தந்த அதிகாரிகளின் புத்திநுட்பத்திற்குத் தக்கதான உபதேசங்களைச் செய்திருக்கும் புத்ததேவர் கருத்தறியாது சொன்னவர் இரண்டாம்பிரிவினர்.

பௌத்தமதத்தின் மூன்ரும் பிரிவினர்கட்கு புத்ததேவன் "எல்லா பதார்த்தங்களையும் சூன்யமாகவே நினைக்கவேண்டும்; அதனுல் மோக்ஷம் ஸித்திக்கிறது; அதுவும் சூன்யரூபமாக இருக்கிறது" என்று உபதேசிக்க அதை ஒப்பி "ஏன் எல்லாம் சூன்யமாயின?" என்று அதன்காரணத்தை அவர்கள் குருவாகிய புத்ததேவரிடம் கேளாமலிருந்துவிட்டார்கள். குரு உபதேசித்தபடி ஒப்புக்கொண்டு ஒழுகுவதால் அவர்கள் உத்தமர். காரணம் தெரிந்துகொள்ள வேண்டுமென்றதை அறியாமையால் அவர் அதமர். இவ்விதம் உத்தமருடையவும் அதமருடையவும் தன்மையைப்பெற்று நடுவிலிருப்பதால் மாத்யமிகர் (மத்தியிலுள்ளவர்கள்) எனப்படுகிருர்கள். நடுவிலுள்ளவர்கள் என்பது அதன்பொருள்.

பௌத்தமதத்தின் நான்காம் பிரிவினர் குருவினிடம் கேள்விகேட்டுக் காரணம்தெரிந்து நடக்கிறவர்களாகையால் யோகாசாரர் (யோக—ஆசாரர்—கேள்வி கேட்டுச் செய்கிறவர்) எனப்படுவார். முற்கூறிய நான்கு பெயர்களும் அந்தந்த வகுப்பினரின் காரணப் பெயர்கள்.

பௌத்தத்தின் நான்குபிரிவுகளுக்கும் பொதுவான கொள்கைகள் ஸர்வதர்சன ஸங்க்ரஹத்தில் பின்வருமாறு கூறப்படுவன. "பௌத்தர்களுக்கு தேவன் புத்தன்; உலகம் க்ஷணத்தில் நாசமடையக்கூடியது; எல்லாம் க்ஷணிகம் என்ற எண்ணமே மோக்ஷம்; திரவியத்தை ஏராளமாய் ஸம்பாதித்து பன்னிரண்டு வீடுகளை பூஜிக்கவேண்டும்; மற்றபூஜைகளாற் பிரயோஜனமில்லை; ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்த்ரியங்கள், மனம், புத்தி இவை பன்னிரண்டு வீடுகள்; பிரத்யக்ஷம், அனுமானம் என்ற இரண்டு பிரமாணங்கள்தான் உள" என்பன.

பௌத்த ஸந்யாஸிகளின் கொள்கையாவது:—"மொட்டை யடித்துக்கொண்டு கையில் கமண்டலமும் இடுப்பில் மாவுரி அல்லது காஷாயமும் தரித்து பகலில் மாத்திரம் புஜித்து இரவிலுண்ணுமல் கூட்டமாகச்சேர்ந்து கொண்டு எல்லாத் தேசங்களிலும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கவேண்டும்" என்பது. பௌத்தர்கள் ஸௌகதர், புத்தர் முதலிய பெயர்களால் வழங்கப்படுவார்கள்.

---

## ஆர்ஹத மதம்.

ஆர்ஹத மதத்திற்கு அர்ஹன் என்பவர் தேவராகவும் குருவாகவும் விளங்குகிருர். அவரால் தோன்றின மதம்

ஆர்ஹத மெனப்படும். அம்மதத்தில் ஜீவன், அஜீவன் என்று இரண்டுவஸ்துக்கள் உள. ஜீவன் என்பவன் யானை, குதிரை, மனிதன், கொசு, பேன் முதலிய சரீரங்களில் அந்தந்த சரீரத்தின் அளவுள்ளவனாக இருக்கிறான். அவன் நித்யஸித்தன், தற்கால முக்தன், பத்தன் என மூப்பான் மையானவன். புத்தன், ஜினன் முதலிய வேறு பெயர் களையுடைய ஆர்ஹதேவன் நித்யஸித்தன் ஆவான். அவன் எப்போதும் முக்தியடைந்தவன். கர்மபாசங்களை விலக் கின பிறகு முக்திபெற்றவன் தற்காலமுக்தன் ஆவான். கர்மபாசங்களில் கட்டுண்டு ஸம்ஸாரத்தில் உழலுகிறவன் பத்தன் (கட்டுப்பட்டவன்) ஆவான்.

அஜீவன் என்பது புத்கலம், தர்மம், அதர்மம், ஆகா சம், கர்மம், மோக்ஷம் என்று ஆறுவிதம். அவற்றுள் பிரு திவி, அப்பு, தேயு, வாயுவென்ற நான்குபூதங்கள், ஸ்தாவர ஜங்கம ஸ்தூலசரீரங்கள் புத்கலம் (உடல்) எனப்படும். ஜீவ காருண்யம், அஹிம்ஸை முதலிய நற்கார்யங்களால் உண் டாகும் புண்யம் தர்மம் எனப்படும். ஜீவனை மேலுலகத் திற்குச் செல்லவொட்டாமல் தடுப்பதற்குக் காரணமா யிருப்பது அதர்மமெனப்படும். அது ஜீவஹிம்ஸை, ராத் திரியுண்ணல் முதலிய கெட்டகார்யங்களால் உண்டாகும் பாபம். சுரைக்காய் இயற்கையாக ஜலத்தில் மிதப்பதும், அதுவே ஒரு கனமான வஸ்துவுடன் சேர்க்கப்பட்டால் ஜலத்தில் மூழ்கிவிடுவதுமாக இருப்பதுபோன்று, ஆத்மா இயற்கையாக மேல்நோக்கிச்செல்லும் தன்மையுடையவ னாகவும் அவனே முற்கூறிய பாபகர்மங்களுடன் சேரும் போது இவ்வுலகத்திலேயே ஆழ்ந்துகிடக்கும் தன்மை

யுள்ளவனுகவுமிருக்கிறுன். ஆவரணம் (மறைவு) இல்லாமை ஆகாசமெனப்படும். அது லோகாகாசம், அலோகாகாசம் என இருவகைப்படும். ஸம்ஸாரிகளான பத்தர்கள்வஸிக்குமிடம் லோகாகாசம். மோக்ஷமடைந்த முக்தர்கள்வஸிக்குமிடம் அலோகாகாசம். ஞானம், அல்லது கிரியை கர்மம் எனப்படும். அது பந்தகம் அபந்தகம்என்று இரண்டுவிதம்.

பந்தகம் (கட்டுப்படுத்துகிறது) என்ற கர்மம் ஜன்மத்தை யுண்டுபண்ணுவது. அது நல்லது, தீயது என்று இரண்டு விதம். அவற்றில் நல்லது தத்வத்தையுணர அனுகூலமாயிருக்கும் கர்மம். வேதனீயம், நாமிகம், கோத்ரிகம், ஆயுஷ்கம் என அது நான்கு விதம். நான் தத்வத்தை யுணர்ந்தவனுகவேண்டு மென்ற அபிமானம் வேதனீயம் (அறிவைப்பற்றினது). நான் இன்ன பெயருள்ளவனுக இருக்கிறேன் என்ற அபிமானம் நாமிகம் (பெயரைப்பற்றினது). பூஜிக்கத்தகுந்தவர் என்ற பொருளுள்ள அர்ஹன் என்ற திருநாமம்பூண்டபௌத்தகுருவின் சிஷ்ய வம்சபரம்பரையில் நான் ஜனித்தவன் என்ற அபிமானம் கோத்ரிகம் (வம்சம்பற்றினது). சரீர தாரணையின் பொருட்டுமாத்திரம் செய்யப்படும் ஸ்நாநம், போஜனம், கிருஷி, வியாபாரம் முதலியன ஆயுஷ்கம் (ஆயுளைப்பற்றினது). பந்தகத்தில் தீயகர்மம் தத்வத்தையுணரப் பிரதிகூலமாயிருக்கும். அது ஞானுவரணீயம், தர்சனுவரணீயம், மோகநீயம், ஆந்தராயிகம் என நான்கு வகைப்படும். அவற்றுள் தத்வஞ்ஞானத்தினுல் முக்தி கிடைக்கமாட்டாதென்ற எண்ணம் ஞானுவரணீயம் (ஞானத்தை மறைப்பது). பௌத்தர்களின் சாஸ்திரங்களைத் தெரிந்துகொள்

ளுவதால் முக்தி கிடையாதென்ற எண்ணம் தர்சனுவரணீயம் (சாஸ்திரத்தை மறைப்பது). மனிதர்களுள் அவரவர் அறிவிற்குத் தக்கதான மோக்ஷ மார்க்கத்தைப் பற்றின புத்த தேவராது பலவிதமான பௌத்த மதங்களின் தாரதம்யத்தைத் தெரிந்துகொள்ளாமலிருப்பது மோகனீயம் (நிச்சயமில்லாத அறிவாகிய மோகத்தையுண்டுபண்ணுவது). மோக்ஷமார்க்கத்திற் பிரவேசிப்பதற்குத் தடையாகவுள்ளது ஆந்தராயிகம் (விக்கினத்தையுண்டுபண்ணுவது). அது பதினெட்டுவிதம். அவை கொழுப்பு, போகம், உபபோகம், தீயோருக்கு ஈதல், அதிகலாபம், விக்கினம், நித்திரை, பயம், அஞ்ஞானம், அருவருப்பு, ஹிம்ஸை, பிரியம், அப்பிரியம், ராகம், துவேஷம், அதிகமான மன்மதவிகாரம், சோகம், பொய் என்பன.

மோக்ஷஸாதகமாக இருக்கும் கர்மம் அபந்தகமெனப்படும். அது ஸம்வரம், நிர்ஜரம் என்று இரண்டுவிதம். விஷயானுபவத்தில் இச்சையுள்ள இந்திரியங்களின் பிரவிர்த்தியைத் தடுக்கும் யமம், நியமம் முதலிய கர்மம் ஸம்வரம் (அடக்குகிறது) எனப்படும். ஸம்ஸார பீஜமாகிய கல்மஷத்தை நாசம் செய்வதற்காக மொட்டையடித்துக் கொண்டு வெயிலினுல் கொதிக்கும் சிலையிலிருந்து தவஞ் செய்தல் முதலியது நிர்ஜரம் (பிறப்பறுப்பது) எனப்படும்.

ஆர்ஹதர், ஜைனர் திகம்பரர் முதலிய பெயர்களால் வழங்கப்படுவார்கள். ஜைநஸாதுக்களின் கொள்கைகள் ஸர்வதர்சன ஸங்க்ரஹத்தில் கூறப்படுவன :—ஸர்வஜனங்களிடமும் ஹிதமாயும் மிதமாயும் பேசுதல், ஞானசாஸ்

திரத்திற் கூறியபடி நன்னடத்தையுறல், ஸம்ஸாரத்திற் பற்றற்றிருத்தல், சிரஸில் முண்டனம் செய்துகொள்ளல், வெண்மை அல்லது காஷாய வஸ்திரம் தரித்தல், பாபத்தைப் போக்குகிற பிக்ஷான்னம் புஜித்தல், இரவில் உண்ணாமலிருத்தல், பொறுமையுடனிருத்தல், ஸூர்யப் பிரகாசத்தால் வெளிச்சமாயிருக்கிற இடத்தில் நடந்துபோதல், நடக்கும்போது தரையில் ஊருகின்ற புழு, பூச்சிமுதலிய அற்பப் பிராணிகளின்பேரில் காலடிபட்டு அவை மாண்டுவிடாமல் கீழே ஜாக்ரதையாய்ப் பார்த்துக்கொண்டு செல்லுதல் இவை மோக்ஷதர்மங்களாம்.

ஜைன ஸாதுக்களில் மிகுந்த பக்வமுடையவர்கள் திகம்பரர் (வஸ்திரமில்லாதவர்) களாய் நடக்கும்போது மயில் தோகையை கையில் வைத்துக்கொண்டு அதனால் பூமியில் ஸஞ்சரிக்கும் அற்பஜந்துக்களை மெதுவாய் ஒதுக்கிவிட்டுக்கொண்டு ஒரு சிறு புழு, பூச்சிகளும் நசிக்காத வண்ணம் தெருவாசலிற் சென்று கைகளையேந்தி அதில் தாமாகவந்து பிக்ஷை போடுகிறவர்களின் அன்னகபளத்தை சரீரதாரணைக்கு வேண்டிய அளவு மிதமாகப் புஜித்துவிட்டு மோக்ஷமார்க்கத்தைப் பற்றினவர்களாக இருப்பார்கள். ஜீவன் பந்தககர்மத்தை நீக்கினபிறகு அபந்தகக்கர்மத்தின் உதவியால் அலோகாகாசமாகிய மேலுலகம் செல்லுதல் மோக்ஷமெனப்படும்.

மனிதன் முயற்சியினால் பந்தகத்தை விலக்கி மோக்ஷஸாதகமான அபந்தககர்மத்தை அனுஷ்டித்தால் முக்தி பெறுவான். இல்லாவிடில் பத்தனாகவே இருப்பான். அதுவு

யின்றி அதர்மத்தைச் செய்தால் திர்யக், ஸ்தாவரம் என்ற அதமஜன்மத்தை அடைவான். முன்சொன்ன வஸ்துக்கள் இருக்கின்றனவென்று நினைத்தால் இருக்கின்றன, இல்லை என்று நினைத்தால் இல்லை. வஸ்துக்களின் இருப்பும் இல்லாமையும் மனத்தின் தோற்றத்தைப் பொறுத்திருக்கின்றன என்ற நிச்சயத்தால் மோக்ஷம் ஸித்திக்கிறது'' என்பன. முற்கூறின ஆறு நாஸ்திகமதங்களுள் முறையே ஒவ்வொன்றும் முந்தியதைவிடப் பிந்தியது தத்வத்தைத் தீர்மானிக்கும் விஷயத்தில் சிறந்ததாகக் கூறப்படும்.

---

## நான்காம் அதிகாரம்.

---

## ஆஸ்திக மதம்.

வேதங்களும் அவற்றின் சார்பான சாஸ்திரங்களும் பிரமாணங்கள் என்றும், ஈசுவரன் ஒருவன் இருக்கிறான் என்றும் ஒப்புக்கொண்டவர்கள் ஆஸ்திகர் எனப்படுவார். அவர்களின் ஸமயாசாரக் கொள்கை ஆஸ்திகமதமெனப்படும். வைசேஷிகர், நையாயிகர், மீமாம்ஸகர், ஸாங்க்யர், யோகிகள், வேதாந்திகள் (ஞானிகள்) என ஆஸ்திகர் அறு வகுப்பினர். அவர்களின் சாஸ்திரங்கள் ஷட் (ஆறு) தர்சனங்கள் எனப்படும். அவற்றை வெளியிட்டவர்கள் முறையே கணாதர், கௌதமர், ஜைமினி, கபிலர், பதஞ்ஜலி, வ்யாஸர் என்ற மகர்ஷிகளாவர். அவர்களது மதங்கள் முறையே இதன்பின் கூறப்படுவன.

---

## வைசேஷிக மதம்.

உலகத்திலுள்ள வஸ்துக்களின் ஸ்வரூபத்தை விசேஷமாக நிரூபிப்பதற்கு ஏற்பட்ட சாஸ்த்ரம் வைசேஷிக தர்சனம் எனப்படும். அந்த மதத்தில் திரவ்யம், குணம், கர்மம், ஸாமான்யம், விசேஷம், ஸமவாயம், அபாவம், என்ற ஏழு பதார்த்தங்கள் உள. அவற்றில் திரவ்யம் என்பது பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம் என்று ஒன்பது விதமாம். குணம் என்பது ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம், ஸங்கியை, பரிமாணம், ப்ரதக்த்வம் (தனிமை), ஸம்யோகம் (சேர்க்கை), விபாகம் (பிரிதல்), பரத்வம் (மேன்மை), அபரத்வம் (தாழ்மை), குருத்வம் (கனம்), திரவத்வம் (ஓட்டம்), ஸ்நேகம், சப்தம், புத்தி, ஸுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்னம், தர்மம், அதர்மம், ஸம்ஸ்காரம் (மனத்திலுள்ள வாஸனை) என்று இருபத்துநான்கு விதமாம். கர்மம் என்பது உயரக்கிளம்புதல், கீழேவிழுதல், சுருங்கல், விரிதல், போகுதல் என்று ஐந்துவிதமாம்.

ஸமானமான வஸ்துக்களில் இருக்கும் ஜாதிதர்மம் ஸாமான்யமெனப்படும். அது மனுஷ்யத்வம் விருக்ஷத்வம் என்பன போன்றது. அது பரம், அபரம் என்று இரண்டுவிதம். பரமென்பது ஸத்தை. அது திரவ்யம், குணம், கர்மம் இம்மூன்றிலும் இருக்கும் தன்மை; அபரமென்பது திரவ்யத்வம், குணத்வம், முதலியன. ஸாமான்யமென்பது திரவ்ய குண கர்மங்களில் மாத்திரம் இருக்கக்கூடியது. நித்யமான திரவ்யங்களிலிருக்கும் விசேஷங்கள்

அனந்தமானவை. பிருதிவி, அப்பு, தேயு, வாயு இவற்றின் பரமாணுக்களும், ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா, மனம் ஆகிய ஐந்து திரவ்யங்களும் நித்யவஸ்துக்கள் எனப்படும். ஸமவாயமென்பது ஒன்றுதான். பருத்தியினிடம் வெண்மை என்ற குணம் இருக்கிறது. அது பருத்தியைவிட்டுத் தனியாய்ப் பிரிக்கமுடியாத ஸம்பந்தமுள்ளது. அந்த ஸம்பந்தமே ஸமவாய ஸம்பந்தமெனப்படும். இரண்டு கைகளையும் ஒருஸமயம் சேர்க்கலாம். ஒருஸமயம் பிரிக்கலாம். அந்தக்கைகளுக்குள்ள ஸம்பந்தம் விட்டுப் பிரியக் கூடியதான ஸம்யோக ஸம்பந்தம். சேர்ந்திருக்கும் இரண்டு வஸ்துக்களில் ஒன்றைவிட்டு மற்றொன்று தனியாய்ப்பிரிக்க முடியாமலிருக்கும்போது அவ்விரண்டு வஸ்துக்களுக்குமுள்ள ஸம்பந்தம் ஸமவாய ஸம்பந்தமாகும். பருத்தி நாசமானாலொழிய வெண்மை அதைவிட்டகலாது.

அபாவம் என்பது இன்மை. அது முன் இன்மை, பின் இன்மை, என்றும் இன்மை, பரஸ்பரமின்மை என நான்குவிதம். ஒரு குடம் உண்டாவதற்குமுன் அதன் இன்மை (இல்லாமை) இருந்தது. அந்தக்குடம் உண்டானவுடன் அதன் இன்மை போய்விட்டது. அந்த இன்மை அக்குடத்திற்கு முன்இன்மை எனப்படும். ஒரு குடம் உடைந்தபிறகு உடைந்துபோன அக்குடம் திரும்ப வரப்போகிறதில்லை. அந்த இன்மை அக்குடத்திற்குப் பின் இன்மை எனப்படும். முயற்கொம்பு, மலடிமகன் போன்ற வஸ்துக்களின் இன்மை, என்றும் இன்மை எனப்படும். குடம் மடமாகாது. மடம் குடமாகாது. ஆதலால் குடத்தின் இன்மை மடத்திலும் மடத்தின் இன்மை குடத்திலு

யிருப்பதால் அது பரஸ்பர (ஒன்றுக்கொன்று) இன்மை எனப்படும். இம்மாதிரியாக உலகத்திலுள்ள ஒவ்வொரு வஸ்துக்களின் இலக்ஷணங்களும் தன்மைகளும் உட்பிரிவு களும் அவற்றைப்பற்றின ஸகல விஷயங்களும் தெளிவாக வும் வெகு விரிவாகவும் இந்த தர்சனத்தில் கூறப்படுகின் றன. இவர்கள் எதை மோக்ஷமாக ஒப்புக்கொள்ளுகிறார் கள் என்பதை ஆராயவேண்டும்.

ஜன்னலின் துவாரத்தில் ஸூர்யகிரணத்தால் காணப் படும் மிகவும் ஸூக்ஷ்மமான த்ரவ்யத்திற்கு த்ருடி என் றும் த்ரியணுகம் என்றும் பெயர். அதன் ஆறில் ஒரு பங்கு பரமாணு எனப்படும். அப்பரமாணுக்கள் பிரளய காலத்திலும் நாசமடையாமல் நித்யமாகஇருப்பன. அவற் றாலேயே உலகம் உண்டாகிறது. எவ்விதமெனில்?

ஈசுவரன் உலகங்களை ஸ்ருஷ்டிக்க வேண்டுமென்று முதலில் ஸங்கல்பிக்கிறான். அதனால் ஐந்து பூதங்களின் பரமாணுக்களில் ஒருவித கிரியை உண்டாகிறது. அதன் பிறகு இரண்டு பரமாணுக்கள் சேர்ந்து ஒரு த்வியணுக மும் மூன்று த்வியணுகம்சேர்ந்து ஒரு த்ரியணுகமும் நான்கு த்ரியணுகம்சேர்ந்து ஒரு சதுரணுகமும் இம்மாதிரி பஞ்சாணுகம் தசாணுகம் சதாணுகம் ஸஹஸ்ராணுகம் முதலியன உண்டாகி இந்தக் கிரமமாகவே பிருதிவி முத லிய பஞ்சமகாபூதங்களும் அந்தந்த சரீரங்களும் அவற் றின் அவயவங்களும் உண்டாகி பெரிய பிரம்மாண்டம் உண்டாகிறது. அவ்விதமே ஈசுவரனுக்கு உலகங்களை ஒடுக்கவேண்டுமென்ற இச்சை உண்டாகும்போது அந்

தந்த வஸ்துக்களுக்கு ஸ்ருஷ்டிக்கிரமமாகவே நாசமுண்டாகும்போது எல்லாம் ஒவ்வொன்ருய்ப் பிரிந்து அந்தந்த பரமாணுக்களாக ஆய்விடுகின்றன. ஆகையால் பரமாணுக்களின் பரஸ்பரசேர்க்கையால் ஸ்ருஷ்டியும் பிரிவினல் ப்ரளயமும் பகவானின் இச்சைப்படி உண்டாகின்றன.

பகவான் நித்யஜ்ஞானமுள்ளவர்; ஜீவன் அநித்யஜ்ஞானமுள்ளவன்; அதனுல் பகவான் ஜீவனிடம் கிருபையுற்று அவனுக்கு அனுக்ரஹம் செய்கிருர். ஜீவன் இவ்விதமாக உலகத்திலுள்ள ஸகல வஸ்துக்களின் தத்வத்தைப் பிரித்து அறிவதனுல் பதார்த்த தத்வஞ்ஞானம் உண்டாகிறது. அதனுல் துன்பத்திற்குக் காரணமான சரீரங்கள், இந்த்ரியங்கள், விஷயங்கள், மனம், புத்தி முதலிய துக்கங்கள் நாசமடையும்போது மோக்ஷம் ஸித்திக்கிறது. ஆதலால் இம்மதத்தில் பதார்த்த தத்வஞ்ஞானத்திலுல் உண்டாகும் துக்கநிவிர்த்தியே மோக்ஷமெனப்படும். புண்யத்தால் உண்டாகும் ஸ்வர்க்கமும் பாபத்திலுல் உண்டாகும் நரகம்முதலிய விஷயங்களும் இம்மதத்தில் வேதாந்திகளின் மதத்திற்கொப்பானதாகவே இருக்கின்றன. இதன்பின் நையாயிகர் மதம் கூறப்படும்.

---

## நையாயிக மதம்.

பர்வதத்தில் புகையிருப்பதனுல் நெருப்பு இருக்கிறதென்றும், தர்மத்திலுல் புண்யமும் அதனுல் இன்பமும் அதர்மத்திலுல் பாபமும் அதனுல் துன்பமும் உண்டாகிறதென்றும் இம்மாதிரி ஒரு பதார்த்தத்தைக்கொண்டு மற்

ஒரு பதார்த்தத்தை அனுமானித்து அறிவதற்கு அனு கூலமாயிருப்பது நியாயதர்சனம். அதைப் பிரமாணமாகக் கொண்டவர்கள் நையாயிகர் எனப்படுவார். இந்த மதத்தில் உலகிலுள்ள பதார்த்தங்கள் பதினறு என்றும் அவற்றினது தத்வஞ்ஞானத்தினுலுண்டாகும் துக்கநிவிர்த்தி மோக்ஷமென்றும் கூறப்படுகிறது. நியாயஸுத்திரத்தில் " துக்கத்தினுல் ஜன்மமும், ஜன்மத்தினுல் உலகப்பிரவிர்த்தியும், அதனுல் தோஷங்களும் அவற்ருல் பொய்யறிவும் உண்டாகின்றன. தத்வஞ்ஞானமென்ற மெய்யறிவினுல் பொய்யறிவு நாசமாகிறது. அதனுல் தோஷங்கள் நசிக்கின்றன. அதனுல் பிரவிர்த்தி ஒடுங்குகிறது. அதனுல் ஜன்மம் தொலேகிறது. அதனுல் துக்கம் நிவிர்த்தியாகிறது. ஆறு இந்திரியங்கள், ஆறு விஷயங்கள், ஆறு புத்திகள், சரீரம், ஸம்ஸாரத்திலுள்ள ஸுகம், துக்கம் ஆகிய இருபத்தொரு துக்கங்களினின்றும் ஆத்மா விடுபடுதல் மோக்ஷமெனப்படும்" என்று கூறப்படுகிறது.

நியாயதர்சனப் பிரவர்த்தகரான கௌதமர் உலகத்திலுள்ள வஸ்துக்களேப் பதினுருகப்பிரித்துக் கூறியிருப்பதை வைசேஷிக தர்சனப் பிரவர்த்தகரான கணுதர் ஏழு பதார்த்தங்களாகப் பிரித்து அவற்றிலேயே பதினறு பதார்த்தங்களும் அடங்கும்படியாக நிரூபணம் செய்திருக்கிருர். அவ்விருவர்கள்செய்த சாஸ்திரங்கள் இரண்டுமாகச் சேர்ந்து தர்க்கசாஸ்திரமெனப்படும். கௌதமரும் கணுதரும் எந்தவிஷயத்தில் பிரிவுபடுகிருர்கள் என்ருல்?

சூளையில்வைத்து சுடாத ஒரு பச்சைமண்குடத்தில் இருக்கும் ரூபம், ரஸம், கந்தம், ஸ்பர்சம் ஆகிய இவை அதைச்சுட்டபிறகு அதில் வேறுவிதமாய் மாறுகின்றன. ஒரு காயினிடம் இருக்கும் ரூபரஸகந்த ஸ்பர்சங்கள், அது பக்வமானபிறகு அப்பழத்தினிடம் மாறிவிடுகின்றன. இவ்விதம் ஒவ்வொரு வஸ்துவிற்கும் பாகம் (பக்வம்) ஏற்படும்போது அதன் குணங்களும் மாறுகின்றன. அதில் கௌதமர், பச்சைக்குடத்திலுள்ள குணங்களை சுட்டகுடத்தில் மாறுகின்றன என்று கூறுகிறார். கணாதர், பரமாணுக்களை ஒவ்வொரு வஸ்துவாகவும் பரிணமிப்பதால் சூளையில்வைத்த பச்சைக்குடமே அதன் பரமாணுக்கள்வரை நசித்து அவற்றின் குணங்கள் மாறி வேறுகுணங்களுடன் கூடிய அப்பரமாணுக்களால் சுட்டகுடம் உண்டாகிறது என்கிறார். இதனால் கௌதம மதத்தினர் பிடர (குடம்) பாகவாதிகள் என்றும் கணாத மதத்தினர் பீலு (பரமாணு) பாகவாதிகள் என்றும் சொல்லப்படுவார்கள். பாகத்தினால் வஸ்துக்களின் குணங்கள் மாறும்போது ஸ்தூலவஸ்துவிலேயே அந்தமாற்றம் உண்டாகிறதென்று கௌதமரும், ஸ்தூலவஸ்துவை உண்டுபண்ணுகிற பரமாணுக்களிடம் அம்மாற்றம் உண்டாகிறதென்று கணாதரும் கூறுவதால் இம்மாதிரியான சிறிது பேதந்தான் இரண்டு மதத்தினர்களுள்ளும் ஏற்பட்டிருக்கிறது. இதன்பின் மீமாம்ஸகர் மதம் கூறப்படும்.

---

## மீமாம்ஸக மதம்.

வேதத்தின் பூர்வ பாகமாகிய கர்மகாண்டத்தின் பொருளை உள்ளபடி யுணருவதற்கு அனுகூலமாயிருப்பது மீமாம்ஸா தர்சனம். மீமாம்ஸா என்பதற்கு ஆலோசித்து அறிதல் என்று பொருள். இதற்குப் பூர்வமீமாம்ஸா என்று பெயர். இதில் அனேகவிதமான நியாயங்கள் கூறப் படுகின்றன. அவற்றின் மூலமாகத்தான் வேதசாஸ்திரங் களின் ஸந்தேகமாயுள்ள பொருளைத் தீர்மானிக்கவேண் டும். வேதத்தின் உத்தரபாகமாகிய ஞானகாண்டத்தின் பொருளையுணர ஸாதனமாயிருக்கின்ற வ்யாஸ பகவா னியற்றிய பிரம்ம ஸூத்திரம் உத்தரமீமாம்ஸா எனப்படு கிறது. அதிலும் ஸந்தேகமான இடங்களில் பொருளைத் தீர்மானிக்க பூர்வமீமாம்ஸையிலுள்ள நியாயங்களே ஸகாய மாயிருந்து பாஷ்யகர்த்தர்களுக்கு உதவி செய்கின்றன. பூர்வ மீமாம்ஸாதர்சனத்தை முக்யமாய்க் கொண்டவர் மீமாம்ஸகராவர்.

அவர் மதத்தில் "வேதத்தில் சொன்னபடி அதையனு ஸரித்துச் செய்யப்படும் கர்மமே இஷ்டமான பலத்தைக் கொடுப்பதாகும். ஜீவனுக்கு அந்தந்த கர்மவசத்தினு லேயே ஸ்வர்க்கம், நரகம் முதலியன ஸம்பவிப்பதால் புண்ய பாபங்களின் பலனைக்கொடுப்பது கர்மமே தவிர ஈசுவரன் பலனைக் கொடுக்கிறவனுகமாட்டான். ஸம்ஸா ரத்தின் இன்ப துன்பங்களை அனுபவிக்கிறவன் ஜீவன் எனப்படுவான். அவனுக்கு நன்மை தீமைகளையறிய வேண்டியதன் பொருட்டு அநாதியான வேதம் பிரமாண

மாக இருக்கிறது. அதிற்கூறிய கெட்ட கர்மங்களை விலக்கி நல்ல கர்மங்களை அனுஷ்டித்து வருகிறவனுக்கு துன்பம் கலவாத இன்பமாகிய நித்யஸுகம் ஸ்வர்க்க லோகத்தில் உண்டாகிறது. அதுவே "மோக்ஷம்" எனப் படுகிறது. மற்றவை வேதாந்திகளுக்கொப்ப மீமாம்ஸகர் களுக்கும் உள. இதன்பின் ஸாங்க்ய மதம் கூறலாகும்.

---

## ஸாங்க்ய மதம்.

உலகத்திலுள்ள பதார்த்தங்கள் இருபத்தைந்து தத்வங் களாக எண்ணிக்கை செய்யப்பட்டு அவற்றின் ஸ்வரூபத் தை விளக்குகிற சாஸ்திரம் ஸாங்க்ய தர்சனம் எனப்படும். ஸங்க்யை என்பது எண்ணிக்கை; அதனுடன் கூடியது ஸாங்க்யம். ஸாங்க்யமதத்தில் ஜடம் (அறிவில்லாதது) அஜ டம் (அறிவுள்ளது) என்று முதலில் இரண்டே பதார்த்தங் கள் உள. பிறகு ஜடமென்பது ப்ரகிருதி, மகத்தத்வம், அகங்காரம், மனம், ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர் மேந்திரியங்கள், ஐந்து விஷயங்கள், ஐந்து மகா பூதங்கள் என இருபத்திநான்கு தத்வங்களாகமாறி இருக்கின்றது. அஜடமென்பது ஜீவன் எனப்படுகிறது. அது இருபத் தைந்தாம் தத்வம். உலகிலுள்ள வஸ்துக்கள் இவ்வளவே.

அவற்றுள் ப்ரகிருதி என்பது ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற மூன்று குணங்களின் ஸாம்ய (ஸமமாக இருத்தல்) நிலைமையை அடைந்திருக்கும்போது மூலப்பிரகிருதி, ப்ர தானம், அவ்யக்தம், அஜை என்று வழங்கப்படுகிறது.

அது உலகங்களை உண்டுபண்ண முதற்காரணமாக இருப்பதாலும் தான் உண்டாவதற்கு வேறு காரணமில்லாமல் அநாதியாகவிருப்பதாலும் கேவல (தனித்த) ப்ரக்ருதி என்றும் சொல்லப்படுகிறது. அது ஜடஸ்வரூபமாக இருந்தபோதிலும் ஜீவர்கள் தர்மார்த்தகாமமோக்ஷங்களென்ற புருஷார்த்தங்களை அடைவதன்பொருட்டு இயற்கையாகவே ஸகல உலகவடிவமாக மாறுகிறது. எவ்விதமெனில்? பசுவினால் புசிக்கப்பட்ட புல் அசேதனமாக இருந்தபோதிலும் உலக நன்மையின்பொருட்டு பால், தயிர், வெண்ணெய், நெய் என்ற உருவங்களாக மாறுகிறது. ஜலம் அசேதனமாகவிருப்பினும் அலை, குமுழி, நுரை, பனி, மழை முதலிய பல உருவங்களாக உலகத்தாரின் உதவியின்பொருட்டு மாறுகிறது. அதுபோன்று மூலப்பிரகிருதியும் மகத்தத்வம் முதலியனவாக மாறியிருக்கிறது.

சேதன ஸ்வரூபமாக இருக்கிற ஜீவன், தாமரை இலைபோல் ஒன்றிலும் பற்றுதலனாக இருப்பினும் பிரகிருதியின் ஸந்நிதான (எதிரில் இருப்பது) மாத்திரத்தால் அதன் வடிவமாக இருக்கிற மனத்திலுள்ள சுகம், துக்கம் முதலிய அந்தக்கரண தர்மங்களை தான் அனுபவிக்கிறவன் போன்று இருக்கிறான். எப்படியெனில்? நிர்மலமான ஸ்படிகக்கல் செம்பருத்தி புஷ்பத்தின் ஸந்நிதான மாத்திரத்தால் தானும் சிவந்ததாக இருக்கிறதன்றோ? கீதையில் * "ப்ரகிருதியின் குணங்களாற் செய்யப்படும் ஸர்வ கர்மங்களையும் அகங்காரத்தால் மூடனான ஜீவாத்மா 'நான் செய்கிறேன்' என்று எண்ணுகிறான்" எனப்படுகிறது.

* அத்யாயம் 3. சுலோகம் 27.

இம்மாதிரி ஒன்றிலும் பற்றில்லாது உபேக்ஷையாக விருக்கிற ஜீவனின் முன்பாக மூலப்பிரகிருதி ஸகலப் பிர பஞ்சத்தையும் ப்ரகாசப்படுத்திக் கொண்டிருக்கிறது. ஒரு விதமான செய்கையுமற்ற அயக்காந்தத்தின் முன்பாக இரும்பினிடம் சலனம் முதலிய செய்கைகள் உண்டாவன போன்று, ஜீவனின் முன்பாக இருக்கிற மூலப்பிரகிருதிக்கு உலக வ்யாபாரமாகிய செய்கைகளும் உண்டாகின்றன. போகங்களை அனுபவிக்கிறவன் ஜீவன். அவனால் அனுப விக்கப்படும் போகங்கள் எல்லாம் மூலப்பிரகிருதியின் வடி வமே. ஆதலால் ஜீவனும் மூலப்பிரகிருதியும் சேர்ந்து ஸகல ஜகத்கார்யங்கள் நடக்கக் காரணமாக இருப்பன.

கீதையில் * "பிரகிருதி, புருஷன் (ஜீவன்) இவ்விருவர் களை அநாதி (ஆதியில்லாதவர்) களாக அறிந்துகொள். சரீ ரம் இந்த்ரியங்கள் முதலிய உலக கார்யங்களை உண்டுபண் ணுவதில் பிரகிருதி காரணமாக இருக்கிறது. சுகம் துக் கம் முதலியவைகளை அனுபவிப்பதில் புருஷன் காரணமாக இருக்கிறான். புருஷன் ப்ரகிருதியினிடமாக இருந்து கொண்டு அதனிடமிருந்துண்டான குணங்களை அனுபவிக் கிறான். ஸத்துகளாகிய தேவர்கள், அஸத்துகளாகிய திர் யக்குகள், ஸத்தும் அஸத்துமான இரண்டும் கலந்தவர் களாகிய மனிதர்கள் என்ற ஜன்மங்களில் புருஷன் (ஜீவன்) ஜனிப்பதற்கு பிரகிருதியின் குணங்கள் அவனிடம் ஸம்பந் தித்து இருப்பதே காரணமாக இருக்கிறது. ஓ அர்ஜுனா

---

* அத்யாயம் 13. சுலோகம் 20-22, 27.

பிரகிருதிபுருஷர்களின் சேர்க்கையால் ஸ்தாவரஜங்கம ரூபமான இவ்வுலகம் உண்டனதாக அறி" எனப்படுகிறது.

ஜீவன் வெகுகாலம் முயற்சிசெய்து அதனால் பூர்ண மான தத்வஞ்ஞானத்தை ஸம்பாதித்து அதனால் ஆத்யாத் மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகமென்ற * மூன்றுவித மான துக்கங்களிலிருந்து விடுபட்டு "நான் பிரகிருதியை விட வேறுபட்டவன்" என்ற தன்சொந்தமான ஸ்வரூப ஞானம்பெற்று ஆத்மஸ்வரூபமாகவே இருத்தல் மோக்ஷ மெனப்படும். வேதாந்திமதத்தில் ஆத்மா துக்கநிவிர்த்தி யாய் தனது சொந்தமான ஆனந்தஸ்வரூபமாக இருத்தல் மோக்ஷம் எனப்படுகிறது. மற்றவை வேதாந்திமதத்திற் கொப்பானவை. இதன்பின் யோகிமதம் கூறப்படும்.

---

## யோகி மதம்.

பகவானாகிய பரமாத்மாவினிடம் மனத்தை ஸ்திர மாய் நிறுத்துவதற்கு வேண்டிய ஸாதனங்களைக்கூறுகின்ற சாஸ்திரம் யோகதர்சனம் எனப்படும். அதன்படி நடக் கின்றவர்கள் யோகிகள். அவரதுகொள்கை, யோகிமதம் எனப்படும். இந்த மதத்தில் "எவ்விதமான துக்கங்களில் லாதவனும், அளவற்ற மகிமையுற்றவனுமான ஈசுவரன் ஒருவன் உளன் என்று அங்கீகரிக்கப்படுகிறது; அவனது அனுக்ரஹத்தினாலே மோக்ஷம் வஸித்திக்கிறது; அந்த அனு க்ரஹம் யோகாப்பியாஸத்தினால் உண்டாகிறது" எனப் படுகிறது. மற்ற கொள்கைகள் ஸாங்க்ய மதத்திற்கொப்பா னவை. இந்த யோகிமதம் ஸேசுவர (ஈசுவரனுடன் கூடின)

---

*முதற்றொகுதி மோக்ஷஅதிகாரத்தில் மூன்றும் விளக்கியிருப்பன.

ஸாங்க்யமதமென்றும், முன்சொன்னது நிரீசுவர (ஈசுவர னில்லாத) ஸாங்க்யமதமென்றும் வழங்கப்படுகிறது. இனி யோகாப்பியாஸத்தின்முறை கூறப்படும்.

---

யோகம்.

உலகவிஷயங்களில் பிரவிர்த்தித்து இருக்கின்ற மனத்தை பலவந்தமாய் இழுத்து தனக்கு அபிதமான ஒரு வஸ்துவினிடம் நிலைபாக நிறுத்துதல் யோகமெனப்படும். அது வைராக்யத்தாலும் அப்பியாஸத்தாலும் ஸித்திபெறு கிறது. விஷயஸுகத்தின் தோஷங்களை ஆராய்ந்து அறி வதால் அதில்தோன்றும் வெறுப்பு வைராக்யமெனப்படும். அது அப்பியாஸத்தினால் திடப்படுகிறது. கீதையில் * "ஓ அர்ஜுனா! அடக்கமுடியாத சஞ்சலமான இம்மனது வைராக்யத்தினாலும் அப்யாஸத்தினாலும் அடக்கப்படு கிறது, நிச்சயம்" எனப்படுகிறது. அந்த யோகத்தை படிப்படியாய் அப்பியஸிக்கவேண்டும். அதற்கு ஸுலப ஸாதன உபாயங்களான எட்டு அங்கங்கள் உள. அவை 1. யமம் 2. நியமம் 3. ஆஸனம் 4. பிராணாயாமம் 5. பிரத் யாஹாரம் 6. தாரணை 7. தியானம் 8. ஸமாதி என்பன. யோகம் ஸித்திபெறுவதற்கு அவை முறையே படிப்படி யாக உள்ளன. ஆதலால் யமம் இதன்பின் கூறப்படும்.

---

யமம்.

யமமென்பது இந்த்ரியங்களையும் மனத்தையும் கெட்டகார்யங்களிற் போகவொட்டாமல் தடுத்து நல்ல

---

* அத்யாயம் 6 சுலோகம் 35.

கார்யங்களிற் புகும்படிசெய்தல் எனப்படும். அது பத்து வகைப்படும். அவை 1. அஹிம்ஸை 2. ஸத்யம் 3. களவாமை 4. பிரம்மசர்யம் 5. தயை 6. நேர்மை 7. பொறுமை 8. தைர்யம் 9. மிதமாயுண்ணல் 10. சுத்தம் என்பன.

1. ஜீவர்களை மனம், வாக்கு, காயம் என்பனிவற்றால் துன்புறுத்தாமலிருத்தல் அஹிம்ஸை எனப்படும். 2. மனத்திலும், வாக்கிலும், செய்கையிலும் உண்மையாகவிருத்தல் ஸத்யமெனப்படும். 3. பிறர்பொருளைக் கவர மனத்திலும் நினையாமலிருத்தல் களவாமை எனப்படும். 4. மன்மத விகாரத்தைத் தடுத்தல் பிரம்மசர்யமெனப்படும். 5. எல்லா பிராணிகளிடமும் தனது குழந்தையினிடம்போன்று அன்புற்றிருத்தல் தயை எனப்படும். 6. யாவரிடத்தும் கபடமில்லாமலிருத்தல் நேர்மை எனப்படும். 7. பிறர் தன்னை எவ்விதமாய்த் துன்புறுத்தினபோதிலும் அவர்களிடம் கோபங்கொள்ளாமலிருத்தல் பொறுமை எனப்படும். 8. தனக்கு எவ்விதமான ஆபத்துகள் வந்தாலும் வருவதாகத் தெரிந்தாலும் அவற்றால் சிறிதும் பயப்படாமலிருத்தல் தைர்யமெனப்படும். 9. தனது சரீரத்தில் ஜீவன் உயிருடனிருப்பதற்கு வேண்டிய ஆகாரத்தை மாத்திரம் உட்கொள்ளல் மிதமாயுண்ணல் எனப்படும்.

10. சுத்தம் என்பது தேகசுத்தம், மனச்சுத்தம் என இருவகைப்படும். தேகசுத்தம் என்பது மிருத். (மண்) ஜலம் முதலியவற்றால் சரீரத்தை சுத்தப்படுத்தலாம் தேகசுத்திசெய்யப் பழகினவர்கள் ஜலத்தை ஆஸனத் துவாரத்தின் வழியாக வயிற்றினுள் இழுத்து வயிற்றை

ஜலத்தினுல் நிறப்பி அங்குள்ள மலங்கள் சிறிதும் தங்காமல் கழிந்துபோகும்படி அந்த ஜலத்தைத்திரும்ப அவ்வழியாகவே வெளியாக்குவார்கள். இதனுல் சரீரம் நாளுக்குநாள் இலகுவாகி யோகாப்பியாஸம் செய்ய அநுகூலமாயிருப்பதுடன் சரீரமலம் குறையக்குறைய மனத்திலுள்ள மலங்களும் குறையஆரம்பிக்கும். இது வெளிச்சுத்தமாகும். மனச்சுத்தமென்பது மைத்ரி, கருணை, முதிதை, உபேக்ஷை என்ற நான்குவிதமான சித்தவிருத்திகளால் மனத்தின் மலத்தைப் போக்கிக்கொள்ளுதலாம். புண்யம் செய்கிறவர்களிடம் ஸ்நேகமுற்றிருத்தல் மைத்ரி எனப்படும். துன்பம் அனுபவிக்கிறவர்களிடம் தன்னுல்கூடிய உதவிசெய்ய வேண்டுமென்ற மனத்தின் இளக்கம் கருணை எனப்படும். ஸுகம் அனுபவிக்கிறவர்களைப் பார்த்தும் கேட்டும் தான் ஸுகமனுபவிப்பது போன்று ஸந்தோஷமா யிருத்தல் முதிதை எனப்படும். பாபம்செய்கிறவர்களைப் பார்த்து அவர்களை நல்வழியில் திருப்பமுயன்றும் பலிக்காதபோது அவர்களைநிந்திக்காமை உபேக்ஷை எனப்படும். இவற்ருல் உள் சுத்தமாகும். இதன்பின் நியமம்கூறப்படும்.

---

## நியமம்.

யமத்தினுல் ஏற்படும் நற்கார்யங்களை விஸ்தாரப்படுத்திக்கொண்டு அவற்றிற்கு கட்டுப்பட்டு இருத்தல் நியமமெனப்படும். அது பத்துவகைப்படும். அவை 1. தபஸ் 2. ஸந்தோஷம் 3. ஆஸ்திக்யம் 4. தானம் 5. ஈசுவரபூஜை 6. சித்தாந்த சிரவணம் 7. லஜ்ஜை 8. நற்புத்தி 9. ஜபம் 10. விரதம் என்பன.

1. ஸாந்தபனம், சாந்த்ராயணம், பிராஜாபத்யம் முதலிய கிருச்சிரங்கள் (வருத்துவன) என்ற மிகவும் கஷ்டஸாத்யமான விரதங்களை அனுஷ்டித்து சரீரத்தையும் இந்திரியங்களையும் ஒடுக்கி இளைக்கும்படி செய்தல், தபஸ் எனப்படும். மூன்று தினங்கள் பகலில்மாத்திரம் போஜனம்செய்து மூன்று தினங்கள் ராத்திரி மாத்திரம் போஜனம் செய்து மூன்று நாட்கள் பிறரிடம் கேட்காமற்கிடைத்த பதார்த்தத்தை புஜித்து மூன்றுதினங்கள் ஒன்றுமே புஜிக்காமல் பட்டினி இருத்தல், ஸாந்தபனவ்ரத மெனப்படும். இவ்விதமே மற்ற விரதங்களுக்கும் கொஞ்சம் மாறுதலான நியமங்கள் (கோட்பாடுகள்) ஏற்பட்டிருக்கின்றன. விரதானுஷ்டான காலத்தில் ஈசுவரதியானம் செய்துகொண்டிருக்கவேண்டும், 2. கிடைத்ததைக்கொண்டு எப்போதும் மனத்தில் திருப்தியுடனிருத்தல், ஸந்தோஷமெனப்படும். 3. பகவான் ஒருவர் உண்டென்ற நம்பிக்கையுடன் வேதசாஸ்திரங்களில் நம்பிக்கை, ஆஸ்திக்யமெனப்படும். 4. அசக்தர்களும் யோக்யர்களுமான ஸத்பாத்திரங்களில் தம்மாலியன்றளவு ஈதல், தானமெனப்படும். 5. ஸர்வகிரியைகளையும் பலாபேக்ஷையின்றி ஈசுவரனுக்கு அர்ப்பணம்செய்தல், ஈசுவரபூஜை எனப்படும். 6. குருவினிடமிருந்து மதவஸித்தாந்தங்களைக் கேட்பது, ஸித்தாந்தசிரவணமெனப்படும். 7. கெட்டகார்யங்களைச் செய்யநினைக்கும்போதே வெட்கப்படுதல், லஜ்ஜைஎனப்படும். 8. மோக்ஷம்பெறவேண்டிய ஸாதனங்களைத் தேடவேண்டுமென்ற புத்தி, நற்புத்தி எனப்படும். 9. இஷ்டமான தேவதையின் மந்த்ரத்தை ஜபித்தல், ஜபம் எனப்படும். 10. பிரம்மசர்

யம், கார்ஹஸ்த்யம், (இல்லறம்) வானப்பிரஸ்தம், ஸந்யாஸம் (துறவறம்) என்ற ஆசிரம விரதங்களை ஒழுங்காய் அனுஷ்டித்தல் விரதமெனப்படும்.

முன்சொன்ன யமநியமங்கள் ஸித்திப்பதற்கு முக்கியமாயுள்ள தடையாகவிருப்பன ஹிம்ஸை, அஸத்யம், களவு முதலியன. அவை காமக்குரோதாதிகளின் வசத்தால் சிறிது செய்யப்பட்டபோதிலும் செய்விக்கப்பட்டபோதிலும் அவற்றைப்பற்றி ஆமோதிக்கப்பட்ட போதிலும் பாபம், துக்கம் அஞ்ஞானம் முதலிய கணக்கற்ற கெட்டபலன்கள் உண்டாகின்றன. அவற்றை விலக்கி அஹிம்ஸை முதலிய நல்லதர்மங்களைக் கைப்பற்றினவர்களின் மனம் பரமாத்மாவின் தியானத்திற்கு அனுகூலமாயிருக்கும்வண்ணம் நிர்மலமாய்விடுகிறது. எவனது ஸன்னிதானத்தில் ஸர்ப்பம், கீரி முதலிய ஜன்மவைரிகள்கூட தமது இயற்கையிலுள்ள சாசுவதமான விரோதம் முதலிய ராஜஸதாமஸவிகாரங்களை விட்டு ஸத்வமார்க்கத்திற் பிரவேசித்து பரஸ்பர ஸ்நேகத்துடன் இருக்கின்றனவோ; அவனுக்குத்தான் யமநியமங்கள் ஸித்தித்திருப்பனவாக அறியவேண்டும். இதன்பின் ஆஸனம் கூறப்படும்.

---

### 3. ஆஸனம்.

ஈசுவரனைத் தியானிக்கும்போது சரீரம் வளையாமலும் அசையாமலுமிருப்பதற்கு அதனைபந்தப்படுத்திக்கொண்டு வீற்றிருத்தல், ஆஸனம் எனப்படும். அது யோகசாஸ்திரத்தில் நூற்றெட்டு வகையாகக் கூறப்பட்டிருப்பினும்

முக்யமாகப் பதினொருவகைப்படும். அவை 1. ஸுகாஸனம் 2. வீராஸனம் 3. பத்மாஸனம் 4. வீரபத்மாஸனம் 5. ஸிம்மாஸனம் 6. குக்குடாஸனம் 7. மயூராஸனம் 8. ஸ்வஸ்திகாஸனம் 9. கோமுகாஸனம் 10. பத்ராஸனம் 11. முக்தாஸனம் என்பன.

1. மற்ற ஆஸனங்களிற் பழக சக்தியில்லாதவன் தனக்கு ஸுகமாக இருக்கக்கூடிய ஏதாவது ஒருவகையாக தைர்யத்துடன் அசையாமல் வீற்றிருத்தல், ஸுகாஸனமெனப்படும். 2. ஏதாவது ஒரு துடையின்பேரில் மற்றொரு பாதத்தை ஏற்றிவைத்துக்கொண்டு நிமிர்ந்து அசையாமலிருத்தல், வீராஸனமெனப்படும். அது ஸர்வ பாபங்களையும் போக்கும். 3. வலது துடையின்மீது இடது பாதத்தையும் இடது துடையின்மீது வலது பாதத்தையும் ஏற்றிவைத்துக்கொண்டு பாதங்களின் கட்டவிரல்களை மாறின கைகளால் இழுத்துப் பிடித்துக்கொண்டிருத்தல், பத்மாஸனமெனப்படும். 4. வலதிடத் தொடைகளின் பேரில் இடவலப் பாதங்களை ஏற்றிவைத்துக்கொண்டு முதுகின்வழியே பின்னால் மாறிவிடப்பட்ட வலதிடக் கைகளால் வலதிடப்பாதங்களின் கட்டவிரல்களை இழுத்துப் பிடித்துக்கொண்டிருத்தல், வீரபத்மாஸனமெனப்படும். அது ஸர்வ வியாதிகள், விஷங்கள் இவற்றைப் போக்கும். 5. அண்டகோசத்திற்குக் கீழுள்ள ஸீவனி நாடியினது இருபக்கங்களிலும் குதிக் கால்களை மாற்றி அமிழ்த்தி வைத்துக்கொண்டும் இரண்டு கைகளை விரல்களைப்பரத்தி முழந்தாள்களின்மீது வைத்துக்கொண்டும் மூக்கின்முனையைப் பார்த்துக்கொண்டுமிருத்தல், ஸிம்மாஸனமெனப்

படும். 6. பத்மாஸனத்தை ஸ்தாபித்துக்கொண்டு முழங் தாள்களுக்கும் தொடைகளுக்கும் இடையிலுள்ள வெளியில் நேராக இரண்டுகைகளை உள்ளேவிட்டு உள்ளங்கைகளை பூமியில் பதியவைத்துக்கொண்டு உன்னி மற்ற சரீரபாகத்தை பூமியிற்படாமல் உயர்த்திக்கொண்டு ஆகாசத்தில் அசையாமலிருத்தல், குக்குட (கோழி) ஆஸனம் எனப் படும். 7. குந்தி உட்கார்ந்து தொப்புளின் இருபக்கங்களிலும் நேராகக் கைகளைவிட்டு அமிழ்த்தி உள்ளங்கைகளை பூமியில் பதியவைத்து உன்னி இருபாதங்களையும் மற்ற சரீரபாகத்தையும் உயர்த்தி ஆகாயத்தில் தடிபோன்று நிமிர்ந்திருத்தல், மயூர (மயில்) ஆஸனமெனப்படும். 8. வலது முழங்கால் தொடை இவற்றின் உட்புறத்தி லுள்ள இடையில் இடதுபாதத்தையும் இடதுமுழங்கால் தொடைகளின் உட்புறத்தில் வலதுபாதத்தையும் வைத்துக் கொண்டு அசையாமலிருத்தல், ஸ்வஸ்திக(மங்கள) ஆஸன மெனப்படும். 9. இடது குதிகாலை வலதுகுண்டியிலும் வலது குதிகாலை இடதுகுண்டியிலும் வைத்துக்கொண்டு நிமிர்ந்து அசையாமலிருத்தல், கோ (பசு) முக ஆஸனம் எனப்படும். 10. அண்டகோசத்திற்குக் கீழுள்ள ஸீவனி நாடியினது இருபக்கங்களிலும் குதிகால்களை நேராக அமிழ்த்திவைத்து இருகைகளாலும் நேராகப்பாதங்களது நுனிகளைப்பிடித்து இழுத்துக்கொண்டிருத்தல், பத்ர (நன்மையான) ஆஸனமெனப்படும். 11. ஆண்குறியின் மேலுள்ள இடத்தில் குதிகால்களை மாற்றி அமிழ்த்தி வைத்துக்கொண்டு நிமிர்ந்து அசையாமலிருத்தல், முக்த (விடுத்த) ஆஸனமெனப்படும்.

யோகாஸனங்களுள் அவரவர் சக்திக்கும் சரீரஸௌகர்யத்திற்கும் தக்கவாறு முதலில் எளிதானவற்றிற் பழகின பிறகுதான் கடினமான ஆஸனங்களிற் பழகவேண்டும். கடின ஆஸனங்கள் குருமுகமாயல்லாது பழக ஆரம்பித்தால் நரம்புப்பிசகுகள் உண்டாகும். ஒவ்வொரு ஆஸனப் பழக்கமும் பல்வேறுவகையான பலனளிக்கவல்லதாகையால் அவரவர் பழக்கத்திற்குற்றபடி அந்தந்த ஆஸனங்கள் யோகப்பயிற்சியை வலுப்படுத்துவன. ஆஸனங்கள் எப்போது, அசையாமலும் ஸ்திரமாகவும் சிரமமில்லாமலும் ஸுகமாகவும் ஸித்திபெறுகின்றனவோ ; அப்போதுதான் அவை யோகத்தின் அங்கமாகும். அந்த ஆஸனா ஸித்திபெற்றபிறகு யோகியானவன் சீதோஷ்ணம், பசி தாகம் முதலிய துக்கங்களால் தொந்தரவு செய்யப்படாமலிருக்கிறான்.

---

## 4. பிராணாயாமம்.

ஆஸனஜயத்தை முன்னிட்டு சாஸ்திரக் கிரமப்படி சுவாஸத்தின் இயற்கையான போக்குவரத்துகளைத் தடுத்தல், பிராணாயாமம் எனப்படும். அதற்குப் பிராணவாயுவை அடக்குதல் என்று பொருள். அது ரேசகம், பூரகம், கும்பகம் என்ற மூன்றுபிரிவுகளுடன் கூடினது. நாசியின் துவாரத்திலிருந்து பதினாறு மாத்திரையளவுள்ள காலம் வரை சுவாஸத்தை வெளியேவிடுதல், ரேசகம் (விடுதல்) எனப்படும். முப்பத்திரண்டு மாத்திரையளவுள்ள காலம் வரை நாசியின் துவாரத்தின்வழியாக சுவாஸத்தை உள்ளே இழுத்தல், பூரகம் (நிரப்புதல்) எனப்படும். அறுபத்து

நான்கு மாத்திரையளவுள்ள காலம்வரை சுவாஸத்தைவிடாமலும் கிரஹிக்காமலும் உள்ளேயே தடுத்துவைத்தல், கும்பகம் (அடக்குதல்) எனப்படும். ஒருமாத்திரை என்பது ஒரு சொடக்கு நேரமாம். இம்மூன்றையும்சேர்த்து ஒரு தடவை செய்வது ஒரு பிராணுயாமமாகும். அது ஒவ்வொரு காலங்களிலும் பத்து, பதினறு, நூறு, ஆயிரம் இவ்விதமாக சக்திக்குத் தகுந்தபடி அப்யஸிக்கப்படுமாறல் அது மனத்திலுள்ள ஸத்வகுணத்தின் ஆவரணத்தை விலக்கி அதனை சுத்தமாகச்செய்து ஒரே இடத்தில் நிலைத்திருக்கும்படி செய்கிறது. பிராணவாயு 21,600 சுவாஸங்களாக ஒருநாளில் நடைபெறுகிறது. மூச்சுக்காற்று ஒரு தடவை வெளியேபோய் உள்ளேவருவது ஒரு சுவாஸமாகும். உட்கார்ந்திருத்தல், நடமாடுதல், ஓடுதல், சிற்றின்பமநுபவித்தல், தூங்குதல் ஆகிய ஐவிதச் செய்கைகளில் முறையே சுவாஸம் 16, 24, 42, 65, 100 அங்குலங்கள் சென்று வந்துகொண்டிருக்கும். சுவாஸத்தின் இயற்கையான 16 அங்குல நீளத்தில் 1, 2, 3, 4, 5. 6, 7, 8, 9, 10, 11, 12 அங்குலங்கள் பிராணுயாமப் பயிர்ச்சியால் நாளடைவில் குறைந்துவரும்போது முறையே வைராக்யம், ஆனந்தம், கவித்வம், வாக்குப்பலித்தல், தூரதிருஷ்டி, ஆகாசகமனம், வாயுவைவிட வேகமாய் ஸஞ்சரித்தல், * அணிமாதி

---

*1. அணிமா (பரமாணுவினும் ஸூக்ஷ்மமான தேகமுடைமை) 2. மஹிமா (பிரம்மலோகம்வரை வியாபித்த தேகமுடைமை) 3. லகிமா (சேற்றிலும் ஜலத்திலுங்கூட அடியமிழ்ந்தாமல் வேகமாய்ச் செல்லுதல்) 4. கரிமா (பெருங்காற்றிஞலுமசைக்க முடியாத பர்வதத்தினும் கனமான தேகமுடைமை) 5. ப்ராப்தி (நினைத்

அஷ்டஸித்திகள், § நவநிதிகள், வேறு சரீரத்திற் புகுதல சரீரநிழலில்லாமை, ஜனனமரணமில்லாமை என்பன ஸித்திப்பன. பிராணாயாமம் ஜபத்துடன் கூடாதது, கூடியது என்ற இரண்டுவிதத்தில் பிந்தியது சிறந்தது. எண்ணிக்கையிலும், நீளத்திலும் அளவு அதிகமாய்விடாதவண்ணம் கவனமாய் சுவாஸத்தைப் பாதுகாத்தும் பிராணாயாமப் பயிற்சியால் சுவாஸத்தின் இரண்டுவிதமான அளவுகளையும் சிறிது சிறிதாகக் குறைத்துக்கொண்டும் வருகிற யோகிகள் நெடுங்காலம் உயிருடனிருப்பார்.

---

## 5. பிரத்யாஹாரம்.

கண், காது முதலிய இந்திரியங்களை ரூபம், சப்தம் முதலிய விஷயங்கள் பிடித்து இழுக்கும்போது அவற்றை அவைகளிற் புகாமலிருக்கும்படி தடுத்துத் திருப்பி இழுத்து மனத்தினிடம் சேர்த்து அதுவும் முன் அடக்கப்

---

தவை யாவும் முன்வந்தடையப் பெறுதல்) 6. ப்ராகாம்யம் (அழகிய அநேக பெண்களை மனத்தின் ஸங்கல்பத்தினாலேயே உண்டாக்கி அவர்களொத்த பல வடிவங்கள்கொண்டு யாவரோடும் ஏககாலத்திற் கூடுதல்) 7. ஈசத்வம் (ஸர்வ தேவர் முனிவராகிய யாவரிடத்தும் தனது ஆக்ஞையைச் செலுத்துதல்) 8. வசித்வம் (ஸர்வ ஜனங்களையும் பிரகிருதியையுங்கூட வசமாக்கித் தன்னிஷ்டப்படிக்கான ஸ்ருஷ்டி முதலியனவும் செய்யத்தக்க வல்லமையுற்றிருத்தல்) என்பன எட்டு ஸித்திகள்.

§ 1. சங்கம் 2. மகரம் 3. கச்சபம் 4. வரம் 5. நீலம் 6. குந்தம் 7. முகுந்தம் 8. பத்மம் 9. மகாபத்மம் என்பன ஒன்பது நிதிகள்.

படடப பிராணவாயுவும் அசையாமலிருக்கும்படி அப்யா ஸம்செய்தல், பிரத்யாஹாரம் (திருப்புதல்) எனப்படும். அப்போது தேனீக்கள் அவற்றின் அரசனைப் பின்பற்றிச் செல்லுவனபோன்று, இந்திரியங்கள் அவற்றின் அரசனு கிய மனத்தைப் பின்பற்றி மனம் நாடுகின்ற தியானவஸ்து வினிடமாக நிலையுற்றிருக்கும். அப்போதுதான் யோகி, ஜிதேந்திரியன் (இந்திரியங்களை ஜயித்தவன்) எனப்படுவான்.

---

## 6. தாரணை.

மனத்திலுள்ள எண்ணங்களை எல்லாம் விலக்கி அதனை சரீரத்தில் சக்திரூபமாய் விளங்குகிற சக்கிரமென்று சொல லக்கூடிய சில ஸ்தானங்களில் நிலையுறச்செய்து அவற்றில் பகவத்ஸ்வரூபம் தோன்றும்படி செய்தல், தாரணை எனப் படும். அந்த ஸ்தானங்கள் அடியிற் கூறப்படுவன:— இடுப் பிற்குக் கீழே முக்கோண வடிவமாயுள்ள ஒரு சக்கிரம் மூலாதாரம், காமகூடம் என்ற பெயர்களுடன் கூடி காம பலனைக் கொடுத்துக் கொண்டிருக்கிறது. அதற்குமேல் ஆறுகோணவடிவமாயுள்ள ஸ்வாதிஷ்டானம் என்ற சக்கிர மிருக்கிறது. அதற்குமேல் நாபி (தொப்புள்) யில் பத்து கோண வடிவமாயுள்ள மணிபூரகமென்ற சக்கிரமிருக் கிறது. அதற்கு நாபிசக்கிரம் என்றும் பெயர். அதற்கு மேல் ஹிருதயத்தில் பன்னிரண்டுகோணமாக பூர்ணகிரி என்ற சக்கிரமிருக்கிறது. அதற்குமேல் கழுத்தில் பதினாறு கோணமாக விசுத்தம் என்ற சக்கிரம் இருக்கிறது. அதற்கு ஜலந்தரபீடமென்றும் பெயர். அதற்குமேல் இரண்டு

புருவங்களுடைய மத்தியில் இரண்டுகோணமாக ஆஜ்ஞா சக்கரமிருக்கிறது. அதற்குமேல் மகாபீடமென்று பெயர் கொண்ட ஒட்டியாண சக்கரம் இருக்கிறது.

மூலாதார சக்கரத்திலிருந்து மூங்கில் முளைபோன்ற ஸுஷும்னையென்ற ஒரு நாடி, தனது இடது வலது பக்கங்களில் முறையே உள்ள இளை, பிங்களை என்ற நாடிகளுடன்சேர்ந்து நாபியில் உள்ள விலம்பினி என்ற நாடியுடன் கோர்க்கப்பட்டு நாசியின் அடிவரை சென்றிருக்கிறது. நாம் உட்கொள்ளும் சுவாஸம் இளையில் சந்திரன் உருவமாகவும், பிங்களையில் ஸூர்யன் உருவமாகவும் பிரவேசிக்கிறது. நாபிசக்கரமானது, குறுக்காகவும் கீழும்மேலுமாக நோக்கியுமிருக்கின்ற சில நாடிகளால் அமைக்கப்பட்டு அது கோழி முட்டைபோன்று இருக்கிறது. நாபிசக்கரத்திலிருந்து காந்தாரி, ஹஸ்திஜிஹ்வை என்ற இரண்டு நாடிகள் இரண்டு நேத்திரங்களுக்கும், பூஷை, அலம்புஸை என்ற நாடிகள் இரண்டு காதுகளுக்கும், சூரை என்ற ஒரு நாடி புருவமத்திக்கும் சென்று இருக்கின்றன.

பின்னும் சிலநாடிகள் தொப்புளைச் சுற்றிலுமிருக்கின்றன. அவற்றுள் விசுவோதரி என்ற நாடி பசியை உண்டாக்கிக்கொண்டு பக்ஷ்யம் (கடிக்கத்தகுந்தது) போஜ்யம் (சவைக்கத்தகுந்தது) லேஹ்யம் (நக்கத்தகுந்தது) சூஷ்யம் (உறிஞ்சத்தகுந்தது) என்ற நான்குவிதமான ஆகாரங்களை புஜிக்கின்றது. ஸரஸ்வதி என்றநாடி தாகத்தையுண்டுபண்ணி ஜலத்தையுட்கொள்ளுகிறது. கண்டத்துவாரத்திலிருந்து கீழ்முகமாகச் சென்றிருக்கிற சங்கினி என்ற

நாடி நாசியில் தும்பலையும் தொண்டையில் கபத்தையும் உண்டுபண்ணுகிறது. அதுவே அன்னஸாரத்தை சிரஸில் கொண்டுபோய்ச்சேர்க்கிறது. நாபிக்குக்கீழேயுள்ள மூன்று நாடிகளில் குஹூ என்ற நாடி மலத்தையும் வாருணி என்ற நாடி ஜலத்தையும் சித்திரை என்ற நாடி சுக்கில சோணிதங்களையும் வெளியாக்குகின்றன. இவ்விதமாக சரீரத்தில் எண்ணிறந்த நாடிகள் (நரம்புகள்) சங்கிலிப்பின்னலாக அமைக்கப்பட்டு ஒவ்வொன்றும் ஒவ்வொரு தொழிலைச்செய்துகொண்டு முற்கூறிய சக்கர ஸ்தானங்களில் தொடர்ந்துகொண்டு அவற்றை பரஸ்பர ஸம்பந்தமுள்ளனவாகச் செய்திருக்கின்றன. யோகிகள் அந்தந்த நாடிகளின் தன்மையறிந்து அவற்றின் கிளர்ச்சியை அடக்கி விடுவார்கள். அதனால் சரீரத்தில்நடக்கும் தொழில்கள் நம்மைப்போன்று அவர்களைத் துன்புறுத்தமாட்டா. யோகிகள் முற்கூறிய ஸ்தானங்களுள் ஏதாவது ஒரு சக்கரத்தில் மனத்தை சலிக்காமல் நிறுத்திவைக்கலாமானாலும், ஆரம்பத்தில் ஹிருதயஸ்தானத்தில் நிறுத்துவதுதான் சீக்ரம் ஈசுவரப்ரத்யக்ஷத்திற்குக் காரணமாம். எப்படியெனில்?

ஹிருதயம் அனேகநாடிகளால் தொடுக்கப்பட்டு ஒரு தாமரைமொட்டுப் போன்று, கழுத்தின் அடியிலிருந்து தொப்புள்வரை கீழ்நோக்கி இருக்கிறது. அதற்குள் சிறிய த்வாரமிருக்கிறது. அதன்மத்தியில் அக்கினி இருக்கிறது. அதன் ஜ்வாலை (சுடர்) யில் பரமாத்மா இருக்கிறான். யோகிகள் முற்கூறிய பிராணாயாமங்களினால் கீழ்நோக்கின ஹிருதய கமல (தாமரை) த்தை மேல்நோக்கி மலரச்செய்து அதில் இருக்கின்ற பரமாத்மாவினிடம் தமக்கு அபிமத

மான தேவதையின் ஸ்வரூபத்தைத் தியானிக்கும்போது, அங்கு அந்ததேவதை கட்டைவிரல் அளவாக அவர்களுக்கு ப்ரத்யக்ஷமாய்த் தோன்றும். அப்போது தேனில்பற்றின வண்டுபோன்று, யோகிகள் பரமானந்த ரஸத்திற்பற்றின மனதுடையவர்களாக இருப்பார்கள்.

---

### 7. தியானம்.

சப்தாதி விஷயங்களிடமிருந்து காது முதலிய இந்திரியங்களை இழுத்து மனத்துடன்சேர்த்து அம்மனத்தினுல் ஹிருதயகமலத்தில் தோன்றியிருக்கும் பரமாத்ம ஸ்வரூபத்தை தைலதாரைபோன்று இடைவிடாமல் சிந்தித்தல், தியானம் எனப்படும். அந்த தியானுப்பியாஸத்தின் முறை கீதையில் கூறப்படுகிறது :—

* "யோகியானவன் எப்போதும் ஒருவனுக ஏகாந்தத்தில் இருந்துகொண்டு ஆசைகளின் பற்றற்றவனுய் மனதையடக்கி சுத்தமான பூமிப்ரதேசத்தில் ஏதாவது ஒரு ஆஸனத்தை அதிக உயரமும் தணிவும் இல்லாமல் நடுத்தரமாக ஏற்படுத்திக்கொண்டு அதன்பேரில் தர்ப்பங்களேயும் அவற்றின்பேரில் மான்தோல் அல்லது புலித்தோலேயும் அதன் பேரில் வஸ்திரத்தையும் பரத்தி அதில் உட்கார்ந்து ஆத்ம ஸ்வரூபத்தைத் தியானம் செய்வதின்பொருட்டு யோகம் செய்யவேண்டும்; அப்போது தலை, கழுத்து, அதன் கீழுள்ள உடம்பு இவற்றை கூனலில்லாமல் நேராகநிமிர்த்தி வைத்துக்கொண்டு அசையாமல் திசைகளேப் பாராமல்

* அத் 6. சுலோ 10—14, 24—25.

தனது மூக்கின் முனையைப் பார்த்துக்கொண்டு சாந்தமான மனதுடையவனும், பயமற்றவனும், பிரம்மசாரி விரதத்தி லிருப்பவனுமாக இருந்து என்னிடத்திலேயே (பகவானிடத் திலேயே) மனதைச் செலுத்திக்கொண்டிருக்கவேண்டும்'' "மனத்தின் ஸங்கல்பத்தால் உண்டாகும் விருப்பங்களை விட்டு ஸர்வ இந்த்ரியங்களையும் அடக்கி தைர்யபுத்தியுடன் மெள்ளமெள்ள மனத்தை ஆத்மாவினிடம்சேர்த்து அதன் பிறகு வேறொன்றையும் சிந்திக்காமல் ஆத்மஸ்வரூபத்தை யே சிந்தித்துக்கொண்டிருக்கவேண்டும்'' எனப்படுகிறது. பின்னும் ‡"எப்போது மனிதன் இந்திரியப்பொருட்களில் பற்றில்லாதவனாகிறானோ, அப்போது ஸர்வஸங்கல்பத்தை யும் விட்டவனாயிருக்கிற அவன் யோகாரூடன் (யோகத் தில் ஏறினவன்) எனப்படுகிறான்; சுகமும் துக்கமும், பொன்னும் ஓடும், பிரியமும் அப்பிரியமும், புகழும் நிந்தை யும் மானமும் அவமானமும், மித்ரனும் சத்ருவும் எவனால் ஸமமாக எண்ணப்படுகிறார்களோ, அவன் குணாதீதன் (குணங்களுக்கு மேல்பட்டவன்) எனப்படுகிறான்; இவ்வி தம் மனத்தை ஜயித்து சாந்தமாயிருந்துகொண்டு எல்லா வற்றையும் ஸமமாக பாவித்து உதாஸீன (பற்றில்லாதவ) னாக ஈசுவரத்தியானம் செய்கிறவனுக்கு பரமாத்மாவாகிய அந்த ஈசுவரன் ஸமீபித்திருக்கிறான்'' எனப்படுகிறது.

---

## 8. ஸமாதி.

முற்கூறிய தியானத்தினால் மனம் பரமாத்ம ஸ்வரூ பத்தினிடம்பற்றி வெகுகாலம் லயித்துக்கொண்டிருத்தல்,

‡ அத் 6, 14. சுலோ 4, 7, 24—25.

ஸமாதி (அமர்ந்திருத்தல்) எனப்படும். ஸமாதிஸித்தி பெற்றவர்கள் யோகத்தில் தேர்ந்தவர்களாவர். சிலர் நாள் கணக்காகவும், சிலர் மாஸக்கணக்காகவும், சிலர் வருஷக் கணக்காகவும். ஸமாதியிலிருப்பார்கள். அவர்களுக்கு பசி, தாகம், வெயில், காற்று, பனி, மழை முதலியவற்றால் உண்டாகும் துன்பம் யாதொன்றும் தோன்றாது. ஏனெனில் தூங்கும்போது மனம் புரீதத் என்ற நாடியில் லயித்து நல்ல ஸுஷுப்தி இன்பத்திலிருப்பவனுக்கு வெளியிலுள்ள யாதொரு விஷயங்களும் தோன்றாமலிருப்பனபோன்று, மனம் ஈசுவர ஸ்வரூபத்திற்பற்றி லயித்திருப்பதாகிய ஸமாதி யின்பமுற்றவனுக்கு வெளியிலுள்ள இன்பதுன்பங்கள் புலப்படாதன. விஷயங்களைக் கிரகிக்கக்கூடியமனம் அப்போது இல்லையன்றோ?

ஸுஷுப்தியிற்போன்று ஸமாதிகாலத்தில் அசையாமலிருக்கும் யோகிகளின் சரீரத்தினிடமாக பக்ஷிகள் கூடு கட்டிக்கொண்டு வஸிக்கும். கரையான்கள் புத்துவைக்கும். மிருகங்கள் தினவுசொரிந்துகொள்ளும். வால்மீகி மஹர்ஷியின்சரீரத்தில் கரையான்கள் புத்துவைத்து அதன் பேரில் வருணபகவான் மழைபொழிந்து அதைக்கரைத்த பிறகு அதினின்றும் வெளிவந்ததால் அவருக்கு அப் பெயர் வந்தது. வல்மீக (புத்து) த்தினின்றும் வெளியானவர் வால்மீகி எனப்படுவர். வெகுநேரம் நன்றாய் உறங்கி எழுந்தவர்களுக்குப்போன்று, வெகுநாட்கள் ஸமாதியிலிருந்து கலைந்தவர்களுக்கு அகோரமான பசிதோன்றும். அது ஸ்வல்ப ஆகாரத்திலேயே அடங்கிவிடும். அந்த ஸமயத்தில் அவர்களுக்கு வேண்டிய ஆகாரத்தைக் கொ

டுத்து உதவும்படியான புண்யத்தை ஸம்பாதிக்க அநேக புண்யவான்கள் எதிர்பார்த்திருப்பார்கள்.

ஸுஷுப்தியின்பம் ஸமாதியின்பத்துடன் ஒப்பிடப் பட்டாலும் இரண்டிற்கும் மிகுந்த பேதமுளது. ஸுஷுப்தியின்பம் அஞ்ஞானத்துடன் கலந்து அநுபவதசையில் அறியப்படாமலிருந்து தூங்கி எழுந்தபிறகு "நான் ஆநந்தமாய்த் தூங்கினேன், ஒன்றும் தெரியவில்லை" என்று நினைப்பு உண்டாகும்போது, ஒரு ஆனந்தம் முன் அநுபவிக்கப்பட்டதாக அநுமானித்து அறியவேண்டியிருக்கிறது. அநுபவிக்கப்படாத ஒருவிஷயம் நினைவுக்கு வரமாட்டாதன்றோ? அதில் ஒன்றும் தெரியவில்லை என்ற நினைவு கலந்திருப்பதனால் அந்த ஆனந்தம் அறியாமை என்ற அஞ்ஞானத்துடன் கலந்திருப்பதாகவே வெளியாகிறது. ஸமாதியின்பம் அப்படியல்ல. அநுபவிக்கும்போதே அது அறியப்படுமாகையால் ஞானத்துடன் கலந்திருக்கிறது. உலகத்தில் எல்லோராலும் விரும்பப்படுவது இன்பமே அல்லது துன்பமல்ல. அதைவிட உலகத்தோரால் விரும்பப்படும் உயர்ந்தபொருள் வேறு ஒன்றுமில்லை. அது அறியப்படாத நிலைமையில் அஞ்ஞானத்துடன் சேர்த்து அநுபவிக்கப்படுவதில் யாதொரு பிரயோஜனமும் இல்லை. ஒரு வஸ்துவின் யோக்யதையை அறியாதவனிடம் அந்தவஸ்து இருப்பதனால் அவனுக்கு அது பிரயோஜனப்படாதன்றோ? ஆதலால் ஸுஷுப்தி இன்பம், இருந்தும் இல்லாததுபோன்றதே. எந்த இன்பம் அநுபவிக்கும்போதே அறியப்பட்டு அதனால் மனிதர் விரும்பிய ஜன்மப் பிரயோஜனமாகியபலன் அடையப்படுகிறதோ,

அவ்விதமான இன்பம் ஸமாதிநிலைமையில்தான் இடைய றுது அனுபவிக்கப்படும். இம்மாதிரியாகமுதற்படியிலிருந்து கடைசிப்படிவரையுள்ள எட்டு அங்கங்களும் பூர்ணமாய் ஸித்தியானபிறகுதான் அதற்கு யோகம் என்ற பெயர் வழங்கப்பெறும். இதனை அஷ்டாங்கயோகம் என்றும், ஹடயோகம் என்றும் கூறுவார் பெரியார். ஹடயோகம் என்பதற்கு ஹ (ஸூர்யன்) ட (சந்திரன்) என்ற பிராண, அபான வாயுக்களை அடக்கிச் சேர்க்கின்றது என்று பொருள். பிறநாட்டினர் தற்காலம் கண்டுபிடித்ததாகக் கூறப்பெறும் மனோவசியசாஸ்திரம் முதலியன, ஹிந்துக் கள் வெகுகாலமாகக் கையாண்டுவரும் அஷ்டாங்கயோக மென்னும் காட்டுத்தீயின் பொறிகள் போன்றன. முற் கூறிய ஸமாதி ஸம்ப்ரஜ்ஞாதம் (தன்னறிவறிந்தது) எனப் படும். அது ஸித்தியானவனுக்குண்டாகும் பலவிதமான சக்திகள் கீழ்வரும் தாயுமானவர்ஸ்வாமி * பாடலில் கூறப் படுவன :—

‡ கந்துக மதக்கரியை வசமாய் நடத்தலாம்
கரடி § வன்புலி வாயையும்
கட்டலாம் ஒருசிங்க முதுகின்மேற் கொள்ளலாம்
† கட்செவி யெடுத்தாட்டலாம்
‡ வெந்தழலின் இரதம்வைத்து ஐந்துலோகத்தையும்
¶ வேதித்து விற்றுண்ணலாம்

---

* தேஜோமயானந்தம், பாடல் 8. ‡ பந்துபோல் துள்ளு கின்றதாகிய § வலிமையான † கண்களையே செவிகளாயுடைய தாகிய பாம்பு. ‡ வெதும்பிய நெருப்பில், தாம்ரம் முதலியவற்றை யும் பொன்னுக்கக்கூடிய ரஸவாதவித்தை, ¶ மாற்றி.

வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்
　* விண்ணவரை யேவல்கொளலாம்
† சந்ததமு மிளமையோடிருக்கலாம் மற்றொரு
　சரீரத்தினும் புகுதலாம்
சலமேல் நடக்கலாம் கனல்மேலிருக்கலாம்
　§ தன்னிகரில் ஸித்திபெறலாம்
சிந்தையையடக்கியே சும்மாவிருக்கின்ற
　திறமரிது சத்தாகியென்
சித்தமிசை குடிகொண்ட வறிவானதெய்வமே
　தேஜோமயானந்தமே.

அப்பாசுரத்தில்கூறியுள்ள ஸித்திகளெல்லாம் மோக்ஷ ஸித்திக்கு இடையூறுகளாகநினைத்து நாயின் கக்கலைப் போன்று அவற்றை வெறுத்துத்தள்ளி அஸம்ப்ரஜ்ஞாத (தன்னறிவறியாத) ஈரறிவும் ஓரறிவாய்க்கலந்த ஸமாதியிற் பிடிவாதமாய்ப் பழக ஆரம்பித்துவிடவேண்டும். ஏனெனில் ஸகுண ஸமாதியோடு நிற்பவன் ஒருஸமயம், தூங்கியெழுந்தவன் பழையவாஸனையால் பழைய கார்யங்களிலேயே செல்லுகிறவன்போன்று, மனத்தினிடம் எங்கேயாவது சிறிது ஒட்டிக்கொண்டிருக்கும் பழவினையின் வாஸனையினால் தூண்டப்பட்டு திரும்ப ஜன்மமெடுக்கக்கூடிய பழைய பழக்கமான கார்யங்களிற்புக வந்துவிடுவானன்றோ? முற்கூறிய இரண்டுஸமாதிகளும் முறையே ஸபீஜம், நிர்பீஜம் ஸாலம்பம், நிராலம்பம் ஸகுணம், நிர்க்குணம்

---

* ஆகாச ஸஞ்சாரிகளான தேவர்களை, † எப்போதும் § தனக்கு நிகரில்லாத.

ஸமனஸ்கம், அமனஸ்கம் ஸவிகல்பம், நிர்விகல்பம் என்ற யோகங்களாகக் கூறப்படுவன.

பிரம்மப் பிரதிபிம்பமாகிய ஸகுண ஈசுவரஉபாஸனையைவிட்டு பிம்பமாகிய நிர்க்குண பிரம்மத்தினிடம் மனதைச்செலுத்தி ஸமாதிசெய்யும்போது, தனிஸத்வகுணத்துடன் துன்பங்கலவாத இன்பமுற்றிருக்கும் அம்மனமும் அங்கு யாதொரு ஆலம்பம் (பிடிப்பு) விகல்பம் (பேதம்) இன்றி நாசமாய்விடுகிறது. அப்போது ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் வேற்றுமையைக் காட்டக்கூடிய பீஜம் (விதை) ஆகிய மனம் இல்லாமையால் அப்புறம் அந்த ஜீவனுக்கு பரப்பிரம்மத்தைவிட்டுத் திரும்பித் தனியாகப் பிரிந்துவருகையே கிடையாது. "சிந்தையையடக்கியே சும்மாவிருக்கின்ற திறமரிது" என்பதனால் அந்த மனோநாசமாவதற்கு ஸகலமான ஸித்திகளினுண்டாகும் மகிழ்ச்சியையும் அதனாலுண்டாகும் பற்பல சிந்தைகளையுமடக்குவதுதான் ஸாதகமாகுமென்றும், அதன்பிறகு அறிவோடு அறிவு செரிந்து பேரின்பக்கடலில் கலந்து ஆனந்த மயமாயிருப்பதையே "சும்மாவிருக்கின்ற" என்ற பதத்தின் பொருளாக எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் மகா யோகியான தாயுமானவர் காட்டியிருக்கின்றார், அதுவே ராஜயோகமாகும். ஸமீபகாலத்தில் யோகமகிமையைஉலகத்தினர்கட்கு அநுபவவாயிலாக விளக்கிக்காட்டிய ஒரு பெரியாரைப்பற்றி இதன் பின், சிறிதெடுத்துரைக்கின்றனம்.

---

## ஸதாசிவ பிரம்மேந்திர யோகீந்திரர்.

சுமார் எழுபது வருஷங்கட்கு முன் "ஸதாசிவ பிரம்மேந்திரர்" என்ற பெரிய யோகீசுவரர் இருந்தார். அவர் பெரும்பாலும் அகண்ட காவேரி நதியினது இரு கரைகளிலுமுள்ள தோப்புகளிலேயே அவதூத (வஸ்திரமில்லாதவ) ராக ஸஞ்சரித்துக்கொண்டு அடிக்கடி ஸமாதியிலிருந்துவிடுவார். அவரிடமிருந்து தோன்றிய பற்பல யோக ஸித்திகளைப் பிரத்யக்ஷமாய்ப் பார்த்தவர்கள் சொல்ல, அவற்றைக் கேட்டவர்கள் இன்னமும் அங்கு இருக்கின்றனர். அவற்றில் சிலவற்றை இங்கு கூறுவாம்.

ஈரோடு பக்கமுள்ள கொடுமுடி க்ஷேத்திரத்தில் காவிரியாற்றில் ஒரு ஸமயம் ஸமாதியிலிருந்த பிரம்மேந்திரரை மூடிக்கொண்டு ஜலப்பிரவாகம் ஏராளமாய் வந்துவிட்டது. அப்போது அங்குள்ளார் அவரைத் தூக்கி எழுப்ப எவ்வளவோ முயன்றும் பலிக்கவில்லை. பிறகு "பிரம்மேந்திரர் ஸமுத்திரம் சென்றிருப்பார்" என்றே ஜனங்கள் தீர்மானித்தனர். ஒரு வருஷமானபிறகு கோடையில் அந்தவிடத்தில் ஜனங்கள் மணற்றுப்பறிக்க ஆரம்பித்தனர். அப்போது ஒருவனது மண்வெட்டியின் முனையில் சிறிது இரத்தம் கண்டது. பிறகு யாவரும் கைகளாலேயே மண்ணைப் பறிக்க, முன் பத்மாஸனமிட்டபடியே அதேயிடத்தில் அசையாது வீற்றிருக்கும் பிரம்மேந்திரரைப் பார்த்து அடங்காத ஆச்சர்யமுற்றனர். ஆற்றுவெள்ளத்தால் மரத்தைப் பெயர்க்க முடியுமேயல்லாது மலையைப் பெயர்க்க முடியுமோ? யோகியினது சரீரம் சுவாஸபந்தத்தால் மலைபோல கனத்திருக்குமன்றோ?

பின் ஒரு ஸமயம் பிரம்மேந்திரர் நடுப்பகலில் ஸமாதி கலைந்து பசியினால் இரு கைகளையும் ஏந்திக்கொண்டு, கரு வூரில் மனைவியுடன் ஊஞ்சலாடிக்கொண்டிருக்கும் ஒரு மகம்மதியன் வீட்டிற்குள் நுழைந்து அவன் முன்பாக வந்து நின்றார். அவது தராக விருக்குமவரைப்பார்த்த மகம் மதியன் மிகுந்த சினங்கொண்டு வாள் எடுத்து பிரம்மேந் திரரது இரு கைகளையும் வெட்டிச் சாய்த்தான். அதனைப் பொருட்படுத்தாமல் வாய்பேசாது திரும்பி வெளியே செல்லும் பிரம்மேந்திரரைப் பார்த்த மகம்மதியன் "வந்த வர் ஒரு பெரிய ஞானியாகவிருக்கவேண்டும்" என்று தீர்மானித்து அவரைப் பின்தொடர்ந்தான். அவருக்குத் திரும்பவும் முன்போலவே இரு கைகளும் உடனே வளர்ந்துவிட்டதையும் பார்த்து மேலும் வியப்புகொண்டு வேகமாய் ஓடி அவரைக் கட்டிப்பிடித்து மகம்மதியன் மன்னிப்பு கேட்டுக்கொண்டு தனக்கு ஞானோபதேசஞ் செய்ய அவரிடம் மன்றாடி வேண்டிக்கொண்டான். அவ னது பக்திக்கிணங்கிய பிரம்மேந்திரர் ஒரு துளி மண்ணைக் கிள்ளி எடுத்து அவன் நாவில்போடவே அவனும் அது முதல் துறவியாய் அநேக பாடல்கள் அத்வைதபரமாகத் தமிழில் சொரிந்திருப்பதை இன்றும் கிடைக்கக்காணலாம்.

கருவூருக்கு நேர்வடகிழக்கில் ஆறு மைல்களுக்கப் பால் அகண்டகாவேரி தீரத்திலுள்ள நெ (நே) ரூர் என்ற க்ஷேத்திரத்திலுள்ளவர்களிடம் சில மாஸங்கட்கு முன்ன மேயே பிரம்மேந்தரர் ஒரு ஸமயத்தைக்குறிப்பிட்டு "இவ் வூரில் தான் எனது கடைசி ஸமாதி நடைபெறப் போவ தால் அதற்குவேண்டியவற்றுடன் ஆயத்தமாயிருக்கவேண்

டும்" என்று ஆஜ்ஞாபித்துப் போயிருந்தார். அவ்வூரார் அவ்வண்ணமே வஸித்தமா யிருந்தனர். பிரம்மேந்திரர் குறித்த தினத்தில் கூறிய விநாடி கழிந்ததும் வராததால் யாவரும் தியங்கியிருந்தனர். அப்போது ஒருவன் ஸமாதிக் காகத் தோண்டியுள்ள குழியினண்டையிற்போய் அவர் அங்கு யோகாஸனமிட்டு வீற்றிருப்பதைக்கண்டுகூறினான். பிறகு மற்றவர் யாவரும் வந்து பார்த்து "வேறொருவர் காணாமல் உலகத்துலாவலாம்" என்றபடி யோகீசுவரர் குறித்த விநாடியிலேயே நமக்குத்தெரியாமல் ஸூக்ஷ்மமார்க்கம் பற்றி வெகு வேகமாய் அங்கு வந்திருக்கலாமென்று தீர்மானித்தனர். இவ்விதமாக பிரம்மேந்த்ரவிஜயம் முழுதும் ஒரு தனிபுஸ்தகமாயெழுதி வெளியிட வேண்டியது அவசியம்.

சிருங்ககிரி மடம் தற்போதியஸந்நிதானத்திற்கு முந்தியிருந்த ஜகத்குரு "அபிநவஸச்சிதாநந்தந்ருஸிஹ்மபாரதீ" பகவத் பாதாசார்ய ஸ்வாமிகள் பிரம்மேந்திரரது மகிமையைப்பற்றி முன்னமேயே நன்குணர்ந்தவர்களாகையால் அவரது ஸமாதி ஸ்தலத்திற்சென்று அற்புதமான அநேக சுலோகங்களால் "ஸதாசிவ பிரம்மேந்திர ஸ்துதி" என்ற தலையங்கத்துடன் செய்திருக்கும் ஸ்தோத்ரம், பிரம்மேந்திரரது பெருமையை விளக்குவதோடு அவரிடம் ஸ்வாமிகளுக்குள்ள பக்தியே, அதனைப் படித்துப் பார்ப்பவரிடத்தும் பிரதிபலிக்கும்படியான பான்மையுற்றிருக்கிறது.

அதுவும் பிரம்மேந்திரரியற்றியுள்ள யோக ஸூத்ர, பிரம்மஸூத்ரவிருத்தி (எளிதானஉரை) கள், ஆத்மவித்யா விலாஸம் முதலிய சிறியநூல்கள் ஆகிய இவையும் ஸ்வாமிகளுத்திரவின்படி ஸ்ரீரங்கம் "வாணீ விலாஸிநீ" அச்சுக்

கூடத்தில் அச்சியற்றப்பெற்றிருப்பதால் அவை யாவும் அவ்வச்சுக்கூட அதிபரிடமிருந்து எளிய விலைக்குக் கிடைக்கப்பெறலாம்.

நெரூர் க்ஷேத்திரத்தில் காவிரியாற்றின் கரையோரமாக பிரம்மேந்திரர் ஸமாதியான ஸ்தலத்தில் அவருத்தரவிட்டிருந்தபடி நடப்பட்ட பில்வ விருக்ஷம் இப்போதும் வெகு சிரத்தையுடன் பாதுகாக்கப்பட்டு சாகோபசாகையாய் செழித்து வளர்ந்திருக்கிறது. ஈசுவரனைப்போன்று அதனை பக்தர்கள் போற்றி வணங்குகின்றனர். தொண்டமான் புதுக்கோட்டை மகாராஜா, தனது தீராத வயிற்றுவலியைப் பார்த்த மாத்திரத்தில் தீர்த்துவைத்தவரான பிரம்மேந்திரரிடம் தனக்குண்டான பக்தியை வெளியிட அவரது ஜீவதசையில் எவ்வளவோ கைங்கர்யங்கள் செய்துப், அவற்றையெல்லாம் பிரம்மேந்திரர் லக்ஷ்யம்செய்யாமலிருந்ததுபற்றி அவரது ஸமாதி ஸ்தலத்திற்கருகில் கட்டுவித்த சிவாலயத்தில் ஆராதனம் முதலியன இப்போதும் சிறப்பாய் நடப்பன. இப்போது சில வருஷங்களாக சங்கர ஜயந்தி உத்ஸவமும் அதனை ஒட்டிவரும் பிரம்மேந்திர ஜயந்தி உத்ஸவமும் அவரது ஸமாதி ஸ்தலத்தில் லக்ஷ அர்ச்சனை உத்ஸவமும் அவ்வூரில் பத்துநாட்களில் வெகு விமரிசையாக நடைபெற்றுவருவன. நிற்க.

முற்கூறிய ராஜயோகம் வேதாந்த விசாரணையினாலேயே ஸித்திபெற வேண்டியதாகையால் அதற்கு ஸாதனமாகிய ஐந்து தர்சனங்கள் கூறியபின்னர் ஆறுவதாகிய வேதாந்த தர்சனம் இனி கூறப்படும்.

## வேதாந்தி மதம்.

வேதங்களின் முடிவாகிய வேதாந்தத்தின் தாத்பர்யத்தை ஆதாரமாகக்கொண்டு வியாஸபகவான் இயற்றியுள்ள ஸூத்திரங்கட்கு "பிரம்ம மீமாம்ஸா" என்று பெயர். "கர்மமே ஈசுவரன்" என்று ஸித்தாந்தப்படுத்தி ஜைமினிமுனிவர்கூறியுள்ள கர்மமீமாம்ஸா சாஸ்திரத்தைக் கண்டித்து, கர்மம் ஜடமாவதால் அதனை இயக்கி நடத்த ஒரு சேதனன் வேண்டுவது அவசியமாதல்பற்றி "பிரம்மமே ஈசுவரன்" என்று நிரூபிப்பது பிரம்ம மீமாம்ஸா எனப்படும். கர்மத்தைப்பற்றி முன்னர் கூறியது பூர்வ மீமாம்ஸா என்றும் பிரம்மத்தைப்பற்றி பின்னர் கூறியது உத்தர மீமாம்ஸா என்றும் வழங்கப்பெறுவன. வேதாந்த தாத்பர்யமாகிய பிரம்ம மீமாம்ஸா தர்சனத்தை முக்கியமாய்க்கொண்டவர் வேதாந்திகளாவர். அவரது கொள்கை வேதாந்தி மதமெனப்படும். அதற்கு சில மகான்கள் சிற்சில ஸித்தாந்தங்களில் சில காரணம்பற்றி அபிப்பிராய பேதமுற்று பாஷ்யம் (விரிவுரை) அருளியிருக்கின்றனர். ஆதலால் வேதாந்திமதம் முக்யமாய் மூவகைப்படும். அது த்வைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம் என்பன. வைசேஷிகம் முதல் யோகமீராகவுள்ள முற்கூறிய ஐவகை ஆஸ்திகமதங்களில் மூவகையான வேதாந்திமதத்தினரும், அபிப்பிராய பேதமில்லாதவர். அவரெல்லோரும் தாம் நிரூபிக்கவேண்டிய வேதாந்த தர்சனத்திற்கு அவற்றை ஒரே விதமாக ஸதானமாயேற்றுக்கொண்டவர். ஆனாலும் ஈசுவரபக்தி, பரமாத்ம ஸ்வரூப பாவனை முதலிய மோக்ஷ உபாயங்களிலும் "மோக்ஷம் இன்னது" என்ற ஸித்தாந்

தாந்தத்திலும் வேறுபட்டிருக்கின்றனர். அவ்வேற்றுமையை விளக்கிக்காட்டவே அவர்களது மதங்கள் அடியில் நிரூபிக்கப்படுவன.

---

## த்வைதம்.

" த்வைதம் " என்பது இரண்டாகயிருத்தல், அல்லது பேதமுற்றிருத்தல் என்று பொருள்படும். பிரம்ம மீமாம்ஸா ஸூத்திரங்கட்கு த்வைதபரமாக பாஷ்யமருளியவர் ஸ்ரீ மத்வாசார்யர். அவரது கொள்கையாவது :— இப்பிரபஞ்சத்தில் ஐந்துவித பேதங்கள் காணப்படுவன. அவை 1. ஜீவனுக்கும் ஈசுவரனுக்குமுள்ள பேதமாகிய ஜீவேசுவர பேதம் 2. ஜடத்திற்கும் ஈசுவரனுக்குமுள்ள பேதமாகிய ஜடேசுவரபேதம் 3. ஜடத்திற்கும் ஜீவனுக்குமுள்ள பேதமாகிய ஜடஜீவபேதம் 4. ஜீவர்களுள்ளும் ஒவ்வொருவர்க்கும் தனித்தனியுள்ள பேதமாகிய ஜீவபரஸ்பரபேதம் 5. ஜடபதார்த்தங்களுள் ஒவ்வொன்றிற்கும் தனித்தனி பேதமாகிய ஜடபரஸ்பர பேதம் என்பன.

பிரம்மா, சிவன், இந்திரன் முதலிய தேவர்கள் யாவரும் க்ஷரர்கள் (அழிவுறக்கூடிய சரீரமுற்றவர்கள்). இலக்ஷ்மி என்ற மகாதேவி அக்ஷரை (அழிவுறாத சரீரமுடையவள்). அவளைவிட மகாவிஷ்ணு சிறந்தவர். அவர் தன்வசமாயிருப்பவர். எல்லையில்லாத அனேக சக்திகள் வாய்ந்தவர். கரைகடந்த அறிவும் ஆனந்தமும் பெற்றவர். அவர் எப்போதும் எவ்விடத்தும் யாவராலும் எவ்வகையாலும் அழியப்பெறாதவர். ஸர்வகுண ஸம்பூர்ணர்.

நித்யமாகவிருப்பவர். அதனால் ஸர்வ தேவர்களும் கீழ்ப் படிந்து அவர் வசமாயிருக்கின்றனர். காணப்படும் இந்தப் பிரபஞ்சம் உண்மையாக நமக்குத் தோன்றிக்கொண்டிருப் பதால் ஸத்யமானது. பிரபஞ்சத்தினின்றும் விஷ்ணு, பேதமுற்றவர் என்பது நிச்சயம். பற்பலவிதமான ஏற்றத் தாழ்வுள்ள ஜீவர்கள் யாவரும் விஷ்ணுவினது கிங்கரர் (வேலைக்காரர்). பிரத்யக்ஷம், அநுமானம், சப்தம் என மூன்றுப் பிரமாணங்களுள் சப்தப் பிரமாணமாகிய ஸமஸ் தமான வேத, வேதாந்தங்களால் அவர் அறியவேண்டிய வர். அவரையறிந்து அவரிடம்போய் எல்லையில்லாத ஆத்மானந்த சுகத்தை அநுபவிப்பதே முக்தி. அதற்கு ஸாதனமாயிருப்பது நிர்மலமான பக்திதான்.

ஆத்மாநந்தத்தின் தாரதம்ய முறையானது தைத்ரீய * உபநிஷத்தில் கூறப்படுகிறது:-"திடமான சரீரமுற்று சிற ந்தபலமும் ஆரோக்யமும் பெற்று பூர்ணமாக அத்யயனம் (வேதமோதல்)செய்து யௌவனவயதுடன் இந்தபூமிமுழு மைக்கும் அதிபதியாக இருந்து அனுபவிக்கும் ஆனந்தம் ஒருமனுஷ்யானந்தம். மனுஷ்யானந்தம் நூறுகொண்டது மனுஷ்ய கந்தர்வானந்தம். அது நூறுகொண்டது ஒரு தேவகந்தர்வானந்தம். அதுநூறுகொண்டது ஒரு பிதிரு தேவானந்தம். அதுநூறுகொண்டது ஒருஆஜாநஜ (இயற் கையில் தேவராய்ப்பிறந்தவரான தேவானந்தம். அதுநூறு கொண்டது கர்ம (புண்யகர்மத்தால் தேவராய்ச் சென்றவ ரான) தேவானந்தம். அதுநூறுகொண்டது ஒருதேவானந்

* அத்தியாயம் 2. அநுவாகம் 9.

தம். அது நூறுகொண்டது ஒருஇந்திரானந்தம். அது நூறு கொண்டது ஒரு பிரகஸ்பதியானந்தம். அது நூறுகொண்டது ஒரு பிரஜாபதியானந்தம். அது நூறுகொண்டது ஒரு பிரம்மானந்தம். இவ்விதமாக ஆனந்தத்தின் பெருமையை அநுபவத்தில்அறிகிற புருஷன் இவ்வுலகத்தைவிடும்போது முதலில் ஆத்மாவாக பாவிக்கப்பட்டிருந்த அன்னமய கோசத்திலிருந்துநழுவி ப்ராணமய கோசத்திற் பிரவேசித்தும், பிறகு அதினின்று நழுவி மனோமய கோசத்திலும், அதனின்றும் விஜ்ஞானமயகோசத்திலும், அதனின்றும் ஆனந்தமய கோசத்திலும் வரிசையாகப் பிரவேசித்துக் கடைசியாக எல்லாவற்றையும்ஒழித்து மனம் வாக்குகளுக்கெட்டாத பிரம்மானந்தத்தை யடைந்தபிறகு எதனிடமிருந்தும் பயமில்லாதவனாகிறான் ” எனப்படுகிறது.

தத்வம் இரண்டு விதம். அவை ஸ்வதந்திரம், அஸ்வதந்திரம் என்பன. நிர்த்தோஷனாகவிருப்பவனும் ஸமஸ்தஸத்குணபரிபூர்ணனுமானபகவான் விஷ்ணு ஸ்வதந்திரன். மற்றது அஸ்வதந்திரம். ஜீவனும் ஈசுவரனும் எப்போதும் வேறுபட்டிருப்பவர். பக்ஷியும் அதுகட்டுண்ட கூடும் பரஸ்பரம் வேறாகயிருப்பனவன்றோ? அனேகவிதமானவிருக்ஷங்களினின்றுண்டாகும் பழங்களின் சுவைகள் எப்படி ஒன்றாக இருக்கமுடியும்? நதிகளும் ஸமுத்ரமும் வேறுதானே? உவர்நீர்க்கடலும சுத்த ஜலக்கடலும் ஒன்று என்பது எப்போதாவது பொருந்துமா? ரூபம், ரஸம், கந்தம், சப்தம், ஸ்பர்சம் என்ற ஐந்து விஷயங்களும் வெவ்வேறாகயிருப்பன. கள்ளனும அவன் களவுண்ட வஸ்துவும் எப்போதும் வேறுதானே? ஆகையால் ஜீவேசுவரர்களுக்கும் ஜீவர்

களுக்கும் ஐக்கியம் உண்டாகிறதில்லை. மகாவிஷ்ணு ஸகலப் பிராணிகளுடைய மனத்தில் ஸூக்ஷ்மரூபியாக வஸித்துக்கொண்டு கார்யங்கள் எல்லாவற்றிலும் அவரவர் பூர்வஜன்ம கர்மங்களுக்கேற்பப் பிரேரகனாயிருந்து ஏவிக்கொண்டிருக்கிறார். அவர் மனத்திலுள்ள பாபங்களை அபகரிப்பதால் ஹரி யெனப்படுவார். மந்த புத்தியுள்ளவர்கள் இவ்விதம் ஸூக்ஷ்மமாயிருக்கும் ஜீவேசுவர பேதத்தை அறிகிறதில்லை. அதனை அறிந்தவன் ஸம்ஸாரத்தினின்றும் விடுபடுகிறான். அறியாதவன் பந்தமடைகிறான். இந்த மதத்தில், பின் கூறப்பெறும் வைஷ்ணவ விசிஷ்டாத்வைத மதத்தில் நிரூபிப்பதுபோன்றே முக்தி பெற்றவர்களது இலக்ஷணம் அறிந்துகொள்ளவேண்டும்.

இந்த மதத்தில் முக்திபெற விரும்பியவர் வீண் ஆடம்பரமாகிய டம்பமான கார்யங்களைக் களைந்து பிரவணத்திலேயே கருத்துகொண்டு அஷ்டாங்க யோக நிஷ்டர்களாகவிருப்பார். ஆராதிக்கப்படும் பாரதீரமணன் (பிரம்மா), முக்யப்பிராணன் (ஹநுமான்) முதலிய அந்தந்த தேவதைகளிடம் அந்தர்யாமியாகவிருக்கும் ஸர்வோத்தமனாகிய ஹரியினிடமே மனதைச் செலுத்தியவராயிருப்பார். விஷ்ணுவினது கதாசிரவணம், நாம ஸங்கீர்த்தனம், ஆராதனம் முதலியவற்றால் அவரது அனுக்கிரகம் பெற முயற்சிப்பார். வைஷ்ணவ விசிஷ்டாத்வைதிகள் போன்றே ஜீவனுக்கு அணுத்வம், தாஸத்வம் முதலியனவும் பிரபஞ்ச பேதத்திற்கு ஸத்யத்வமும் உள்ளனவாக அங்கீகரித்திருப்பார். "பகவானது முதல் உருவம் ஹநுமான், இரண்டாவது உருவம் பீமன், மூன்றாவது உருவம்

நன் (நிறைந்த அறிவுள்ளவன்) என்ற ஆசார்
று அந்தந்த உருவங்களை ஸதா அநுஸந்தானம்
ண்டிருப்பார். பகவத் வந்தனம், பக்த வந்த
சார்ய ஸேவனம் முதலியவற்றால் பக்தியைத்
திக் கொண்டிருப்பார். ஸர்வமும் வாஸுதே
று எங்கும் அவனையே பாவித்துத் தியானித்துக்
ப்பார். இவ்விதமாகயிருக்கும் பரமபாகவதர்கள்
திற்கும் வேறுபட்ட ஆத்மதத்வத்தைப் பிரத்
பகவானது அநுக்ரஹவசத்தால் ஸர்வ பந்தங்
ம் விடுபட்டு பகவத் ஸன்னிதியடைந்து அந்
போகத்துடன் நித்யானந்தமனுபவிக்கின்றனர்.
த்வைதமதத்தின் தத்வ ஆராய்ச்சி எனப்படும்.

---

## விசிஷ்டாத்வைதம்.

தம் என்பது இரண்டு; இரண்டற்றது அத்
ஒன்றுகவிருப்பது அது. விசிஷ்டர் (சேர்ந்த
டைய அத்வைதம் விசிஷ்டத்வைதமெனப்படும்.
தைப் படைப்பதற்கு முன் பகவான் ஸூக்ஷ்ம
சித் அசித்துக்களுடன் கூடினவனுகவும்,
பிறகு ஸ்தூலமான சித் அசித்துக்களுடன் கூடின
ருக்கிறுன். சித் என்ற சேதனங்களும் அசித்
சேதனங்களும் அடங்கின பிரபஞ்சம் முழுதும்
டைய சரீரம். அதனில் அவன் எப்போதும்
மி (உள்ஸஞ்சாரி) யாக இருந்துவருகின்றுன்.
ன் என்ற ஒருவனுடைய பால்யத்திலும் யௌவ

னத்திலுமுள்ள சரீரத்தில் 'சிறிது' 'பெரிது' என்ற அளவு மாறுபட்டிருப்பதேயல்லாது அதன் அங்கவடிவங்களின் அமைப்பு அதுவே. அதனில் குடிகொண்டிருக்கும் ஆத்ம ஸ்வரூபமும் அதுதான். தேவதத்தன் என்பானும் அவனே. அன்றி மற்றொருவனன்று. அது போன்று படைப்பிற்கு முன் ஸூக்ஷ்ம சித் அசித் விசிஷ்ட (கூடியவ) னாய் சிறிதான பிரபஞ்சத்துடன் சேர்ந்திருந்த பகவானும் படைத்தபின் ஸ்தூல சித் அசித் விசிஷ்டனாய் பெரிதான பிரபஞ்சத்துடன் சேர்ந்திருக்கும் பகவானும் ஒருவனே. அவனது சரீரத்தின் அளவு வேறுபாடேயன்றி அதில் வஸிக்கும் பகவான் இரண்டாக மாறுபடுபவனல்லன். இவ்விதம் ஸூக்ஷ்ம சித் அசித் விசிஷ்ட பகவானுடையவும் ஸ்தூல சித் அசித் விசிஷ்ட பகவானுடையவும் ஒற்றுமையுள்ளது விசிஷ்டாத்வைத மெனப்படும். அந்த பகவான் வைஷ்ணவர்களால் விஷ்ணுவென்றும், சைவர்களால் சிவன் என்றும் கொண்டாடப்படுகிறான். விசிஷ்டாத்வைதம் வைஷ்ணவம், சைவம் என இருவகைப்படும். இதன் பின் வைஷ்ணவம் கூறப்படுகிறது.

---

## வைஷ்ணவ விசிஷ்டாத்வைதம்.

பிரம்ம ஸூத்ரத்திற்கு வைஷ்ணவ விசிஷ்டாத்வைதத்தை ஸித்தாந்தமாக விளக்கிக்காட்டி பாஷ்யமருளிய ஸ்ரீ ராமானுஜாசார்யர். அவர்தாம் வைஷ்ணவ ஆசார்யர்களுள் தலைமைபெற்றவர். அவரது பாஷ்யத்திற்கூறும் கொள்கையாவது :—

மகாவிஷ்ணுவினது ஐசுவர்யங்களில் முக்கியமானது ஸ்ரீவைகுண்ட நகரம். அது பரமபதம், வ்யோமம், ஆகாசம், அப்பிராகிருதலோகம், ஆனந்தலோகம், அயோத்யை முதலிய பல பதங்களால் வழங்கப்பெறும். அதில் "ஆனந்தம்" என்ற திருநாமங்கொண்ட திவ்ய ஆலயம் ஒன்று இருக்கிறது. அதற்குள் "மகாமணி மண்டபம்" என்ற ஒரு ஸபை இருக்கிறது. அது அனேகாயிரம் இரத்தின ஸ்தம்பங்களால் தாங்கப்படுவது. அதில், ஆயிரம் படங்களிலுள்ள இரத்தினங்களின் ஒளிவீசப்பெற்றவனும் பேரறிவிற்குச் சிறந்த நிதியாகவிருப்பவனுமான ஆதிசேஷன் வட்டமிட்டுச் சயனித்துக்கொண்டிருக்கிறான். அவன்பேரில் தர்மவடிவமான திவ்ய ஸிம்மாஸனமிருக்கிறது. அதன்பேரில் எட்டு இதழ்களுள்ள தாமரஸ புஷ்பமிருக்கிறது. அதில் விமலன் முதலிய பரம பக்தர்கள் வெண்சாமரத்தை வீசிக்கொண்டிருக்கின்றனர். இத்துணை வைபவத்துடன் அத்தாமரையில் நம்பெருமானர் (மகாவிஷ்ணு) வீற்றிருக்கின்றனர். அவர் மனம் வாக்கு கட்கு எட்டாத மட்டில்லா மகிமை யுற்றவர். அவர்தாம் ஸூக்ஷ்ம சித் அசித் விசிஷ்ட காரண வஸ்துவாகக் கருதப்படுகின்றார். ஸ்தூல சித் அசித்துக்களுடன் கூடிய பிரபஞ்சம் அவரது கார்யம். அந்த காரண புருஷந்தான் எங்கும் வியாபகன். நித்யமாகவுள்ளவன். நிர்த்தோஷனுகவிருப்பவன். தனக்கு உயர்ந்தவனில்லாதவன். தேஜோமயமாகவிருப்பவன். நிகரில்லாத அழகுவாய்ந்த வடிவ வனப்பையுற்றவன். திவ்யமங்கள விக்ரஹ (சரீர) த்துடன் கூடினவன். எல்லா விருப்பங்களையுமடைந்தவன். அவன்

அடையவேண்டியது ஒன்றுமில்லை. அளவற்ற கல்யாண குணங்கள் நிறையப்பெற்றவன். அவன் ஸ்ரீமந்நாராயணன் என்றும், பரமாத்மாவென்றும் அழைக்கப்படுகிறவன். பக்தி, பிரபத்தி, (சரண்புகுதல்) வைராக்யமுற்றவர்களை பிறவிப் பெருங்கடலிலிருந்து கடத்திவைப்பவன். அன்பர்களிடம் கரைகடந்த கருணையைக் கடைப்பிடித்தவன். அவர்களுக்கு யாதொரு ஆபத்தும்வராமல்காத்து அருள் புரிகின்றவன். தன்னிடம் வந்து சேர்ந்தவர்களுக்குத் துன்பம் கலவாத இன்பமளிப்பவன். அவனிடம் போய்ச் சேர விரும்பியவர் எவ்விதமிருப்பாரெனில்?

எப்போதும் பரமபக்தியிலும் ஈசுவரகுண அநுஸந்தானத்திலும் ஈடுபட்டு ஆழ்ந்திருப்பார். அதனாற்றான் பரமபக்தர்கள் ஆழ்வார் எனப்படுவார். டம்பம், கர்வம் முதலிய துர்க்குணங்களைக் களைந்திருப்பார். யமம், நியமம் முதலிய யோகஸாதனங்களைப் பெற்றிருப்பார். பிரணவத்திலேயே முக்கியமாய் மனதைச் செலுத்தியிருப்பார். கர்மபலன்களில் இச்சையை ஒழித்திருப்பார். தினந்தோறும் புரியவேண்டிய பஞ்சமகாயஜ்ஞங்களை யதாசக்தி அனுஷ்டித்துவருவார். எல்லாம் வாஸுதேவன் என்று எங்கும் அந்த பகவானையே மனத்தில் நினைத்துக்கொண்டிருப்பார். 'பக்தி' அதிகாரத்திற் கூறிய சிரவணம் கீர்த்தனம் முதலிய ஒன்பதுவிதமான பக்திகளை விஷ்ணுவினிடம் உறுதிப்படுத்திக் கொண்டிருப்பார். பகவானது ஆஜ்ஞை, அநுஜ்ஞை, (ஸம்மதி) கைங்கர்யம் முதலியவற்றில் பற்று உற்றிருப்பார். பகவத் பாகவத ஆசார்ய அபசாரங்கள் சிறிதும் சேராதவண்ணம் அதிக ஜாக்கிரதை

யாகவிருப்பார். அவனின்றி அணுவும் அசையாதாகையால "கார்யங்கள் யாவும் பகவானாலேயே நடைபெற்று வருவன" என்று தீர்மானித்து, நான் கர்த்தா (செய்கிறவன்) போக்தா (அனுபவிக்கின்றவன்) என்ற அபிமானத்தை முற்றும் துறந்திருப்பார். முற்கூறியவிதமாயிருக்கின்ற மகான்கள் ஸகல ஜகத்திற்கும் வேறுபட்ட பரமாத்மாவின் ஸாக்ஷாத்காரம் பெற்று, ஸகல பந்தங்களையும் உதறிவிட்டு பகவத் ஸன்னிதியடைந்து, ஸகல போக போக்யங்களுடன்கூடி, பரமபுருஷன்போலவே நித்யானந்தமநுபவிக்கிறார்கள். * உபநிஷத்தில் "பிரம்மரூபியும் ஜகத்காரணனும் கர்த்தாவும் ஈசனும் தங்கமயமான நிறமுடையவனுமாக இருக்கிற பரம புருஷனை எப்போது பார்க்கிறானோ; அப்போது அந்த மகா ஞானியானவன் புண்ய பாபங்களை உதறிவிட்டு ஒருவித களங்கமற்றவனாகப்பரமபுருஷனுடைய ஸாம்யத்தை அடைகிறான்" எனப்படுகிறது.

யதீந்திரமத தீபிகையில் முக்தனின் இலக்ஷணம் கூறப்படுவதாவது:—"முக்திபெறவேண்டிய முற்கூறிய உபாயங்களைத் தழுவினவன் தேகத்தின் முடிவில் புண்யத்தை மித்திரனிடமும் பாபத்தை சத்துருவினிடமும் ஒப்புவித்துவிடுகிறான். பிறகு ஹிருதயத்திலுள்ள பரமாத்மாவினிடம் மனம், வாக்கு முதலிய இந்திரியங்களை ஒழிவடையச்செய்து ஸுஷும்நாநாடியிற்பிரவேசித்து அதன் வழியாகச்சிரஸிலுள்ள பிரம்மரந்திரத்தினின்றும் வெளிக்கிளம்புகிறான். பிறகு ஹிருதய பரமாத்மாவுடன் சூரிய

* மூன்றாம் முண்டகம் கண்டம் 1. ஸூக்தம் 3.

கிரணத்தின்வழியாக அக்னி உலகத்திற்குப் போகிறான். அதன்பிறகு வழியில் தினம், பூர்வபக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம் முதலியவற்றின் அபிமானி தேவதைகளாலும், வாயுவினாலும் உபசரிக்கப் பெற்று சூர்ய மண்டலத்தைப் பேதித்துக்கொண்டு நக்ஷத்திர மார்க்கமாக ஸௌர்ய உலகத்திற்குப் போகிறான். பிறகு சந்திரன், இந்திரன், வருணன், பிரஜாபதி என்ற பரிவாரக்கூட்டத்தார் மரியாதையாக அவனுக்கு வழிகாட்டுகின்றனர். பிறகு வேறுசில உலகங்களைக்கடந்து வைகுண்டத்தின் எல்லைக்கு அப்புறமுள்ள விரஜாநதியைத் தாண்டி அங்கு ஸூக்ஷ்ம சரீரத்தையும் களைந்துவிடுகிறான். அதன் பிறகு அமானவர் (மனிதரல்லாதவர்) திவ்விய கைகளினால் தொடப்பட்டு பிரகிருதி ஸம்பந்தமில்லாத திவ்ய விக்கிரஹத்துடன் கூடுகிறான். பிறகு பிரம்ம அலங்காரத்தால் அலங்கரிக்கப் பெற்று சதுர்புஜங்கள் (நான்குகைகள்) கொண்டவனாய் நகர பரிபாலகர்களான இந்திரன் முதலியவர்களின் ஸம்மதம்பெற்று ஸ்ரீ வைகுண்ட நகரத்திற் பிரவேசிக்கிறான். பிறகு கொடி மா வஸ்திரங்களாற் சுற்றிலும் அலங்கரித்த நீண்ட பிராகாரத்துடன் கூடிய கோபுரத்தைத் தாண்டி அங்குள்ள 'ஐரம்மதம்' என்ற அமிருத தடாகத்தையும், 'ஸோமஸவனம்' என்ற அரசு விருக்ஷத்தையும் பார்க்கிறான். அங்கு கைகளில் புஷ்பஹாரங்களை வைத்துக்கொண்டிருக்கின்ற ஐநூறு அப்ஸரஸ்திரீகளால் பிரம்மகந்தம் முதலியவற்றைக்கொண்டு உபசரிக்கப்பெறுகிறான். பிறகு அங்குள்ள அனந்த, கருட, விஷ்வக்ஸேனர் முதலிய பக்த சிரோமணிகளை நமஸ்கரித்து அவர்களாலும் பகுமானிக்கப்

பெற்று மகாமணி மண்டபத்தை அடைகிறான். அங்கு பர்யங்க (கட்டில்) த்தின் ஸமீபத்திலுள்ள தனது ஆசார் யர்களைப் பார்த்து ஸேவிக்கிறான். அதன்பிறகு கொஞ்சம் போய் அங்கு தர்ம மயமான பீடத்தின்பேரிலுள்ள தாம ரஸபுஷ்பத்தில் விமலன் முதலிய பரமபாகவதர்கள் இடை சூழ்ந்திருக்கப்பெற்றவரும், ஸ்ரீ, பூமி, நீளாதேவிகள் ஸமே தராக எழுந்தருளியிருப்பவருமான ஸ்ரீமந் நாராயணனை தர்சனம் செய்கிறான். அங்கு பகவான் அப்போது நான்கு கைகளிலும் பாஞ்சஜன்யம், ஸுதர்சனம், கௌ மோதகி, நந்தகம் என்று முறையே பெயர்கொண்ட சங் கம், சக்கிரம், கதை, கட்கம் (கத்தி) என்ற திவ்ய ஆயுதங் களை வைத்துக்கொண்டிருக்கிறார். சிரஸில் திவ்ய ரத்ன கிரீடமும், காதுகளில் மகரகுண்டலங்களும், கழுத்தில் தாமோதரம முதலிய ஹாரங்களும், தோள்களில் கேயூரங் (தோள்வளை) களும், கைகளில் கடகங் (கைவளை) களும், மார்பில் கௌஸ்துப இரத்தினமும், இடுப்பில் பீதாம்பர (பொன்னிறமான வஸ்திர) மும் கால்களில் நூபுரங் (பாத சிலம்பு) களும் ஆகிய அபரிமிதமான திவ்ய ஆபரணங் களால் அலக்கரிக்கப் பெற்றிருக்கும் அழகை அடிமுதல் முடிவரை அடிக்கடிப் பார்த்துப் பார்த்து ஆனந்தம் கொள்ளுகிறான். பிறகு பர்யங்கத்தின்பேரில் பாதங்களை வைத்து ஏறி பக்கத்திலவந்த பக்தனாகிய அந்த முக்தனை அளவற்ற கல்யாண குணநிதியான பகவான் எடுத்து தனது மடியில் வைத்துக்கொள்ளுகிறார். பிறகு பகவான் "நீயார்" என்று அவனிடம் கேட்க அவன் "பிரம்மப் பிரகாரமாக இருக்கிறேன" என்று பதில் சொன்னவுடன்

பகவான் அவனை கடாக்ஷிக்கின்றார். பிறகு அவன் பக வானுடைய அநுபவத்தாலுண்டான அபரிமிதமான ஸந் தோஷம் ததும்பப்பெறுகிறான். அதன் பிறகு பகவா னுடைய ஸர்வகால, ஸர்வதேச, ஸர்வ அவஸ்தை (நிலைமை) களிலும் அவர்க்குரிய ஸகல கைங்கர்ய உபசாரங்களைச் செய்ய சிரத்தையுள்ளவனாகிறான். பிறகு எட்டுவிதமான கல்யாண * குணங்களுடன் கூடி அவ்விடத்திலேயே முடி வில்லாத பிரம்ம அநுபவமுற்றிருக்கிறான். அவன்தான் முக்தன் என அழைக்கப்படுவான். அங்கு அவன் இஷ்ட மான பற்பல சரீரங்களெடுக்கவும் சக்தியுற்றவனாகிறான். அவ்விதமாக முக்தி பெற்றவன் திரும்ப இங்குவருகிறா னில்லை" எனப்படுகிறது.

ஸர்வதர்சன ஸங்கிரஹம் என்ற கிரந்தத்திலுள்ள ராமாநுஜ தர்சனத்தில் கூறப்படுவதாவது:—" ஈசுவரன், சித், அசித் என்ற மூன்று பதார்த்தங்களாக பகவான் இருக்கிறான். ஈசுவரன், ஸகல உலகங்களுக்கும் ஆதி காரணன். ஸர்வ ஜீவன்களையும் அடக்கி ஆளுகின்றவன். அளவிலாத மங்கள குணங்களமையப் பெற்றவன். பர பிரம்ம ரூபியாகவிருப்பவன். சித் என்பவன் ஜீவன். அவன் ஈசுவரனது அம்சத்தில், வாலான் என்ற நெல்லி னது வாலில் பதினாயிரத்தில் ஒரு பங்காகப் பிரிக்கப்பட்ட அம்சம்போன்று, அவ்வளவு சிறிய அம்சம் பெற்றவன்.

---

* 1. பாபமின்மை, 2. பசியின்மை, 3. தாகமின்மை, 4. சோக மின்மை, 5. ஜரையின்மை, 6. மரணமின்மை, 7, ஸத்யகாமம், 8. ஸத்ய ஸங்கல்பம் என்பன.

அவன் அனேகவிதமாயிருப்பவன். அசித் என்பது ஜீவர்களின் ஸ்தூலசரீரமாகிய ஜடம். பக்தர்களிடம் அன்புள்ள பகவான் அவர்களது இஷ்டத்தைப் பூரிக்க அந்தந்த அதிகாரிகட் குற்றவாறு பல சரீரங்களெடுத்துக் கொள்கிறான். அவை அர்ச்சை, விபவம், வ்யூகம், ஸூக்ஷ்மம், அந்தர்யாமி என்பன. பிரதிமை முதலியன அர்ச்சா (அர்ச்சனைக்குரிய) சரீரம். அவதாரங்கள் விபவ (மகிமையுள்ள) சரீரம். ஸங்கர்ஷணன், வாஸுதேவன், ப்ரத்யும்னன், அநிருத்தன் என்ற பகவானுடைய நான்குவிதமான சரீரங்கள் வ்யூஹ (வகுத்துத் தொகுத்த) சரீரம். அந் நான்குனுள் ஸத்குணங்கள் நிறைந்த பிரம்ம ரூபியான வாஸுதேவன் என்ற சரீரம் மாத்திரம் ஸூக்ஷ்மசரீரம். ஜீவர்களுள் இருந்து எல்லாவற்றையும் செய்ய ஏவுகிறது அந்தர்யாமி சரீரம். அர்ச்சா விக்ரஹ உபாஸனையினால் பாபங்கள் நசித்து ஜீவன் விபவ விக்ரஹத்தை உபாஸிக்க அதிகாரியாவான். இவ்விதம் முறையே முந்திய விக்ரஹங்களின் உபாஸனை பிந்திய விக்ரஹ உபாஸனைக்குரிய தகுதியைக் கொடுக்கிறது.

ஜீவத்தன்மையடைந்த மனிதர் தினந்தோறும் சுருதி, ஸ்மிருதி முதலியவற்றிற் கூறிய அவரவர்க்குரிய தர்மங்களையும் விடாது அநுஸரித்துக்கொண்டு முற்கூறிய ஐந்து விதமான உபாஸனைகளைப் படிப்படியாய் ஏற்று ஒழுங்காய்ச் செய்துவந்தால் காலக்கிரமத்தில் வாஸுதேவன் அவர்கட்குப் பிரஸன்ன (பிரத்யக்ஷ) னாகிறான். அப்பொழுது உடனே பழவினைகள் நிறைந்த பைகளின்கூட்ட வடிவமாயிருக்கும் அவித்யை அவர்களைவிட்டு விலகி விடு

கிறது. முன் ஸம்ஸார அநுபவத்தில் அவித்யையால் மறைக்கப்பெற்று உள்ளே அமிழ்ந்துகிடந்தனவும், ஆத்மாவிற்கு இயற்கையாயுள்ளனவுமான ஸர்வஜ்ஞத்வம், ஸர்வவ்யாபகத்வம் முதலிய ஈசுவரனுக்குள்ளனபோன்ற எண்ணிறந்த கல்யாண குணங்கள் எழும்பி நிற்கின்றன. அப்போது முக்தர்களுக்கும் ஈசுவரனுக்குமுள்ள குணங்களில் தாரதம்யமில்லை. ஆனால் ஸர்வகர்த்திருத்வம் (எல்லோரையும் படைத்தல்) என்ற குணம் ஒன்றுதான் முக்தனைவிட ஈசுவரனுக்கு அதிகமாயுள்ளது. அப்போது முக்தர்கள், ஸர்வசேஷி (ஸ்வாமி) யான ஸ்ரீமந் நாராயணரூபியாகவுள்ள பரபிரம்மத்தினிடம் சேஷர் (கிங்கார்) களாகவிருந்துகொண்டு ஸர்வஜ்ஞனை வாஸுதேவனோடுகூட ஸகல அநுபவங்களையும் அநுபவிக்கின்றார்கள்" எனப்படுகிறது. இதுதான் வைஷ்ணவ விசிஷ்டாத்வைத மதஸித்தாந்தம் எனப்படும். இதன் பின் சைவ விசிஷ்டாத்வைதம் கூறப்படும்.

---

## சைவ விசிஷ்டாத்வைதம்.

முற்கூறிய பிரம்ம ஸூத்திரங்கட்கு சைவ விசிஷ்டாத்வைதத்தை ஸித்தாந்தமாய்க்கொண்டு சிவபரமாக பாஷ்யமருளியவர் ஸ்ரீ கண்டாசார்யர். அவரெடுத்துக்கூறும் கொள்கையாவது :—உலகத்திலுள்ள பதார்த்தங்கள் பதி, பசு, பாசம் என மூவகையாவன, அவற்றுள் பதியென்பான், எல்லாமுணர்ந்திருத்தல் (ஸர்வஜ்ஞத்வம்), எல்லாவற்றிற்கும் கர்த்தாவாகவிருத்தல், எல்லா சக்திகளும் பொருந்தியிருத்தல் முதலிய குணங்களுடன் கூடின பரம

ன். அவன் "பக்தர்களை அநுக்ரஹிக்கவேண்டும்" ன்று இச்சைகொண்டு கர்ம மலாதிகளின் ஸம்பந்தமற்ற ம் பிரகிருதி ஸம்பந்தமில்லாததும் வாக்கினால் நிரூபித்க் கூறமுடியாததுமான திவ்ய மங்கள விக்ரஹத்துடன் டியிருக்கிறான். அவன் ஸத்யோஜாதன், வாமதேவன், கோரன், தத்புருஷன், ஈசானன் என்ற ஐவகையான டிவமுற்று முறையே ஸ்ருஷ்டி, ஸ்திதி, லயம், திரோதா ம், அநுக்கிரஹம் என்ற ஐந்து கிருத்யங்களைச் செய்து நகிறான். அவை முறையே ஆக்கல், காத்தல், ஒடுக்கல், றைத்தல், அருள்புரிதல் என்ற பொருளுள்ளன.

பசு என்பான், ஜீவாத்மா. அவன் அணுரூபமாக ிருதய குகையில் இருப்பவன். ஆயினும் சந்தனத்துளி, ரத்தின் ஒருபக்கத்திலிருந்தபோதினும் அது அச்சரீரம் ழுதும் ஸந்தோஷப்படுத்துவதுபோன்று ஞான சக்தி ல் சரீரம் முழுதும் வியாபித்துக்கொண்டிருக்கிறான். வ்விதமாக ஜீவ அணுக்கள் அநேகங்களிருக்கின்றன.

பாசமென்பது, பரமசிவனிடம்போய் அவன் வடிவம் பான்ற வடிவமுற்றிருத்தலாகிய ஸாரூப்ய முக்தியைப் பறத் தடையாகவிருப்பது. அது கர்மம், மலம், மாயை, ரோதம் என நான்கு வகைப்படும். அவற்றுள் கர்மம் ன்பது, ஜீவாத்மாக்கள் பலனை விரும்பிச் செய்ததும் சய்கின்றதுமான ஸத், அஸத் என்ற இரண்டுவிதப் ரவிர்த்திகளாலாய அறுஷியான தர்ம அதர்ம ரூபமா ள்ளது. மலம் என்பது "நான் செய்கிறேன், நான் நுபவிக்கிறேன்" என்றனை போன்ற ஸகல ஸம்ஸார

பந்தங்களை ஜீவன் அநுபவிக்கும்படிச்செய்து அவனுக்குச் சொந்தமாயுள்ள நித்யஜ்ஞாநாநந்த ஸ்வரூபத்தை மறைத்து வைத்திருப்பது. அது ஆவரணசக்தியென்றும். அவித்யை என்றும் கூறப்படும். தாம்ரத்திற் பற்றின களிம்புபோன்று அது ஜீவனைப்பற்றின களங்கமாகும். இவ்விரண்டும் ஜீவன்களிடமுள்ளன. மாயை என்பது, உலகங்களையெல்லாம் வகுத்துக் காட்டுவதும் பிறகு அவற்றை ஒடுக்குவதுமான கார்யங்கட்கு அநுகூலமாக விருப்பது. பின்னும் எல்லாவற்றிற்கும் மூலகாரணமாக விருத்தல், அறிவின்மை, வேற்றுருவமாக மாறுதல், ஈசன் வசமாகவிருத்தல் முதலிய குணங்களுற்றது. நிரோதமென்பது எல்லா ஜீவன்களையும் அநுக்ரஹித்துத் தன்னிடம் அடக்கிக்கொள்ளுவது இவையிரண்டும் சிவனிடமுள்ளன.

ஸம்ஸாரத்திற் கட்டுறச்செய்திருக்கின்ற ஸகலகர்மங்களையும் அநுபவிப்பதனுலும், ஸந்யாஸம், யோகம், ஞானம் இவற்றினுலும் நாசஞ்செய்து, பிறகு இயற்கைமலமென்ற ஒரு கர்மத்தின் பந்தத்தைமாத்திரம் ஏற்றுக்கொண்டு ஸர்வ பாபங்களையும் ஒழித்திருக்கின்ற மகாத்மாக்களை பரமசிவன் "இவர் மோக்ஷம் பெற தகுதியானவர்" என்று அநுக்ரஹித்து வித்யேசுவரராது எட்டுவித ஸ்தானங்களை அடைவிக்கிறுர். 1. அனந்தன் 2. ஸூக்ஷ்மன் 3. சிவோத்தமன் 4. ஏகநேத்ரன் 5. ஏகருத்திரன் 6. திரிமூர்த்திகன் 7. ஸ்ரீகண்டன் 8. சிகண்டி என்பர் எண் வகையான வித்யேசுவரர். ஸர்வ கர்மங்கள் நசித்தும் அவற்றின் வாசனையாகிய களங்கம் நசிக்காதவர்களை அநுக்ரஹித்து பரமசிவன் ஏழு கோடி மகாமந்த்ர

வடிவினர்களாகச் செய்திருக்கிறான். விசேஷ புண்யங்களி னாலாவது யோகத்தினாலாவது சைவ தீக்ஷயினாலாவது கர்மம், மலம், என்ற இருபாசங்களும் பக்வமானவர்கள் ஸகல ஸம்ஸாரத்தினின்றும் விடுபட்டு சிவபதம் என்ற முக்தி பெறுகிறார்கள். அப்பாசங்கள் பக்வமாகாதவர்கள் தத்தம் கர்மங்களுக்குத் தக்கபடி ஸ்தாவர, திர்யக், மனுஷ்ய, தேவ சரீரங்களைப்பெற்று வருந்துகிறார்கள். கர் மம், மலம், மாயை என்ற முப்பாசங்களும் பக்வமானவர் களை பரமசிவன் மண்டலி முதலிய பதினெண்மந்த்ரேசுவர ஸ்தானங்களை அடைவிக்கிறான். இவ்வித ஜீவாணுக்கள் அவரவர் முயற்சிக்குத் தக்கவாறு பற்பலவிதமான பேத முற்று தத்தம் தகுதிக்குரிய ஸ்தானங்களைப் பெறு கின்றனர். சிவனது வடிவம்போன்ற வடிவமுற்று ஸச் சிதானந்த பூர்ணனாயிருப்பதென்ற சிவ ஸாரூப்ய முக்தி தான் எல்லாவற்றிற்கும் சிறந்த ஸ்தான மாகையால் அதுவே மோக்ஷமெனப்படும். அதனை அடையவேண்டிய வர்கள் எவ்விதமிருப்பாரெனில்?

கர்வம், அகங்காரம், டம்பம் முதலிய துர்க்குணங் களைக் களைந்திருப்பார். சிவனையே முக்ய பராயண (அடையவேண்டிய சிறந்தஸ்தான)மாய்க்கொண்டுசிவார்ச் சனையே விரதமாயனுஷ்டிப்பார். "சிவன்தான் ஸர்வகார ணன், ஸர்வம் சிவமயம் ஜகத்" என்று எப்போதும் மனத் தில் அநுஸந்தானம் செய்துகொண்டிருப்பார், சிரவணம் முதலிய ஒன்பது விதமான பக்தியை பரமசிவனிடத்தி லேயே செலுத்தி அதனை திடப்படுத்திக்கொண்டிருப்பார். சைவசாஸ்திரத்திற்கூறியபடி சர்யாபாதத்தை யநுஸரித்து

சுருதி, ஸ்மிருதிகளில் விதித்த நித்யநைமித்திக கர்மஅநுஷ்டானங்களை நிஷ்காமமாக நடத்துவார். கிரியாபாதத்தைத் தழுவி சிவதீக்ஷாக்கிரமங்களை ஸாங்கமாய்ப்பெற்று பஞ்சாக்ஷரி ஜபத்தினால் சிவப்பிரஸாத (அநுக்ரஹ)த்தை ஸம்பாதித்துக்கொண்டிருப்பார். யோகபாதத்தைத்தழுவி யமம், நியமம் முதலிய யோகஸாதனங்களில் திடமான பழக்கம் செய்துகொண்டிருப்பார். ஜ்ஞான பாதத்தை யநுஸரித்து பதி, பசு, பாசம், மந்த்ரம், மந்த்ரேசுவரர் முதலியவர்களின் ஸ்வரூபம, மகிமை முதலியவற்றின் ஜ்ஞானத்தைத் தேடிக் கொள்ளுவார். பரமவைராக்ய பதவியின் உன்னதகோடியில் ஸஞ்சரித்துக்கொண்டிருப்பார். முற்கூறிய விதமாயுள்ள சிவ பாகவதர்கள் பரமபக்தியினால் பிறவிப்பெருங்கடலைக் கடந்து பரசிவனது ஸாரூப்யமுக்திபெற்று பேரானந்த முற்றிருப்பார். இதுதான் சைவ விசிஷ்டாத்வைத மதக் கொள்கை. இதன்பிறகு அத்வைத மதம் கூறப்படும்.

---

## அத்வைதம்.

த்வைதமென்பது இரண்டு என்ற பேதமுற்றிருத்தலாகும். உலகத்தில் ஒவ்வொரு வஸ்துவிற்கும் மூன்றுவிதமான பேதங்களுள. அவை ஸஜாதீயபேதம், விஜாதீய பேதம், ஸ்வகதபேதம என்பன. தன்னைப்போன்றதான ஸமான ஜாதியுற்ற வஸ்துவினது பேதம் ஸஜாதீயபேதமெனப்படும். தன்னைப்போன்றில்லாத மாறுதலான ஜாதியுற்ற வஸ்துவினது பேதம் விஜாதீயபேதமெனப்படும். தன்னையடைந்த அவயவங்களது பேதம் ஸ்வகதபேதமெனப்படும். ஒரு விருக்ஷத்திற்கு ஸஜாதீயமாகவுள்ளது,

விருக்ஷம். அதற்கு விஜாதீயமாகவுள்ளன,
டம் முதலியன. அதற்கு ஸ்வகத (தன்னை
அவயவங்களாகவுள்ளன, அதன் கிளை, இலை, பூ,
லியன. ஒரு விருக்ஷம் தன் இனத்திலுள்ள
விருக்ஷத்தைக் காட்டிலும் வேறுபட்டதாகவும்,
த்திலில்லாத குடம், மடம் முதலிய வஸ்துக்களை
பட்டதாகவும், தன்னிடமுள்ள கிளை இலை முத
றவிட தான் வேறுபட்டதாகவுமிருப்பதால் அத
ற்கூறிய மூன்று பேதங்களுமுள.

போன்று பரபிரம்மத்தினிடம் மூன்றுவிதமான
கிடையாதன. ஏனெனில்? பிரம்மம் போன்ற
ன்றொரு வஸ்து கிடையாது. பிரம்மத்திற்கு
ன வேறொரு வஸ்துவும் கிடையாது. பிரம்மத்
கங்கள்போன்று தோன்றிக் கொண்டிருக்கும்
ம் உலகங்களும் உண்மையை ஆராயும்போது
வரூபமாகவும் அதனிடம் மற்றவை பொய்யான
ற்றிருப்பனவாகவும் ஸித்தாந்தப் படுத்துவத
ார்த்தத்தில் (உண்மையில்) பிரம்மத்திற்கு எவ்
பவங்களும் கிடையா. ஆதலால் அது எவ்வித
நமற்றது என்பதால் அத்வைதம் (பேதங்களற்
ரப்படும். பிரம்மத்தை பேதங்களற்றதாக நிரூ
தமும் சாஸ்திரமும் அத்வைதமெனப்படும்.

மம் எப்போதும் எங்கும் எதுவாகவும் நிறைந்து
மாக இருப்பதால் இன்னகாலத்தில் இன்ன இடத்
ன வஸ்துவாகவுள்ளது என்று சுட்டிக்காட்டும்

நிலைமையாக காலம், தேசம், வஸ்துவென்ற மூன்றுவித மான பரிச்சேதம் (அளவு) இல்லாதது. த்வம்ஸாபாவம் (பின் இன்மை) அன்யோன்யாபாவம் (ஒன்றுக்கொன்று இன்மை) அத்யந்தாபாவம் (எப்போது மின்மை) என்ற மூன்றுவிதமான அபாவங்களற்றது. உபநிஷத்தில் * "பிரம்மம் ஒன்றே, இரண்டற்றது" எனப்படுகிறது. பிரம்மம் நித்ய சுத்த புத்த முக்த பரிபூர்ண ஸ்வரூபமாக வுள்ளது. என்றுமிருப்பது நித்யம். நிர்மலமாயிருப்பது சுத்தம். அறிவுவடிவமாயிருப்பது புத்தம். எதற்கும் கட்டுப்படாது விட்டிருப்பது முக்தம். நிறைந்திருப்பது பரிபூர்ணம். ஜீவனும் இயற்கையில் அவ்விதமாகவே இருப்பதை அறியாமையால் மறந்து, தான் மறைந்து கொண்டிருக்கிறான். அவனது அறியாமை என்ற திரை போன்ற மறைவை மாற்றுவதற்காகவே ஏற்பட்ட சாஸ் திரம் அத்வைதமாகும்.

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யர் பிரம்ம ஸூத்திரங் கட்கு அத்வைதபரமாக பாஷ்யமருளியிருக்கின்றார். அவ ரது கொள்கைகளாவன:— பிரம்மத்தினிடம் தோற்றமா யுள்ளது மூலப் பிரகிருதி. அது ஸத்வகுணப் பிரதான மானபோது மாயையாகும். ரஜோகுணப் பிரதானமான போது அவித்யையாகும். பிரம்மம் மாயையில் பிரதிபலித் தால் ஈசுவரன் என்றும் அவித்யையில் பிரதிபலித்தால் ஜீவன் என்றும் பெயர் பெறும். மாயை, ஈசுவரன் வசமா யிருந்துகொண்டு அவன் நினைத்தபோது மறைந்து அவனை

* சாந்தோக்யம், ப்ரச்னம் 6. கண்டம் 2.

பிரம்மத்தினிடம் சேர்ப்பிவிக்கும் தன்மையுள்ளது. அவித்யை அப்படியல்ல. அது ஜீவர்களின் அநாதியான கர்ம வசத்தால் பல கோடி உருவங்களாகமாறி அவற்றில் பிரதிபலித்த ஜீவர்களை தன் வசமாக்கி ஸம்ஸார சக்ரத்தில் வைத்துச் சுழற்றிக் கொண்டிருக்கிறது. எப்படியெனில்? அவித்யை என்பது அஜ்ஞானமாகும். அதனால் அவிவேகமும், அதனால் அபிமானமும், அதனால் ராகம், த்வேஷம் முதலியனவும், அவற்றால் கர்மங்களும், அவற்றால் சரீரங்களும், அவற்றால் துக்கங்களும், ஜீவர்களுக்கு உண்டாய்க் கொண்டுவருகின்றன.

மனிதர் முயற்சியினால் தத்வஜ்ஞானத்தை குருமுகமாகவும் சாஸ்திர வாயிலாவுகம் ஸம்பாதிப்பது பரோக்ஷ (நேரிலில்லாத) ஜ்ஞானமாகும். சொந்த அநுபவத்திற்குக் கொண்டுவரும்போது, அதுவே அபரோக்ஷ (நேரிலுள்ள)ஜ்ஞானமாகும். அது பிரம்மமாகிய பரமாத்மாவும் ஜீவாத்மாவும் வேறு என்ற பேத புத்தியாகிய அஜ்ஞானத்தை நாசமாக்கும். அஜ்ஞானம் நசித்தவுடன் அவிவேகம் நாசமாகும். அதுதான் ஆத்ம தர்மங்களை அநாத்மாவினிடமும் அநாத்ம தர்மங்களை ஆத்மாவினிடமும் தோன்றச்செய்கிறது. ஆத்ம தர்மங்கள் ஸத்தாகிய என்றுமிருத்தல், சித்தாகிய அறிவு வடிவம், ஆனந்தவடிவம் என்பன. இவற்றை அநாத்மாவாகிய சரீரம், இந்திரியங்கள். மனம், புத்தி, பிராணன், வீடு, பணம், பெண்டுகளிடம் இருப்பனவாக மனிதர் நினைக்கின்றார். அநாத்ம தர்மங்களாகிய பருத்தல், சிறுத்தல், செவிடு, குருடு, டம்பம், கர்வம், மூப்பு, மரணம், வியாதி, துக்கம் முதலியன ஆத்மாவினிட

மிருப்பனவாக நினைக்கின்றார். அவ்விதம் நினைக்கக் காரணம், ஆத்மாவிற்கும் அநாத்மாவிற்குமுள்ள பரஸ்பரம் ஊடுருவிப் பாய்ந்திருக்கும் பற்றுதல் என்ற இதரேதர அத்யாஸமே. அதனை, பகுத்து அறிதல் என்ற விவேகத்தால் போக்கவேண்டும்.

அதன்பிறகு நான் செய்கிறேன், புஜிக்கிறேன், என்ற அகந்தை (அகப்பற்று) என்னுடைய வீடு, பணம் என்ற மமதை (புறப்பற்று) இவ்விரண்டுமாகிய அபிமானம் தொலையும். அதன்பிறகு அகந்தை, மமதைகள் மூலமாய் வந்த ராகம், துவேஷம், காமம், கோபம் முதலியன நசித்து விடுவன. அதன்பிறகு ராகத்துவேஷாதிகளால் தூண்டப்பட்டு செய்யப்பெறும் கர்மங்கள் இராதன. கர்மங்களில்லையேல் சரீரங்கள் உண்டாகா. சரீரங்களில்லாவிடில் துக்கங்கள் தொலைவன. துக்கங்கள் என்பன இதன் முதல் தொகுதியில் முதற்பாகத்தில் மோக்ஷம் என்ற அதிகாரத்தில் விளக்கிக் காட்டியுள்ள ஆத்யாத்மிகம், ஆதிதைவிகம், ஆதிபௌதிகம் என்ற தாபத்ரயமாவன. அவை:—பசி, தாகம், விகாரம், ஜனனம், மரணம், வியாதி, அதிக மழை, மழை யில்லாமை, பூகம்பம், இடி விழுதல், திருடர், துஷ்டர், புலி, சிங்கம், தேள், பாம்பு, முதலியவற்றால் ஏற்படும் துன்பங்கள். ஆத்மாவிற்கு செயற்கையால் வந்த துக்கங்கள் தொலைந்துபோனபிறகு இயற்கையாயுள்ள ஸச்சிதானந்த வடிவங்கள் பாசி நீங்கின சுத்த ஜலம் போன்றும், புகை நீங்கின தீச்சுடர் போன்றும், மேகம் நீங்கின ஸூர்யப்பிரகாசம் போன்றும் தோன்றுவன. உறைகளில் கட்டுண்டிருக்கும் ஜலம் அவற்றைப் பிடுங்கினபிறகு ஆற்று

ஜலத்துடன் கலந்து கொள்ளுவதுபோல ஜீவாத்மாவினிட முள்ள ஜீவத்வம் என்ற உறை நமது முயற்சியால் நீக்கப் படும்போது சுத்த ஆத்மாவாகி, பரமாத்மாவுடன் கலக் கின்றது. இதுதான் மோக்ஷ மெனப்படும். முன் விவேகத் தால் ஆத்மாவைப் பகுத்தறிய வேண்டுமெனக் கூறியுள் ளோம். அது எப்படியெனில் ?

" ஆத்மா ஐந்து கோசங்களைவிட வேறுபட்டவன் " (பஞ்சகோசவ்யதிரிக்தன்) என்ற அவனது இலக்ஷணத்தை இங்கு ஆராய்வோம். அன்ன மயம், பிராணமயம், மனோ மயம், விஜ்ஞானமயம், ஆநந்தமயம் என்பன ஐந்துகோசங் கள். பிதா மாதாக்களின் அன்ன விகாரமான சுக்ல சோணி தங்களது சேர்க்கையாலுண்டானதும் அன்னத்தினாலேயே வளருகின்றதுமான ஸ்தூல சரீரம், அன்னமயகோச மெனப்படும். ஐந்து கர்மேந்திரியங்களுடன் கூடின பிரா ணன், பிராணமயகோச மெனப்படும். ஐந்து ஜ்ஞானேந் திரியங்களுடன்கூடின மனமும், புத்தியும் முறையே மனோ மயகோசம், விஜ்ஞானமயகோச மெனப்படும். இம்மூன்று கோசங்களில் ஸூக்ஷ்மசரீரம் அடங்கும். பிரியம், மோதம், ப்ரமோதம் என்ற மனோவிருத்திகளும், அஜ்ஞானமும் சேர்ந்து ஆனந்தமயகோசமெனப்படும். இது காரணசரீர மாகும். ஜாகரத்தில் பணம் பெண்டு முதலிய இஷ்டமான வஸ்துக்களைப் பார்த்தவுடன் உண்டான ஸந்தோஷம் பிரியம். அந்த வஸ்துக்கள் கிடைத்தவுடன் உண்டாகும் ஸந்தோஷம் மோதம். அவற்றை அநுபவிக்கும்போதுண் டாகும் ஸந்தோஷம் ப்ரமோதம். நித்திரையில் தோன்று வது அஜ்ஞானம்.

"நான் ஜீவன், பாலன், பருத்தவன், சிறுத்தவன்" என்று அன்னமயகோச தர்மங்களை ஆத்மாவினிடம் ஆரோபித்து "எனது இந்த சரீரம் இருக்கிறது, விளங்குகிறது, பிரியமாயிருக்கிறது" என்று ஆத்மாவினிடமுள்ள ஸத், சித், ஆனந்த தர்மங்களை அன்னமய கோசத்தினிடம் ஆரோபித்துக்கொண்டிருக்கிறான். "பேசுகிறேன், போகிறேன்" என்று பேச்சு முதலிய பிராணமயகோச தர்மங்களை ஆத்மாவினிடமும் ஆத்ம தர்மங்களை பிராணமய கோசத்தினிடமும் "பார்க்கிறேன், கேட்கிறேன்" என்று பார்த்தல் கேட்டல் முதலிய மனோமயகோச தர்மங்களை ஆத்மாவினிடமும் ஆத்மாவினது தர்மங்களை அக்கோசத்தினிடமும் "நான் வித்வான், புத்திமான்" என்று கல்வித்திறம், அறிவு முதலிய விஜ்ஞானமயகோச தர்மங்களை ஆத்மாவினிடமும் ஆத்ம தர்மங்களை அதனிடமும் நான் அநுபவிக்கிறேன், ஸந்தோஷிக்கிறேன், ஒன்றுமறியாதவனாக இருக்கிறேன்" என்று அநுபவம், ஸந்தோஷம், அறியாமை முதலிய ஆனந்தமயகோச தர்மங்களை ஆத்மாவினிடமும் ஆத்மதர்மங்களை அதனிடமும் அவன் ஆரோபித்துக்கொண்டிருக்கிறான். இதுதான் இதரேதர அத்யாஸம்.

ஸ்தூல தேகத்தையே ஆத்மாவாகக் கூறமுடியாது. மரணத்திலும் தூக்கத்திலும் ஸ்தூல சரீரமிருந்தும் அறிவில்லையாகையால் அதனை அறிவு வடிவமான ஆத்மாவாகக் கொள்ளமுடியாது. நொண்டி, முடமானாலும் சரீரத்தில் அறிவு தோன்றுவதால் பிராணமய கோசமும் ஆத்மாவல்ல. குருடு, செவிடானாலும் அறிவிருப்பதால் மனோமய கோசமும் ஆத்மாவல்ல. கல்வித்திறம் முதலிய புத்தி

கார்யங்களில்லாதவனுக்கும் ஸாமான்ய அறிவிருப்பதால் விஜ்ஞானமய கோசமும் ஆத்மாவல்ல. பணம் முதலியன நாசமடைந்தாலும் அறிவு இருப்பதால் அவற்ருல் உண்டான ஸந்தோஷமென்ற ஆனந்தமயகோசமும் ஆத்மா வல்ல. அவற்றிற்கெல்லாம் ஸம்பந்தப்படாது வேறுபட்டிருக்கும் வஸ்துவே ஆத்மாவாகும்.

ஆத்மா ஐந்து கோசங்களைக் காட்டிலும் வேறுபட்டவன் (பஞ்சகோச வ்யதிரிக்தன்) மூன்று சரீரங்களைக்காட்டிலும் மாறுதலுள்ளவன் (சரீரத்ரய விலக்ஷணன்) நினைவு, கனவு நித்திரையென்ற மூன்று நிலைமைகளிலும் ஸாக்ஷியாகவிருப்பவன் (அவஸ்தாத்ரயஸாக்ஷி) ஸத் சித் ஆனந்த வடிவமாயுள்ளவன் (ஸச்சிதாநந்த ஸ்வரூபன்) என்பதாக ஆத்மாவிற்குக் கூறியுள்ள நான்குவிதமான இலக்ஷணங்களில் ஐந்து கோசங்களையும் ஆத்மாவையும் பகுத்தறிவதனுலேயே மூன்று சரீரங்களும் ஐந்துகோசங்களில் அடங்குவனபற்றி முதல் சொன்ன இரண்டு லக்ஷணங்களும் பொருந்துவன. பின் சொன்ன இரண்டு லக்ஷணங்களும் ஆத்மாவினிடம் இருப்பனவாக முன் கூறப்பட்டுள்ளன.

ரிக், யஜுஸ், ஸாம, அதர்வண வேதங்களில் ஜீவ பிரம்ம ஐக்கியத்தைக் கூறும் நான்கு மகா வாக்கியங்கள் முறையே கீழ் வருவன. "பிரஜ்ஞானம் பிரஹ்ம" "அஹம் ப்ரஹ்மாஸ்மி" "தத்துவமஸி" "அயமாத்மா பிரஹ்ம" என்பன; "சிறந்த அறிவே பிரம்மமாகும்" நான் பிரம்மமாக இருக்கிறேன்" "நீ அதுவாகிருய்" "இந்த ஆத்மா பிரம்மம்" என்பன முறையே அவற்றின் பொருட்

கள். இவற்றில் தத்துவமஸி என்பதற்கு சிற்றறிவுள்ள நீ, பேரறிவுள்ள அதுவாகிறாய் என்ற பொருள் தொக்கியிருக்கிறது. அந்த இந்த தேவதத்தன் (ஸோயம் தேவதத்த:) என்ற இடத்தில் அந்தக் காலத்தில் அந்த இடத்தில் இருந்த தேவதத்தனும், இந்தக்காலத்தில் இந்தவிடத்தில் இருக்கும் தேவதத்தனும் எப்படி ஒருவனாவான் என்ற கேள்வி உண்டாவதுபோன்று சிற்றறிவுள்ள ஜீவனும் பேரறிவுள்ள பிரம்மமும் எவ்விதம் ஒன்றாகும் என்ற கேள்விக்கு விடையாவது :—* விட்டும் விடாத இலக்கணையால் "அந்த இந்த தேவதத்தன்" என்றவிடத்தில் பொருள் ஒத்துவராத அந்த, இந்த என்ற அம்சங்களை விட்டும் தேவதத்தன் என்ற அம்சத்தைமாத்திரம் விடா

---

* பதங்களால் வாச்யமான அர்த்தம் பொருந்தாதவிடத்தில் இலக்கணை கல்பிக்கவேண்டும். அது விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டும்விடாத இலக்கணை என மூவகைப்படும். "கங்கையில் இடையர் தெரு" என்றவிடத்தில் கங்கை என்பதற்கு வாச்யார்த்தமான கங்காப்பிரவாகத்தில் தெருவிருப்பது பொருந்தாதாகையால் கங்கைக்கரை என்ற பொருள் எடுத்துக் கொள்ளவேண்டும். கங்கை என்பதற்குப் பிரவாகம் என்றபொருளை விட்டு கரை என்ற பொருள் எடுத்துக்கொள்ளப்படுவதால் இது விட்ட இலக்கணை. "காகங்களிடமிருந்து தயிரைக் காப்பாற்றுக" என்றவிடத்தில் காகங்கள்போன்று தயிரைக் குடிக்கும் பூனை முதலியவற்றினின்றும் காப்பாற்றுக என்று தான் சொன்னவன் கருத்து. ஆதலால் 'காக' என்பதற்கு வாச்யார்த்தமான காகங்கள் என்ற பொருளையும் விடாமல் பூனை முதலியன என்ற வேறு பொருளையும் எடுத்துக்கொள்ளவேண்டும். இது விடாத இலக்கணை. சில அம்சங்களை விட்டு சில அம்சங்களை விடாமல் எடுத்துக்கொள்வதாகிய "அந்த இந்த தேவதத்தன்" என்பது விட்டும் விடாத இலக்கணை. இது தர்க்க நூலார் துணிபு.

மனும் எடுத்துக்கொள்ளுவது போல சிற்றறிவுள்ள நீ பேரறிவுள்ள அதுவாகிறாய்'' என்ற இடத்தில் சிற்றறிவுள்ள, பேரறிவுள்ள என்ற அம்சங்களைவிட்டு நீ அதுவாகிறாய் என்பதை மாத்திரம் எடுத்துக்கொள்ள வேண்டும்.

முற்கூறிய "ஜீவபிரம்ம ஐக்யம்'' என்ற ஸாயுஜ்ய முக்தியைப் பெறவேண்டியவர் எவ்விதமிருப்பாரெனில்? ஸகலமான துர்க்குணங்களையும் களைந்து நிவிர்த்தி தர்மத்திற் கூறிய நற்குணங்களைக் கைப்பற்றி ஸகலமானப் பிராணிகளிடத்தும் ஸமபாவனை யுற்றிருப்பார். ஸ்வப்னத்தில் வாஸ்தவமாகத் தோன்றுவனவெல்லாம் ஜாகரத்தில் மறைவன போன்று வ்யவஹாரதசையில் ஸத்யமாகக் காணப்படும் ஸர்வ ஜகத்தும் பரமார்த்த தசை (உண்மையறிந்த நிலைமை) யில் பரமாத்ம வஸ்துவாகவே விளங்கும் என்ற தீர்மானத்தைத் திடப்படுத்திக் கொண்டிருப்பார். வ்யவஹார தசையில் மற்றவர்கள் போன்றே சிவனையும் விஷ்ணுவையும் ஸமமாக பாவித்து ஸகுண பிரம்ம உபாஸனை செய்துகொண்டிருப்பார். "பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகவே ஆகிறான்'' என்றது போன்றதான அபேத வேதாந்த வாக்யங்களை அடிக்கடி அநுஸந்தானம் செய்து அநுபவத்திற்குக் கொண்டுவருவார். 1. நல்ல எண்ணம் 2. விசாரணை 3. மனம் சிறுத்தல் 4. தனி ஸத்வ குணமுற்றிருத்தல் 5. மற்றதில் பற்றில்லாமை 6. வேறு பதார்த்தமின்மை 7. துர்யநிலையாகிய ஜ்ஞான பூமியிலிருத்தல் என்ற ஏழுவிதமான ஜ்ஞான ஸோபான (படிக்கட்டு) ங்களுள் ஏழாம் ஸோபானத்தில் வீற்றிருந்து பிரம்மானந்தத்தில் லயித்திருப்பார். ஆனால் அவர் ப்ராரப்த கர்ம

நன்றாகவும் ஸரியாகவும் தோன்றுவன மற்றவனுக்கு நேர் விரோதமாகத் தோன்றலாம். ஒருவன் புத்தியில் தோன்றும் தர்மம் மற்றொருவனுக்கு அதர்மமாகவும் அதர்மம் தர்மமாகவும் தோன்றக்கூடும். தர்க்கத்திலும் புத்தியிலும் சிறந்த ஒருவன் "ஈசுவரன் இல்லை" என்பதாக ஸ்தாபித்தால் அவனிலும் மேம்பட்டவன் "ஈசுவரன் உண்டு" என்று ஸ்தாபிப்பான். பின் ஒரு ஸமயம் அவனைக் காட்டிலும் வல்லவன் "ஈசுவரன் இல்லை" என்று ஸ்தாபிக்க முன் வருவான். இவ்விதம் வரம்பின்றி உலகம் நாஸ்திகமாயும் ஆஸ்திகமாயும் மாறி மாறிச் சுற்றிக்கொண்டிருந்தால் அது ஒரு நிலையில் நிற்கமாட்டாது. ஆதலால் ஆஸ்திக்யம் தர்மங்கள் மோக்ஷோபாயங்கள் இவற்றை என்றும் எவராலும் எதனாலும் எவ்வகையாலும் மாற்றக்கூடாதவண்ணம் நமது வேதம் வெளியிட்டிருக்கிறது. அதற்கு விரோதமாக நாஸ்திகமதத்தினர் பிரசாரம் செய்ததில் அனேகர் வேத மார்க்கத்தினின்றும் நழுவலாயினர்.

அச்சமயத்தில் பரமசிவன் அம்சமாக ஸ்ரீ நீலகண்டாசார்யர் அவதரித்து முற்கூறிய மதத்தினர்களுடன் பெரிய சபைகளில் வாதம் செய்து அவர்களை ஜயித்து வேத மார்க்கத்தை நிலைநிறுத்தினதுடன் அப்போது மங்கியிருந்த சைவ விசிஷ்டாத்வைத மதத்தைத் தழைக்கச் செய்தனர். தற்காலம் "ஸ்ரீகண்டபாஷ்யம்" என்ற தலையங்கமிட்ட பாஷ்யமே பிரும்ம ஸூத்திரத்திற்குச் சைவபரமாக நீலகண்டாசார்யர் அருளிய பாஷ்யமென்றும், நீலகண்டரும் ஸ்ரீகண்டரும் ஒருவரே என்றும் கூறுவர் சில பெரியார். அவ்வாசார்யர் காலத்திலேயே ஸ்ரீ சங்கராசார்ய

ரும் பரமசிவனது அம்சம் பெற்றவராய் அவதரித்து மீதமாயுள்ள நாஸ்திகமதத்தைக் கண்டித்து மற்றவர்களுக் குத் தெளிவாகத் தெரியாமலிருந்த அத்வைத மதத்தை அகில பாரதத்திலும் பரவச்செய்தனர். சுமார் ஆயிரம் வருஷங்கட்குப்பின்னர் ஸ்ரீ ராமாநுஜாசார்யர் ஆதிசேஷன் அம்சமூக அவதரித்து மலினமாயிருந்த வைஷ்ணவ விசிஷ் டாத்வைத மதத்தை உத்தாரணம் செய்தனர். அதற்குச் சுமார் இருநூறு ஆண்டுகட்குப் பின்னர் ஸ்ரீமத்வாசார் யர் ஆஞ்ஜநேயர் அம்சமாக அவதரித்து வைஷ்ணவ விசிஷ் டாத்வைதத்தில் சிற்சில பேதங்களைக்காட்டி விஷ்ணு பக்தி யையே விசேஷமாக விளங்கச் செய்தனர். முற்கூறிய நான்கு ஆசார்யர்களும் தத்தம் கொள்கைகளுக்கு ஸாதக மாக பிரம்ம ஸூத்திரத்திற்கும் சிலர் பகவத் கீதைக்கும் உபநிஷத்துகளுக்கும் தனித்தனி பாஷ்யமருளியிருக்கின் றனர். பிரம்ம ஸூத்ரம் ஸூத்ரப்ரஸ்தானமென்றும் உப நிஷத்துகள் சுருதி ப்ரஸ்தானமென்றும் பகவத் கீதை ஸ்மிருதி ப்ரஸ்தானமென்றும் அம்மூன்றிற்கும் ப்ரஸ்தா னத்ரயமென்றும் பெயர்கள் வழங்குவன. ப்ரஸ்தானம் என்பதற்கு ஜீவனை பரமாத்மஸ்தானத்திற்குப் பிரயாணப் படுத்தி வைக்கின்றது என்று பொருள். ஆசார்யர்கள் முற்கூறிய பாஷ்யங்களைத் தவிர அவரவர் ஸித்தாந்தங் களுக்குப் பொருத்தமாயுள்ள இலகுவான அனேக கிரந் தங்கள் இயற்றியிருக்கின்றனர்.

ரிஷிகள் காலத்தில் ஸகுணோபாஸகர், நிர்க்குணோ பாஸகர் என்ற இரண்டுவிதமான பிரிவினர்களே உள்ளவர். சிற்சில வேற்றுமைகளுடன் ஸகுணோபாஸனையைச் சிறப்

பித்தவர் ஸ்ரீ நீலகண்ட ராமானுஜ மத்வ ஆசார்யர்கள். நிர்க்குணோபாஸனையைவிளக்கிக்காட்டியவர் ஸ்ரீசங்கராசார்யர். உலகத்தில் பேதமும் அபேதமும் எப்போதும் உள்ளன. முற்கூறிய ஆசார்யர் பேதமதத்தையும் அபேதமதத்தையும் விளக்கவந்தனரே யன்றி புதிதாய் உண்டுபண்ணவந்தனரல்லர். ஓரே ஈசுவரன் பல ஆசார்யர்களாக அவதரித்து சிலர் பேதமதங்களையும் சிலர் அபேதமதங்களையும் தத்வமாகக் கூறுவாராறுல் இருட்டும் வெளிச்சமும் போன்று பேதமும் அபேதமும் பரஸ்பரம் விருத்த தர்மமாகையால் எவ்விதம் பொருந்துமென்ற கேள்வியுண்டாகிறது. அதற்கு ஸமாதானமாவது:—ஒரு ஜீவனுக்கு வ்யவஹாரதசையில் பேதமே ஸத்யமாகத் தோன்றுமென்றும், அவன் அப்போது பேதவாதி மதத்தினர் கொள்கைகளுக்குத்தான் உட்பட்டிருக்கவேண்டும் என்றும், அப்படியிருப்பவன் அவன் உபாஸிக்கும் சிவன் அல்லது விஷ்ணு இவர்களுடைய ஸாலோக்ய, ஸாமீப்ய, ஸாரூப்ய முக்திகளைப் பெறுகின்றனன் என்றுமுள்ள விஷயங்களை ஸ்ரீசங்கராசார்யர் மற்ற ஆசார்யர்களுடன் சேர்ந்து ஒப்புக்கொள்ளுகிறுர். முற்கூறிய விதமாக முக்தி பெற்றவனுக்குத் தன்படியே பரமாத்ம ஸாயுஜ்யமுக்தி காலக்கிரமத்தில் கிடைக்கின்றது. எப்படியெனில் தற்காலமுள்ள பிரம்மாவிற்கு நூறு வயதுகள் கழிந்தபின்னர் பிரம்மப் பிரளயமுண்டாகி பிரம்ம உலகமாகிய ஸத்ய உலகம் அழிவுறும்போது அதற்கு அதிபதியான பிரம்மாவுடன் அவரது பரிவாரங்களாகிய யாவரும் ஸாயுஜ்ய முக்திபெறுவது போன்று கைலாஸம், வைகுண்டமாகிய முறையே சிவன், விஷ்ணு உலகங்களுக்கும் ஒருஸமயம் பிரளயம்

ஏற்படும்போது அந்தந்த உலகங்கட்கு அதிபதிகளான அந்தந்த தேவதைகளுடன் அவரவரது ஸகலமான பரிவாரங்களும் பிரம்ம ஸாயுஜ்ய முக்தி பெறுகின்றனர். இது கிரம முக்தியாகும். தீவிர முயற்சியுள்ளவன் [illegible] தசையிலிருந்துகொண்டு ஸகுணத்தை யுபாஸித்து அதினின்றும் தேர்ச்சிபெற்று பரமார்த்த தசையிலிருந்து நிர்க்குணத்தை யுபாஸித்தால் அவனுக்கு அப்பிறவியிலேயே ஸாயுஜ்ய முக்தி கிடைக்கிறது. அது ஸத்யோ (உடன்) முக்தியாகும். இவ்விதம் ஸ்ரீ சங்கராசார்யரது கொள்கை. தீவிரமுயற்சியுள்ளவனுக்கு உடன் ஸாயுஜ்ய முக்தி கிடைப்பதும், ஸாரூப்ய முக்தி பெற்றவனுக்கு தீவிரமுயற்சியில்லாமலே காலக்கிரமப்படி ஸாயுஜ்ய முக்தி கிடைப்பதும் மற்ற ஆசார்யர்கள் கூறாமல் ஸாரூப்ய முக்தியே முடிவான முக்தியென்று தீர்மானப்படுத்தியிருப்பதின் கருத்து அந்தந்த அதிகாரிகளின் தாரதம்யத்திற்குத் தக்கபடி அவரவர் எளிதான வழிகளிற் பிரவேசித்து நின்று முயற்சித்து முன்னுக்கு வரவேண்டுமென்பதேயன்றி வேறல்ல. பல அவஸர பேதமாயுள்ள ஒரே ஈசுவரன், வேதாந்த மத ஸ்தாபனத்திற்காக பல ஆசார்யர்களாய் அவதரித்து ஜீவாத்மாக்களிடம் அபார கருணையினால் அருளிய பாஷ்யங்களுக்கு முற்கூறியவாறுள்ள ஒற்றுமையை எடுத்துக் கொள்ளவேண்டுமேயல்லாது நாம் வேற்றுமை புத்தியுடன் பரஸ்பரம் விரோதத்தைக் காட்டுவது ஈசுவரனுக்கு ஸம்மதமாகாது. சங்கராசார்யர் தமது ஸன்மைக்காக சிவன், விஷ்ணு ஸம்பந்தமான கணக்கற்ற ஸ்தோத்ரங்கள் கூறியிருப்பதைக் கவனிக்கும்போது அவர் ஸகுணோபாஸனையில் சிரத்தையில்லாதவனுக்கு நிர்க்குணோபாஸனை

ஸித்திக்கவே மாட்டாது என்பதை நன்கு உணர்த்துகிறார். ஆதலால் இருட்டும் வெளிச்சமும் காலபேதமுற்று இருப்பன போன்று விருத்த தர்மங்களாகிய பேத தத்வமும் அபேத தத்வமும் ஒரே ஜீவனுக்கு முறையே வ்யவஹார தசை, பரமார்த்த தசை என்ற வெவ்வேறு நிலைமைகளில் தோன்றக் கூடியனவாயிருப்பது பொருந்தாதன்றி.

முற்கூறிய விஷயங்கட்கு ஆதாரமாக கிருஷ்ண பகவான் கீதையில் * "சிலர் தியான யோகத்தினாலும் சிலர் ஜ்ஞான யோகத்தினாலும், பின்னும் சிலர் கர்ம யோகத்தினாலும் அவரவர் மனத்தில் ப்ரதிபலித்திருக்கும் ஜீவாத்மாவை பரமாத்ம ஸ்வரூபமாகப் பார்க்கின்றனர். அதற்கும் முடியாதவர்களான வேறுசிலர் மற்றவர்களிடமிருந்து எங்கும் பரவின பரமாத்ம ஸ்வரூபத்தைக் கேட்டு பேதமாகவும் அபேதமாகவும் உபாஸிக்கின்றார்கள்" "எவர்கள் அழிவற்றதும் குறிப்பிட்டுக் கூறமுடியாததும் உருவமில்லாததுமான நிர்க்குணப் பிரம்மத்தை உபாஸிக்கின்றார்களோ; எல்லா உயிர்களிடமும் நன்மையான தன்மையுற்றிருக்கின்ற அவர்களும் என்னையே அடைகின்றனர்; ஆனால் நிர்க்குணத்தில் புத்தியைச் செலுத்தினவர்களது கஷ்டம் மிகப்பெரிது. எவர்கள் எல்லாக் கர்மங்களையும் எனக்கு அர்ப்பணம் செய்து என்னிடமே மிகுந்த பக்தியுடன் என்னையே தியானித்து உபாஸிக்கின்றார்களோ; என்னிடமே மனத்தைச் செலுத்திய அவர்களையும் யான் பிறப்பிறப்பாகிய ஸம்ஸார ஸமுத்திரத்தினின்றும் சீக்கிரம் கரையேற்றுகிறவனாகிறேன்" என்று கூறுகிறார். கீதை

* அத். 13. சுலோ. 25, 26. அத். 12. சுலோ. 3–7.

யில் ஸகுண நிர்க்குண உபாஸனைகள் கூறப்படுவதுடன் அந்தந்த அதிகாரிகளின் சக்திக்குத் தக்கவாறு யாவரும் நல்வழிப்படக்கூடிய கர்மயோகம், பக்தியோகம், ஜ்ஞான யோகம் முதலிய பல மார்க்கங்கள் உபதேசிக்கப்படுவன. ஆதலால் பலவிதமாயுள்ள ஜனங்கள் அவரவர் முயற்சிக்குத் தக்க யாதாமொரு நல்வழிப்பட்டு பரமாத்மாவை யடைய வேண்டு மென்பதற்காகவே மதாசார்யர்கள் மதங்களை பேதப்படுத்திக் கூறியுள்ளார் என்று அறியவேண்டும்.

---

## நமது கடமை.

ஹிந்துமதம் உலகத்திலுள்ள ஆஸ்திகமதங்கள் யாவற்றுடனும் உறவாடி நிற்கும் பான்மையுற்றது. அப்படியிருக்க அதன்பிரிவினர் யாவரும் தமக்குள் பொருட்படுத்த வேண்டிய அவசியமில்லாத அற்பமான சில வேற்றுமைப் பட்ட விஷயங்களைக் கொண்டு பிரிந்து நிற்கவேண்டியவ ரல்லர். அவர் யாவருக்கும் மூலாதாரமாகிய வேதம் ஒன்றே அவர்களை எப்போதும் ஒற்றுமைப்படுத்திக்கொண்டிருக்கிறது. ஆதலால் நாம் யாவரும் நம் முன்னோர் சென்ற வழியைப்பின்பற்றி பரஸ்பரம் ஸ்நேகமுற்று நமது வைதிக மத தர்மங்களை அபிவிருத்தி செய்துகொண்டிருக்கும்படி ஸர்வேசுவரன் அருள் புரிவாராக.

இரண்டாம் தொகுதி முற்றிற்று.

